ருனே விவரிக்கப்படலேயாம் என யாங்ஙனமெங்கள் பொரு ட்டு வியாகாதமாம்? அச்சாதித்துவத்தை நிகழ்த்தி நிறுவி நேர்விப்பான் நோரமையின்.

## 94 அநிர்வசனீயத்தகைமையிற்றூடணந் தோடங்கல்.

அற்றேல், சத்தசத்துப்பக்கங்களிற்றுேடங்காண்டலின் அநிர்வசனீயத்தன்மை, என வியம்புவானுக்கென் சத்தசத்து வசமுசடமா? அல்லதென் சத்த சத்துவபக்கத்தினும் வெளி ப்பட்டதனுடன்பாடா? ஆதியதேல், ஆண்டுச்சத்துவ அச் த்துவங்களுளொன்றுனே பவிக்கத்தக்கதாமென ஒருபக்கத் தோடத்திற்காபாசத் தன்மையாம். அதுவும் சத்துவபக்க த்தோடத்திற்கே யங்கீகரிக்கத்தக்கதாகும்; இன்றியமையாத திருத்தலின் ஆண்டுச்சத்துவபக்கமேலாயின், சத்துவபக்கத் தோடமியாங்ஙனம் நன்கு பொருந்தும்? இனியசத்துவபக்க மேலாயின், சர்வமுமசத்துவமாங்கால் அத்தோடமியாங்ஙனம் சற்பாவத்தை அனுபவிப்பான்பவியாநிற்கும்? இஃதன்றாயதே லோ, வியாகாதத்தானே யசம்பவமாம்; ஒன்றற்கொன்று கொ வ்வாதாயினுே, ஒன்றுவதின்று மோரயல்வகையேயெய்துவதாம்.

## 95 அதன் கண்டனப் பிரகாரம்.

அவ்விது அயலாரபிப்பிராயமறியாது கண்டித்ததாகும், யாவன்றுன் யாவும் அநிர்வசனீய சத்தசத்துவமெனச்சாற்று வனுே அவன்யாங்ஙனம் அநிர்வசனீயதையின்சத்துவநிலேபே ற்றில்வினவத்தகுதியனுவன்? அதுவுமோ, அகில்வுலகபரமாய சர்வசப்தவிஷய நாப்பண் புகுத்தப்பெற்றதேயாகும். அன் னியனது விதத்தையானே இங்ஙனெஞ்சா நிற்கும். நிர்வசனத் தை நீக்கின் அநிர்வசனீயத்தன்மையாம், விதி நிடேதங்களு

ளொன்றொழிக்கப்பெறின் மற்றொன்றனெஞ்சுதல். அவனுல ங்கீகரிக்கப்பட்டிருத்தலின். அதனுலன்னியனது முறையாக விஃதியம்பப்பெறும், அநிர்வசனீயத்தன்மையுலகிற்கெஞ்சா நிற்கும் என. உண்மையாயோ யாம் சர்வப் பிரபஞ்ச சத்துவ அசத்துவ வியவத்தாபனத்தினின்றும் விலகித் தானே துணியப்பெற்ற அறிவுமயமாய கேவலப்பிரஹ்மதத்துவத்தின் கண் நிச்சயம்பற்றிக் கிருதகிருத்தியராய் வீற்றிருக்கின்றேம்.

## 96. சத்துவாசத்துவ விசாரத்தில் வேதாந்திகளின் முயல்கையின் பொருத்தம்.

யாவர்தாம் தம்மாற் கற்பிக்கப்பட்ட சாதனதூடணை விவத்தையானே ஆராயத்தொடங்கித்தத்துவத்தை நிண்ணயிப்பான் இச்சிக்கின்றனரோ அவர்பொருட்டுக்கூறுவதாவது:—தங்களுடைய இவ்வாராய்ச்சியின் விவத்தை நலமுடையதாதாம், தாங்கள் கற்பித்த விவத்தையினுனே கேடடைதலின். அதனுனே எம்முபந்யசிக்கப்பெறுந்தூடணைத் திதிவிடயங்களாகிய கடாக்களிடம் பெருத்தனவாம். தம் விவத்தையினுனே நும் விவத்தைக்குக் கேடுகிளத்தலின். உபந்யாசமே ஆக்கிரககாரணமென்னற்க; ஆராய்வுபந்யாசத்தினது சத்துவ அசத்துவ அங்கீகாரவுதாசீனரானே ஆராயத்தக்கதாம் என வுடன்பட்டே கேவலம் ஆராய்வின்முயல்கை முற்றுமென அறிவித்திருத்தலின்.

## 97. விசாரசத்துவ அங்கீகாரத்தின் இன்றியமையாமையின்மை.

ஆராய்வின் சத்துவத்தையங்கீகரியாது ஆராய்வானியலாதென அறையப்பெறின் அளவையையறையாது அதனது

சத்துவ அங்கீகாரமும் முற்றுப்பெறுதாம், அதிப்பிரசங்கம் வருதலின் என்க. ஆராய்வும் ஆராயத்தக்கதெனவாயினோ எல்லையில்லாது செல்லலால் ஆராய்வினாரம்பமேயமையாததாகுமென்பதாம்.

98. நுதலிய வரம்பின்றியோடலிற்கடாவுமதன் விடையும்.

முன்முன்றுணியப்பெற்றதாந்தன்மையுண்மையின் ஆராய்வில் அயலாராய்ச்சியி ஞ்ஞான்றுநேடத்தக்கதன்றுமெனநிகழ்த்தற்க; ஆராய்ச்சி முன்றுணியப்பெற்றதாயின், ஆராயத்தக்கதாகிய தன் விடய வியவத்திதியாதல் கூடலின். அதனாராயத்தக்கதும் முன்னரே ஆராய்ந்தாயதென ஆராய்வினாரம்பமே அமையாதன்றோ. இனி ஆராயத்தக்க சிறப்பு முன்றுணியப்பெறுமையின், அதன்பொருட்டாராய்வினாரம்பமாமாயின் ஆராயத்தக்கதை விடயமாகவுடைய ஆராய்வின் சிறப்பும் முன்றுணியப்பெறுதலேயாகுமென வாளா காய்ந்ததைக்கரண்டலென்க.

99. கண்டனயுக்திகட்கு நையாயிகராற்பாதிக்கப்படத்தகாமை.

நுந்தரிசன முறையாக எம்மனோராலறையப்படும் பாதத்தைப்பாதிப்பையேலாயின், நுமதங்கீகார முறையின் பாதம் பகரும்பான்மையே நுமக்காம். எம்மனோரால் நிர்வகிக்கப்பட்டது நும்மாற் கண்டன ஊகத்தானே பாதிக்கப்படுமேலாயின்,எம்மனோருக்கே வெற்றிப்பெற்றியாம்; கண்டன ஊகங்கள் பாதகங்களாம். நிர்வகிக்கப்பட்ட பக்கமோ பாத்தியமாம்;எனயாமியம்பியபக்கம் உம்மானேநிர்வகிக்கப்படுமன்றோ ஆதலின் உம்மால்நிர்வகிக்கத்தக்கது எம்மாற்கண்டிக்கத்தக்கது என இத்தகைத்தாகவேமேற்கதையில்நீர்நிர்வகிக்கத்தக்கதை நிர்வகிக்கின் நுமக்கு வெற்றியாமன்றிமற்றோராற்றுமிலதாம்.

### 100 உபசம்ஹாரம்.

ஆதலினிங்ஙனம் பேதப்பிரபஞ்சம் அநிர்வசனீயம், பிரஹ்மமே கேவலம் பரமார்த்த சத்திய அத்வயமாமென நன்னிலே பெறுமென்பதாம்.

### 101. அத்வைத விடயகவினு வியாகாதம்.

அற்றேல், அத்வைதத்திற் பிரமாணமியாதாம்? ஆண்டிவ் வினுவே அத்வைதத்தை யங்கீகரியா னுக்கமையாதாம். பிரமாணமியாது அத்வைதத்தில் வினவப்படுகின்றதோ அதன் புலப்பாடின்றேல் யாங்ஙனமின்னணமாய வினுவினிது பொருந்தும்? பிரமாணமாத்திரம் தங்களால் வினவப்படவில்லையன்றே; மற்றே, விடயவிசேட நியதமாம் அதுவும் அத்தகைய புலப்பாடுமக்குண் டாங்காலேயுண்டாதல் கூடும். வாக்கின் விவகாரவிசேடமே வினுவாம். விவகாரமோ தற்பயக்குமுணர்வின் விடயநியதமாகும், மாருயினே விவகாரங்கட்கு விடய நியமப் பிரயோஜகம் வேறுவாராமையின் விவகார விடய விரவுதலன்றே அடைவுறும்.

### 102. பூர்வபக்கியான் அத்வைதத்தின் பிரதீதத் தன்மை யசம்பவம்.

வினுவிடயமாய அத்வைதம் புலப்படுகின்றதெனப்புகலின், அப்புலப்பாடுமக்குப் பிரமையாயாகின்றதா? அப்பிரமையாயாகின்றதா? ஆகியதேல், அந்தப்பிரமையின் காணமியாதாமோ அதுவே அத்வைதத்திற் பிரமாணமாகவுமக்குப்பொருந்தியதாகும்என அதனது வினு வாளா அன்றேபோம்.பொதுவாக அத்வைதப்பிரமாணஞ் சித்தித்தபோதினும்சிறப்பாகப்பிரமாணங்கோடலில் வினுவாமென விளம்பற்க; பொதுத்

துணிந்தவழியே அத்வைதந் துணியப்பெறச் சிறப்பாகவூராய்ச்சி வாயசதந்த வாராய்ச்சி வயங்கவாமாதலின் பொதுத்துணிபே சிறப்பைத்தருக்கித்துக்கொணர்ந்து சிறப்பையுமுமக்குரைதந்ததாகலின் அயல் வினவாலியாது பயன்கொல்! எண்ணிக்கையேய்ந்தேயாய பிரமாணவகைகளினுப்பண் குற்றத்தை யாண்டளக்கின்றிலீரோ அச்சிறப்பின்மாட்டேபொதுவிற்கு இளைப்பாறுதலாதலின். முன்னனுபவிக்கப்பட்ட பிரமாணவகைகள் யாவற்றினுள்ளுமே மாசையளப்பீராயின் வேறுவகையைத் தருக்கித்தேனும் பொது வாலிளைப்பாறத்தக்கதாம். அந்தப்பிரமாண வியத்தியாதென்னுங் கடாப்பொருளெஞ்சி நிற்குமாயினோ எல்லா வியத்திகளையும் சிறப்பாகக் காண்பான் வலாததாகுமென அதனைக்குறிப்பிடாவிடினும் எம்மனோர்க்கொருசிறிதுஞ் சிறுமை சிவணிடாதாமென்றுணர்க.

## 103. அத்வைதப் பிரதீதிகது அப்பிரமாத்தன்மை யசம்பவம்.

இரண்டாவதாமேல். அஞ்ஞான்று அத்வைதப் புலப்பாட்டையப்பிரமையென எண்ணு நின்றவுமக்கு அப்பிரமை விடயத்தின்கண்ணியாது பிரமாண மென யாங்ஙனம் வினவிளிவுறுதொளியும். இனியப் பிரமையஃதெம்மதத்தில், நும்மதத்திலேயோ பிரமையோயாமென அதன் காரணமாகிய பிரமாணம் வினவப்படுகின்றன, எனப்புகலுவீரேல், இஃதுமமைந்திடாதாம். உமக்கத்வைதத்தில் எஞ்ஞானமெழும்புகின்றதோ அதன் காரணமாகிய பிரமாண ரூபம் எம்மாலியம்பத்தக்கதென்பதன் மாட்டெமக்கு நியமமின்மையின். எம்மாலத்வைத மங்கீகரிக்கப் படுகின்றதேலாயின் அத்துணையாலென் நுமது அவ்வுணர்விற்குக் காரணமாகிய பிரமாணமின்றியமையாது வேண்டுமாறே! உண்மையாகவே நீயுடையதா

கிய கிரியினும் ஒருவன் பாஷ்பதூமத்தைக்கண்டு அதனுன் வன்னியைக் கருதுவானுயின், அத்துணையாலென் பாஷ்ப விடய தூமஞானம் அதன் கரணமான பிரமாணமென வங்கீ கரிக்கத்தக்கதாமோ.

## 104 அத்வைதத்திற் பிரமாணம்.

உளதுதானுருக இவ்வினு வெவ்வணமேனும் வேதமே யத்வைதத்திற் பிரமாணமென விளம்புவேம் திண்ணமாய்ச் செவியுறுத்தப் பெறுகின்றன்:—"ஒன்றேயத்விதீயமாகிய பிரஹ்மம், ஈண்டு நானு அற்பமுமில்லை" என்பதாதி, சுருதிப்பிராமாண்யமும் சித்தார்த்தத்தின் பிராமாண்யமும் ஈச்சுராபிசந்தியின்கண்ணேயேனுமாறுரைப்பேம். சித்தார்த்த சுருதிகட்கயற்பரத்தகைமையுமாமேலாயினும் பதசமன்வயபலத்தானே அவற்றில் புலப்படாநின்ற பாதிக்கப்படாத பொருளைக்கொண்டே அவற்றிற் கயற்பிரக்காரமமைதலின் ஞானத்திற்றன்னுற் பிரமாணமாதலைப்பாதகத்தானே யொருதலையாயொழிப்பாம்.

## 105. சுருதியின்கண்ணே பிரத்தியக்ஷாதிப் பாதோபந்நியாசம்.

அற்றேலத்வைத சுருதிகட்கறைந்த பொருளிற் பிரமாணமாதலனுகாதாம், காட்சிபாதிபாதமாதலின் அதனுனே யாண்டேனுமயலொருபாற் கருத்துக்கற்பிக்கத்தக்கதாம்.

## 106 பாதபரிகாரம்

அற்றன்றும், அத்வைத சுருதிக்குப் பாதகமாக எக்காட்சியாதி யெண்ணப்படுகின்றதோ அது தனதுருட ஆடைகளின் வேற்றுமை விடயத்தில் நியதமாகவேபுதயமாமென்றதாம் காட்சியாதி இறவெதிர் நிகழ்வுறு மெல்லா வியத்தி

வேற்றுமையைக் கவர்வதா யுதிப்பதென- நம்மிருவருக்கும் பொருந்துவதில்லையன்றோ. உதயமானதாய அத்தகைய ஞானத்தானே உமது முற்றறிவுண்மையை, எமது சித்தத்திலியாது நிகழ்கின்றதென அறிவீராயின் அக்கால் விசுவசிப்பேம். காட்சியாதி ஒரு சிறிதுமாத்திர விடயமுடையதாயினே அவ்விடயத்தினின்றும் அயலிடத்துஞ் செல்வதாய அத்வைத சுருதி அதனாற் பூர்திக்கப்படலேலாததாம், தனது விடயமாத்திரத்திற் பிரமையான விபரீதவிடயஞானம் பாதிக்கப்படுதலின்; அன்றாயினே, அதிப்பிரசங்கமாம். அக்கினி சோமப்பசுவைக்காதும் விதியால் எல்லாவுயிரின் அஹிம்சை மறைக்குப்பயனின்மையாகாதொழிக.

## 107. காட்சிப்பேதமதிக்குப் பாதகத்தன்மையின் அசம்பவம்.

இவ்வாறுங்கால், பாதகமாகிய காட்சிமதிக்கும், பாத்தியமாய சுருதிக்கும் அத்வைதத்தை யுணர்த்துவதில் வேதம் பாதகமற்றதாயவற்றினைக்கியத்தை யுணர்த்தும் என அக்காட்சியாதியாங்ஙனந் தன்னைத்தானே பாதிக்குங்காண்? குடம் ஆடையவற்றின் வேற்றுமையென்னுந் தன் விடயத்தோடுமம்மதிக்கே, எல்லாவற்றிற்கும் அத்வைதத்தைக் கவரும்மறையான் யாங்ஙனம் அபேதத்திற் பிரமாணமாதலையடைவிக்காமலிருத்தல்கூடும்; ஆண்டுப்பாதிக்கப்படாத தன்மையுண்மையின். அம்மதிக்குத் தன் வடிவேனும் தன் வடிவொடுங்குட ஆடைகளின் வேற்றுமையேனும் விடயமாகாதாம்: குட ஆடைகள் வேற்றுமையென வென்னுமாகாரமாயன்றோ அஃதுதியாநிற்கும், யான் குடத்தினும் ஆடையினும் வேறென்றுதல் ஆதலிலையாம்.

108. பேதமதிக்குச் சுவப்பிரகாசத்தன்மையிருப்பினும் பாதகத்தன்மையின்றாம்.

சுவப்பிரகாசதன்மையும் சொரூபமாத்திரமாய சான்றின்கண்ணேயாமன்றி எவ்வெதனினின்றும் பிரகாசம் வேறுபடுகின்றதோ அவ்வதனினின்றும் அதனது பேதத்தின்கண்ணும் ஆகாதாம்; அன்றாயினே அவ்வதுவும் சுவப்பிரகாச உதரத்தேபெய்யப்பெற்றதாக யாங்ஙனம் அத்வைதத்தின் கண்ணே எஞ்சியிலங்காமற்போம்.

109. ஞானத்தானே சொரூப இலக்கணபேதத்தை யொளிர்விப்பான் முடியாதாம்.

அம்மதியானே தனதூஉம் தன் விடயத்ததூஉமாய சொரூப முணரப்படுங்காற் சொரூப இலக்கணமாகிய வேற்றுமை பிரகாசிக்கப் பெறவேபெறும் மெனப்பேசற்க; முன்னிகழ்கின்றது வெள்ளியெனமயலுற்றவழி முன்னிகழும் வடிவினதூஉம் வெள்ளிவடிவினதூஉம் சொரூபப்பிரகாசமாங்கால் வேற்றுமைக் கவர்ச்சியன்றேவாம். தன்மச்சிறப்பையுள்ளடக்கிச் சொரூபத்திற்கு வேற்றுமை விளம்பியவழி மதிக்குமங்ஙனமாமென அந்தமதியேயதன் பிரகாசமன்றாம், ஆண்டுச் சம்பந்தாதியவாவின் மதியின்முன் அஃதசம்பவமாம். ஆன்மாவைப் போலுமான்மதன்மத்தின்பாலும் சம்பந்தம் அவாவப்பெறுததாமஃதெனின்? கிரகணத்தன்மை, மிருதித்தன்மை, பிரமாத்தன்மை முதலியவற்றின்கண்ணும் அவ்வாறேயாமென்பதாம்.

110. பேதமதியானது தனது விடயத்தினின்றுந் தனது பேதத்தைப் போதியாதாம்.

ஆதலினின்னணம் அம்மதி, சுருதியினானேகுட ஆடைவடிவமா கநிலைபடுத்தப்பட்டதாக யாங்ஙனந் தன்க்குத் தன்னி

னின்றே வேற்றுமையுறுவதிற் பிரமாணமாவான் எழுந்துலா வும் என்பதாகப் பாதப்படுமதியின்மாட்டுக்கூட ஆடைவேற் றுமை விடயத்திற் பிரமாத்தன்மையினபாவத்தைச் சம்பா தித்து வைக்குஞ் சுருதி ஆண்டாண்டும் எதிர்ப்பகையின்றிய தாகவே குறுகுவதற்றுத் தன்னாற் பிரமாணமாதலாம் வலு மையாலடைவுற்ற அவ்வப்பொருளொருமையின் பிறிதோ ராற்றூற் பெறப்படாமையின் சகாயசம்பத்துற்று வெல்ல வொல்லாததாயவற்றிற்கும் அபேதத்தை யறிவுறுத்துவதாய கற்றிக்கோறல் புரிவான் ஆகாததாமென எவ்வுழியும் கேடின் றிக் கிளர்ந்து விரிந்து சர்வாத்வைதப் பிரமையதாய்ப் பிறங்குமென்க.

## 111. பேதமதி வேறோராற்றானும் பெறப்படல்.

பேதப்பிரமையின் வேறோராற்றாற் பெறப்படாமை யானே மாறுபடுத்தலடாதாம், ஆண்டத்வைத சுருதியி னானே ஐயப்பாடற்றானுக்குப் பிரமைத்தன்மையே துணியப் பெறுமையின், பேதஞீமாத்திரத்திற்கோ இருமைநிலா முத லியவுணர்வேபோல அய்லோராற்றானும் பொருந்தலின்.

## 112. சுருதியானே மாறுபடா அத்வைதம் உணர்த்தப்பெறுதல்.

ஏகமெனவியம்பி எவ்வேவகாரத்தையும் இயம்புகின்ற ஏகமேயிதுவெனும் வடிவச்சுருதியுளதோ, அது மாறுபடாத ஒருமையைப் போதிக்கின்றதெனப் பேதாபேதத்தானும், கடபடாதிபேதத்தைக் கவரும் காட்சி முதலியவத்றின் பிர மாணமாதல், பொருத்திவைப்பான் போதாதாம்.

## 113. சர்வாத்வைதபுத்தி ஒரேபோழ்திலுண்டாதல்.

மதிக்கு நின்று வியாபாரம் மருவாமையின், யாங்ஙனமிங்ஙனமாதல் எனின்? அன்றும், சுருதியினானே விஸ்ரவாகவே விளைந்த சர்வ விஷயஞ்செய்யும் அத்வைதமதிக்கு, இவ்வகையாய விசாரசோபான பரம்பரையை யேற்றுபவைகளாய் நம் மனோதுமதிகள் நானாவிடயங்களில் அதன் பிராமாண்ய விடயஞ் செய்வனவாய் முறையாக இனிது நிகழ்கின்றனவெனக் கூறப்படுதலின்.

## 114. அத்வைத சுருதிப் பிராமாண்யத்தில் வினாதல்.

அற்றேல், கடபடவேற்றுமையைக் கவரும் அக்காட்சியுணர்வானே தனது வடிவத்தோடு கட்படவேற்றுமையைக் கவராதொழியுமாயின், அத்துணையானேயாங்ஙனம் அதற்குத் தன்விடயத்தோடு அத்வைதத்திற் சுருதி பிரமாணமாதலை யடைவிப்பான் ஆற்றலுடையதாகும்? பேதமதியோடு கடபடங்கட்கும் பேதத்தைப்புலப்படுத்தும்அயன்மதியான் ஆண்டத்வைத சுருதிக்குப் பாதமிருத்தலினானே எனின்?

## 115. அதனையகற்றல்.

இங்ஙனன்றும், ஆயின் அதற்கு விடயமாயினும் தொடக்கத்திற் பரித்தியாகித்து, எவ்வயன் மதியானே கடபட பேதமதியினும் கடத்தினும் படத்தினும் பேதம் விடயமாமோ அதற்குத்தன் விடயத்தோடு அபேதத்தில் அத்வைதசுருதி பிரமாணமாதலைப் பற்றுவித்துப் பதமுறப்பெற்றுக் கடபட வதன்பேதமதிகளோடு இரண்டாவது மதிக்கு அபேதத்தில்

முடிவுபெறுத்தி அவையாவற்றிற்குமே அபேதத்தில் இளைப் பாறுதல்தரும். இவ்வாறாகவே, யாண்டுதான் சென்று பாத புத்தி பரம்பரை யொழிவானது, வேறு விடய சஞ்சாரந்துஞ் சுமென்னும் அச்சத்தானும், எல்லையில்லாது செல்லுமென்னு மச்சத்தானும் உடன்படத் தக்கதாம். அம்மதியின்மாட்டே பதம்வைத்து அத்வைத சுருதி, அவ்வவ்விடய விடயிப்பிர வாகமியாவற்றையும், அத்வைதத்தில் நிலைபெறுத்துவதா யெவ்வளவையினானும் யாண்டும் பாதிப்பான் முடியாததாய் வயங்கும். ஆகலின் "ஓதுதூரமதோடியொடுங்கிடும், பாத புத்திபரம்பரைபாறவே, காதுவெம்பகைப்பின்புறங்காண்ட டர், வேதவத்வயமந்திரம்வெல்லுமால்."

## 116. பேதமதித்தாரை இளைப்பாறுதலுற அத்வைதசித்தி நீக்கமுடியாமை.

யாண்டுணரும் அவனது மதியின்றாரை இளைப்பாறுமோ ஆண்டு வேறுபுருடனுடைய மதிவேற்றுமையிற் பிரமாண மாம் என்னற்க; எனினும் வேறொருவனுன் வேற்றுமையுற்று அதுபுலப்படுகின்றது என்பதில் அளவையை யுன்னுலுரைக் கப்படவேண்டும்; அஃது மற்றொருவனுனே யெனலு மனுகா தாம். பொருத்துவிப்பான் முடியுமென்பது முடியாதாம். மறைமுடியறைதுணிபான் அஃதகலலின், அங்ஙனுயினும் வரம்பின்றி யோடலாதலின் என்க.

## 117. அந்திமமதிக்கும் வாதையிலதாதல்.

எஞ்ஞான்று சிறிதுதூரம் மதிப்பரம்பரையான் அவ்வத் வைத சுருதி வாதிக்கப்படுவதாமோ அஞ்ஞான்று அந் நியா யத்தான் எம்மதிதான் எஞ்சுதல்ர்கச் சென்றுமற்றோருணர்

வாலறியப்பெருமேதா ஆண்டும் அதன் பாதம் அறியப்பெறும்; யாண்டு அது பாதிக்கப்படுகின்றதோ அதன் சமான நியாயத் தன்மையானே அந்திமமதிக்கும் என்பதாம்; என இங்ஙனி யம்புதியேல்? இயம்பற்க, எத்துணையோ மதிகளுள் யாண்டே னும் வியாப்பிய வியாபகங்களைப்பற்றி வியாத்திக்கிரகரூபமதி யினுனே எஞ்சியமதியின்கண் மொழிந்தமுறையே அத்வைத சுருதிக்குப் பாதத்தைப் பகருகின்றனையா? அல்லது, வேறு மதியிற்கண்ட வியாப்தியோடுற்ற பக்கதரும ஹேதுவைப் புலப்படுத்தும் அந்திம மதியை விடயஞ்செய்யும் மதியா னேயா?

118. அனுமானத்தானும் மதிபாதஞ்சாதிப்பான் அமையாமை.

ஆதியதன்றும், வியாத்திமதியானது விடயவிசேடத்தி லும் சுதந்திரமாகப் பாதவடிவத்தை யடைவிக்குமேலாயின் அஃதே விசேடபுத்தியுமாம் என அடைந்தது சாலும் அனு மானகதையான். இனியனுமிதியை யங்கீகரிப்பையேலாயின் அது தன்னையும் தருமியாக்கிமுயலும் என ஆண்டே வைத்த பதத்ததாயத்வைத சுருதியாவும் அத்வைத பரம்பரையைய டையுமாறு செய்விக்கும் எனவியம்பியதே திரும்பிவரும்.

119. மதிக்குத் தன்னினும்பேதம் ஊகிக்கவொண்ணமை.

இனி விவாத அத்தியாசித மதிகள் தம் விடயங்களி னின்றும் வேற்றுமையுடையன மதித் தன்மையான் கடபட மதிபோலும் எனப் பொது வடிவமாகத் தன்னையும் தருமியா க்கித் தனக்கும் தன் விடயத்தினின்றும் வேற்றுமையைச் சாதிப்பானவாவுகின்றது அனுமையென எண்ணுகின்றனே கொல்! அவ்வாறெண்ணற்க; அவ்வாறாயினும் விஷயியினின் றும் விஷயத்திற்கு அபேதத்தை யுணர்த்துவதாய சுருதி

அனுமானத்தையும் இடமின்றியதாயிற்றுகின்றது. விஷயங்கட்குப் பரஸ்பரம் வேற்றுமையே துணிபொருளாமை யும் உளதாகுக ஹேதுப்போலியாதல்.

## 120. பரமதிக்குச்சுருதி பாதிதமாகாமை.

அயன்மதிகட்கும் அதன் விடயங்கட்கும் பாதமாகாத தாய்ச் சுருதி ஒரு மதியின் விடயத்தினின்றும் அபரத்திற் கும், அபரத்தின்து விடயத்தினின்றும் பரத்திற்கும் அபேத போதப்பொருட்டுக் கிரீடிப்பதாய்ச் சர்வ அத்வைதத்தின் கண்ணே இளைப்பாறுநிற்கும். சர்வமதியின்து விடயத்தி னின்றும் சர்வமதிகளும் வேறும் என அனுமிப்பான் முடியு மென்னற்க; அயன்மதிவிடயத்தான் தன்னினும் மதிபின்ன மாகாதொழிக தன்னினும் வேறுயதினின்றும் எனச்சாற்றிய போதினும் தாண்டமுடியாதாம்; சர்வ அபேதத்தை விழை யும் அத்வைதவாதிக்கு எவ்வழியும், அதுதுணியப் பெறுமை யானே விசேஷண வெளிப்பாடின்மையாதலின்.

## 121. சர்வம்பின்னமேன்னும் வாக்கியத்தானும் பேதஞ்சித்தியாமை.

இதனானே, சர்வம் பின்னமென்னும் வாக்கியமாகிய, வாதையிலாததானே யாம் பிரமாணத்தானே மூரணுய எதி ரிச் சத்தமுடையதாமவ்விவ்வத்வைத சுருதி, என்பதாகவு மெதிர்த்து வாதாட இடமின்றென்றெண்ணிக் கொள்க. யா தோவொன்றினின்றும் பேதமேலாயின் மித்தையினின்றுஞ் சத்தியபேதம் உடன்படலானே சித்தசாதனதோடமாதலின். எல்லாவற்றினின்று மேலோர் தன்னினின்றும் அடைவுறுத லின், தன்னினு மயலாயதினின்றும் என்வும் அத்வைதவாதி யின்பாற் பிரிவுபடுத்தமுடியாதாம்.

வாலறியா 122. பேதசாதன அசம்பவ உபசங்காரம்.

ஆதலி னிவ்வாறும்: — "ஏதுவாதியிலாமலெலாமுண, ரீதெலாம் பக்கமென்னவுடன்படி, லேதொரேவிறையெள்ளி யதீயுமா, லோ்தமேதவழியத்வயவோத்திற்கே. இதனானே:— "ஆதித்யுறும் வேத்தியபேதமா, ரீதுமற்ற நெறியினையா மைதா, னேது தன்னுணாிச்சையினீற்றினி, லோதொழித் திலயத்வைதவோத்தையே".

## 123. அத்வைத வுணர்விற்றடையின்மை.

வர்தனேயேறியிருத்தலின் மிகத்திரமாகிய, சத்வ அசத்வ சம்பந்தாபாவ விசேஷணத்தன்மையினுணர்வால் அத்வைத வுணர்வின்றடைகூடுமெனச் சங்கியாதொழிக; எதனாலெனி ன்:—"என்று மின்றிய பொருளினுமுணர்வினை யியற்று மின் றெழும்பிய சத்தமற் றிதன்கணேவாதை, யன்றி நிற்றலின் றன்னினுளவையதாதல், நின்ற நிச்சலப்பிரமையை யியற் றியே நிலவும்." "அசமுசர்க்கத்தினக்கிரகத்தினையேது, நிச மனதெணிமுற்றினும் அசத்தெனநிகழும், அசமுசர்க்கத்தின் அக்கிரகஞ்சமுசருக்க, விசைகவர்ச்சிய தின்றியொன் றுத தென்றியம்பும்."

## 124. தகுதியற்ற தருக்கத்தானும் அத்வைத சுருதிபாதிக்கப் படாமை.

"தகுதியின்றிய தருக்கத்தினுமே வாதை,மிக வடைத் திலதாகியேமிளிரு மெய்விடயம், புகுந்தலகைமையின் வலியு டைப்புத்தபிமானி, யிகலுமத்தகையின்றியதாகியே யிலங் கும்." "தகுதியின் றியதன்மூலந் தடிந்திடப் படுவதின்று மிகுதியெம் முயல்வதானு மிளிர்ந்திடுமொண்டுண்டாகுந், தகு

யின்றியதன்சாம்பி ராச்சியந் தான்மற்றீண்டோ
தன்மாறுபாடாய்த் துலங்கலினஃதின்றன்றோ."

## 125. அத்வைத சுருதிக்கு மீண்டும் பாதசங்கை

அற்றேல், இதனினும் இதனினும் இதற்கு வேற்றுமை வரப்பெறவிலையெனக்கொண்டு அதனினும் இதற்கு அபேத பாதனவாயிலாயத்வைத மறைகளானே சர்வ அபேதத்தில் முடிவுபெறுத்தத்தக்கதாம் ஒனயாதுயாதும்மான் உதாகரிக் கப்படுகின்றதோ அதனினும் அதனினும் அதற்கு வேற்றுமை யுண்டே கவரப்பெறும் எம்மான். ஆகலின் யாதேனுமோர ளவையை யுதாகரித்தபோதினும் உதாகரியாதபோதினும் இக் கண்டனம் இடமலாவிடத்திலாமெனின்?

## 126. பாதசங்கையின் பரிகாரம்.

இங்ஙனியம்பற்க, அந்திம மதிக்கு அத்வைத சுருதியா லாக்கப்பட்ட மதியாதிகளினின்றும் வேற்றுமை உம்மான் அளவையானளக்கப் பெறவில்லையென்பதாக வெம்மாற் கூறப் பட்டபோழ்து அதனினும் அதனது வேற்றுமையாதோ அதனை அளவையானளத்தல்வேண்டும். ஆண்டஃது காட்சி வாலாகாதாம் அஞ்ஞான்றந்திமமதி முன்னிலைப்படாமையின் ஏதாவதோ ரேதுவினானேனும், ஏதாவதொரு கூடாமையினா னேனும், அங்ஙனருகவென்வாயின், அத்வைதவாதியின் பொருட்டு ஹேதுவிற்குச்சாத்திய அவிசிஷ்டத் தன்மையுண் மையினானும், கூடாமையாலும் எதனானன்றிக்கூடாமையோ அதற்கும் அதன் சமத்தன்மையிருத்தலின் அதனானுபாசமா தலின் யாங்ஙனம் பிரமையினுதயமென்க. தானே யெம்மா லவ்வேற்றுமை யறியப்பெறுமெனப் பக்கத்தைப்பற்றி நிற் கும் அசித்தியாதியும் எம்பொருட்டின்று மென்னற்க; இவ்வு

வாலறிய 12க்கு வீணுந்தன்மை பூணலின், மொழிபிறர்பொரு
யா யாதலின். மவுனத்தைப் பின்பற்றியசையாமலிருக்குந்
தங்களை விடைவிளங்காமை விடாமையின் தானேயளவை
யான் அளவிடப்பட்ட வேற்றுமை பிறன்பொருட்டு மொழி
யாற் கேவலம் உணர்வித்தன் மாத்திரமேயென உரையாடற்க,
உமதுரையிற் பிறனுக்குஅவிசுவாசமிருத்தலின். வெற்றிபெ
றும் வேட்கையுற்ற மற்றயனுக்கு வெற்றிபெறும் வேட்கை
யுற்ற மற்றையன் மொழியோ ஆண்டுப்பொருளில் அத
னறியும் அவாவை யுண்டாக்கும் வாயிலாகச் சுயமாக
அவனுக்கு அப்பொருளிற் பிரமையையுதிப்பிக்கும் முடிவு
பேறுடையதாகப் பொருத்தமுடையதாகும்; அத்வைதவாதி
யின்பொருட்டு அவ்வாறுற்றுவான் ஆகாதாம்; அவன்பொரு
ட்டன்யதாசித்தி யறைந்திருத்தலின். (உபபாத்ய உபபா
தகங்களின் பேதாசித்தி அல்லது சாத்திய சாதனங்களின்
பேதாசித்தியாம். அன்யதா சித்திப்பாடமேல், பேதத்தை
யவாவிய அன்யதா அங்கிசத்திற்குப் பஸ்பரப்பற்றுக்கோ
டாம் வழக்கான் அசம்பவமாதலின் என்றுணர்க.) எமது
மொழியான் ஐயப்பாடுற்று ஆண்டாண்டு ஐயுறுபாதித பாவ
முற்ற சுருதியினானும் உமக்கபேதம் பிரதிபாதிக்கப்படல்
பொருந்தாதாம் எனப்புகலற்க; பேதந்துணியப் பெறுமையா
னே யாண்டும் சாத்திய அவிசேஷாதி தோடத்தை யெண்
ணும் அத்வைதத்தையுட்கொண்டவனால் ஐயத்திற்குமிடங்
கொடுக்கப்படாமையேயாகும்.

## 127. தோக்குங் கவி.

ஆகலின்:— "உயர்பிரமமாமத்திர மொன்றையே கரங்
கொண், டயலெலவற்றையும் பொருளென அகற்றெனக்கெழு

ந்த, பயமதற்றிடுந் தீரவீரனுக்கொருபங்கம், இயலுறுமமர்ஷமை
விவில்லவேயபிலையான்.

128. அயன்மதியாதி ஞானமும் அத்வைத சுருதிக்கு ப்பலமாதல்.

மேலும், ஆண்டிது பொதுவாகப் புலப்படுகின்றதன்றோ
றிது பிறன் சித்தத்தாற் சிந்தித்துக்கொண் டிருக்கின்றனன்,
அலது சிறிது செப்புமவாவினனாக விருக்கின்றனன் என்பதா
தி; ஆண்டுப் பிறனது மதிவிடயமாதல், விளம்பும் வேட்கை
ாதி விடயமாதல் சிறப்பாகத்துணிதலிலாமற் புலப்படவே
ட்டாதாம். ஆகலின், அந்திமமதியாதி பேதம் தங்களான்
ளவையானளந்து கொள்ளக்கூடியதாகாதாம் பிறனல் அதன்
ந்தனையாதிச்சும் கூடுமாதலின். தன்னினும் தனக்கு
வற்றுமையின்மையின். ஆகலின் ஆண்டுப்பதம்பெற்றதா
த்வைத சுருதி விசுவ அபேதத்தில் முடிவு பேறுடையதா
ம்மால் பாதிக்கக்கூடியதாக யாங்ஙனமாம்? ஆகையால், "பொ
வதாகப் புலர்ந்து சிறப்புணர், வதுவிலாமற் பதத்தடை
ற்றிடக், கதுவலெங்ஙனங் காதிடுமுந்தமால், விதமெய்யத்
வய வேதந்தனக்குமே"

129. விவகாரபலத்தானும் அத்வைத சுருதிக்குப்பாதமின்றும்.

அற்றேல் வேற்றுமையங்கீகரியாத தங்கட்கு யாங்ஙனம்
அவ்வப்பத பதார்த்த விசித்திரமான வியவகாரங் கெடாமலி
ருக்கும்? கெடுதலியாங்ஙனங்கொல்! அதுமேற் கண்டிக்கப்ப
டும். அன்றியும், எவ்விக் கெடுதல் உம்மால் சம்பாத்தியமா
மோ, அதுவும் யாதேனுமொரு சம்பாதகத்தானன்றோவாம்;
சம்பாத்தியசம்பாதகங்கள் வேற்றுமைப்படாதனவாயடைவிப்
பான் ஆகமாட்டாவன்றோ. ஆகலின்:— "பன்மையான் மகப்

வாலறிய 129 ... மைமையைப்பற்றியும், நன்மையத்வைதவாதி நவின்றிடு லின்மை வேற்றுமையின்னிட ரெய்திடுந், தன்மையெங்ஙன் சம்பாதகத்தானுமே."

## 130. பேதத்தில் நான்கு விகற்பம்.

அத்வைத சுருதிகட்குப் பாதகமெனக் கடபடமுதலி வற்றின் பேதத்தைக் கவரும் காட்சி முதலியயாவை யுபந் சிக்கப்பெற்றனவோ அவையும் எத்தகைய பொருளில் முடி பேறடைகின்ற தென்னுமிஃது ஆராயத்தக்கதேயாம். அங் ஙனமன்றோ:— காட்சியானே எவ்விப்பேதங் கவரப்பெறுகி றதோ அஃதென்சொரூபபேதமா? (1) அன்னியோன்ன அபாவமா? (2) வைதர்மியமா? (3) மற்றைய தேதே மொன்றா? (4)

## 131. சொரூபபேதமே பேதமென்னும் முதல் விகற்ப கண்டனம்

ஆண்டுச் சொரூபம் பேதமாயின், அது கடபடங்களி சொரூபமேயாகும், பரஸ்பரத்தினின்றும் பேதமியாதோ அது பரஸ்பரம் உள்ளடக்காமற் சும்பவியாதாம். உண்டாம் பே மோ எதனின்றேனும் உண்டாம்; மாறாயினோ, "சொரூப பேதம்" எனும் பாரிபாஷிகப்பெயரன்றோபற்றும். கடத்து னும் பேதம் படத்தினுக்கு என இத்துணையே பொருள் பட தியின் சொரூபமாகக் காட்சியாற் கவரப்பெறுமாயின் கடமு படவடிவத்தின்கண்ணே புகுந்ததாகுமெனக் கடபடாதிகளி ஒருமைய பேதத்தைக் கவரும் பிரத்தியக்கத்தானே கவ ரப்பெற்றதாம், ஆகவே விபரீதமன்றோ விளையும்.

### 132. பேதமிலதேல் நலமிலாமையின் வினா.

அற்றேல், இப்புலப்பாடு அபேதத்தைப் புலப்படுத்துவ ராகவே வியாக்கியானிக்கின்றதை நிகர்க்கப் பேதப் புலப் பாட்டுப்பான்மையினும் இதன்கட்பார்வை யியலாமே. அபே தமேலோ, கடமென்பதாகவேனும், படமென்பதாகவேனும் தியாம்; கடத்தினும் அயல்படம் எனவாகாதா மெனின்?

### 133. அதன் விடைபேதத்திற்கு அவித்தையாலிருக்கு மிருப்புண்மை.

அவித்தையாலிருக்கு மிருப்புண்மையது பேதமென் றதை, பாரமார்த்திகம் அபேதமென விலழவேயாயினும் றப்பமேலாயின், உளதாகுக தானிப்பரியனுயோகமும். ஆகலின்:— "புலப்படுத்திலேபேதத்தைப் போதம் வேற்று மையைப், புலப்படுத்திடும் வலுமைதான் பொருந்துறுதென வ, இலப்பிரமையதது முதறனினிலேயீற்றில், பலப்படத் தளதுயிர் நிலேபாதமாதலினே."

### 134. பேதமென்னும் இத்துணைமாத்திரம் படத்தின் சொரூபமன்றுதல்.

இனி, பேதமென்னும் இத்துணைமாத்திரமே படத்தி னது சொரூபமாம், கடத்தினும் என்பதோ அக்கடமாகிய பிரதியோகியாமுபலக்கணத்தானே நிரூபிக்கப்படும். அதுவு மமையாதாம் பிரதியோகியிலாதபேதம் பிரமாணகோசரமா காமையின். நித்தியம் பிரதியோகியடங்கிய அதன்கண்ணே பிரமாணம் நிகழ்தலின். அயலையவாவிடாப் படத்தின் வடி வம், அயலாய (பிரதியோகியானே) நிரூபிக்கப்பெறுவதாகி அதனுன் வேற்றுமையாமென்னும் இவ்வாக்கூகம் எவ்வா

வாலறிய 12...

யா... ...ான். யாதுவடிவத்தானே நீலமாமோ அதுமஞ்சளான் ...நிரூபிக்கப்படுவதாகி நீலமாமென நிகழ்த்த முடியாதன்றே.

### 135. படப்பொருட்டுப் பிரதியோகித்தன்மை கடத்தினது வடிவமாகாமை.

பிரதியோகியாகிய கடத்தானே நிரூபிக்கப்படுவதாய படத்தின் வடிவம் பேதமெனக் கூறப்படுமேனும், அதன்கண்ணும், படப் பொருட்டுப் பிரதியோகித்தன்மை கடத்திற் கென்வடிவமா? அல்லதென் னஃதொருதருமமா? ஆதியதேல், படப்பொருட்டுப் பிரதியோகித்தன்மை யென்னும் இத்து ணையே யாயபொருள் கடத்தின்வடிவமாகித் தன்பாட்டே படத்தையும் அடக்கு மென்பதாக யாங்ஙனங்காண்ணத்தை தமே முடிவு பேறடையாமற்போம். அதன்கண்ணும் பிரதி யோகித்தன்மை மாத்திரம் கடத்தின்வடிவம், படப்பொருட் டென்பதாய படவிழைவார்தன்மையோ அயலேயாம். என் பது மியலாதாம்; ஒரு சிறிதையும் அவாவாத பிரதியோகித் தன்மைக்கு அளவைக்கு விடயமாகாத் தன்மையுண்மையின். படப்பொருட்டென்பதன்கண் ணுமோ, வடிவமா? அதனினும் அயலா? வெனவிகற்பித்தவழி குற்றமேயாகுமென்க.

### 136. படப்பொருட்டுப்பிரதியோகித்தன்மை கடத்தினது தருமமாகாமை.

மற்றையது மாகாதாம்; எவ்வித்தருமம் படப்பொருட் டுப் பிரதி யோகித்தன்மையுளதோ; அதன் வடிவத்தில் பட மும் புகுகின்றது என அதனோடு படத்திற்கு அத்வைதமாம். படம் கடத்தினது தருமத்தை யடையுமாயின் கடமும் இம்முறையாகவே படதருமத்தை மருவாநிற்கும். படப் பிரதியோகித்தன்மைக்குக் கடப்பிரதியோகியானே நிரூபிக்கப்

படுந்தன்மையுளதாயவழி கடத்திற்கும் வேறு நெறியின்மை யின் ஒன்றற்கொன்று பற்றிக்கோடும்பான்மை, பற்றுக்கோ டாம்பான்மையும் பற்றுதலாகும். கடாரூடம் படம், அப்ப டாரூடமும் அதேகட மென்பதாக எவ்வளவைக்கும் விடயமா கின்றன்றோ. மேலும், அத்தருமத்திற்குத் தருமியோடுஞ் சம்பந்தமிலதேலாயினே மிகுவழக்காம், சம்பந்த முளவில்லையா யினே எல்லையில்லாது செல்லலாம்; முதலிலேனும், ஈற்றிலே னும்சென்று சுபாவசம்பந்தத்தை யங்கீகரிக்கினே, சம்பந்தியு மற்கும் அதன் சுபாவப்புகுதலான் அபேதத்தின்கண்ணே முடிவு பேறடையுமென்பதாம். இவ்வாறே மற்றைய தருமவிகற் பத்தின்கண்ணும் காண்க. ஆதலின் சொரூப பேதத்தில் பிர மாணமாகிய பிரத்யக்ஷம் அத்வைதத்தின்கண்ணே பிரமாண மாகாநிற்கும்.

## 137. கடத்தினது சொரூப நிரூபணத்தில் படத்தோற்ற அவாவின்றாம்.

அற்றேல், கடமுதலியவையே அயலையவாவாதுகாணும் போது, கடமுதலியவையெனவே பிரதீதியாம்; மீண்டும், படாதியாமேன நிரூபிக்கப்படும்போது அதனினும் அயலெனப் புலப்படும் எனின்? அற்றன்று, கடமுதலியவையென்னு மிவ் வகைப்புலப் பாட்டினும் ஆண்டுவேற்றுமைத்தோற்றம் விலக் கணமேயாம். அதுவுங்கடாதிமாத்திர விடயத்தானே வேறு வகையாய ஆகாரம் ஆகத்தகாதாம். படமுதலியவை யதிக மாக அஞ்ஞான்று ஒளிர்கின்றனவெனச் சிறப்பாம் என்பது மேலாதாம்; கடபட விடயப்பிரதீதியினனும் விலக்கணத்தன் மையிருத்தலின். கடமும் படமும் எனவும், கடத்தினும்

படமியல் எனவும். உண்டாந்தோற்றங்கட்கு ஒரு பொருட்ட
ன்மை எவனுக்கேனும் புலப்படும் என்பதாக வில்லையாம்; அஃ
தெவ்வேதுவினுனே! விகற்பமுடைத்தாய குறிப்பை
பொருத ஐந்தாம் வேற்றுமையானே தோற்றக்கலகந்துற்ற
படுதலின். கடமும் படமும் என அறியத்தக்கதன்கண்ணே
எவனும் கடத்தினும் படமென அறியானன்றே. ஆதலின்
கடத்தினது சொரூப நிரூபணத்தில் படத்தோற்ற அவ
இல்லையாகுமென்றுணர்க.

138. பொருளுறும் விலக்கணத்தன்மையின்றியும் விகற்ப
மாய குறிப்புக்கூடல்.

எதனது தோற்றம் எத்தோற்றத்தின் காரணமாமே
அவற்றுள் அக்காரண பூதப்பிரதீதியின் எப்பொருளோ அ
னுன் இஃதெனச் செய்து காரிய பூதத்தோற்றத்தின் பொரு
தோற்றுதாம், நிருவிகற்பகப்பொருளால் இவ்வாறு சவிகற்ப
அர்த்தத்தின்றோற்றம் உண்டாகாதன்றே. இங்ஙனம் ஒப்
டையது முதலியவற்றானே நினைக்கப்படுவன முதலியன
கட்குறுதன்றே. ஆதலின் படம் கடத்தினும் வேறு என்
தாதியாகாரத்தானே, படாதிகளின் பேதமே பேதமுடி
வடிவக் கடாதியோடு கூடியதாய் வெட்டவெளியாக எல்லா
லகுங்காணுமாறு துலங்குவதாகி ஒரு தோற்றத்திற்கு ப
பிறிரு தோற்றத்தின் அவாமாத்திரையானே ஒக்கப்படு
லொல்லாதாம்; மிகுவழுக்காதலின் என்க.

139. அன்னியோன்னியாபாவபேதத்தைக்கவரும் காட்சிக்கு
சுருதியபாதகத்தகைமை.

இதனானே, அன்னியோன்னிய அபாவமாகிய பேதத்
தைக் கவரும் காட்சி அத்வைத சுருதி பாதகம் என்பதும் நீக்

கப்பட்டது. அன்யோன்யாபாவமுமோ எதினின்றும் பேதத்தையுடன் படலாமோ அதனைத் தன்கண்ணே யுள்ளடக்குவிக்கும் உரையாடிய ஊகங்களாமென்றுணர்க.

## 140. அன்யோன்யாபாவம் நிருபிக்க முடியாமை.

அன்றியும், கடபடங்களின் அதுபோல மற்றவைகளின் ரூதாத்மியம் அன்யோன்யாபாவத்தின் பிரதியோகியாமென வெண்ணுக. அதனையெலாவாற்றானுமே யங்கீகரியாவிடின் அதன் விசிஷ்டமாயாதல், அதன் உபலக்ஷிதமாயாதல் அன்னியோன்னியாபாவமும் அளவையானே அறிந்து கோடற்கமையாதாம். முபற்கோட்டின் விசிஷ்டமாயாதல், உபலக்ஷிதமாயாதல் யாதேனும் அளவையானளக்கப் பெறுவதாகத் தகாதாம். அஃதெவ்வேதுவானே! அதன் விசிஷ்ட ரூபமாய பொருளின்கண்ணும் அத்தகைய உபலக்ஷணத்தால் வேறுபடுத்தப்பட்ட வடிவத்தின்கண்ணும் அளவையானது புகுந்து அத்விசேஷணத்தைபுமாதல் அதனதுபலக்கணத்தையுமா புலப்படுத்தாது இருப்பாளுகாதாம். முற்றினும் யாய அப்பொருளின்கண்ணே அதனைப் பிரமாதல் முடிவுறுதாம். படத்தைப் பிரதியோகியாகவு டத்தைப்பற்றி நிற்பதாக அங்கீகரிக்கத்தக்க இவ்வன்றும், கடத்தைப்பிரதி யோகியாகவுடைய படத்தி நிற்பதாக மற்றொன்றும் முற்றினுமில்லாத பிரதித் தோடத்தை நிகழச் செய்யாவாம் என நிகழ்த்த வாறுயின் சமுசர்க்கா பாவத்தினும் அன்னியோன்னிற்குற்ற சிறப்புயாதுகொலாம் கடாபாவம் படசம் க சடசம்சர்க் காபாவத்தைப் படத்திற்பொபோல்க் கடாபாவம் படவடிவினதென அதன்று

படமயல் எனவும். உண்டாந்தோற்றங்கட்கு ஒரு பொருட்ட
ன்மை எவனுக்கேனும் புலப்படும் என்பதாக வில்லையாம்; அல்
தெவ்வேதுவினுலோ!. விகற்பமுடைத்தாய குறிப்புடை
பொருத ஐந்தாம் வேற்றுமையானே தோற்றக்கலகந்துற்ற
படுதலின். கடமும் படமும் என அறியத்தக்கதன்கண்ணே
எவனும் கடத்தினும் படமென அறியானன்றே. ஆதலின்
கடத்தினது சொரூப நிரூபணத்தில் படத்தோற்ற அவ
இல்லையாகுமென்றுணர்க.

## 138. பொருளுறும் விலக்கணத்தன்மையின்றியும் விகற்பமாய குறிப்புக்கூடல்.

எதனது தோற்றம் எத்தோற்றத்தின் காரணமாமோ
அவற்றுள் அக்காரண பூதப்பிரதீதியின் எப்பொருளோ அ
ஞன் இஃதெனச் செய்து காரிய பூதத்தோற்றத்தின் பொரு
தோற்றுதாம், நிருவிகற்பகப்பொருளால் இவ்வாறு சவிகற்ப
அர்த்தத்தின்றோற்றம் உண்டாகாதன்றே. இங்ஙனம் ஒப்
டையது முதலியவற்றானே நினைக்கப்படுவன முதலியவை
கட்குறுதன்றே. ஆதலின் படம் கடத்தினும் வேறு என்
தாதியாகாரத்தானே, படாதிகளின் பேதமே பேதமுடி
வடிவக் கடாதியோடு கூடியதாய் வெட்டவெளியாக எல்லா
லருங்காணுமாறு துலங்குவதாகி ஒரு தோற்றத்திற்கு
ஒருரு தோற்றத்தின் அவ்வாமாத்திரையானே ஒக்கப்படு
லொல்லாதாம்; மிகுவழுக்காதலின் என்க.

## 139. அன்னியோன்னியாபாவபேதத்தைக்கவரும் காட்சிக்குச் சுருதியபாதகத்தகைமை.

இதனானே. அன்னியோன்னிய அபாவமாகிய பேதத்
தைக் கவரும் காக்ஷி அத்வைத சுருதி பாதகம் என்பதும் நீக்

கப்பட்டது. அன்யோன்யாபாவமுமோ எதினின்றும் பேதத்தையுடன் படலாமோ அதனைத் தன்கண்ணே யுள்ளடக்குவிக்கும் உரையாடிய ஊகங்களாமென்றுணர்க.

### 140. அன்யோன்யாபாவம் நிரூபிக்க முடியாமை.

அன்றியும், கடபடங்களின் அதுபோல மற்றவைகளின் ரூதாத்மியம் அன்யோன்யாபாவத்தின் பிரதியோகியாமென வெண்ணுக. அதனையெலாவாற்றானுமே யங்கீகரியாவிடின் அதன் விசிஷ்டமாயாதல், அதன் உபலக்ஷிதமாயாதல் அன்னியோன்னியாபாவமும் அளவையானே அறிந்து கோடற்கமையாதாம். முபற்கோட்டின் விசிஷ்டமாயாதல், உபலக்ஷிதமாயாதல் யாதேனும் அளவைபானளக்கப் பெறுவதாகத் தகாதாம். அஃதெவ்வேதுவாலோ! அதன் விசிஷ்ட ரூபமாய பொருளின்கண்ணும் அத்தகைய உபலக்ஷணத்தால் வேறுபடுத்தப்பட்ட வடிவத்தின்கண்ணும் அளவையானது புகுந்து அதனது விசேஷணத்தையுமாதல் அதனதுபலக்கணத்தையுமாமாதல், புலப்படுத்தாது இருப்பானாகாதாம். முற்றினும் இல்லாதவேயாய அப்பொருளின்கண்ணே அதனைப் பிரமாணப்படுத்தல் முடிவுறாதாம். படத்தைப் பிரதியோகியாகவுடைய கடத்தைப்பற்றி நிற்பதாக அங்கீகரிக்கத்தக்க இவ்வபாவ மொன்றும், கடத்தைப்பிரதி யோகியாகவுடைய படத்தைப்பற்றி நிற்பதாக மற்றொன்றும் முற்றினுமில்லாத பிரதியோகிதைத் தோடத்தை நிகழச் செய்யாவாம் என நிகழ்த்தற்க; அவ்வாறாயின் சமுசர்க்கா பாவத்தினும் அன்னியோன்னியாபாவத்திற்குற்ற சிறப்புயாதுகொலாம் கடாபாவம் படசம்சர்க்கி யெனக் கடசம்சர்க்காபாவத்தைப் படத்திற்பொருத்துவதேபோல்க் கடாபாவம் படவடிவினதென அதன்ரூ

தான்மியாயாவத்தைப்படத்திற்கு அங்கீகரியாயன்றே; ஆத தான்மியாயாவத்தைப்படத்திற்கு அங்கீகரியாயன்றோ; ஆக வின் தாதான்மியத்தையும் சமூசர்க்கத்தையும் பிரதியோகி கோடியின்கண்ணே யுள்ளடக்கி அன்னியோன்னியாபாவசமு சர்க்கா பாவங்கட்கு விலக்ஷணத்தகைமை யங்கீகரிக்கத்தக்க தாம், தகவே மூற்றினும் அசத்பிரதியோகிதை யகற்றமுடி யாததேயாம்.

141. அன்னியோன்னியத்தில் நிஷேதிக்கப்படுந்தருமமின் மையின் அன்னியோன்னியாபாவஞ் சம்பவியாமை.

கடத்திற்படத் தன்மையின்றும் படத்திலும் கடத்தன் மையின்றும் என்னுமித்துணைமாத்திர முடிவுபேறுடையதே யாகும் அன்யோன்யா பாவத்தின் விவத்தை கருதத்தக்கதாம் எனக்கூறற்க; என்னை, அங்ஙனமாமேலாயின் கடத்தன்மை யின்கண்ணும் படப்பான்மையின்பாலும் அத்தகைய தருமம் யாதொன்று மங்கீகரிக்கப்படவில்லை, யாது அன்னியோன்னி யத்தின்கண்ணே நிஷேதி பான்றகுதியாமோ. ஆகவே அவற் றிற்குத் தாதாத்மிய அடைவுள தாயவழி கடத்திற் படத்தன் மையும் படத்திலும் கடத்தன்மையும் நிஷேதிக்கப்படுவதா பிரமாணம் கடத்தன்மை படத்தன்மையற்ற இரண்டைய கவர்கின்றதென வைதர்மிய சொரூபபேதம் சம்பவியாமை யின் எப்பிரதியோகியைத்தான் எவ்வனுயோகியைத்தான் கொண்டு கடபடான்னியோன்னியாபாவமும் பிரமாணமின்றி யையடையாநிற்கும்.

142. வைதர்மியமும் சம்பவியமை.

இதனானே வைதர்மியமாகிய பேதத்தைக் கவர்ந்து பிரத் யக்ஷம் அத்வைத சுருதிபாதகமாக அமையாதாம். வைத ர்மியமாய கடத்தன்மை படத்தன்மை முதலியவற்றில் வேறு வைதர்மியம் உளதெனவுடன்படில் வைதர்மியத்தின்கண்ணே

வைதர்மிய இளைப்பாறல் எல்லையில்லாமற் செல்லல் என்பவற்றுள் ஒன்றும் அநுபவவிடயமல்லாதது மாயதை யாங்ஙனம் மாற்றியேற்றல் கூடுமோலோ? வைதர்மியத்தின்கண்ணே வைதர்மியத்தை யங்கீகரியாவிடின் வைதர்மியங்கட் கொருமை கூடலின் தமது பற்றுக்கோட்டின் வேற்றுமையானே அவற்றின் முடிவுபேறியாங்ஙனமாம்!

### 143. வைதர்மியத்தில் வேற்றுமையாங்ஙனம்.

மேலும், எவ்வவ்வைதர்மிய பேதங்களுளவோ அவை கடாதியினும் பின்னதருமியின் கட்புகுகின்றனவா? அபின்னத்தின்கண்ணே? ஒன்றற்கொன்று முரண்பட்ட அவைகட்குத் தனிவடிவாயவகை சம்பவியாமையின்.

### 144. கடாதிபின்னத்தில் அநன்பேதம் புகுத்தலேலாமை.

ஆதியதேல், எவ்வேற்றுமையானே பின்னத்தன்மை வைதர்மிய ஆசிரயங்கட் கெண்ணத்தக்கதாமோ ஆண்டும் கடாவுருமென வழ்பின்றியோடலின்மாட்டே முடிவுபேறடைவதாகும். உளவாகுக அளவிலவேயாய வேற்றுமைகள் எனின்? ஆகாவாம், முறையாக அவைகட்கும் பற்றுக்கோட்டின் சம்பந்தமேல், கால அவதியோடு கூடிவாழும் காரியத்தில் அவற்றின் சம்பந்தம் தகாததேயாம். இனி உண்டாகாநின்ற பொருளை யொரேகாலத்தில் அப்பேதங்கள் சூழுகின்றனவாயின் எப்பேதஞ் சிறப்பித்ததில் எப்பேத நிலைபெறென ஒருபக்கம் நிறுவு மூகச்சிறப்பிலாமையின் ஒன்றற்கொன்றவை கட்குண்டாம் போரையார் தீர்க்கவல்லார். கடைக்கடையங்கீகரிக்கும் பேதத்தானே முதல் முதலங்கீகரித்தபேத உபயோகந்துணியப் பெறுதலின் முன்னரோடிப் பின்னர் உலோபமு

றும், அப்பேதப்பிரவாஹம் மறதியை மணந்தோன் செவி கொண்மாண்பொருள்போலும் எதனைப்பற்று நிற்கும் முன்க.

## 145. கடமுதலிய பின்னதருமிக்கு அதன்பேதப்பற்றுக்கோடேல் முந்தோடத் தன்மைமோதல்.

இவ்விதமாய விடயத்திற் பிரூண்டு மிவ்விதமேயாம். முன்னுமேலாபவிநிகமமுற்றுரு, இன்னமானமிலாமையிவற் றினுன், மன்னுருதனை மன்னவைப்பார்க்குரு, நன்னயத் திரி தோடதை நண்ணுமே.

## 146. சொரூபமே பேதமென்பதுந்தோடராமை.

சிறிது சென்று சொரூபமே அன்னியோன்னியம் விலக் குவதாகிப் பேதமங்கீகரிக்கப்படுமேலாயின், எவற்றின் சொ ரூபம் அவ்வாறங்கிகரிக்கப்படுமோ அவற்றிற்குச் சொரூபமின் மையின்மைவாம். இனிச் சொரூபமாத்திரம் (சாமானியம்) பரஸ்பரம் விலக்கப்படுவதாகாதாம்; மற்றேரு, சொரூபவிசேட மாமெனக்கூறின் சொரூப விசேஷமாத்திர நீக்கத்தாற் சொ ரூபமாத்திரம் ஆமென்பதாக ஒருமையினடைவாம்.

## 147. சொரூபமாத்திரத்தினும் விசேடார்த்தம் அயலன்றும்.

அல்லது, சொரூபமாத்திரத்தினும் அயலென இவ்விசே டார்த்தம் இயம்பத்தக்கதாம். இனிச்சொரூபமென்பது சிறிது தொடர்புற்றதெனவின்னுல் அங்கீகரிக்கப்படவில்லை, விசேடரூபவியக்திகளின்மாட்டே சொரூப சப்தம் நானார்த்த மெனப்புகுத்தப்பெறும் எனவியம்புவையாயின்; இந்நியாயத் தானே கோத்தன்மை முதலியவற்றின் சித்திப்பேறவாசென் யதேயன்றே. வியத்திதோறும் சொரூபபத சமயக்கவர்ச்சி பொருந்தாதாம்.

148. சொரூபத்திற்குப்பேதத் தன்மையேற்றேட்டம்.

சொரூபம் பேதமாயின் தருமியைக்கண்டமாத்திரத்தே சொரூபங் காணப்பட்டதென யாண்டுமையமே வரக் கணக்கில்லை.

149. அபின்னத்தில் பேதம் புகுத்துதல் கூடாமை

அபின்னத்திற் பேதம் புகுத்தப்பெறுமாயின் எவ்வேக வியக்தி கடாதியளக்கப் பெறுமோ அதுவும் அவ்வேற்றுமை யானே அநேகமாம்என வேகமிலதாகவே அநேகமும் நிலைபெறாதன்றே.

150. பேதாபேதநோதுமலுற்றதன் கண்ணும்பேத நிர்வசமிலாமை.

இதனானே, பேதம் வரைந்துகொண்டதன் மாட்டாதல், அபேதம் வரைந்துகொண்டதன் மாட்டாதல் பேதம் புகுமாறின்றாப்; மற்றேனைதுமலுற்றதன் மாட்டே யென்பதும் நூக்கப்பட்டது.

151. பிருத்தக்குத் தன்மையே பேதமன்றும்.

இதனானேயே, பேதமென்பது சொரூப, வைதர்மிய, அன்னியோன்னியாபாவ, வடிவமல்லாத வேறு தருமமாகிய பிருத்தக்குத் தன்மை யென்னும் அயற்பெயரையுடையது என்பதும் நீக்கப்பட்டது; அதுவுமோ தனது பின்னப்பற்றுக் கோட்டிற் புகுத்தப்பெறுமா? அபின்னத்திலா? என்பதாகியாய்ப் பேசியமாசைத் தாண்டுவான் மந்தநடையுடையதே யாகும்.

152. பேதத்திற்குப் பேதியினின்றும் பேதாபேத அசம்பவம்.

தனது பற்றுக்கோடாயதோடுங்கூடத் தன்பாலபேதப யத்தால் அதேபேதம் புகுத்தப்படுமேலாயின் ஆன்மாசிரய

மாம்: பிறிதேலோ, அதன்கண்ணிங்ஙனம் அதன்கண்ணும் அயல் என எல்லையில்லாமற் செல்லலாம் எங்கேனுமேகிப் பேத பேதப்பற்றுக்கோடிரண்டினுக்கும் பேதத்தைத யங்கீகரியாவிடின் அதனைக்கிய வாயிலாய வொருமை மூலம் வரையோடாகிற்கும்.

153. காட்சி, கருதல், பொருளடைவு, முதலியவற்றானே அத்வைத சுருதிக்குப்பாதமிலாமை.

ஆதலினுண்டத்துவிதமா மன்றக்கிங்ஙானிபில் காட்சிபாலனுமா, னுதியும்பாத நடத்திடாதென்னு நல்முறுமதத்தினும் பொறுத்தி, மோதுவத்துவித வாகமப்போரின் முனிற் பொருளுறற்பாய்பரைப்ப, தாதிகண் மிகவும் பகைவரை நடுக்கித் தனித்திருச் சேவையே செயுமால்.

154. தனது காரணமாகிய பேதமதிகளானே அத்வைத சுருதியின் பாதசங்கை.

அற்றேல், வர்ணம், பதம், வேற்றுமை, அதன்பொருண் முதலியவற்றின் வேற்றுமைகளை உபஜீவியப்பொருட்டுப் பிரதிபாதிப்பனவாகிய அத்வைத சுருதிகள், தமதுபஜீவியங்களாகிய பேதமதிகளானேயாங்ஙனம்பாதிக்கப்படாமற்போம். உபஜீவகத்திற்குபஜீவியத்தினும் வலுவிலாய்யான்மை யுண்மையின்.

155. அதன் கண்டனம்.

இங்ஙனியம்பற்க; யாம் பேதத்திற்கு எல்லாவாற்றானுமே அசத்துவத்தை யங்கீகரித்திலேம்; மற்றே, பாரமார்த்திக சத்வமில்லையென்பேம். அவித்தையானே யிருப்புண்மையோ அதற்கங்கீகரித்தேயுள்ளேம்; அஃதே தான்காரிய காரணபாவ உபயோகியாம்.

## 156. அத்வைத சுருதிகளில் வியாகாதமின்மை.

இதனானே, ஒன்றேயெனத்தேற்ற விலக்கத்தானே, அத்விதீயமெனத் துவிதீயத்தானும்; ஈண்டு நானா இல்லையென நானாத்தன்மையானும், சிறிதும் என்பதனானே மிகுதியானு மின்றியமையாமையினானே வியாகாதமாம் என்பதும் மறுக்கப்பட்டது. அத்வைத அர்த்தங்கள் வாய்ந்தபாமன்றுகளானே பாரமார்த்திகமத்வைதம் பிரதிபாதிக்கப்படும். பாரமார்த்திக மதி அபாரமார்த்திகமதியானே பாதிக்கமுடியாததாம். இப்பி வெள்ளிமதியானே பரமார்த்த இப்பிமதி பாதிக்கப்படமாட்டா தன்றே! யாண்டுதான், அழல்சூடற்றது என்னுமதிக்குச் சூட்டுணர் வுபஜீவனமாதலின் சூட்டுணர்வாற் சூடின்றியதா முணர்வு பாதிக்கப்படுவதாமோ; ஆண்டு, இரண்டினுக்கும் அவித்தையாலிருப்புண்டைமை யுண்மையின்பாதம் போதும்.

## 157. பாரமார்த்திகத்திற்கே பாதமில்லாமை.

அற்றேலாயின் ஆண்டும் சூடில்லாமையையும் பாரமார்த்திகம்போன்மேதுணியலாமே, பாதமெய்தாதிருத்தற்பொருட் டெனின்? அற்றன்றும், ஜலாதிதிருஷ்டாந்த சமஜாதிமேய, சீதாதியபின்னவடிவச் சூடிலாமையின் துணிபினானே அவித்தையாலிருப்புடைமையே முடிவுறுதலின். அதனது இவ்வித ரூபத்தன்மையை யங்கீகரியாவிடினோ அத்வைதத்திற்கேவேறு பெயர்வைத்ததாயமைதலின். ஆகையாலதன்கண்ணே ஞேய் ஞானாதிபேதத்தை யின்றியமையாது அங்கீகரிக்கவேண்டியிருத்தலின், உலகைப்பாதிக்கு மூககவளத்துட் புகாதிருத்தல் கூடாமையின். அத்வைதத்திலோதுவைதாசிரய வாஸ்தவபாதத்திற்கிடமின்மையின் அபாரமார்த்திகத்தன்மைச் சம்பாவனையும் சேய்மையிலேயே நீக்கப்படும்போம்.

## 158. அத்வைதசுருதிகட்குப் பிரமையைப் பயக்குந்தன்மை யின்மையின் சங்கை.

அற்றேல், அத்வைத பாமார்த்தத்தன்மையை யங்கீகரித் தலினானே கூடிவந்ததென்னைகொல்? உபஜீவியத்தின்பாதத்தா னே அத்வைதத்திற் பிரமையை மறைபயப்பான் எதனான்முடி யாதோவென வியம்புவேம்

## 159 பாரமார்த்திகம், அபாரமார்த்திகத்தானே பாதிக்கப்படாமை.

இங்ஙனியம்பற்க, அத்வைதமோ பாரமார்த்திகமாம், இது பாரமார்த்திகபேதத்தோடு விரோதித்தல்கூடுமே யல்லாது அவித்தையானே இருப்புடையதனோடு கூடாதாம். ஆதலின், அவித்தையானிலைபெறுத்தப்பட்ட பேதத்தையும் அதன் போதத்தையும்கொண்டுபஜீவியாநின்ற பரமார்த்த அத்வைத மதியுபஜீவியபாதஞ் செய்யாதாம். அத்வைதமதி சுருதிபயந்த தாயிருந்தபோதினும் அவித்தையா லிருப்புடையதேயாகும், ஆயினும் அதன்விடயமோ ஆண்டுப் பரமார்த்தசத்தேயாய அத்வைதமாம். விஷயவிரோதத்தானே அதற்குப்பார்த்யத்தன் மையுமாம், அஃதின்றன்றே.

## 160. அத்வைதத்தில் பயமிலாமை.

ஆதலின், அறிவுறுமெய்ம்மையானவத்வைதஞ் சரண மாக, மறைமிகப்புகுந்து வாழ்ந்துமற்றுபஜீவ்யத்தானே, செறி தரும் பாதனத்தாற் சிறிதுமேயஞ்சுறுதாம், குறிதரும் வீர வீசக்குருயாளருளீதன்றே.

"இரண்டாவதனானேயன்றே பயமுண்டாகின்ற" தென ச்சுருதியும் புகல்கின்றது.

## 161. விஞ்ஞான அத்வைதவடிவுடையதேயத்வைதமாம்.

அவ்வத்வைதமும், "இவையாவும் பிரஹ்மமே" யென் னும் சுருதி யர்த்தத்தோடு ஐக்கியமுற்றுப் பிரஹ்மமேயாம்;

"விஞ்ஞானமானந்தம் பிரஹ்மம்" என்னுஞ் சுருதியானும் ஞானனந்தவடிவமாகவே நிலைபெறுத்தப்படும். அதனானே எவ்விவ்வத்வைதஞானம் மறையாற்பிறந்ததோ அது விஞ்ஞான அத்வைதவடிவத்தின்கண்ணே புகுத்தப்பெறும்.

### 162. அத்வைதத்திற்குச் சுருதிஜன்யத்தன்மை அபாரமார்த்திகமாதல்.

அற்றேல், அதற்குச் சுருதியாலுளதாந் தன்மையெங்ஙனம் பொருந்தும்? உண்மையே, அதன்பாரமார்த்திகம் சுருதியினானே பிறப்பதாக இருப்பதாயின் இங்ஙனருக. அவித்தையானே நிலைபெறுத்தப்பட்டதாய அதன் ஜன்னியத்தன்மையானது பாரமார்த்திகமாய அதன் அஜன்னியத்தன்மையோடு முரணுதாம்.

### 163. ஒருண்மையைக்கூறல் கூடாதாயினும் அத்வைத்தில் ஆனியில்லையாம்.

இதனானே, சுருதியாலிவ்வேகம் சாதிக்கப்பெறும். ஆண்டு ஒருமை, பேதாபாவம் அல்லது ஒருமையெண்ணிக்கை அல்லது ஞானவடிவுடைமை அல்லது அயலேயாய், ஒருமையெனப் பெயரியயாதேனுமொரு அபேதவேறு பரியாயதருமம், ஆகலாம், அஃதுடைமை யுணர்த்தப்பெறும்; அதுவும் அத்வைதவியாகாதகமாதலின் துணிவுறுத்தமுடியாதாம்என யாதோதப்படுமோ அதுவும் அடிபடுதல் சகிக்கமுடியாமன் ஞானத்தின் சுருதிஜன்யத்தன்மையோடு கூடவேயோடிப்போம் யாது அத்தகைய அத்வைததருமத்தின் றநுமியாக அளக்கப்பெற்றுப் பாதமிலாமையானுணரப்பெற்றதோ அதுமாத்திரத்தைப் பரமார்த்தமாக நிலைபெறுத்துக. பரமார்த்த இப்பியானது வெள்ளியாகத்தோன்றுங்காற் பாதத்தால் வெள்ளித்தகைமை நீங்கியவழி சுத்திவியத்தியும் அதனபாதத்தானே நீங்குமென்பதாக இன்றன்றே.

### 164. அத்வைதமதிக்குத் தர்க்கத்தானே பாதமிலாமை.

அவ்விவ்வத்வைதமதி தருக்கம்பெருக்கி அறிஞரானே நிராகரிக்கத்தக்கதன்றாம். "இம்மதி தருக்கத்தானே நீக்கத்தக்க தன்றாம்." என்னுஞ் சுருதியும் இதனையியம்புகின்றது. ஆகையால் :—

"ஆதனத்துயர்ந்த சிந்தாமணியுத்தம் வந்ததத்தைக், காதனத்திட்டகாலைகடலினில் வீசவேண்டித், தீதனத்தினரே யேததிருமதியதனை நீவிர், பாதனத்திடுதற்காகப் பகுத்துணர்வதனைச்சேர்மின்.

### 165. அத்வைதமதிக்குத் திருட்டார்த்தத்தன்மையுமாதல்.

அவ்விவ்வத்வைததிருஷ்டி திருஷ்டார்த்தமுமாம், அது கூறவும்பட்டுளது "இத்தருமத்தினது இலேசமும் பெரும் பீதியினின்றுங் காக்கின்றது" ஆதலின் :—

பரசிவனருளினானே பரமவத்துவிதத்தைநாடுந், திரமுறு நினைவின் செல்வந்திகழிரண்டலது மூன்று, பரமருக்கினிது ண்டாயின் பகரிது சமுசாரத்தில் வருமிரும்பயத்தை நீக்கி வளமுடன் காக்குமன்றே.

### 166. மறையுறுமுணர்வான் அத்வைத விரோதநீக்க வாயிலாக பெரும்பிரமேய உபசங்காரம்.

ஆகலின் :—"பகருமத்துவிதப்பண்மறை யவைதம் பண்ணொடுமவ்விவ்வத்துவிதந்தான், மிகத்தொட்ங்கமயும் பொருமொடுமாய மேவியதாகுமோ வதுமெய்ச், சுகசுயவொளிச் சித்துருவமேயாகிச் சோதிதவாய்விஞன் மகத்தா, யககநிர்வாசுந்தனைக்கனிபுரிந்திங் கானந்தவாரியாழ்த்திடுமால்."

### 167. சிரத்தையானே ஆன்மதத்துவஞானம்.

ஆதலினிங்ஙன் நின்மதந்துணிந்த நல்லூகவிலக்கணத்தாலண்டவுற்ற இவ்வூகங்களானே எய்தப்பெற்ற இவ்வத்வைதத்

தை நீ அவித்தைகாரியம் பேதருசியுடையனே யாயினும் சிர த்தைசெய்தி ; அதன்பின்னரோ இவ்வுபநிடதப்பொருட்சிரத் தையானே அத்தியான்மவத்துவை அறியும் வேட்கையனுகிப் பரமான்மதத்துவத்தை முறையாக விஜாதீயவிருத்தியை வில க்கியமனத்தொடுங் கூடிச்சுவப்பிரகாச சாக்ஷிசம்பந்தத்தேறலை மாந்துஞ் சீலனுயுன்னுனே நேரேகண்டு கண்டானந்திப்பாய். ஆயாசமிலாமலே மனமானது சபலத்தைவிடுத்து ஆன்மதத் தவ அமுததடாகத்தின் மூழ்கியானந்திக்குமாறு கைடதசரிதப் பரம்புருடத்துதிச்சருக்கத்திற் சாற்றியுள்ளோம் என விஃதறு தியாம்.

168. கண்டன ஊகங்கட்குத் தத்துவநிர்ணய பலமுடைமை.

" இவ்வணம் விரும்ப லநம்பலின் மாட்டு மெறுழ்வலி கண்டனந்தமக்குத், தவ்வறலிலையான் மன்னவனுணே தவறிலா மாண்பெனக்காண்டி, அவ்வகையினவாங் கண்டன மொழிகட் கரிய சித்தாந்தமார்க்கத்தும் செவ்விதிற்சேர்க்கை விழைந்த வாறென்னே செய்திடாதிருந்திடல் சொன்மின்."

169. யாண்டுங்கண்டன யுக்திகட்குப் பெருமையுறல்.

ஆதலின், இத்தகைய எல்லாத் தரிசனத்திதிகளினும் விழைந்தவண்ணம் நமது கண்டனயுக்திகள் விரிவுறுகின்றன வேயாம். ஈசுரபரவசமாகிய விசுவவிவத்தையைப் பற்றுமல் எவைதம்நீக்கம் ஆற்றலேலாதோ அவற்றிற்கே அவதாரத்தல மறிவிப்பான் வாதிமத உபந்யாசம் வழங்கப்படும். அங்ஙன மன்றே :—தரிசனங்களில் சூனியவாத அநிர்வசநீயபக்கங்க ளைப்பற்றுதலாமேலாயின் ஆண்டு இவைகட்கு எல்லாநெறி களினுஞ் செல்கைவாதையிலாததேயாம். அளவைமுதலியவற் றினிருப்புடன்படும் மதம்பற்றுமாயினோ அப்போழ்தும், இலக் கணகண்டனயுக்திகட்கு இலக்கணவிசேடகண்டனத்தில், இல

க்கியகண்டனயுக்திகட்கும், அதன்விடயப்பிரமாண விசேஷ கண்டனத்தில், தனித்தனி தாற்பரியமாம்.

### 170. அபசித்தாந்த அடைவையகற்றல்.

சூத்திரசம்பந்திகண்முதலிய இலக்கணப்பிரமாண கண்டனத்தில் அபசித்தாந்த அடைவுஆகாதாம்; அத்தகையனவாய சூத்திராதி வியாக்கியானங்கள் கண்டிக்கப்படுதலின். இலக்கண விசேட வத்துவிசேட நிலைபெறுத்தல் பிரமாணவிசேடச் சூத்திராதி வியாக்கியான விசேடகண்டனபரமாக வேறிலக்கணமும், வேறுபிரமாணமும், வேறுவியாக்கியானமும் விளம்ப வேண்டியதாகுமன்றோ தங்கட்கும் எனச்சாற்றற்க; விதண்டைக்கண்தையப்பற்றிக் கண்டனமோதப்போதலின் ஆண்டோ விலக்கித்தன்பக்க நிர்வாகப்பொருட்டு வினாவ இடமிலாமையின்என்க.

### 171. ஒருதரிசனத்தைப்பற்றியபோதினும் கண்டனயுக்திகட்கு இடங்கிடைத்தல்.

இவ்வாறாகவே வாதிதரிசனத்தைப்பற்றியும் கண்டனப் பிரயோகம்பாதமற்றதேயாம்; ஏகதேசியைப்போலுமெதிர்த்து நிற்பான் எனுமர்தலின்; வையாகரணர்கட்கே போலும், சத்தசித்திவினாவிற்கு, மற்றையனைத் தத்துவஞான நிரூபணப் பொருட்டுச் சமானபக்கத் திதியானும் வினாநல்வியவகாரிகத் தகைமைகூடலின்.

### 172. வாதத்திலும் கண்டனயுக்திகட்குப் பிரவேசம்.

வத்துத்திதியை வரைபவனு யாராய்பவனனும் இன்றியமையாது இவ்வூகங்கள் போற்றத்தக்கனவேயாம்; அன்றியினே, வத்துவிசேட நிலைபேறுகூடாமையின்; எனவாதத்தின்கண்ணும் பிரயோகம்கண்டன யுக்திகட்குச் சம்பவிக்கவே கூடும்.

## 173. ஜல்பம் தனிக்கதையாகாமை.

ஜல்பமானது ஒருகதையாகச் சம்பவியாதாம், சங்கேத மிலாமன் நியாயத்தாலாராயத்தக்கதாகும், விதண்டையிரண் டின் சரீரமுடைமையின்; மாறாயினோ, ஜல்பமிரண்டானும் ஒருகதையை யேன்கற்பிக்கலாகாதோ! இதை மேற்கூறவும் போவேம் ஜல்பவிசாரப்பிரஸ்தாவத்தில் வித்தாரமாக வென் றுணர்க.

## 174. ஜல்பம் தனியாயினும் கண்டனயுக்திகளின் பிரவேசம்.

ஜல்பகதையானும் கூறிய தனது பக்கத்தில் விலக்கித் தோடத்தோடு கூடியதையேனும் பிரமாணமாகக்கூறி அத்தோ டத்தைக்கிளப்புபவன் யாதேனுமொரு கண்டனயுக்தியை யவ தரிக்கச்செய்து பாதிக்கத்தக்கவனுவன் என ஜல்பத்தின்கண் ணும் முற்றினுமிடங்கிடையாதன கண்டனயுக்திகள் என்பனு வாக இன்றும்.

## 175. இலக்கண சாமானிய கண்டன யுக்தி.

மற்றவைகளெத்தகையன வாமாலோவெனின்? நுத லப்பெறுகின்றன; அங்ஙனமன்றோ:—ஆண்டிலக்கியத்தின் கண்ணிலேபேறு இலக்கணுதீனமாம், இலக்கணங்களோ பொ ருந்தாதனவேயாம்; ஞானதிகரணுதி இலக்கண நிரூபணவாயி லாகச் சக்கரகாதி தோஷம்) அடைவுறுதலின்.

## 176. பிரமையிலக்கண கண்டனம்.

அவற்றுள், ஆண்டுதத்துவானுபூதி பிரமையென்பதும் பொருந்தாதாம் தத்துவசப்தார்த்தத்தை யினிதியம்ப முடியா மையின். அதனது பாவமன்றோ தத்துவமெனப்படுகின்றது, பிரகிருதமன்றோ தத்சப்தப் பொருள், ஈண்டுப் பிரகிருதம் சிறிதுமின்றும்; யாது தத்சப்தத்தானே ஆராயப்படுமோ.

**177. தத்வ சப்தத்திற்குக் காரணப்பொருள் கூறவொண்ணமை.**

இனியனுபூதியானே தன் சம்பந்திவிடய ஆக்ஷேபத்தானே மதியிலிருப்ப தானுற்றப்படும் அது தத்சப்தத்தானே ஆராயப்படும். கூறுவோன் கேட்போன் மதியிலிருப்புதன் கண்ணே பிரகரண பதார்த்த மிலைப்பாறுதலின். அதனால், எப்பொருளினது எப்பாவம் அதனது தத்வ மறையப்பெறும் எனின்? பெறுதாம், அரஜதாதி (சுக்தியாதி)கட்கும் இரஜதாதி வடிவமாக அனுபூதிவிடயத் தகைமை சம்பவித்தலின் அசத்திய அனுபூதியை விலக்காமையின்; பாவ ஆசிரயமாகிய பவிதாவிற்குத் தத்துவ சப்தார்த்தத் தகைமை வழக்குறுமையினானே தருமியங்கிசத்தும் விசிஷ்டாங்கிசத்தும் உண்டாம் பிரமைக்கு அப்பிரமாத்தன்மையெய்தலின்.

**178. தத்வசப்தத்திற்கு இடுகுறிப்பொருளியம்ப வேலாமை.**

இனி, அவயவப்பொருட் சிந்தையானே இத்தூடணங் கூறியதை விட்டொழிக்குக: இத் தத்துவசப்தம் சொரூப மாத்திர வசனமெனவாதலின் எனின்; இஃது மியையாதேயாம்:—ஜாதியல்ல துபாதியாய சொரூபத்தன்மைக்குத் தன்வடிவில் இருப்பின்மைகளானே கூடாமையின்; சொரூப சப்தார்த்த ஒன்றசம்பவமாதலின் விடயந்தோறும் விலக்கத்தான் இலக்கணத்திற்கு அவ்யாபகத்தன்மை யடைவுறுதலின்.

**179. தத்வசப்தத்திற்குச் சொருபவாசித்தன்மை இருந்தபோதினும் விபரீதாதிகள் நீங்காமை.**

தத்துவமென விபரீதாதிகளின் நீக்கம் எங்ஙனந்தானுண்டாம்? அங்ஙனமன்றே இப்பியின்கண்ணே வெள்ளியென்னுமுணர்வும் சொரூபபுத்தியேயாகுமன்றே, தருமியாதல் இரஜதத்தன்மையாதல் சொரூபமன்றென்பதாக இன்றன்றே; அவற்றிற்கொளிராநின்ற சம்பந்தம் சொரூபமன்றென்பதாகவும்

பொருந்தவில்லையன்றே; அவற்றின் சம்பந்தம் சமவாயமாக வோ புலப்படுகின்றது, அஃதுஞ் சொரூபமேயாமன்றே.

### 180. விசிஷ்ட சத்துவத்திற்குச் சொரூபத்தன்மை நீக்கம்.

உண்மையே, சமவாயம் சொரூபமாம், அதுவோ சுத்தி வியத்தியில் இரஜதத் தன்மைக் கின்றுமெனின்? என்னற்க; ஆண்டு இலாமையின்கண்ணும் சொரூபத்தன்மையை விலக்கும்பாடின்மையின்; இல்லத்திற் றேவத்த னில்லன் எனச் சொரூபமில்லையென்பதாக வில்லையன்றே.

### 181. தேசகாலசம்பந்தி சொரூபத்திற்குத் தத்வசப்தார்த்தத் தன்மையின் நீக்கம்.

தத்துவமெனச் சொரூபமாத்திரத்தைச் சாற்றுகில்லேம்; மற்றே, எத்தேசகால° சம்பந்தியா யெச்சொரூபம் புலப்படுமோ அதற்கு அத்தேசகால சம்பந்தி சொரூபந்தத்துவமெனச் சாற்றுவேமெனின்; என்ன வியலாதாம், தேசகால சம்பந் தாங்கிசத்தில் பிரமைக்கு அப்பிரமாத்தன்மை யடைவாதலின்.

### 182. நான்கிற்கும் தத்துவசப்த வாச்சியத்வ நீக்கம்.

அவற்றின் சொரூபமே தத்துவ சப்தார்த்தம் எனின்? ஆகாதாம், தத்துவபதத்திற்கு அநேகம் பொருட்டன்மையேலாயின் இலக்கண அவ்யாபகத் தன்மையாதலின்.

### 183. அவ்வடிவத்தானே புலப்பட்டதற்கு அவ்வாறுந்தகைமை தத்துவமென்னும் கடைப்பக்கநீக்கம்.

இனி, யாது எவ்வாறுசப்புலப்படுகின்றதோ, அஃதவ்வாறுண்மையாக நிலைபெற்று நிற்றல் தத்துவமென்பேம் எனக் கூறின்? இஃதும் பொருந்தாததேயாம், யாது எவ்வாறுகப் புலப்படுகின்றதோ அது புலப்படுஞ்சமயத்தை விடுத்து வேறு காலத்தில் அவ்வாறுக ஆமாயின் அப்போழ்தும் இங்ஙன் றத்

திலமாகவேவேண்டும் ; வேண்டவே, வரும் பாகஜச் சிவப் புக்கும்பய் கறுப்புத்தசையின்கண்ணும் இரக்தபித்தத்தானே சிவப்பாகத் தோற்றுவதாகித் தத்துவமாமென அம்மதிக்குப் பிரமாத் தன்மையினடைவாம். எப்போழ்தோ அப்போழ் தென்னும் சிறப்பைப் பெய்தலானே காலச்சிறப்புடைமை தோற்றுதலின் அப்பிரமாத்தன்மையின் அடைவாம் காலவை சிட்டியத்திலும் அயற்கால சம்பந்தம் அடைவுறுதன்றோ.

## 184. காலத்திற் கயற்காலத்தோடு சம்பந்தமில்லாமை.

அயலுபாதியானே வரைந்து கொள்ளப்பட்ட அது அயலுபாதியால் வரைந்து கொள்ளப்பட்டதனோடு சம்பந் திக்கச்செய்புமே யெனின் ? அற்றாயின், தண்டியாகிய தேவ தத்தனும் குண்டலியாகிய தன்னை ஏற்றிக்கொள்ளவே செய்ய லாம். உபாதி வேற்றுமையுற்றபோதினும் உபதேயத்தின தொருமை நீங்காமையின் இங்ஙனேலாதாமெனின் ? துல் லியமே.

## 185. காரணத்திற்குத் தத்துவ சப்தவாச்சியத் தன்மையினீக்கம்.

இதனானே காரணம் தத்துவமென்பதும் கழற்றப்பெற் றது. சருவத்திற்கும் காரணத்தன்மையேல் பிரமாணமின்மை யினானே நீக்கப்பட்டதாம். கணந்தோறும் விசிட்ட விசுவ அவ சிய காரணத்தன்மையி னங்கீகாரத்தானே துக்கத்தா னீக்கத் தையுடைய அர்த்தக் கிரியாகாரித்தன்மை சொரூபசத்வ இலக் கணமென அங்கீகரிக்கும் ஜைன சரணங்களிற் சரண்புகும் விலாச சம்பாதன தோடகவளத்தானும் நீக்கப்படுமென்க.

## 186. அனுபூதித்தன்மை விகற்பங்கள்.

அன்றியும், அனுபூதித்தன்மையென்பது ஞானத்தன்மை யினுள் ளடங்கிய பொதுமைப்பேதமா? மிருதியினும் வேறாய ஞானத்தன்மையா ? மிருதி யிலக்கணமின்றிய ஞானத்தன்

மையா ? அதன் சேய்மையற்ற மூற்போ துதித்தலானே நிய தமாய சிறந்த காரணமுடைய புத்தித்தன்மையா ?

## 187. அனுபூதித்தன்மைக்கு அனுபவிக்கின்றேன் என்னுந் தோற்றமூலத்தன்மையைக் கூற முடியாமை.

ஆண்டாகிய தல்லவாம், அங்ஙனமன்றே :—அனுபூதித் தன்மையென்பது ஒரு பொருண்மையாமென வுடன்படலியாங் ஙனம் ? அனுபவிக்கின்றேன் என்னுந் தோற்றத்தொடர்பின் வயத்தானேயெனின் ? கூடாதாம், தைத்திங்க ளிரவினீற்றில் வெண்கருயாற்றின்கூட்டிற் குடைவானுக்குச் சத்த வலுமை யானே வருந் தனது துறக்கவின்ப நற்றோற்ற மிருந்தபோதி னும் இன்ப மனுபவிக்கின்றேன் என்னும்புலப்பாடுதியாமை யின், மாறாகத், தட்பத்தா லுளதாய வேதனையின் நல்லுண ர்ச்சியானே எனவாம். அயன்மாதைத்தான், இனிது நுகரும் ஆத்திககாமுகனுக்குச் சத்தத்தின் அதீனமாக, வரு நிர யச்செல்கையான் அநுபவிக்கத்தக்க துயர முணரப்படினும் அஞரனுபவிக்கின்றேனென்னும் அறிவுதியாமையின்; மாறாக மந்தமற்ற இன்பத்தை மாந்திக்கொண் டிஞ்ஞான் றிருக்கின்’ றேன் என்னும் தோற்றமிருத்தலின் சத்தத்தாற் காண்பிக்கப் பட்ட வியாத்தியா லுண்டாய அனுமானம் அனுபவமேயா குமேலாயின் இன்பமர்தல் துன்பமாதல் அனுபவிக்கின்றேன் என்னும் அவற்றின் றோற்றமன்றேவாம்.

## 188. அநுபவத்தன்மைக் கற்பனையின் சாக்ஷாத் தன்மையின் மூலத்தன்மை நீக்கமாதல்.

இனிச் சாக்ஷாத்காரத்தை அனுபவப்பொருட் டனுச ரித்து அவற்றிற் கிங்ஙனின்றும், புலப்பாடு விவகாரங்கள் சத்தத்தா லுளதாய அனுமான விஷய வுடையனவாகவோ, ஆராய்வோனுக் கவைகள் ஒருதலையாகவுளவாம் என நினைவை யேலாயின் ; சாக்ஷாத்காரஞ்செய்யும் ஞானத்தின்கண் அனு

பவத்தோற்ற விவகாரங்கள் சாக்ஷாத்தன்மையா லாக்கப் பெற்றனவென ஆண்டனுபவத்தன்மைப் பொதுமைக் கற்பனைக்கட் பயன் அளவைகளின்றும். எனவே அநுபூதியர்த்த வேற்றுமையானே இலக்கணந்தொடராமை தோடமாமென்க.

## 189. மிருதியினும் வேறுயதாந் தன்மைக்கு அனுபவத்தன்மையின் கற்பகத்தன்மைநீக்கம்.

இனிமிருதியினும் விலகியவடிவத்தானே காக்ஷிமுதலியவற்றாடு அநுபவமென்னுந் தொடர்ச்சியுணர்ச்சி யாதுளதாமோ அது சாக்ஷாத்காரித்தன்மையானே பொருந்தாததாம்; அதனினும் சாக்ஷாத்காரி அசாக்ஷாத்காரி விசேடத்திற் பொதுவாயிருக்கும் அநுபூதித்தன்மை அயலொன்றே யங்கீகரிக்கப்பாலதாம் எனக்கூறின் அதுவும் பொருந்தாதாம்; வேறுபொருள் விலக்கவடிவத்தானே யாது அதனினிதரங்களிற்றொடர்ந்த தோற்றமாதல் அதன் விவகாரமாதல் ஆமோ ஆண்டு அதேவடிவம் நிமித்தமாம். யாதேனும் பொதுமையொன்றதனைப் பின்பற்றிக் கற்பிக்கலாகாதாம், அவ்வாறுகவே அக்ஷமல்லாத பொருள்களாய குட முதலியவற்றினின்றும் விலக்கவடிவானே கடுக்காய் முதலியவற்றே ஒப்புமைகவரப் பெறுதலின் அக்ஷத்தன்மைமுதலிய பொதுமைகள் கற்பிக்கப் படுமெனல் கதுவுறுமன்றோ.

## 190. சாங்கரியத்தை நன்குபுலப்படுத்துவான் பிரத்தியபிஞ்ஞையின் விகற்பங்கள்.

இதனானும் அநுபூதித்தன்மை யென்பது மிருதியினும் விலகியபொதுமையன்றும்; அங்ஙனமன்றோ:—குடம் அதன்றே அஃதென்? மிருதியனுபவவடிவ இருஞானமா? அல்லது, ஓரேவிஞ்ஞானம் அங்கிசத்தேமிருதி அங்கிசத்தேயோ அநு

பவம் ஆகியுளதா? அல்லது, மிருதியேதானே? அல்லது தானென்னனுபவமேதானே?

191. அபேதத்திற்கு மிருதியின்கண்ணும் அனுபவத்தின் கண்ணும் உள்ளடக்கமின்மையின் முதற்கற்பங்கூடாமை.

ஆதியதேற்பிரத்திய பிஞ்ஞையின்மாட்டு முன்னவத்தை விசிட்டத்தினும் இதந்தைவிசிட்டத்தின் எவ்விவ்வபேதமொளிர்கின்றதோ அதை மிருதியின்கண்ணேயுள்ளடக்கலொல்லாதாம்; அனுபவிக்கப்படாமையினனே சமஸ்காரவிடயமாகாமையின். அதனனே மூன்றுவதுமன்றும், அனுபவத்தின்கண்ணுள்ளடக்குவானிது அமையாததுமாகும்; பிரத்தியபிஞ்ஞானகாலத்தில் அனுபவத்தானே முன்னவத்தை அறியப்பெறாமையின். அறியப்பெறிற்றனென் அனுபவமேயாமென்னும் எஞ்சியபக்கத்திலுள்ளடக்கமாம்; அதுவும், இனித்தூடிக்கப்படும். அதனனே, இரண்டாவதுமன்றும்; முன்னவத்தை விசிட்ட அபின்னத்தன்மையங்கிசத்தின்கண் ணனுபவத்தையுடன்படினே முன்னவத்தை விசிட்டப்பான்மையும் அனுபவவிடயத்தின்கண்ணே புகுத்தப்பெறும் என்க; எனவே, ஈற்றுப்பக்கமெய்தலாம்.

192. அதனபின்னமேன்பதில் அங்கிசமாகிய மிருதித்தன்மை அனுபூதித்தன்மைகளின் நீக்கம்.

இனிமுன்னவத்தை விசிட்டத்தினும் அபின்னமென்னுமிப்பொருளும் அநேக அங்கிசமாம். அவற்றுண்முன்னவத்தை விசிட்டமென்னு மங்கிசத்தில் மிருதித்தன்மையும், அபின்னமென்னு மங்கிசத்திலோ அனுபவத்தன்மையுமாமென அறைந்திடலாம். அவ்வாறாயினே, முன்னவத்தை விசிட்டமது, இதந்தை விசிட்டமும் அபின்னமும் இது, என்பதாக மிருதியனுபூதிகளானே, அறிவிக்கப்பெறும்; பெறவே, முன்

னவத்தை விசிட்டப்பற்றுக்கோடாகவோ அபேதம் எதனுனு மொளிர்விக்கப்பெறவில்லை, இலதாகவே, முன்னவத்தை விசிட்டம்யாதோ அதுவே இதுவென்னும் பிரத்தியபிஞ்ஞையின் ஆகமாகாதாம்.

## 193. எஞ்சியதாக அபேதத்திற்குத் தத்தைப்பிரதி யோகியுடைமைத்துணிபின்சங்கை.

இனியனுபவத்தானே எவ்விவ்வனுபவிக்கப்படுந் தருமி யைப்பற்றிநிற்பதாக அபேதம்போதிக்கலாயதோ அஃதயற் கோடியை யணுகாமன் முடிவுபேறடைவதின்றாம்; இன் றாகவே எதனுனேனும் திண்ணமாயெதனதேனும்அபேதமாம். ஆதலின் முன்னிலையிற் கிடந்தமைகொண்டு பிருதியங்கிசம் புலப்படுத்தியதேயாய முன்னவத்தை விசிட்டரூப அயற்கோடி யணுகப்பெறும்; பெறவே, அபேதத்திற்கு முன்னவத்தைவிசி ட்டத்தைப்பற்றியதாந்தன்மை துணியப்பெறுமென்பதாம்.

## 194. பற்றலேன்னுமோசைப் போருள்பகரப்படாமையாற் சமாதானம்.

அவ்விது துச்சதரமாமென்க, அயற்கோடியைப்பற்றலா மென்பதென் னயற்கோடியைப்பற்றியாதலா? அல்லதென் ன யற் கோடியைப்பற்றிய வகையானறியப்பெறுதலா? அபேதத் திற்கிஞ்ஞான்று முன்னவத்தை விசிட்டதருமியின் பற்றுக் கோடானே உதயமாயினோ முன் முன்னவத்தைவிசிட்ட இதந் தைவிசிட்டங்கட்குப் பேதமாதலின் ஆதியதன்றாம். இரண் டாவதிலோ, அயற்கோடியின் பற்றுக்கோடானே இதந்தை வரைந்துகொண்ட தருமியபேதத்தின் ஞானமியாதோ அது பிருதியின் கண்ணடங்குதலாகாதாம், அனுபவாங்கிசத்தும் ஆகாதாமென அறைந்ததோடேயா மென்றுணர்க.

## 195. தருமியைக்கொண்டு மிருதியனுபூதிகட்குச் சங்கரம்.

அன்றியும், பிரத்தியபிஞ்ஞானம் அதுவென்னுமங்கிசத்தேமிருதி, யிதுவென்னு மங்கிசத்தேயோ அனுபவமென்பதான ஒருஞானத்தை யங்கீகரிக்குங்கால் தருமியைக்கொண்டும் மிருதி யனுபவசங்கரம் மீட்க முடியாததேயாம். அங்ஙனமன்றோ :—சமஸ்காரத்தானே தத்தைமாத்திரம் புலப்படுகின்றதா? தத்தை விசிட்டமாகிய தருமியுமா? ஆதியதேல்; அஃதென்னும் பிரத்தியபிஞ்ஞையின் சரீரம் ஆகாமற்போம், கேவலந்தத்தை சமஸ்காரத்தானே புலப்படுதலின்; இரண்டாவது மேலாதாம், அவ்வாறாயின், இஃதென்னும் அனுபவாங்கிசத்தும் தருமிப்பிரகாசம சாற்றத்தகுநியதேயாகும்; மாறாயினே, இதந்தைமாத்திரமொளிரின் இஃதென்னுமவ்வாகமாகாதாம். இன்னணமாகவே, தருமியைத் தோற்றுவிக்குமேதுக்களாகிய சமஸ்காரம் இந்திரியமென்னும் இரண்டன் அடைவரங்கால், விசேடியாங்கிசத்தே பின்னஞானங்கள் உண்டாமா? அல்லது, இரண்டுகாரணங்களின் ஒருமையின் அபேதத்தைக்கோடும் ஞானமுண்டாமா? முதலதில், பிரத்தியபிஞ்ஞானத்திற்கு வகஞான வியத்தித்தகைமையை யங்கீகரிக்கும் வியாகாதமாம். பேதபக்கத்திற்கூறிய குற்றம் பற்றலுமாம். இரண்டாவதன்கண்ணே, தருமியங்கிசத்தே பிரத்யபிஞ்ஞைக்கு மிருதித்தகைமையும் அனுபவத்தகைமையும் ஆம்; ஆகவே அனுபூதிஸ்மரண சங்கரமாமென விடயவிவத்தையானும் நியமம் நீங்கியதாமென்க.

## 196. உபாதியின் வேற்றுமையானே மிருதித்தன்மை யனுபூதித் தன்மைகளின் விவத்தை விலக்கம்.

இனி யியம்பப்பெறும், விடயவுபாதி வேற்றுமையானே விவத்தைவேண்டாதொழிக, உபாதிவேற்றுமையானே உண்டாமன்றோ. அஃதெங்ஙனம் :—சமஸ்காரத்தா லுண்டாந்தன்

மையைக்கொண்டு மிருதித்தன்மையின் விவத்தையாம், இந்திரியசம்பந்தத்தாலுண்டாந் தன்மையைக்கொண்டோ அநுபவத்தன்மையின் விவத்தையாம், ஆகவே முரண்முட்டறுதல் உளதாகுக? ஆகாதாம், பிரமாத்தன்மையைப் பொதுமையென வுடன்படாதபோது பிரமாரூபத்தன்மையை விடய விவத்திதியினுனே யங்கீகரித்திருத்தலின் வேற்றுபாதி விளம்பினும், மிருதித்தன்மை அநுபூதித்தன்மைகள் ஒரேதருமியாகிய பொருளின்கண்ணேபுகுதலின் பிரமாத்தன்மை யப்பிரமாத்தன்மைகட்கு ஒரு விடயத்தன்மையே பொருந்துமென்க.

197. தானுகவே யொளிர்தலின் மிருதித்தன்மை அநுபூதித் தன்மைகட்குச் சங்கரமாம்.

மேலும், ஞானபேதங்களின் சத்துவ அசத்துவங்கள் ஆன்மாவின்கண்ணே யொளிர்தலின் மிருதித்தன்மை யநுபூதித்தன்மை யென்னு மிரண்டும் பிரத்தியபிஞ்ஞையின்கண்ணே தாமாகவே யொளிர்தலின் மிருதித்தன்மை முதலியவற்றிற்கு விடயநிரூபண விவத்திதியை யங்கீகரியாதபோழ்து இதந்தையின்கண்ணும் மிருதியிலங்கும் வழக்காம் சமஸ்காரத்தாலுளதாந் தகைமையே மிருதித்தகைமையேலாயின்; அதற்கே, முரண்மொழியப்பட்டவழி முரணீக்குவான் அதேயுபாதியுபுங்யசிக்கப்பெறும் என அயன்மனத்தே அமைவாகப்புகுவதின்றென்க. இனி, மிருதித்தன்மை யென்பது அன்னியமென்னினுமமையாதாம்; அங்ஙனமன்றே :—சமஸ்காரத்தாலுளதாந்தன்மை, சமஸ்காரத்தின் பின்னர் நியதமாயிருத்தல், நியதத்தன்மையும் நானுவியத்திகளிலுள்ள ஒரு ரூபமாகிய நன்குகவரற்பாலதைக்கவராது சம்பவியாதாமென மிருதித்தன்மை யானே சமஸ்காரத்தாலுளதாந் தகைமை சாற்றற்பாற்றுந் அன்னணமாகவே, சமஸ்காரத்தாலுளதாந் தகைமையின் நிலைபேற்றின்மாட்டோ மிருதித்தகைமையுபாதியாகும், மிருதித்

தன்மையின்நிலைபேற்றின்மாட்டோ சமஸ்காரத்தாலுள்ள தாம் தகைமையாமென வொன்றை யொன்றுபற்றலாம். ஆதலின், மிருதியனுபவசங்கரம் நீக்கவொண்ணாததேயாம்.

## 198. உபயகாரண ஜன்னியத்தகைமையின்கண் சங்கரம் நீக்கவேலாமை.

மேலும், மிருதியனுபவங்கட்குக் காரணசாமக்கிரியாயுள்ளவைகள் பிரத்தியபிஞ்ஞையின்கண்ணே யெண்ணத்தக்கனவா, அலவா, அலவேலாயின், யாங்ஙனம் அங்கிசத்தானும் பிரத்தியபிஞ்ஞானத்திற்கு மிருதித்தன்மையும், அனுபவத்தன்மையும், கூடும். இவ்வாறே, அவ்வாறதாந் தன்மையேலாயின், மிருதியனுபூதிகட்கு அதிப்பிரசங்கம் வருதலின் அதுவே சங்கரமாம். முதலதிலோ, தனியாகவே காரியவுதயமெழக்காம். தனித்தனியாகத் தன்றன் காரியத்தில் ஆற்றற்றன்மையுண்மையின் சாமக்கிரியின் வேற்றுமைக்குக் காரியவேற்றுமைக்காரணத்தன்மையானே துணியப்பெற்றதாந்தன்மை யுண்மையின்.

## 199. தனியாகத்துணியப்பெற்ற சாமக்கிரியின் வேற்றுமைக்குக் காரியவேற்றுமை யுடைமையாமெனக் கடாதல்.

இனியாண்டு அவைதனியாக உளவாமோ ஆண்டுத்தனியாகவேகாரியமாம். பிரத்திய பிஞ்ஞையின்மாட்டோ அவைகட்கு ஒரேபோழ்திலுண்டாந்தன்மை யுண்மையின் தழீஇயெழுதலின் தழீஇயே காரியமாம். குடமாடை முதலியவற்றின் சாமக்கிரிகட்கு இன்னணம் காணப்பெறுவிடினும்; அதனினும் விலக்கணவியற்கை மேயவாதலினிவைகட்கு இத்தகைமையினையும், ஒரு பொருளின் எத்தகைய இயற்கையுளதோ அத்தகைமை மற்றவை யாவற்றிற்கும் பற்றுமென்பதின்றன்றே, உலகவிசித்திரப் பங்கப்பிரசங்கம் வருதலின் என்பதாம்.

## 200. சாமக்கிரிகளின் அன்னியோன்னிய சககாரியத் தன்மையினும் அதனபாவத்தினுந் தூடணம்.

இஃதாகாதாம், யாண்டவற்றிற் கொருமித்திருத்தலாமோ ஆண்டென் பரஸ்பரசககாரித்தன்மை அவற்றிற்குடன்பாடா? இன்று? இன்றேலாயின் ஒன்றற்கொன்றொருமிக்கு மிலக்கணச்சிறப்புபயோகமற்றதாம். காரியத்தைப் பயக்கும்பொருட்டொன்றற்கொன்று சககாரிபாவமின்மையாற் பிரயோஜனமாகாமையின்; அதனுனே துல்லியமாதலின் தனித்தனியே காரியமாமெனச்சாரும். இனி யொன்றற்கொன்று சககாரியத்தன்மை அவற்றிற் கவாவப்பெறுமேலாயின் அநுபவத்தினங்கிசத்தும் சமஸ்காரத்தின்வியாபாரமாம்,ஸ்மரண அங்கிசத்தும் இந்திரியத்தினதாமென நியாமகமாகவெண்ணிய அவற்றிற்கிரண்டங்கிசத்தும் பொதுமைபுண்மையின் மிருதியங்கிசத்தும் அநுபூதி அநுபூதியங்கிசத்தும் மிருதியெனப் பிரத்தியபிஞ்ஞையின் மாட்டனுபூதி மிருதிசங்கரத்தானே வச்சிரப்பூச்சாம்.

## 201. நான்காவதுபக்க நலமின்மை.

அநுபவமே யாமென்னும் பக்கமும் நலமுடையதாகாதாம்; ஆமேல் தத்தையால் வரைந்துகொண்டது அபேதப்பற்றுக்கோடாதலின்கட் சமஸ்காரமும்மின்றும், இந்திரியசம்பந்தமு மன்றுமென அதற்கவ்விடயத்தன்மையினடைவாம்.

## 202. சமஸ்காரத்தை வாயிலாகவுடைய பிரத்தியாசத்தியால் இந்திரியத்தான் அதன் கவர்ச்சிச்சங்கை நீக்கம்.

சமஸ்காரத்தை வாயிலாகவுடைய பிரத்தியாசத்தியாகிய சம்புக்த சமவேதவிசேஷணதையினுனே அதன் கவர்ச்சியாமென்னற்க; ஆயிற்சிலபால் அவனிவனு? அல்லனு? வென்னுமையம் நிகழாமற்போம். தோடவயத்தானே ஆண்டதன்பிரகாசமாமன்றிச் சம்பத்தவிசேஷணத்தன்மையானே யாகாதாமெனின்? சமஸ்காரமில்லாமலும் தோடவயத்தானே அத

னடைவுகூடலின். வத்துவை யொளிர்விப்பதன்கண்ணே தோ டத்தன்மையைக் கூறும்யுக்திகூற முடியாமையின். சிலபால தற்கு அவ்வத்துப்பிரகாசித்தன்மையுண்மையின் தோட்டமாமெ னின்? யாங்ஙனம் அக்கமுதலியவற்றிற்கு மஃதாகாமற்போம்? விசிட்டத்தன்மையானே யவ்வாறுந்தகைகைமைக்குப் பிரகிருதத் தின்மாட்டும் பரிகாரமின்மையின். இதற்கவத்துவை யொளிர் விக்குந்தன்மை சிறப்பின்றியாண்டுமொன்றுறாதாம். இருக்கப் பட்டபொருளின்கண்ணும் தோடத்தான் அவத்துவிற்கே பிர காசமாயின் ஐயத்தான்விழைந்தார்து முயல்கைமுதலியன சம் பவியாவாம்.

203. நிச்சயத்தடைத்தன்மையே தோடத்தகைமையென்னுங் கடாவை யோடக்கல்.

வத்துவிடயத்தன்மையிருப்பினும் தோடத்தானே அநிச் சயத்தன்மையாமெனின்? உண்மையாக அதற்குக் கல்ப்பின் மையின் அதனது பிரகாசத்தில் அதுவே ஐயத்தொருபக்கத் தில் ஒளிர்ந்ததென யாங்ஙனம் அதன் அநிச்சயத்தன்மை யென்க. நிச்சயப்பொருளுக்குச் சம்சயகோடியின்பால் கண் டனமில்லாதபோது சம்சயத்தின்கண் அதனபாவமாகிய அதி கத்தைக்கவருந்தன்மையிருப்பினும் நிச்சயமானது தடையற் றிருத்தலினுனே அபாவநிச்சயங் கேவலம் அயற்கோடியாயதி கமாம்.

204. சமுசயத்தன்மைச்சாதியான் வரைந்துகோண்டதை யுண்டாக்குந்தன்மை தோடத்தன்மையாமென்னும் பக்கமிடல்.

சமுசயத்தன்மை ஜாதியாம், அதனை யுண்டாக்குவதோ தோடமாமெனின், அற்றன்றும், இஃதஃதா? அல்லவா? என் னும் சமுசயகோடிப்பொருளைக் குறிப்பிப்பதோடு இனிதுகோ டலின் வாசப்தப்பிரதீதி வியவகாரங்களின் அபாவ அடைவா தலின், பிரதீதியோடும் வாகாரார்த்த சம்பந்தமாயின் புலனு

றுகின்றேனு இலனுவென அதனடைவாதலின் வாகாரப்பொருள் பிரதீதியையடைந்திருப்பதாயினும், நிச்சயத்தகைமை நிகர்ப்பக்குற்றியைக் கொணுமகனேயேனும் என்னும் குற்றி மகன்பாலுள்ளபக்கத்ததாய விவகார அடைவுகூடாமையின் ஆகலின் வாகாரப்பொருட்கு ஞானதருமத்தன்மையுண்மையேற் சாக்ஷாத்காரித்தன்மை முதலியவற்றைப்போலும், விடயத்தோடு விரவாமையேயாமென்பதாம்.

## 205. தோடத்தானே பிரத்தியாசத்தியின்றிரஸ்காரத்தான் ஐயமாமேன்னும் பக்கநீக்கம்.

சம்பந்தமிருந்தபோதினும் மாசின்வசத்தான், சம்பந்தங் கா ரணமன்மையின். ஆண்டு மனத்தானே கவரப்பெறுதாம் எனப்பெறுகவெனப்பேசுற்க; தோடமிருந்தபோதினும் பொருள்கட்குச் சமஸ்காரத்தோடும், சமஸ்காரத்திற்கு மான்மாவோடும், அதற்குமனத்தோடும், அதற்கும் வெளிப்பொறியோடும், ஆம்சம்பந்தம் அவாவின்மாட்டே அதன் பொருளொளிர்வு முதலிய நியமங்கூடலின், மீண்டுயாதுதான் கொனின் ம்தத்திற்சம்பந்த அகாரணத்தன்மையாதலோ ? சமஸ்கார சம்பந்தத்தை யவாவாமல் அங்ஙனேயப்படலாமேலாயினே அனுபவியாதாதல், மறந்துதானுதல் அன்னணமையப்படலாமே.

## 206. சம்பத்தவிசேஷணத்தகைமைச் சம்பந்தத்தானே அபேதக்கவர்ச்சி கூடாமை.

உண்மையாயோ, சமஸ்காரத்தைக் கவராதமனத்தானும், ஆன்மாவைக்கவராத விழிமுதலியவற்றானும், அத்தகைய சம்பந்தத்தானே கவர்ச்சிகூடாமையின் நியமமாக அப்பொறியானே கவரப்பெறுதகைப் பற்றுக்கோடாயுடையதை யெதிர்மறையாக வுறுவதினும் வேருயதன் கவர்ச்சியில், தன்னுற் கவரப்பெற்ற சம்பத்தவிசேஷணதைக்குச் சம்பந்தத்தன்மைநியமமிருத்தலின் ; மாருயினே நீர்ப்பரமாணுமுதலியவற்றில், மற்

றிடத்தே கவரப்பெறுதலின் வடிவத்தகுதியின்மை நீக்கப் பெற்ற பிருதிவித்தன்மை முதலியவை விழிமுதலியவற்றானே கவரப்பெறலாமே. பொறிசரிக்குந்தேயங்களில் பரமாணுவுடைமையின்மைநியம அங்கீகாரம் பொருத்தமுடையதாகாதாம். சப்தாபாவப்பிரத்தியக்கத்தன்மை வாதிமதத்தில் சுரோத்திரேந்திரிய விசேஷணத்தகைமையேழாவதாய சம்பந்தமாம். ஆண்டுச்சம்பத்தவிசேஷணதை வேண்டுவதின்று மென்பதனானும் பிறழ்ச்சியின்றுமென்க.

## 207 சமஸ்காரத்திற்கே மனப்பிரத்தியாசத்தித்தன்மைநீக்கம்.

ஆன்மசம்புக்தமனப்பொருட்டு முன்னனுபவித்தபொருளான்ம சம்பந்தமே சமஸ்காரமென அதன்பொறிப்புலப்படாமை குற்றத்திற்கிலக்காகாதாம், இந்திரியார்த்த சந்நிகர்ஷத்தையங்கீகரித்தலின் பொறிக்குப்புலப்படாத பிரத்தியாசத்தியையுடன் படுவதானுந் தாண்டமுடியாதாம்; அன்னணமாயினே, அஃதென்னுமங்கிசத்தில் விழிமுதலியவற்றிற்குப் பிரத்தியாசத்தியின்மையின் பிரத்தியபிஞ்ஞைக்கு விழியாற் கவரப்படாமையினடைவாம். இஃதென்னுமங்கிசம் விழி முதலியவற்றானே, அஃதென்னுமங்கிசமோ மனத்தானேகவரப்பெறும், அதனிதனபேதமோ எதனாலெனவியம்பியதும் சுழன்று தொடருமென்பதாம்.

## 208. கூடப்பெறுததற்கே விழியாற்கவரப்படுதலாமென்னும் மதநீக்கம்.

இதனானே, சமஸ்காரம் சககாரிமாத்திரமாகும், இந்திரியத்தின் அதிப்பிரசங்கம் நீக்குவதுமாம், பிரத்தியபிஞ்ஞையின் கண்ணே அதன்பொருள் பொறியோடு பொருந்தாமலே புலப்படுகின்றது மயக்கப்பொருள்போலும். பொறிக்குப்பொருந்தியதைப் புலப்படுத்துவதூஉம் இயைபாஞ்சககாரியின்றியமையாதிருத்தன்மாத்திரையாம் அதுவுமிதமங்கிச வியைபானே

யாம், யாவற்றையுங் கவருமியைபுசககாரியாகாதாம் என்ப தும் நீக்கப்பட்டதாம்; அஃதிஃதா? அல்லவா? வென்னும் ஐயமின்மையி னடைவினனே யென்க. அதனைக் கண்டேன் என்பதாதிமிருதியும் இவ்வாறனுபவமே யாம், மனத்தினது ஆன்மசம்யோக உதவியுற்ற ஆன்மபொருளியைபானசமஸ்கா ரத்தானுண்டாவதாய அதற்குப்பொறிப்பொருட் சம்பந்தத்தா லுளதாந் தன்மையினனே யாமென்க. மனத்தோடு ஆன்மசம் யோகமிருத்தலின், ஆன்மசமவாயமாகக் காட்சிப்படுத்தப்படு வனவாய ஞானுதிகளோடு எண்ணப்படும்பொருட் கொப்புமை யுண்மையின் என்பதாம்.

## 209. பேதாபாவமாயாதல், சொரூப அபேதமாயாதல் இலங்கல்கூடுமேன்னும் பக்கநீக்கம்.

இதனனே, அஃதென்னுந்தன்மையான் வரைந்துகொண் டதை எதிர்மறையாகவுடைய அன்னியோன்னிய அபாவபா வமாயாதல் சொரூப அபேதமாயாதல் இஃதிலங்காநிற்கும் என்பதுநீக்கப்பெற்றதாம். அன்னியோன்னியஅபாவாபாவம் தத்தையிதந்தை யவச்சின்னங்களின் அன்னியோன்னியமே யாம். அச்சேர்க்கையொன்றுனே யினிதுகவரப் பெறுவதன் றும். இவ்வாறே சொரூப அபேதத்தின்மாட்டும் அவற்றின் றருமவொருமை யறியப் பெறுததேயாம் அதனைக்கவர்வதின் மையினன்.

## 210. மிருதிக்குச் சமஸ்காரத்தாலுண்டாந்தன்மையுண்டேனும் அனுபவத்தன்மையினடைவாம்.

சமஸ்காரத்தாற் புலப்படும் விடயத்தில் ஞானமனுபவ மாமேலாயின் மிருதியும் அனுபூதியாகாமை யாண்டையதெ ன்க. இனிச்சமஸ்காராதீனத்தன்மை மாத்திரையானே மிரு தித்தன்மையாகாதாம்; மற்றே, அனுபவகாரணத்தோடு கது வாதசமஸ்காரத்தானுளதாந் தன்மையினனேயாம். அதனனே

அதிகமாகிய அருத்த அக்கவியைபை யவாவியபிரத்தியபிஞ்ஞானம் அனுபவமேயாகும் மிருதியாகாதாம் எனின்! அற்றன்றும், சமஸ்காரத்தோடு சாராத அனுபவகாரணத்தாலுளதாந் தன்மையினுனே அனுபவத்தன்மையுளதாம்; பிரத்தியபிஞ்ஞானமோ சமஸ்கார சகித அனுபவகாரணத்தாலுளதாயது மிருதியேயாமென மாறுபாடாக ஆகாததென்னைகொலோ! பிறவிடத்தேமிருதி அனுபவ காரணத்தோடடைவுற்ற சமஸ்காரத்தாலுளதாயதெனவோ வின்றுமாலோவெனின்? பிறவிடத்தில் அனுபவமும் சமஸ்காரத்தோடு சார்ந்தபொருட் பொதியொற்றுமையானேயுளதாய தெனவுமின்றுமென வொப்புமையானே அபாதகமாம்.

## 211. பிரத்தியபிஞ்ஞானத்தின்ஏகஅனுபவத்வபக்கநீக்கமுடிபுரை

ஆதலினின்னணம், இதுதானென நிறுவவதில் அளவையின்மையின் தான்கற்பித்த விலத்தான மாறுபாடாகவும் கற்பனைசம்பவித்தலின் பிரத்தியபிஞ்ஞானம் உபயகாரணவொன்றுபாட்டான் மிருதியும் அனுபவமுமாமென எண்ணற்பாலதாம். இவ்வாறுகவே மிருதியினின்றும் விலகியதாக அனுபவத்தன்மைச்சாதியுளதென்னும் கெட்டபேரவா இடம்பெறுததேயாகும். விடயாங்கிசத்தின் மிருதித்தன்மை அனுபவத்தன்மைகளின் விவக்ஷையியற்றுவானியலாததாகும். அதனீக்கநிவேதன நிகழ்த்தியிருத்தலின், அதனுனே அந்தஞானமே அதனங்கிசத்தில் மிருதியும் அனுபூதியும் எனவியையினும் முரண்மதி நுமக்கிலதாயின் அதனதீனமாய அப்பொருளிலே பிரமாத்தன்மை அப்பிரமாத்தன்மை வீழ்ச்சியில் அஃதுளதாகுக.

## 212. சங்கரத்தான் அனுபவத்தன்மை, சாதியன்றுமேன நிரூபித்தல்.

இப்பாதகத்தானே முரண்முற்றலான் அனுபவத்தன்மையங்கீகாரத்தில் மிருதியினும்வேறுய அனுபவத்தன்மையென்

னூர். தொடர்புசாக்ஷாத்காரி ஞானமனுமிதி முதலியவற்றின் சாதாரணமென்பது அனுபவபலத்தானே நிலைபெறுத்தற்பால தாம் என்னும் பிரதீதிகலகமும் கழிக்கப்பட்டதாம்.

213. அனுபவவிரோத உற்பாவனமும் அதன் சமாதானமும்.

அற்றேலோ, அனுபவமேசரணமீண்டாம், பிரத்தியபிஞ் ஞானத்திலோ அனுபவத்தன்மையே அனுபவிக்கப்படுகின்ற தேயன்றி மிருதித்தன்மையின்றும். அதனானே, சமஸ்காரத்தா லுளதாந் தகைமையிருப்பினும் பொறிப்பொருளொற்றுமை யின் மிகுதிகுறித்து அனுபவத்தன்மையே யெனப்பக்கம் நிறு வுவதிலும் இதுவேயளவையாம், அன்றாயினே பிரத்தியபிஞ் ஞானத்தின்கண்ணே அனுபவத்தோற்ற முண்டாகலாகாதாம் என்னும்பிரதீதிகலகத்தானே எதிர்த்துநிற்றலாகும் அற்றன் றும், இதந்தைதத்தைகளை யிலக்குவனவாகிய அனுபவ ஸ்மர ணபாகங்களிருத்தலினானே அனுபவத்தின தொருபக்கத்தின் முக்கியமாக்கி யளவையிட்டறிவிப்பான் ஈண்டாற்றலின்மை யின்.

214. பிரத்தியபிஞ்ஞையின் கண்டனத்தின் உபயோகம்.

இதனானே, மிருதியனுபவ சங்கரப்பிரசங்கத்தானே அனு பூதிபதத்தானே விலக்கப்படுவது வாளாபோமெனக் கருதத் தக்கதாம்.

215. அனுபவத்திற்கு மிருதியை நீக்குந்தன்மையின் நீக்கம்.

பிரத்தியபிஞ்ஞானம் விலகாதொழிக, வேறுமிருதியோப விக்குமெனப்பகரற்க; அதனையும் அனுபவத்தன்மையானே யும்மாலின்றியமையாது அங்கீகரிக்கத்தக்கதாம். அங்ஙனமன் றே:— குடமாண்டிருந்தது என்பதாதிமிருதியின்கண்ணே பூர்வகால விசிஷ்டகுடம் புலப்படுகின்றதன்றே; சமஸ்காரத் தாற் புலப்படும் அப்பூதத்தகைமை பூர்வமனுபூதமன்றும்; மாறாகப் பூர்வம் வர்த்தமானத்தகைமையே அனுபூதியாற் கவ

ரப்பெற்றதாகும். ஆதலினின்ஞான்று பூர்வத்தன்மை யுண்மை வின் சாமக்கிரிக்கலப்பால் அதுவிதுவென்னும் பிரத்யபிஞ்ஞா னம்போலும் விசிஷ்டஞானமாய இதுவும் மிருதியனுபவ வடிவமென்றே யங்கீகரிக்கத்தக்கதாம்.

## 216. பிரத்தியபிஞ்ஞானத்தின் அனுபவத்வ கண்டன அதிதேசம்.

இதனானே, அனுபவ சாமக்கிரிசகித சமஸ்காரம் அனு பவ காரணமென்னும் பக்கத்திற் பூர்வம் வினவியதில் இம் மாசையு மியைவித்துக்காண்க. அவ்வாறாகவே, மிருதியினெ ழிவொன்றலின். அந்த ஸ்மரணமின்றாமன்றோ. எதன்கண் ணஃதொளிராதோ; அதனானும் விலக்கப்படுவது கூடாமை யேயாம்.

## 217. களவாடிய் தத்தையின் ஸ்மரண கண்டனம்.

தோடவயத்தாற் பிரமுஷ்டதத்தாம்ச ஸ்மரணமுண்டா மெனச் சிலரியம்புவர் அதுவுட் பொருந்தாதாம். அதனத் ஸ்மரணத்தன்மையி லளவையின்மையின், அனுபவ சாமக்கிரி யில்லாமையினானே எஞ்சியதாக மிருதித்தன்மையா மென் னற்க; பொறிப்பொரு ளொற்றுமையின் விலக்கத்தானே அனுபவ சாமக்கிரியின்மையின் எஞ்சியதாக அனுமிதி முத லியவற்றிற்கும் மிருதித்தன்மையி னடைவாதலின். சர்வானு பவ சாமக்கிரி யசம்பவத்தா லாமாலெனின்? மீண்டியாங் ஙனந்தான் ஆயுஷ்மானால்தத்தையி னங்கிசந் தணந்த வெள்ளி முதலியவற்றின் ஞானசாதனசாமக்கிரி அனுபவ ஹேதுசாமக் கிரி யன்றென்று துணியப்பெற்றதோ! ஐந்துபிரமாண காரண சாமக்கிரி யசம்பவத்தானெனின்? நான்கு பிரமாண ஜனக சாமக்கிரி யசம்பவத்தானே எஞ்சியதாக ஸ்மரணத்தை ஐந்தா வது பிரமையாக வுன்னா னிலைபெறுத்தப்படாத தென்னை கொலோ! ஐந்துபிரமாண காரணசாமக்கிரியில்லாதவழி

யுள்தாகியஞானம் பிருதியாமெென யாண்டடைவுற்றனேகொல்! ஆண்டுக்குடமிருந்தது என்பதாதி ஞானங்கட்கு அனுபவத் தன்மையாமென வுபந்யசிக்கப்பட்டமையின்.

## 218. எஞ்சியதாகச் சமஸ்காரமாத்திரத்திற்குக் காரணத் தன்மைச் சங்கை.

காட்சியாதி காரண சாமக்கிரி கூடாமையின், வெள்ளி மாத்திரமே முன்ன ரனுபவிக்கப்பட்டமையின், அவ்விடய சமஸ்காரம் சம்பவித்தலின் சமஸ்காரமே ஹேதுவென அங்கீ கரிக்கப்படும்; அயற்காரணத்தானே கற்பிக்கப்படமாட்டா தாம். பொறிப்பொருளொற்றுமை முதலியவை கிடையாத வழி யுளதாவதாகிய அனுமானுதி அனுபவிக்கப்படாத விட யமாதலினுனே, அதனு லுதயமாத லனுகாதென அதன் காரணம் குறி முதலியவையென வுடன்படலாகும்; ஆகவே, வேறளவையோடு கூடாத சமஸ்காரத்தா லுளதாதலாம், அதனு லிலக்கப்படலாதலாம், சாதிச்சிறப்பே பிருதித்தன்மை யென்பதாம்.

## 219. எஞ்சியதாற் றணிவின்மை.

அன்னணமாகாதாம், ஆண்டு அக்கத்திற்கே காரணத் தன்மை ஆகாததென்னேகொல்? எதனுற் சமஸ்காரத்தாலாந் தன்மை சாதிக்கப்பெறுகின்றதோ, அப்பொருளோடு அக் கால் அக்கத்திற் கொற்றுமையின்மையின், ஒற்றுமையற்ற அதற்கும் உணர்வைப் பயக்குந்தன்மையாமேல் மேல்வழக் குண்டாதலின் அதற்குப் பொறியாற் பயந்த தன்மையின்று மெனின்? அன்றும், கேவல சமஸ்காரத்திற்கும் அதனைப் பயப் பதில் மேல்வழக்காங்கே நிலைபேறுடைத்தாதலின். பொது வாய்க்கதுவுந் தன்மப்புலப்பாடுமுதலிய உதவியோடுற்ற சமஸ் காரத்திற்கு அதனைப்பயப்பதில் மேல்வழக் காகாதெனின், அற்றன்றும், அவ்வுதவியானே உதவிபெற்ற பொறிக்கும் அத

னைப் பயப்பதில் மேல்வழக்கு மேவாமையின் ஆயின் அனுப விக்கப்படாததின்கண்ணும் வழக்காமெனின்? ஆகாதாம், நினக் கும், அத்தருமத்தன்மையானே யறியப்பெறுது அத்தருமமு டைய தறியப்பெற்றவழி அதனது சமஸ்காரமுடையானுக்கு மிருதியி னடைவான் விடையொருபடியாம். அச் சமான தரு மதரிசனத்தாலாகிய சமஸ்காரமற்றவனுக்கும், அவ்வாறுயின், சகசரிதமாகிய வெள்ளிமுதலியவற்றின் பொறிபயந்தபுலப்பாட் டின் வழக்காமெனின்? என்னற்க, நின்மதத்தும் அத்தகைய வெள்ளி முதலியவற்றின் சமஸ்காரமுடையானுக்கு வெள்ளி முதலியவற்றின் ஸ்மிருதி வழக்கொப்பாதலின்.

220. சமஸ்கார நாசகத்திற்கே இந்திரிய சககாரித்தன்மை.

ஆதலின், நினக்குக் காலத்தடை முதலியவற்றானே சம் ஸ்கார லோபமாமன்றோ, அதனபாவத்திற்கு ஏதுத்தன்மை யை யங்கீகரித்தபோதினும் மேல்வழக்கு மேவாதாம். அஃதிங் ஙனமன்றோ :—“ மானுணர்த்துஞ்ச மக்கார நிற்கெது, வால தொப்புப்பி ரத்திய பிஞ்ஞானங், காலதேசக காரி விழிக்குற, மேல டைவினை மேவவொட் டாததே” அதனெப்புமைப் பிரத்திய பிஞ்ஞானமோ நினைக்கத்தக்கதன் நினைவு வாயிலாக வாமென்னு மிதுவும் ஒப்பேயாம்.

221. மயக்கத்தலத்தி லொற்றுமைப்படாததற்கே பொறியாலாந் தகைமையைப் புகலல்.

ஆயினும், பிறவிடத்திற் பொருளொற்றுமையிலாது பொ றிக்கு ஞானகரணத்தன்மை புலப்படக் கண்டதின்றன்றோ வெனின்? அற்றன்றும். விசிஷ்டரூபமாக மயல்விடயத்தில் என்னல் அங்கீகரிக்கப்பட்டிருத்தலின், உதவியாயுற்ற தோட சக்திக்கேனுஞ் சம்பந்தத்வ முண்மையானே இஷ்டமாதலின், அன்றியும், வேறு பிரமாணத்தின் சகாயம்பெறாத சமஸ்கா ரத்திற்கும் பிறவிடத்தில் ஞானம்பயக்குந் தன்மையைக் கண்

டிலேமென அதுவுந்தான் யாங்ஙனங் கற்பிக்கப்பெறுமோ! பிரத்தியபிஞ்ஞானத்தின்கண்ணே சமஸ்காரத்திற்கு ஒப்பின் றரிசனுதி சககாரித்தன்மை கற்பிதமாகும் இந்திரியத்திற்கென்று மெனின்? அற்றன்றும், பிரத்தியபிஞ்ஞானத்தில் சமஸ்கார இந்திரியங்களென்னு மிரண்டிற்குமே காரணத்தன்மை யிருத்தலின் ஒப்பின் றரிசனுதி யுதவியுடைமையின் காட்சி யொப்பாதலினென்க.

222. சாதிருசிய ஞானம்போலுஞ் சமஸ்காரத்திற்குச் சககாரித் தன்மை யுண்மையேல் தத்தை புலப்படுமேடைவாம்.

ஈண்டுச் சதிருசதரிசன சககாரித்தன்மையேல் சமஸ்கார சககாரித்வத்திற்கும் வழக்காம் பிரத்தியபிஞ்ஞானம்போலுமெனின்? அற்றன்றும், அவ்வாறுபின், அதுபோலவே தத்தையின் புலப்பாட்டடைவாதலின். சதிருசதரிசனுதி சககாரித்தன்மையானே தத்தையி னங்கிசம் வந்துறுமேல், சமஸ்காரத்தாலாந்தன்மை யுபாதியாம். தத்தையின் பிரயோஜிகையாகிய சதிருசதரிசன சககாரிதையே தியாகிக்கத்தக்கதாம். சமஸ்காரம் அல்லவாமென்பது மேலாதாம்; சதிருசதரிசனத்தை விடுத்துச்சமஸ்கார மிருந்தபோதினும் அவ்வாறின்மையி னுணர்வின்மையின்.

223. இந்திரியத்திற்குப் பிராப்பியகாரித்தன்மையேல் பிரதி வந்தியைப் பிறப்பித்தல்.

ஆயினும், இருக்கும்பொருளி லிந்திரியத்திற்குப் பிராப்பியகாரித்தன்மை கண்டதைக்கண்டித்தன் முடியாதாமெனின்? அன்றும், ஈண்டு, எங்ஙனம், அடைவி னுதவியையுற்ற இந்திரியத்திற்கு ஞாபகத்தன்மை கண்டனமோ, அங்ஙனமே, வேறு பிரமாணத்தின் சகாயம்பெற்ற சமஸ்காரத்திற்கும் ஞாபகத்தன்மை புலப்படக் கண்டனம் என அதுவும் அகற்றற்கணுகாததாம் என வியம்பினுமன்றே. சமஸ்காரத்திற்கு மிங்

கிரியசம்பந்தத் தன்மையை யங்கீகரித்திருத்தலின் அதனபா வந் துணியப்பெருமையின் என்பதாம்.

## 224. தத்தையி னங்கிச மோச நிராசம்.

தத்தையி னங்கிச மோச கற்பனையும் சுதந்திர சமஸ்காரத் தாலுளதாம் பக்கத்தின்பாலே அளவினுமீறி நிற்கும். இத் தத்தையினங்கிசமோச மியாங்ஙனமாய தென்னு மாராய்ச்சி யதிகரிக்கின்றதாம். முன்னர் நிகழ்கால முதலிப் காலச்சிறப் பாற் சிறப்பிக்கப்பட்ட வெள்ளி முதலியவை ஒரனுபவத்தி லொளிர்விக்கப்பட்டமையின் அதனுனுளதாய சமஸ்காரத்தி னும் அவ்வாறே யொளிர்விப்பான் றகுந்ய தாமாதலின்; பிரத் தியபிஞ்ஞையின்கண்ணே அவ்வாறே பயன் காணப்படுதலின். மாசின்வயத்தானே தத்தையினங்கிசமோசமெனின்? ஒல்லா தாம், விடயசம்பந்தமான் தியற்கையா யுண்மையின் சமஸ்கா ரத்தில் அதனுலோபமிலாமையின். மாசான் மிருதியின் மாட் டன்னணமெனின்? அம்மாசுதா னியாதுகொல்? மற்றையர்க் கெதனுனே மயலுற்பத்தியாமோவெனின்? ஆயின், அவ் வெள்ளிக்கொப்பா மிவ்வெள்ளி யென்பதன் கண்ணேனும், அதேவெள்ளி வியக்தி யிதுவென்பதன்கண்ணேனும், மீண்டு மதே வெள்ளி முற்பட்டதென்பதன் கண்ணேனும் பொது வாகவே தத் சப்தத்தானே பராமரிசிக்கப்பட்ட வெள்ளிக்கும் மயலின்மாட்டுத் தத்தாங்கிசமோசமாம், தோடமிருத்தலின், மாறுபினே, இது வெள்ளியென்னு மங்கிசத்தும் அந்தவுணர் வின்கண் தத்தையி னங்கிசமோச மாகாதாம், என இவ்வடை வின்பின்னடைவு சாலுமென வமைவாம்.

## 225. சித்திரரூபம்போலப் பிரத்தியபிஞ்ஞைக்கு விலக்கணத் தன்மையின் நீக்கம்.

பிரத்தியபிஞ்ஞையென்பது ஸ்மரண அனுபவங்களினும் அயல்வகையேயென வறையற்க; அனுபவத்தன்மையின்மை

யானே அப்பிரமாத்தன்மை யுறுதலின்; உறுகதானுங் னென வுரையாடற்க; நிலைபெறுத்தும் வாதியினுனே திரத் துணிபிற் பிரமாணத்தன்மையானே உபந்நியசித்திருத்தலின். இத்தகைய பிரசித்த இலக்கியத்தியாகத்தானே இலக்கண உபபாதனத்தில் அநியமம்வந்து பொருந்துமென்பதாம்.

226. உபசங்காரம்.

ஆகலின், ஜாதிவாசகமாகிய அனுபவபதம், மிருதியினின்றும் நீக்கற்பொருட்டுப் பெய்ததாமென்பது எவ்வாற்றானும் பொருந்தாதென்பதாம்.

227. இரண்டாவது மூன்றாவது கற்பம் பொருந்தாமை.

மிருதியன்னியத் தன்மையேனும், மிருதியிலக்கணமில தாந்தன்மையேனும், அனுபவார்த்தமாகாதாம். கூறியமுறையே மிருதியனுபூதி சங்கரங் காண்பித்திருத்தலின் விலக்குதலாதல் பொருந்தாமையினென்க.

228. மிருதி யயற்றன்மையின் விகற்ப உபந்யாசம்.

இதனானும் அனுபவார்த்தம் மிருதியன்யத்வமன்றும் அந்னமன்றே:—மிருதியன்யத்வம் ஒரு சிறிது ஸ்மரண அன்யத்வமா? சர்வமிருதி வியக்தியன்யத்தன்மையா? மிருதித்தன்மையற்றதன்மையா? கருதியது யாதுகொல்?

229. முதல்விகற்ப நீக்கம்.

முதலதிலோ, மற்றொருமிருதியி னயற்றன்மையானே மற்றொரு மிருதியும் அனுபூதியாகலாமே. வேறு ஸ்மரண வியக்தியினின்றும் வேறுபட்ட ஒரு ஸ்மிருதி வியக்தியானது ஸ்மரணமே யாகாதாமென்றுகாதன்றே; எதனால்தனன்னியத் தன்மை மிருதியன்னியத் தன்மையாகாதோ.

230 இரண்டாவது விகற்ப நீக்கம்.

இரண்டாவது மேலாதாம், எம்மனோரது மிருதி வியக்திகளினின்றும், உன்னால் யாங்ஙனந்தான் அயற்றன்மை பிர

மைக்குத் துணிதல்கூடும்? அவையாவற்றையு மறிவானுனக் காற்றலின்மையின். அங்ஙனமன்றே:—ஆண்டு அயலானது உணர்வின்கண் ணயலானுக்குக் காட்சிகூடல் நம்மனோர்க்குக் கூடாதன்றே, அனுமான அருத்தாபத்திகளும் ஆகாவாம்; குறிபொருந்தாமைகள் யாண்டும் அற்ப அறிவினரான் அறிவான் முடிவுபெறுமையின், சத்தமுமாகாதாம் யாண்டு மதற்கசம்பவ முண்மையின், உபமானுதியசம்பவமும் வெளிப்படையேயாம். ஆகையால் யாங்ஙனம் சர்வஸ்மிருதி வியக்திகளினின்றும் வேறென நிரூபித்தல்கூடும்? என அறியாமையானே பிரமையினிலக்கணத் துணிபின்மையாம். சர்வகால சர்வபுருஷசம்பந்திகளாய சர்வஸ்மிருதி வியக்திகளும் என்பாலிருக்கும் ஸ்மிருதி வியக்தியை மிருதித்தன்மையானே சாமானிய இலக்கண இந்திரியப் பிரத்தியாசத்தியாற் காட்சிப்படுத்தும் என்றுற்காட்சியானே யுணரப்பெறுவனவாம் வியாப்தியைக் கவருங்காலத்தே வியாப்பிய வியாபக வியக்திகளைப்போலும் என்னற்க; அவ்வாறுயின் ஒரு பிரமேயத்தைக் காட்சிப்படுத்தி னோனுக்குப் பிரமேயத்தன்மைச் சாமானியப்பிரத்தியாசத்தியினுனே பிரபஞ்சமே பிரத்தியக்ஷமாகுமன்றே. இங்ஙன மங்கீகரிக்கும் நினதிம் முற்றறிவுண்மையை எமது சித்தத்தேயாது நிகழ்கின்றதென்பதை அறிதியேல் விசுவசிப்பேம்.

## 231. மூன்றுவது விகற்பத்தில் விகற்போபந்யாசம்.

மூன்றுவது முற்றுதாம், மிருதித்தன்மையற்ற தன்மையும், மிருதித்தன்மையின்மை யுடைமையா? மிருதித்தன்மையை எதிர்மறையாக வுடைமை பற்றுக்கோட்டின் வடிவமா? அதனுணர்வா?

## 232. மூன்றுவதன்கண் முதல் விகற்ப விலக்கு.

ஆதியதாகாதாம், அங்ஙனமன்றே:— மிருதித்தன்மையன்னியோன்னியாபாவமும் மிருதித்தன்மையபாவமே யென

ப்பவிக்கும். அஃதுடைமையும், ஸ்மிருதிகளிலுமிருக்கும், மிருதித்தன்மையே மிருதியல்லவன்றோ. அதனானும் மிருதிக்கும் பிரமாத்தன்மையினடைவாம், அது விலக்காமையின் விசேடணம் வீணேயாம் விசேடணமின்றாயினோ இச்சை முதலியவற்றே மிகும் வழக்காம்.

## 233. மிருதித்தன்மையின் சம்சர்க்காபாவ விசாரம்.

மிருதித்தன்மையின் சம்சர்க்காபாவ மாண்டுக் கூறும் வேட்கையாமெனின்? ஆகாதாம், அங்ஙனமன்றோ:—மிருதித்தன்மையின் சம்சர்க்காபாவம் என என் கூறப்பெறுகின்றது? மிருதித்தன்மை விசிஷ்டமாய சம்சர்க்கத்தினபாவமா? அல்லது சம்சர்க்க விசிஷ்டமிருதித்தன்மையினபாவமா? அல்லது தான் அயலேயா சிறிது இவ்வாக்கின்வகையான் வசனிப்பான் வாஞ்சை? ஆதியதேல், மிருதித்தன்மைச் சம்சர்க்க அன்யோன்யாபாவம் மிருதியின்கண்ணே யிருக்கின்றதென அதேவழக்காம் மிருதித்தன்மைச் சம்சர்க்கம் மிருதியன்றாம். அதனானே யிரண்டாவதுமன்றாம், சம்சர்க்க விசிஷ்டமாய மிருதித்தன்மையே மிருதிவியக்தியென்பதில்லை யல்லவா? அதனானே சம்சர்க்கவிசிஷ்ட மிருதித்தன்மையோடுகூட மிருதிவியக்தியின் அன்யோன்ய அபாவங்கொண்டு விளம்பியதோடம் விலகாமையின். இங்ஙனம், ஆண்டாண்டும் சம்சர்க்க விசேஷணங்கொடுப்பின் தோடம் விலகவே விலகாதாம். விசேஷணங்கொடுக்கும் பரம்பரைக்கு வரம்பின்றியோடலின்கட்டான்முடிவுபெறுருக.

## 234. சம்சர்க்கத்திற்குச் சொரூபமே சம்சர்க்கம் என்னும் சங்கையின் நீக்கம்.

மிருதித்தன்மைச் சம்சர்க்கத்திற்கு வேறுசம்சர்க்கத்தானே சம்பந்தித்தன்மையின்றாம், மற்றோ, இயற்கையானே அஃதாம், பரம்பரை நேடல்கூடுமெனவியாங்ஙனம்? எனக்

கூறற்க ; மிருதித்தன்மைச் சம்சர்க்கத்தின் அன்னியோன்னி யாபாவங்கொண்டு செய்தவழக்கைப் பரிகரிப்பான் முற்றினும் முடியாமையின், வேறுசம்சர்க்க விசேஷணவசனத்திற்கு அதி கப் பொருண்முடிவுபேறின்மையின்.

## 235. இலக்கணத்தின் அசம்பவப் பீடிப்பு.

அன்றியும், அதனுபயவடிவத்தினும் அயலாக அச்சம் சர்க்கத்தை அங்கீகரியாதவனுல் மிருதித்தன்மைச் சம்சர்க் கம் மிருதித்தன்மைத் தன்மிவடிவம் என்னுமிவைகட்குச் சம் சர்க்கவடிவத் தன்மையை நிலைபெறுத்தப்புகின், அனுபூதி யில் அத்தகையசம்சர்க்கத்தின் நிஷேதமியாங்ஙனம்? அனு பூதியின் சொரூப மில்லையென்றா? அல்லது, மிருதித்தன்மை யின் சம்சர்க்கத்தினு? அதனு லெதன்நிடேதம்? வேற்றுப் பொருளுருவமேய சம்சர்க்கத்தின் நிடேதமேலோ மிருதியின் கண்ணும் வழக்கவ்வாறே நிலைபெறும் மிருதியின்கண்ணே அவ்வேற்றுப் பொருளுருவமேயதுன்னுன் அங்கீகரிக்கப்படா மையின் ; சொரூபமே யவற்றின் சம்பந்தம் என ஆண்டு நின தங்கீகாரமாகும்.

## 236. சோரூப விசேஷ சம்பந்த வினு விலக்கம்.

இனியியம்பப்படுகின்றது, அனுபூதி மிருதித்தன்மைச் சம்சர்க்கங்களின் சொரூபம் சம்பவமாயினும் அவற்றிற்குப் பரஸ்பரசம்பத்த புத்தியைப் பயக்குந்தன்மையின்றும், அத் தகைமையும்யாண்டு ஆண்டே அவற்றின் சொரூபங்கட்குச் சம்பந்தவடிவத்தன்மை சாற்றப்படும். இவ்வாறெவ்வாறாம் சிறப்பாயதொடர்ந்த தருமந்துணியப் பெறுக்கால் அதற்குங் கூடாமையுண்மையின், தொடர்ந்த தருமமயலொன்று சொற் றிடின் அதன் சம்பந்தத்தினும் வழக்கான் அயல் அயல் தொ டர்ந்ததருமம் நேடற்கு வரம்பின்றியோடல் வந்துறுதலின்.

**237. சம்சர்க்கத்திற்குச் சம்பத்தபுத்தியைப் பயக்குந்தன்மை யிருப்பினும் அசித்தியாதல்.**

இத்துணையானும் அனுபூதிவடிவத்தில் எதன் நிடேதம் வர்ணிக்கப்பட்டதாம். மிருதித்தன்மைச் சம்சர்க்க அனுபூதிகள் சம்பந்தித்தனவென்னும் வடிவினதாய புத்தியைப்பயக்குந்தன்மையையெனின்? அற்றன்று, மயல்வடிவினதாய இத்தகைய் புத்தியைப்பயக்குந் தன்மையை நீக்குவான் கூடாமையின்; மெய்யானதின் எனின்? மெய்யாகிய இத்தகைய புத்திக்குண்மையை யங்கீகரித்தனையாயின், அனுபூதியின் மாட்டு மிருதித்தன்மையின் வழக்காம். இனியங்கீகரித்திலையாயினோ எதன்பொருட்டு அதனது பயக்குந்தன்மையின்மை நிரூபிக்கப்படும். இனிமுற்றினும் அசத்தேயாய அத்தகையபுத்தியைக் குறித்துப் பயக்குந்தன்மையின்மைத் துணிபையனுபூதிக் கங்கீகரித்தனையாயின் மிருதியின்கண்ணும் வழக்காம் எத்துணையம்மதிகள் ஆண்டுண்டாகின்றனவோ அவற்றினும் அயலாய் முற்றினும் அசத்தாய அத்தகைய மதியைக்குறித்துப் பயவாப்பான்மை மிருதியின்பாலும் சம்பவித்தலின். அத்தகைய சர்வமதியையும் குறித்தே பயவாத்தன்மையனுபூதிக்காம் இன்னணம் மிருதிக்கோ இன்றுமெனின்? அன்னணமாகாதாம், சர்வ அவ்வியக்திகளினுணர்வு கூடாமையின். அன்றியும், சர்வமென்பதன் பொருளியாதோ, இன்மையாய யாவுமா? உண்மையாயயாவுமா? இனியுண்மையு மின்மையுமா முபயத்தையுங் குறித்துப் பயவாத்தன்மையா? ஆதியதிலும், மற்றதிலுமோ, மிருதியின்கண்ணும் அதனைப்பயவாத்தகைமையிருக்கின்றதேயாம், மிருதித்தன்மைச் சம்சர்க்கமிருதிகள் சம்பத்தங்கள் என எத்துணைப்புத்திகள் மிருதிவியக்திகளில் உண்டாகின்றனவோ அவைகளைப் பயக்குந்தன்மை தனித்தனி மிருதிவியக்திகளிலதாகும், யாதாமொரு உண்மையா யிராநின்றதை யது பயு

வாத்தன்மை முன்னரே முனியப்பெற்றதாகும். மூன்றுவ திலோ அனுபூதியின்கண்ணும் அதனைப்பயவாத் தன்மையின் றும், இராநின்ற உண்மையாய அத்தகைய புத்திக்குப் பாவத் தானேனும் அபாவத்தானேனும் இருப்பதை யில்லாததைப் பயவாத்தன்மை சம்பவியாமையின்.

238. பாட்டவிஞவிலக்கம்.

இயைகவிது, மிருதித்தன்மையினது அன்யோன்யாபா வங்கொண்டு எவ்வதிவியாப்தி காண்பிக்கப்பட்டதோ அது பொருந்துவதின்றும். பேத அபேத வாதிமதத்தில் மிருதித் தன்மைப் பேத அபேதத்திற்கு மிருதியோடுகூட அங்கீகரித்தி ருத்தலின். எவற்றிற்குப் பேதாபேத மிருக்கின்றதோ அவற் றிற்காண்டு அன்யோன்ய அபாவ மங்கீகரியாமையின். இங்ங னியையாதாம், மிருதித்தன்மையினது பேதாபேதம் மிருதி யோடும் அனுபூதியோடுமன்றெனை யாங்ஙனந் துணியப்பெற் றதோ? அனுபூதியோடுகூட மிருதித்தன்மை விசிஷ்டப்பிர மையின்மையினெனின்? சத்தியத்தினதா? அசத்தியத்தி னதா? என்பதாதி யியம்பிய விகற்பமாசு மருவலின். முன் னின்மைப் பிரதியோகியினதெனின்? கூடாதாம், அனுபூதி யின்கண்ணே அத்தகையதை அங்கீகரித்தலானே அனுபூதிக் கத்தகைமை யடைவுறுதலின். மிருதி மிருதித்தன்மைகளின் அன்னியோன்னியாபாவாபாவமாகிய அன்னியோன்னிய வடி வம் அனுபூதியின்கண்ணும் ஒப்பேயாம். மிருதித்தன்மையின் அன்னியோன்னியாபாவம் அனுபூதியாகாதாமென அறைந்த தும் திரும்பும்.

239. அன்னியோன்னிய அபாவசம்சர்க்க அபாவங்களின் றேற்றப்பாடால் வந்த விலக்ஷணத்தகைமையை விலக்கல்.

இனிப் பேதாபேதங்கொண்டு பரிகரித்த தொவ்வாதொ ழிக; ஆயினும், இதுவதுவாகாதாம், ஈண்டஃதில்லை யென்

னும் தோற்றத்தைச் சான்ருயுடையதேயாகும் அன்னியோன் னியாபாவ அத்தியந்தா பாவங்களின் வேற்றுமையெனின்? அற்றன்றும், பிரதியோகிவடிவ வுபாதி விசித்திரத் தகைமை யின்மையினுனும், அபாவத்தின்கட் சாதியாதி பேத மங்கீகரி யாமையினுனும், அவற்றின் பேதமதியே மெய்ம்மை மேவலி லனுபவியாததாய்ப் பொய்ம்மதியாகுமென அஃதை யாதரியா மையின்.

## 240. இலக்கணத்தானும் அன்னியோன்னியாபாவ சம்சர்க்கா பாவங்கட்குப் பேதநீக்கம்.

தனது பிரதியோகி சமானகால சமானாதிகரண அபாவம் அன்னியோன்னியாபாவமாம் அதன் அன்னியோன்னியாபா வத்தையுடைய அவ்வபாவம் சம்சர்க்காபாவமாம் எனச் சாற் றக் சம்பவித்தபடி ஆன்மாசிரயாதி அனுபவமின்மை, தன் வேற்றுமைத்தொடர்பின்மை, அவ்வவ்வுணர்ச்சி, என் பவைகட்கு விடைபகரப்படா வழக்காதலினென்க.

## 241. வேற்றிலக்கணவாயிலாகப் பேத நீக்கம்.

அற்றேல், சம்சர்க்கப் பிரதியோகியையுடைய நிஷேதம் சம்சர்க்கபாவமாம், தாதாத்மியப் பிரதியோகியையுடைய து தாதாத்மிய அபாவமுமாம் எனக் கூறுவதானே அவற்றின் கலப்பணுகாதாம். யாதொரு சம்சர்க்க தாதாத்மியத்தின் நிடேதமுளதோ அது சம்சர்க்கநிடேதமே யாவதில்லையன் றோ. தாதாத்மியப் பிரதியோகியுடைமையின் இங்ஙன மியம் பலெலாதாம் பொருள் பண்பு தொழில்களினது சமவாயி காரணங்களிலோ அவற்றின் பின்னின்மைகள் கூறியவகை யாய சம்சர்க்காபாவமாகாவாம். சம்சர்க்கப் பிரதியோகித்தன் மையின்கண்ணேயோ, சம்சர்க்கத்திற்குச் சமவாயரூபத்தன் மையினுனே சமவாய அநித்தியத்தன்மை வழக்கன்றோவாம். அன்றியும், அற்ருயின் சம்சர்க்க அன்னியோன்னிய அபாவ

ங்க ளிரண்டுமே கடமுதலியவற்றைப் பிரதியோகிகளா யுடை யனவல்லனவாதலின் கட முதலியவற்றிற்குக் கால முதலிய வற்றைப்போலும் அவகித்தன்மை யின்மையன்றே அடைவு றும். சிறப்பிக்கப்பெறுதனவாய சம்சர்க்க தாதாத்மியங்கள் நிஷேதிக்கப்படுவனவாமேல் பொதுவாகவே அவற்றினழி வாம். இன்னணம், எவ்வெப்பிரதியோகிதான் கூறப்பெறு மோ அவ்வதுவடிவத்தானே யில்லாமற்போம், அதற்கும் சம் சர்க்கப்பொருட்டுச் செல்லினே அஃது தழிவற்றதேயாகும், சம் சர்க்க மெல்லையின்றிச் செல்லலாம், எஞ்சியது துஞ்சலானே முன்முன்னது துஞ்சலேனுமாம்.

## 242. ஒருமித்திராமை வடிவ முரண்பாட்டை யுடன்படினும் தாண்டமுடியாமை.

பாவாபாவங்கட்குச் ‌சொரூபபூதவிரோதமின்றாகும் ; மற் றே, ஒருமித்திராமையேயாம். ஆதலின் ஒருமித்திருத்தன் மாத்திரம் ஒவ்வாதாம், சொரூபமே யவற்றிற்கின்றென்ப தின்றும் எனின் ? அற்றன்றும், அபாவத்தின்கண்ணே பாவ வடைவாம். அவ்வாறு மெய்யுணர்வின்மையின் யாங்ஙனம் அங்ஙன மிருக்குமெனின் ? அற்றன்றும், அவ்வாறு மெய் யுணர்வின்மையின் மூலமாய ஒருமித்திராமை விரோதத்தின் நியமனம் நீங்கலின். பாவாபாவத்தகைமையினும் அயலாக அவற்றிற்கு விரோதமியாதாம்? அவ்வாறு புலப்படாமையே அஃதாமெனின்? ஆகாதாம், மேல்வழக்காதலின். நியமமாக வெனின்? ஏலாதாம்,ஜாதியானேநியம முடன்படலின் வியத்தி கட்கு முரண்பாடின்மையி னடைவாதலின் என்க.

## 243. சொரூபயோக்யதையே விரோதமென்பதை விலக்கல்.

அங்ஙன் புலப்பாடுறுத இயற்கையே யோக்யதையெ னின் ? அம்மேயத்திருக்கும் யோக்யதையே அநுயோகிப் பிரதியோகித்தன்மைகளினு மன்னியமாக யாதெனத் துணி

வித்ததாகும் ? சொரூபமேயெனின் ? அற்றன்று பரஸ்பரம் கலப்பை யங்கீகரித்தவரானும் அவற்றிற்குச் சொரூப அங்கீ காரஞ் செய்திருத்தலின். அவ்வகை வடிவம்வாய்ந்த சொரூப மாமெனின் ? அதையே யின்னதென நிகழ்த்தவேண்டியிருத் தலின்.

## 244. முப்பக்க சாதாரண தூஷணங் கிளப்பல்.

பாவாபாவங்கட்கு இவ்வகையாய முரணுறவே கோத் தன்மை அசுவத்தன்மைகளினும் யாது சிறப்பாகும்? அவற் றின் ஒருமைப்பிரமை யுளதாகவே பிரகாரபேதத்தால் நிலைபெ றுத்துதல் செயல் என்னைகொலோ ! பிரமையினானே அப்பிர மையை யங்கீகரியாமையினானே யென்க.

## 245. முன்மொழிந்த அடைவுவினாவும் அதனீக்கமும்.

இனிக் குடமுதலியவற்றானே சிறப்பிக்கப்பெற்ற அவற் றிற்கு அந்நிடேதங்களாம். சிறப்போடு கூடியவையாய விதி நிடேதங்கள் ஒருபோழ்தும் சிறப்பையொழித்து இராவாம் எனக் கூறின், அஃதுமொவ்வாததே, ஆயின், சிறப்புடைய தின் நிடேதம் சிறப்பையும் பற்றும் எனச் சம்சர்க்க அன் யோன்ய நிடேதமும் சம்சர்க்க நிடேதமேயாகுமென மீண் டும் அவ்வழக்கு வச்சிரப்பூச்சாமன்றோ. அன்யோன்ய அப் பிரதியோகியையுடைய சம்சர்க்காபாவம் அவ்வாறு விளம்ப விரும்பியதாம் ; இவ்வாறே அன்யோன்யாபாவமும் சம்சர்க்க அப்பிரதியோகித் தன்மையானே நிகழ்த்தற்பாலதாம் எனின்? அற்றன்றும், இன்னணமாகவே, அன்னியோன்னிய சம்சர்க் காபாவமும் சம்சர்க்க அன்னியோன்னியா பாவமும் வேறு கோடியன்றேவாம். மேலும் இங்ஙனமாயின், அன்னியோன் னியாபாவம் யாதாகாதோ சம்சர்க்காபாவம் அது சம்சர்க்கா பாவமென்று விளம்ப விரும்பியதாமெனக் கூறியதேயாகும் ; ஆகவே சம்சர்க்க விசேஷணம் வாளர்போம், போகவே சம்

சர்க்காபாவப்பொருளை அதிகமாக விரும்பியவனாகிய உன்னாற் காரணப்பொருண்மேய சம்சர்க்காபாவ சப்தமும் இழக்கப்பட்டதாகும், அன்னியோன்னிய அபாவம் யாதாகாதோ அபாவம் அது சம்சர்க்காபாவமெனக் கூறப்பட்டமையின். அன்றியும், இந்நெறியாய மொழியானே அன்யோன்யாபாவ நிடேதத்தை யறைபவனு யன்யோன்யாபாவத்தினும் அடைவுறும். அன்னியோன்யாபாவம் அன்னியோன்யாபாவமாமென அறிவான் முடியாமையான் சாமானுதி கரண்யமோ வேற்றுமைவகை யுளதாய வழியுளதாம் கருங்குவளையென்பதே போலும் அதனு லஃதின்மையினுனே அவ்வாறன்றுமென மேல்வழக்காம். அன்னியந்தான் அன்னியோன்னியா பாவங்களின் மாட்டே யிருந்துகொண்டே யாது பிரமேயமாம்? எஃதுடையதின் கண்ணோ அங்ஙன மறையலாமோ. அபாவமாத்திரத்திலாமேலோ மேல்வழக்குண்டாதலின், எஞ்சிய வியத்தி விசேடங்களாகிய அன்னியோன்னியா பாவங்களிற் சம்சர்க்கா பாவத்தன்மை வருதலின்.

246. தூஷணத்தையாண்டும் பரப்பல்.

இதனை அலக்ஷிய அன்னியத்தன்மையானே வேறுபடுத்தியவற்றுளெல்லாம் கண்டுகொள்க, அங்ஙனமன்றே:—"அதுவலாததிங்கதுவல வெனவது வதுவுமிங் காகாதேற், பொதுவ தாயுறு மொருநிலைக் களம்பெறப் புகுபிரி வுருநோக்கும், திதமதாய்க்குறித் துருப்பிரிவினைக்கொடு திகழதுவதுவாமே லதுவ்லாமுருவது தனிமையினும் பிறழ்வுறு மதுதானே."

247. அவ்வியாப்தியைக் கிளப்பல்.

மேலும், அன்னியோன்னியா பாவத்தினது சம்சர்க்கா பாவமும் இன்னணம் விலக்கப்பட்டதாகும், அதற்கு அன்னியோன்னியப் பிரதியோகியுடைமை யுண்மையின், இனி யன்யோன்யாபாவத்திற்குச் சம்சர்க்காபாவமதிகமாக அங்கீகரிக்கப்படுவதேயில்லை எதனைக்கொண்டவ்வாறுமோவெனின், அற்

றன்றும், இவ்வாறேயாயின் அன்யோன்யாபாவத்தின் அன் யோன்யாபாவமும் அதிகமாக அங்கீகரிக்கலாகாதாம் என அன்யோன்ய அப்பிரதியோகித்தன்மையானே நிஷேதமேக மாய சம்சர்க்காபாவத்தினது விலக்குதலு மெங்ஙனந்தானு கும்? விலக்குதலென்பது நிஷேதப்பொருள்படுதலின், இனி யாகாதொழிக அதிகமாகவது, சொரூபமே யவ்வா றங்கீகரிக் கப்படும், படவே அதைக்கொண்டே இவ் விவகாரம் மாசற்று தாமெனின்? ஆயின், அன்யோன்யாபாவ சம்சர்க்கா பாவத் தினு மிஃதொப்பேயாமன்றே.

## 248. அதிவ்யாப்தியைக்கிளப்பல்.

மேலும் அன்னியோன்னியப் பிரதியோகியையுடையதா காதது எவ்வபாவமோ சம்சர்க்காபாவமென இயம்புவனுகிய உன்னுல் அன்னியோன்னியப் பிரதியோகியையுடைய அபா வம் நிஷேதிக்கப்படவே அன்னியோன்னிய வடிவமாக இவ்வ பாவம் அங்கீகரிக்கப்பட்டதாகும். இருநிஷேதங்கள் சுந்தோப சுந்தநியாயத்தான் அன்யோன்யத்தையே திடப் படுத்தலின். படுத்தவே சிறப்பற்ற அன்னியோன்னியத்தின்கண் ணுலகமே புகுத்தப்பட்ட தாகுமெனச் சம்சர்க்கா பாவத்தன்மையானே விளம்ப விழைந்ததற் குலகவடிவத்தன்மை துணியப்பெற்ற வழி அன்யோன்யாபாவ வடிவத்தன்மையும் ஆமெனவாளா வன்றே நின்றது சிறப்பின் முயற்சி சிரிப்பின்பொருட்டாக; சிறப்புற்றதினும் சிறப்பற்றதொத்த வழக்காமென மகத்தாயக வுத்துகமாம்.

## 249. வேறு பொருளடைவு விலக்கவினு.

அற்றேல், கடாபாவம் ஆகாது தம்பமென வியம்பிற் றம் பம்கடவடிவமாக விதிக்கப்பெறுமாவென்? அஃதெதனதேது வினுனே? கடமும் அதனபாவமுமென்வே உலகாகுமேலா யின், அக்காலன்றே அவ்வாறும், தம்பமுந்தலியவையும் வேறு

கோடியிருப்ப யாங்ஙனம் அவ்வாறும்என வியம்பிய வழக்கிற்கிடமிலதாமாலோவெனின்.

### 250. தருக்கத்திற்குச் சிதிலமூலத்தன்மை யின்றுமெனவிடையிறுத்தல்.

அற்றன்றும், கடம், அதனபாவங்களினும் அயலாக வத்திராதிகளாகிய கோடியு மிருப்பதேபோல அன்னியோன்னிய அதனபாவங்களினும் அயலாய கோடி சம்பவியாதாம். சிறப்பற்ற அன்னியோன்னியமத்தியில் உலகமே புகுந்திருத்தலின். அதன் வடிவமும் நிடேதிக்கப்பட்டதாய வழி அதன் நிடேத வடிவமாய அதன் வடிவத்தில் உலகம் புகுந்திருத்தலினென்க. கடம்பட வடிவமென்பதனுனே கடவடிவத்தினும் அன்னியம் அதன்வடிவமாய் விதிக்கப்படமாட்டாதன்றே! தாதாத்மியமென்பது அபேதமெனப் பெயரிய ஒரு தருமமென வுடன்பாடாம் அது கடபடாதி யதிகாணத்தன்மையானே நிடேதிக்கப்படுகின்றதேலாயின் ° சம்சர்க்காபாவமேயஃதாம்; ஆகையால், சிறப்பற்ற தாதாத்மியத்துள்ளடங்கிய துலகெனக்கோடி வேறிலதாகுமென்பதாம்.

### 251. வாதி வழங்கிய தூடணத்திற்கு அப்பக்ஷத்தின்கண்ணே வழக்காம்.

மேலும், இங்ஙனமாயின்கடத்தை நிடேதம்புரியில் கடாபாவம் விதிக்கப்பெறும், கடாபாவத்தை நிடேதிக்கினே கடம் என்பதுமாகாதாம்; மூன்றுவது முன்னிற்றலின். உளதாகுகதான்; கடாபாவம் தம்பம் ஆகாதாம் என்பதன்கண்ணும் கடாபாவத்தன்மைச் சிறப்பின்மையினும், வேறு சிறப்பை விளம்பமுடியாமையானும், கடம் தம்பவடிவமேயெனக் கூறியதாகும் என்பதாக நினது வழக்கு நின்மாட்டே நீங்காது நிற்கும். சம்சர்க்க அன்னியோன்னியாபாவவைச்சித்திரியத்தைக்கொண்டே அது பரிகரிக்கத்தக்கதாம் அதுவே இதுகாறும் நிலைபெறுத்த முடியாமல் நிற்கின்றதாகும்.

252. புலப்பாட்டின் வலுமையானே வைதர்மிய சங்கையி னீக்கம்.

அதனானே, பிரதீதியின் வலுமையா லன்னியமாகவே வைதர்மியம் இவைகட்குக் கொள்கவென்னுங் கூற்றுங் குலைக் கப்பட்டதாகும். அபாவப்பிரதியோகி விரோதத்தில் பிரகார விசேஷவிவத்தை விளம்ப வேலாமையின் சிறப்பின்றியே யொன்றை நிடேதிக்கவே அன்னியவிதி நிலைபெறுவதாய் அன்னியோன்னிய அபாவநிடேதம் செய்தவழியும் அன்னி யோன்னிய விதியின்பொருட்டேயாம்.

253. சித்தாந்தத்தில் தோஷ உத்தாரஞ் செய்தல்.

எமக்கே பிரதீதி விவகார விவத்தை விளுப்பகழி தடுப் பான் வச்சிரக்கவசமாயுற்று வெற்றிபெறுவிப்பது அநிர்வசநீ யதையேயாம். எமது துணிவுபேறே. இவ்வாறும் பிரதீதி சித்தமாதலின் அத்தியந்தம் அசத்விலக்ஷணமாயினும், அவ் வாறு சத்தையையுடன்படினும் பாத்யமானத்தன்மை யுறுத லின் உலகு அநிர்வசநீயமாம்.

254. அநிர்வசநீயமாவதில் அனுபவவிரோதமின்மை.

அதனானே, இவைகட்குப் புலப்படுந்தன்மை யுண்மை யின் வைச்சித்திரியம் மிகச் சேய்மையிலே நிராகரிக்கப்பட்ட தெனக் கூறப்பட்டது. பிரதியோகி முதலிய வைச்சித்திரியம் பொருந்தாமையானே பிரதீதியாவதற்கே பாத்யத்தன்மை யையே கூறலின், ஆகையான் "ஒன்றென் றலவென்பது மொற்றுமையா, னின்றெனபதன் பேத மிசைந்துறவே, யொன்று மவற்றின்னிலை யொன்றித்தனே,குன்று மிதைத்தீர்ப் பவர் யாவர்கொலோ."

255. தேற்றப்பொருள் கூற முடியாமை.

அபாவமே யாண்டெனத் தேற்றத்தோடும் கூறத்தக்கதா மெனின்? தேற்றத்தானே யாததிகம் கூறப்பெறுகின்றதோ!

பாவம் நிடேதிக்கப்படுகின்றதெனின்? அதற்கபாவத்தானே கிடைத்திருத்தலின், பாவநிடேதமபாவம் என்னு மிதுவே பொருள்பயப்பதன்றன்றோ. பாவசாமாநுதி கரண்ய நிடேதம் தேற்றப்பொருளாமெனின்? உரைத்ததனுனே பெறும் பொருளதாதலின் அதன தன்யோன்யஅபாவம் மிருதியின் கண்ணும் சம்பவிக்குமாதலின், பாவசாமாநுதி கரண்யம் மிருதியன்றன்றோ! மிருயின்கண்ணே பாவத்தையும் அபாவத்தையும் ஓரிடத்திலங்கீகரிக்குமுன்னுல் அதுவு மிஷ்டமெண ஒப்புக்கொள்ள வேண்டியிருத்தலின், அவற்றிற்குப் பரஸ்பரம் நீக்கவடிவத்தன்மை யுண்மையின்; ரூபரசங்கள் ஓரிடத்தின் மையினுனே அதன் சாமாநுதிகரண்ய மின்மையாகாதன்றோ!

## 256. அபரஸ்பர நீக்க வடிவத்தன்மையின் விஞவிடைகள்.

சமமாய்ப் புகுந்த பாவாபாவங்கட்குப் பரஸ்பரநீக்க வடிவத்தன்மையே துணியப்பெறமாட்டாதெனின்? அற்றுயின் அவ்வகையானவைகட்குப் பாவம் அதனபாவம் என்னும் பத சங்கேதம் ரூபரசங்கட் கின்றும்என்னும் நினது உருசியே யளவையாகும். ரூபரசங்கட்குப் பரஸ்பரநீக்கவடிவத்தன்மை யின்மையின் அவற்றினபாவமுற்றவழி அவற்றின்சாமாநுதி கரண்ய அபாவம் உளதாகுக; ஈண்டோ அவ்வாறின்றுமெனின்? அவ்வகையாயதற்கு அசமாநுதி கரண்யப் பிரயோஜகத்தன்மை யுண்மையேல் அதனினும் அயலாயது சாமாநுதிகரண்யப் பிரயோஜகமாம்என ரூபரசாதிகட்கு அசாமாநுதிகரண்யஅடைவும் பாவாபாவங்கட்கு அசாமாநுதி கரண்ய அடைவின்மையும் ஆம்.

## 257. சாமாநுதி கரண்ய நிடேதத்திற்குத் தேற்றப் பொருண்மை யின்மை.

அசாமாநுதிகரண்யமே யாண்டோ எனக் கூறும் விழை வாமெனின்? அற்றன்றும், தேற்றப்பொருளின் நிலேபே

ழின்மை அந்நிலைமைத்தே யாதலின். இதனுனே விலக்ஷணமே யாமிவ்வபாவம் பாவத்தோடுமோராசனம்புகாததாம் யாது தேற்றத்தோடுரைத்த பதத்தானே உரைக்கப்படுமோ என்பது நிராகரிக்கப்பட்டதாம். அதற்கும் விலக்ஷணத்தகைமை பிரதி யோகியாசிரய நிடேதத்தகைமை சமமாயிருந்தபோதினும் சாமாறுதிகரண்ய மின்மையின் ஊகிக்கத்தக்கதாம்; அதுவும் அயலபாவத்தோடு சமமாம். சாமாறுதிகரண்ய அபாவப் பிர தீதியினுனேயெனின்? பிரதீதிச் சிறப்போடுகூடிய பொருட்கு மிருதியின்கண்ணும் இருப்புண்மையின். அன்யோன்ய அபா வத்தினும்வேறுய மிருதித்தன்மையினபாவமெனக் கூறினே மிருதியினும்வேறுயது என்னும் பக்கத்துட்கூறிய தோடமே அக்காலாமெனச் சாலும் விரித்ததென்க.

## 258. இரண்டாவது மூன்றுவது விகற்பநீக்கம்.

மிருதித்தன்மைப் பிரதியோகியையுடைய ஆசிரயத்தி னதுவடிவம்ஆதல் அதனதுஞானமாதல் என்னும் பக்கமும் கூடாதாம்; அன்யோன்ய அபாவத்தின்கண்ணும் உங்கட்கு அபாவவிவத்தை அத்தகைத்தேயாதலின் உரையாடிய வழக் கொப்பாதலின் என்பதாம்.

## 259. வேறுவகையானே சம்சர்க்காபாவநிகழ்த்தலை நீக்கல்.

இனிச் சம்சர்க்காபாவம் அயலாயே சிறிது நிகழ்த்தப்ப டும், அங்ஙனமன்றே:—மிருதித்தன்மைக்கு யாண்டு சம்சர்க் கித்தன்மையானே நிடேதமாமோ ஆண்டு அதனபாவத்திற் குச் சம்சர்க்காபாவத் தகைமையாம்; ததாத்மத் தன்மை யானே யாண்டோ, ஆண்டு அதனபாவத்திற்குச் சம்சர்க்கா பாவத் தன்மையின்றும்; மற்றே, அன்யோன்ய அபாவத் தன்மையேயாம், அதுவும் ஈண்டியம்ப விரும்பியதன்றும், முன்னதையே சம்சர்க்காபாவமென விளம்ப விரும்பிய

தாமென்ப. இஃதாராய்ச்சியைச் சகியாததேயாம்:—சம்சர்க்கித்தன்மையானே நிடேதமென எவ்விம்மூன்றும் வேற்றுமையுளதோ அது இலக்கணத்திலா? சகயோகத்திலா? காரகபேதமாய காணுதிகளிலா? ஆதியதாகாதாம், சம்சர்க்கித்தன்மையானே இலக்கியப்படுத்தப்பட்டதற்கே அன்னியோன்னிய அபாவங்கொண்டு வழக்குண்மையின் இரண்டாவதுமியையாதாம், அதனோடு கூடியதேயாய அன்னியோன்னிய அபாவத்தை நிடேதிக்கமுடியாமையின். மூன்றுவதோ மூற்றுதாம் முற்றுமின்மைக்குற்பத்தியின்மைத்தன்மை யுண்மையின் அதுவே பிரகிருத உதாகரணமாதலின்.

260. மூன்றும்வேற்றுமைக்கு இத்தகைத்தென்னும் பொருள் பெறுத்தினும் குற்றமாதல்.

வகையைவழங்குவது இம்மூன்றும் வேற்றுமையெனின் வகைச் சத்தப்பொருளை யதிகமாக வழங்கவேண்டியதாக வந்துறுதலின், வகைவகையே யெனின்? அறியாத இலக்கியமாய அஃதை இலக்கணமியம்பாமன் மற்றதினின்றும் பிரித்துணர்த்திவைக்க முடியாமையின்; மாறுயினேயாண்டும், கடாயினுக்கு இலக்கணமியம்பாமை யெய்தலின். கடமியாதென வினையவழி கடமேகடமென்பதே விடையெனல் பொருந்தும். வகையேயாமென்னும் பக்ஷம் பொருந்தாதாம் தோடத்தோடு கூடலின் எனக்கூறுபவன் தோடம் யாதென வினவப்பெற்றுனுய்த் தோடமேதோடம் என இயம்புபவனுயே பயன் பெற்றவனுவன் என்பதாம்.

261. மூன்றுவது கற்பத்திற் றூடணத்தைப் புகுத்தலும் மிருதியிலக்கணங்கூற முடியாமையும்.

மிருதித்தன்மையோடுற்றது மிருதியின் வேறிலக்கணமின்மை அனுபூதித்தன்மையாமெனக் கண்டிக்கப்பட்டதைக் கண்டுகொள்க. கவரப்பெற்றதின் ஞானமே மிருதியாமென்

னும் ஸ்ம்ருதியிலக்கணமேல் தாரையாய்ப்பெருகும் ஞானத்தி லதிவியாப்தியாம், அபேக்ஷையோடு கூடிய ஞானம்ஸ்ம்ருதி யேல், அபேக்ஷையோடு கூடியதாதலாவது தனது விடய நியமத்தில் சமான விடயஞான அபேக்ஷயாதலாம் எனின்? பிரத்திய பிஞ்ஞையின் பாகத்திற்கு ஸ்ம்ருதித்தன்மையின் அடை வாதலின், அவ்வாறேயாகுகவெனின்? அற்றன்று, அற்று யின் பிரத்திய பிஞ்ஞையின் கண்ணே ஸ்ம்ருதியனுபவ பாகங் கட்குப் பின்ன விஷயத்வ நிலைபேறுகவே அவற்றின் அபே க்ஷம் எதனூற்கவரப்பெறும் என்பதாம். சமஸ்கார மாத்திரத்தா லுளதாய ஞானம் ஸ்ம்ருதியென்பதும் அடாதாம், சாமக்கிரியி னுனே சர்வ சம்பவமாதலின் இலக்கணத்திற்கு அசம்பவ மெய்தலின். அசாதாரணமாகிய அக்காரணமுடைய ஞானத் தன்மையெனின்? ஆகாதாம்; ஆன்மப் பிரத்தியபிஞ்ஞானத் திலும் அடைவுறுதலின், ஆன்மமனசம்யோகத்திற்குச் சாதா ரணத்தன்மை புண்மையின். காரிய ஒருமைப்பாட்டின்றுணி பின்றியவழி காரணத்தன்மையின் றுணிபுகூடாமையின். அத னொருமைப்பாடுகிட்டினே அதுவே யிலக்கணமாகுக. எஞ் ஞானத்தானே அர்த்தம் அறியப்பெற்றதாந் தன்மைவடி வுடைமையை யடையப்பெறுமோ அஃதனுபவமாம்; எத னுனே ஞானமே யவ்வாறுமோ அது ஸ்மரணமாமெனின்? ஆகாதாம், ஞானம் அறியப்பெற்றது அறியப்பெறும் என்னு மனுமானுதியிலும் அடைவுறுதலின்.

262. ஸ்ம்ருதியிலக்கணங் கூடாமையின் முடிபுரை.

அதனுனே, முடிபாக வாக்கியத்தானும் அனுபவிக்கப் படுந் தன்மையுண்மையின் விடயத்தானும், தொடர்ந்தரூபம் முன்னின்மையின் காரிய காரணங்களானும், சங்கரப்பிரசங்கம் வருதலின் ஜாதியினுனும், ஸ்ம்ருதியைப்பகுத்தல்கூடாததாகும் என்பதாம்.

## 263. நான்காவது விகற்ப நீக்கம்.

நான்காவதும் ஆகாதாம்; காரியத்திருக்கும் விலக்ஷணத் தகைமையை அறியாதபோது யாண்டு காரணத்தன்மையைத் தான் யாண்டு அசாதாரணத் தன்மையைத்தான் அறிதல் கூடு மென்க.

## 264. சேர்ந்த இலக்கணத்திற் பிரத்திய பிஞ்ஞானத்தின் மாட்டுத் தூஷண உபந்யாசம்.

தனித்தனி பதார்த்தத்திற்கு அதன் வேறுபடுத்தற் றன்மையின் கூடாமைமாத்திரம் அன்றும்; சேர்ந்த அவ் விலக்கணத்தின் கண்ணும் தூஷணங்கூறப்படும். அங்ஙன மன்றே:—தத்துவா னுபூதி பிரமையென்பதனுனே காகதாலீய மும் மெய்ஞ்ஞானமாய்விடும், அஃதிவ்வாறும், கரத்தின்கண் ணைந்துபலகறையைமூடி யொருவன் எத்துணைப் பலகறை யென வினவினுகை, வினவப்பட்டானும் அஜாகிருபாணீய நியாயத்தானே, ஐந்தாம், என உரைத்தான்; அதனுனே ஐந் தென்னும் ஞானம் கூறினுனுக்கும் கேட்டானுக்கும் ஆம். ஆண்டு இவ்வகையாய உதாகரணங்காணப்படுகின்றன. அந்த ஞானமானது தத்வபதத்தானே விலக்கக்கூடிய தாகாதாம். உண்மையாக அதற்கு ஐந்தென்னும் எண்ணுல் வரைந்து கொண்டமையானே அவ்வாறும் வடிவுடைமையின்மை யின் மையின் அனுபவ சப்தத்தானே விலக்கக்கூடியது மாகாதாம்; அனுபவிக்கப்படாததா யிலங்கலினுனே ஸ்மரண இலக்கணத் தை யுபேக்ஷித்தலின். கூறுபவனுக்கு ஐயமேயாகும் நிச்சய மின்மையின், ஒரேகோடியின் விவகாரமோ கிருஷி முதலிய வற்றின் முயற்சிபோலும் கூடுமென்பதுங் கூடாதாம்; அதன் கண்ணும் ஆகாரரூப ஒருகோடி நிச்சயநிலைபேறுண்மையின் மாறுயினுே, ஐயத்திற்கு இருகோடி நிச்சய சமுச்சயத்தன் மையின் அடைவாதலின்.. பிரமையே யஃதாமென அங்கீகரிக்

கத்தக்கதாம் என்னற்க ; காட்சிப்பிரமாண முதலியவற்றின் மத்தியில் உள்ளடக்கமுடியாமையின்.

265. விசேஷணங்கோடேப்பிற் றத்துவபதம் வீணுதல்.

அவ்யபிசார காரணத்தா லுளதாவதாடு என்பதைச் சிறப்பிக்கத் தக்கதாம் எனின்? கூடாதாம், தத்துவபதம் வீணுக முடியுமாதலின். காகதாலீய மெய்ஞ்ஞானமும் வியபி சாரி சாதாரணகாரண சாமக்கிரியாலுண்டாயது என நிலை பெறுத்த முடியாதவனுவாய், வியபிசாரிக்கும், காரணவிசேட மின்மையின் மெய்ம்மைவழுக்கா மன்றோ. ஹேதுவையுடைத் தாகாமலே அதற்கு மெய்ம்மையா மென்னற்க ; நியாமகமின் மையினுனே அதிப்பிரசங்கம் வருதலின். இன்றியமையாது இதனது அவ்யபிசாரித்தன்மையில் அவ்யபிசாரி நியதமேயாய காரணங் கழறத்தக்கதாம். அஃதியாது கொலோ வெனின்? தாமாகவே இவ்வினுவிற்கு விடை தம்மாற் சாற்றத்தக்கதாம் எதனுனே நியதமாகிய பிரமைக்குழுவின்மாட்டும் இஞ்ஞான மடங்கலாமோ ; பிரமையின் சாமானிய இலக்கணத்தினுற் றுன் வேறுபடுத்தத்தக்கதாமோ.

266. உதாகரணத்தைக் காட்டல்.

இவ்வாறு இலிங்க ஆபாசாதிகளாலும் உண்டாய இலி ங்கி (வன்னி)ஞானம் தைவகதியினுனே இராநின்ற இலிங்க இலிங்கியின் கண்ணேனும், இலிங்கிமதியின் கண்ணேனுந் தான் யாதாமோ அது இலிங்காபாசத்திற் பிரமையாகாதாம், அஃதுடைய இலிங்கிவடிவத்தின்கட்டான் ஆகாதாம் ஆயினும் விசிட்டத்தை யவ்வாறுகக்கவரும் அவ்வுணர்விற்கு வேறு இலிங்கமுடையதன்கண்ணேனும் கேவல இலிங்கியாகிய வன் னியாதியங்கிச விட்யத்திலேனும் பிரமாண மாதலே யங்கீ கரித்தலினுற் கூறிய குற்றமகலாமையின் என்க. போலிக்கா ணம் பயத்தலின் அதன்விடயம் உண்மையா யிலிங்கியாதி

யினும் அன்னியமேயாமெனின்? ஆகாதாம், சிறப்பாயது வேறாயினும் அச்சாதீயமாத்திரமுடைப் போலியங்கிசத்தில் ஆசு அகலாமையின். விசேடம் சாமானிய சம்பந்தகோடியிற் புகுத்தப்பட்டிருத்தலின், ஆண்டில்லாததேயாய அதனது விளக்கமாதலின் இக்குற்றம் பற்றாதாமெனின்? அன்றாம், விசேடவிளக்கமின்றேனும் சாமானியமாக அம்மாத்திரமுடை விளக்கத்தையங்கீகரித்திருத்தலின் தேவதத்தன் யஞ்ஞதத்த சம்பந்தி யென்பது ஐயமாயிருப்பினும் புருடசம்பந்தித்தன்மை நிச்சயம் போலும் சம்பந்திவிசேடத்தைக்கேவல விசேஷரூபமாகப்புகுத்தின் வியாப்தியாதிகட்குத் தொடர்பின்மை வழக்காதலின். சாமானிய அனுமானப்போலியாகியபயனுடையதிலோவிசேட அன்னியத்தன்மையுடைமைக் கற்பனைக்கிடனின்மையின். சாமானியசமவாயங்களும் அன்னியங்களே இலங்குகின்றனவெனின், அன்னியதாக்கியாதியை விடுத்து அசத்கியாதியிற் புகுதலுமுறுதலின். ஆங்குள்ளவேறு தருமத்தைச்சாதியோடு தாதாத்மிய ஆரோபமதன் கண்ணெனின்? அன்றாம், ஆயினும் தர்மியின் கண்ணும் ஜாதியின் கண்ணும் பிரமாத்தன்மையானது அவ்வாறே நிலைபெறுதலின் சம்சர்க்க ஆரோப நிமித்தத்தானே தாதாத்மிய ஆரோபங் கூடாமையின். பரார்த்த அனுமான ஆபாசத்திலோபிரதிபாதிக்கப்பட்ட பதார்த்தசம்சர்க்க ஆரோபகாரண சம்பவத்தால் அங்ஙனமாயினும் ஆண்டுத்தாதாத்மிய ஆரோபகற்பனத்தே அவ்விதமயனியமம் அளவையற்றதாம்.

### 267. அங்கீகரித்துந்தோடத்தைக் காட்டல்.

ஆண்டுப் பயன்படைத்த ஜாதி சம்சர்க்கமயக்கமுடையவொருவனுக்கு மிதியின் கண்ணேசுதி யென்னைகொல்! சித்தசாதனத்திற்றான்கதியென்னே? ஆண்டு மன்னியத்தன்மைக் கற்பனையேல் சித்தத்தன்மை வியாகாதப்படுதலின் தத்துவமே

லாயினும் ஹேதுப்போலிக்கும் உண்மையைக் கவருந்தன்மை யுண்மையானே நிகழ்த்தியநிமித்தத்திற்குப் பிறழ்ச்சியோடும் விரோதமின்றும், பிறவிடப்போலியினும் பிறவற்றிற்பிரதிபாச தற்பனைகாரணமின்றியே கதுவுதலின்; சித்தசாதனமிதிக்கேனு ந்தான் விலக்கமின்மையின்.

## 268. வேறு இலக்கண தூடணம்.

உண்மையனுபவம் பிரமையென்பது மிலக்கணமாகாதாம், உண்மையென்பதென் தத்துவத்தை விடயஞ்செய்வதா? அல்லது பொருட்கொப்பாயிருப்பதா? ஆதியது முன்னரே நூக்கப்பட்டிருத்தலின் ஆகாதாம், இரண்டாவதுமேலாதாம் பிறழ்ச்சிபுணர்ச்சிக்கும் பிரமேயத்தன்மை முதலியவற்றானே பொருளொப்புமையிருத்தலாற் பிரமாத்தன்மையடைவுறுதலின். அற்றேல், ஞானம் விடயஞ்செய்தவடிவத்தானே இவ்வொப்புமையியம்ப விரும்பியதாம்; பிரமேயத்தன்மை முதலிய ரூபத்திற்குப் பிறழ்ச்சியின்கண்ணும் ஒளிர்தல்கூடலின். அவ்வாறாயினும் மேல்வழுக்காமென மிழற்றற்க; ஒளிராநின்ற பிரமேயத்தன்மை முதலிய அங்கிசத்தில், விடயமாய வேறு தருமங்குறித்துப் பிறழ்ச்சிக்கும், பிரமாத்தன்மையை யங்கீகரித்திருத்தலின் எனின்? இஃதியையாததேயாம், ஒளிராநின்ற ரூபாதி சமவாயித்தன்மை ரூபத்தானே ஞானத்திற்குப் பொருளொப்புமை யங்கீகரியாவிடினும் ஆண்டு அதனதுபிரமாத்தன்மையை யங்கீகரித்தலின்.

## 269. பரிகார சங்கையும் அதனிராகரணமும்.

ஒளிராநின்ற ரூபத்தால் விசேஷணபாவங்கொண்டு பொருளொப்புமை யனுபவத்திற்குப் புகலுமவாவாம், பொருட்கோ சமவாயத்தான் ரூபம் விசேஷணமாவதேபோல விடயபாவத்தால் ஞானத்திற்கு மதுவிசேஷணமாகவேயாமெனின்? அற்றன்றும், இன்னணமே முன்னிருத்தற்றன்மைமுதலிய

ரூபத்தானே அவ்வாறுந்தன்மை சம்பவித்தலின், முன்னிருப்பதாய இப்பியை வெள்ளியாகக்கவரும் உணர்வும் பிரமையாம். அதுபிரமையெனவு முடன்படவே செய்வேமாதலின் இப்பிறழ்ச்சிவினு ஊகமாகியதாகாதாமென்னற்க; உண்மை அடைவாளாபோம்வழக்காதலின். அனுபவம் பிரமையெனக் கூறினுமே ஆண்டுமேல் வழக்கு மேவாதன்றோ; எல்லாப் பிறழ்ச்சி யனுபவத்திற்கும் முடிபாக அன்னியதாக்கியாதிவாதிமதத்தில் தருமியின் கண்ணும் பிரமாத்தன்மை சம்பவித்தலினனே பிரமையின் கண்ணே அனுபவத்தன்மைக்கு நிலைபேறுண்மையின். அங்கிசத்தானும் பிறழ்ச்சியுடைய தன் கண்ணே இலக்கணமேகாதொழிகவெனமனத்தினிறுவி உண்மையடை புகுத்தியதேலாயின், பொருத்தமாகாதாம் புகன்ற தீேடமெய்தலின்.

## 270. இரண்டாவது கற்ப நிராகரணம்.

இனி ஒளிராநின்ற எல்லாரூபத்தானும் விசேஷணபாவத்தானே எவ்வனுபவத்திற்குப் பொருளொப்புமையுளதோ அது பிரமையாமெனக்கூறப்படும். அத்துணையானே தருமிக்குத் தருமி விசேஷணமாகாமையானே தோடமா மென்னற்க; அதற்கும் அதனயல் விடயத்தை விலக்குந் தன்மையுண்மையின். ஆயின், பிறழ்ச்சிபுணர்ச்சி தருமியின் கண்ணும் பிரமையாகமாட்டாதாம் எல்லா வடிவத்தானும் ஒப்புமையின்மையின். அவ்யபிசாரி அங்கிசத்தை அனுசரியாமல் அதனது அப்பிரமிதிகோடி வைப்பைவலுவிற் புரிதலான் அஞ்சாதவும்மால், அவ்வியபிசாரி யங்கிசத்தையனுசரித்தலான் வியபிசாரியங்கிசத்தையும் பிரமைக்கோடியிற் புகுத்துதலையே யேனிண்ணயித்தலாகாதோ! அத்தகைய அபிப்பிராய அவிரோதிகளாக அனுபூதித்தன்மை ஞானத்தன்மை முதலியவைகள் இலக்கணப்படுத்துவான் முடிந்தனவேயாகும்:

## 271. விபக்கத்திற் பாதகவுபந்யாசம்.

பாத்தியப்பொரு ளங்கிசஞானம் அபாத்திய அர்த்த அங்கிசத்தும் அப்பிரமையே யாகுமாயின்; மேன்மாடியின் மேல் வைத்தகும்ப முதலியவற்றைப்போலச் சேய்மையினிரு த்தலின் நிலவுமின்னன் முதலியவை மறுபக்கங் கவரப்பெரு மையானும், ஆண்டவயவியினது பரிமாணங்கவரப் பெருமை யானும், அற்பபரிமாணங்கவர்ந்து பிரமாத்தன்மையானே யுல்கப்பிரசித்தமாயிரா நின்ற பிரத்தியக்ஷமானது அப்பிரமை யாம். தேசகால ஆலோகாதி வியக்தியோடுகூடிய ஞானத் திற்கு எல்லா அத்துணையருத்தத்தைக்கவரும் பிரவிருத்தி யிலாற்ற லுற்ற வுதாகரணம் கிடைத்தல் யாண்டு கொலோ! எத்துணைதன் பிராமாண்ய மெண்ணுதியோ.

## 272. உலகவிரோதங் காட்டல்.

பாத்தியப்பொரு ளங்கிசத்திற் பாதமாதலின் அபாத்திய அங்கிசத்தும் அப்போதப் பொய்ம்மையைச் சாதிக்குதியே லாயின் எப்பொருட்சாதியுடையது பாத்தியமாமோ அப் பொருட்சாதியுடையது அபாத்தியமாயினும் பொய்யேயென வெண்ணின் உலகப்பிரசித்தப்பிரமை யுதாகரணத்தை விடுவ தல்லது யாதுவிடை விடுக்கமுடியும்?

## 273. விடய விசேட நியமத்தானே பிரமாத்தன்மை யிலக்கண நீக்கம்.

இனி, ஒளிராநின்ற ரூபத்தானே விசேஷணமாக எப் பொருளொப்புமை யனுபவத்திற்காமோ அதன்கட் பிரமாத் தன்மையென விடய விசேடநியமத்தானே பிரமாத்தன்மைக் கிலக்கணம் புரிக, இதன் பொருட்டே உண்மை விசேடண மெனக் கூறுவேம்; இங்ஙனங் கூறுதலுமேலாதாம், விசேடாங் கிசத்தும் அநுபூதியிவ்வண்ணம் பிரமையாகாதாம் வேறுபிறிக் குந்தன்மையே விசேடணத்தன்மையென வுடன்பாடாம்,

ஆகவே தருமியும் தற்சம்பந்தத்தானே தருமத்தை விசேடிப்பிக்கின்றதெனக்கூறிய தோடமின்று மென்றுரைத்தாமன்றேவெனின்! கூடாதாம், விசிஷ்டத்திற் பிரமாத்தன்மையினபாவங்கூடலின். மேலும், இவ்வாறுயின், யாது வெள்ளியாகவொளிர்ந்ததோ இப்பிஸியக்தி அஃதிஃதெனவெள்ளித்தன்மைமுதலியவையும் இப்பியை வேறுபடுத்தவேசெய்யும். அற்றேல் நேரே விசேடணத்தன்மை விளம்பும் வேட்கையாம், இராஜதத்தன்மையோர் ஞானவாயிலாக இப்பிவிசேஷணமாம் என மேல்வழக் காகாதாமெனின் ? இவ்வா றெவ்வாதாம், ஆயின், நீள்தடியணிவனென்பதாதியில் குறுந்தடியுடையவரினின்றும் விலக்ஷணத்தன்மையானது விசேடியத்திற் கனுபவிக்கப்படவே அனுபூதிக்குப் பிரமாத்தன்மையாகாதாம். நீட்சிமுதலியவை தண்டாதிவாயிலாக விசேடமாய் நிற்றலின் ஞானரூபவாயிலாயவாவாமல் விசேடணத்தன்மை யிஷ்டமாமெனின், கூடாதாம், சாக்ஷாத்கரிக்கப்பட்டான் என்பதாதியுணர்ச்சிகட்கு அப்பிரமாத்தன்மை வந்தடைதலின். அந்த ஞானத்தாற் பிரகாசிப்பிக்கப்பட்ட ரூபத்தானே விசேஷணத் தன்மையானது இஷ்டமாமென்பதோ மிகத்துச்சதரமாம்; ரூபாதிகள் சமவாயத்தானே ஞானத்திற்கு விசேடமாகாமையின், அந்தஞானத்தா லொளிர்விக்கப்பட்ட ரூபத்தானேயென்பது யாதோ அவ்விது பொருள்விசேஷணத்தன்மையால் நியமமாம் என ஞானத்தின்கண்ணுமாவ தின்றுமெனின்? அந்த ஞானவியக்திக்குப் பிறவிடத்திற் சம்பவமிலாமையின். அசாதாரணத்தன்மையானே அவ்யாபகத்தன்மை வருதலினெனச் சாலும்.

## 274. உதயணசாரிய இலக்கணகண்டனம்.

நற்பரிச்சேதம் பிரமையென்பதும் பொருந்தாதாம், நற்றன்மையென்பது தத்துவவிடயத்தன்மையாதல், உண்மைப் பான்மையாதல், உரைத்ததோட மெய்தலிற் சம்பவியாதாம்.

### 275. மூன்றாவது கற்பத்தை முற்படுத்தல்.

அற்றேற், சமஸ்தத்தன்மையே நற்றகைமையென இஷ்டமாம்; பொதுவடிவமாக என்னுற் பார்க்கப்பட்டதேயன்றி நன்ருகப் பார்க்கப்படவில்லையென்ன வுலகினுமன்றோ கூறுகின்றனர்; ஆண்டிதன்கண்ணே சமஸ்த அர்த்தத்தின் பரிச்சேதம் நற்பரிச்சேதமாம்; நன்ருக அருத்தவிடயத்தன்மை யுண்மையினுனேனும் இந்நல்லது என்னுஞ் சப்தம் பரிச்சேத சமநிலைக்களத்திருப்பதேயாம்.

### 276. சமஸ்தத்தன்மை கூறமுடியாமை.

இவ்வாறெவ்வாதாம், பொருளினுடைய சமஸ்தத்தன்மையென்பது சர்வ அவயவத்தோடு கூடியிருத்தலா? அல்லது சர்வ தருமத்தோடு கூடியிருத்தலா? ஆதியதாகாதாம், அநவயவபதார்த்த பரிச்சேதத்திற்கேபோல, மத்தியபாகாதிகளை விடயஞ்செய்யாத அவயவத்தோடுற்ற பதார்த்த பரிச்சேதத்திற்கும் அப்பிரமாத்தன்மை வந்தடைதலின்; இரண்டாவது மியையாதாம், அசர்வஞ்ஞபரிச்சித்திகள் யாவற்றிற்குமே அப்பிரமாத்தன்மைவந்தடைதலின்.

### 277. நல்லதென்னுஞ் சப்தத்திற்குச் சவிசேடார்த்தத்தன்மை யுடையதாஞ் சங்கை.

இனி,நல்லதென்னுஞ் சத்தம் சவிசேடப்பொருளது,என நினைகின்றனைகொல்! என்னுனன்ருகப் பார்க்கப்படவில்லையென்பதாக வுலகினும் கூறுகின்றனரன்றோ! அதற்கும், என்னல் விசேடமாகப் பார்க்கப்படவில்லையென்றன்றோ பொருள்படுகின்றது; ஆகலின், விசேடத்தோடு கூடிய தருமியின் பரிச்சித்தியே பிரமையென விளம்பியதாகும். விப்பிரம முதலியவையோ விசேடங் காணுனுக்கே விளைகின்றனவென அதனீக்கப்பொருட்டு இவ்விசேஷணமாம்; சர்வ விசேஷணங்

கட்கும் விசேடம் வேறுடன்படாவிடினும் சொரூபமே சில வற்றிற்கு விசேடமாம்.

278. நிர்விகற்பஞானத்தில் அவ்யாப்தியை நிகழ்த்தல்.

இது பொருந்தாததேயாகும், விசேடபதத்தால் விசேட மாத்திரங் கூறப்படுமாயின், வெள்ளித்தன்மை முதலிய விசேஷணத்தோடுகூடவே இப்பிவியக்திமுதலியவை மயலாற் கவரப்படுதலின் அவற்றிற்கும் பிரமாத்தன்மையாகும். பொருடோறும் விலக்கும் வடிவினவாய விசேடங்களைக் கோடற்றொடர்பிலாவழக்காம் ; சாமானியமாமேலோ மேல்வழக்காதலின் ; இருவாற்றானும் அசங்கதத்தன்மை வந்துறுதலின். விசேடத்திற்கும் சொரூபமே விசேடமாகுகவாயினும் அபேதத்தானே விசேடத்தோடு கூடியிருத்த லிலதாமென அவ்வியாப்தியகற்றமுடியாமையின்.

279. மற்றொருமதத்தைக் கிளப்பல்.

விசேட சப்தத்தானே, எதைக்காணவிடின் மயலையமுண்டாமோ, எதைக்காணின் அவற்றின் பாதமும் நிண்ணயமுமாமோ, அவை கூறப்பெறுகின்றன. அதனை யங்கீகரியாவிடிற் றத்துவாதத்துவ விபாகமாகாதாம், அதனானே பவிக்கத் தக்கதாம் ; மாறாயினோ, வியாகாதம்வருதலின் ; என்பதாகச் சிலர் கூறியது யாதோ.

280. மறுமதமாற்றம்.

அது பொருந்தாதாம், ஆண்டு எஃதுணர்ந்தானுக்கு மயன் முதலியவை சம்பவியாவோ அவ்வித விசேடமொழிவான் முடியாதாம். கணுக்காண்போனுக்கு எல்லாவிசேடங்களும் புலப்படுதலின். வியாகாத தண்டபயமாத்திரையானே இது கூறமுடியாததேயாயினும் அங்கீகரிக்கத் தக்கதாமென்பது கூடாதாம் ; அதனைக்காட்ட முடியாமையானே வியாகாதபரிகாரமே யாதேனுமயலொன்று இஃதெனவினிது கூற

முடியாதவன்றுதியேல், இருக்கின்றதென்றேயாவது நிலைபெறுத்தக்கூடாததென்னேசொலோ ! காணப்பட்ட பதார்த்த கோசரம் அனுபவிக்கத்தக்கதா யஃதொன்றுமின்றும், யாது கனவின் கண்ணுதல், தொடர்மொழிப் போலிபின் கண்ணுதல், உணர்ந்து கோடமுடியக்கூடியதாமோ ! இதனுனே, உணர வருவதாக எவ்விப் புலப்பாடாக் கற்பனையுளதோ அதனினும் தோற்றுததான வியாகாத பரிகாரத்தினது · இரமணீய கற்பனையே மேலாம் வியாகாதம் விளைக்கும் பயங்காட்டிகளை வேரோடு மிகப் பெரிதும் விநாசம்புரிவேம்.

## 281. விசேட பதத்தானே சவிசேடஞ் சாற்றப்படுகின்ற தென்னுஞ் சங்கை.

அற்றேல், விசேடத்தோடுகூடி விளங்குகின்றது விசேட சகிதப்புலப்பாடாமென விளம்புகில்லேம் ; மற்றேறு, விசேடத்தோடு கூடிய பொருள் புலப்படுத்தலேயாம், ஆகவே, இப்பியில் வெள்ளிப்பான்மை விசேடமாக வின்றுமாதலின் யாங்ஙனம் வெள்ளிமயிலினும் அவ்வழக்காம்.

## 282. சங்கையின் பரிகாரம்

இவ்வாறியம்பற்க, அறைந்த தோடத்தானே யகற்றியிருத்தலின். விசேடமானது சாமானியமாகக் கூறப்படுமாயின் முன்னிருத்தற்றன்மை முதலியவற்றிற்கு முண்மையின் வழக்கினீக்க முண்டாகாதாம் ; விசேடமாக அஃதறைப்படுமாயின்னே தொடர்பின்மையேயாம்

## 283. முற்கூறியபொருளையே கூறுவதாற் பரிகாரம்.

பாத அபாத விவஸ்தையி னேதுவாக விசேடமிருக்குமென்னும் பக்ஷத்தை எச்சடதான்விடானே அவன் நதிதீரத்தில் ஐந்துபழங்களுள்ளனவென்னும் வடிவினவாய ஆப்த அநாப்தவாக்கியங்களானே உணர்ந்துகொண்டபொருளி லிரா

நின்ற மற்றொருபாற் காணாத விசேடமென்னை யொருபாற் காண்கின்றனையென வினவப்பட்டவனாற் யுணர்த்தத்தக்கவனாவன். ஆயினும் உணர்ந்துகொள்ளாத ஜடதம னெவனேனும் உளனேல் அவன், உனது விசேடாந்தரப் பிரவாகச் சுவீகாரத்தில் அநந்த விசேட அடையின் அச்சத்தான் உன்னாற்றுமே விசேட ரூபங்களான எவைக ளங்கீகரிக்கப்பட்டனவோ அவற்றின் சொரூபம் ஆண்டுப் பரஸ்பரம் விலகியதாமாதலின் தொடர்ந்த ஒரு ரூபமாகவின்மையின் அவ்வியாபகத்தன்மையாம் என அறிவுறுத்தத்தக்கவனாவன். பாதவிவத்தையின் ஹேதுத்தன்மையினானே தொடர்பாமெனின் ? ஆகாதாம், சில பாலுளதாம் பாதவிவத்தை யேது மயலினு மொளிர்தலின். ஆண்டதற்கெனின் ? அன்றும், விலக்கமாயிருத்தலின் பாதத்திற்கும் மயலின்மாறாய பொருட்பிரமாத்தன்மை யுண்மையினானே அதனர்த்தந்தொடராமையின், பிரமையையு மிதுகாறு நிலைபெறுத்தமுடியாமையின்.

## 284. வேறுவினைவை விலக்கல்.

இதன் கண்ணிதனினும் மேலாக வேறுவினைக்களும், உண்மை விசேடண தூடணங்களாற் றாடிக்கப்பட்டனவே யாய் வீழ்கின்றனவெனக் கூறியதைக் கூறும் பயத்தாற் கூறப்படவில்லை.

## 285. விசேடத்தோடு கூடிய அர்த்த அனுபவமென்னு மிலக்கணத்தில் அதிவியாப்தியைக் கிளப்பல்.

மேலும், தருக்கஞானமும், ஆகார்யசமுசய விபரியயங்களும் விசேடத்தை யினிதுகண்டே யுண்டாகின்றனவன்றே அவற்றான் மேல் வழக்காகும் ; ஆகாரியங்களாகிய அவைகள் உடம்படத் தக்கனவன்றாமென்பது பொருந்தாதாம், வஞ்சகனது வாக்கியப்பிரயோக மூலமாக ஆகார்யமயலும், உண்மையுணர்ந்த ஆசிரியரானவர் சீடனுக் குணர்வுறுத்தும்பொருட்டு

ஆகார்ய ஐயமயல்களின் ஆராய்ச்சியைத் தொடங்குதலும் உங்களது நூலின்கண்ணே யங்கீகரிக்கப்பட்டிருத்தலின்.

## 286. முன்மொழிந்ததோட முடிபு.

பரிச்சேதசப்தமும் அனுபூதிபரியாயமாம். ஆகவே, அனுபூதிக்குற்ற தூடணத்தைக் கடக்கமாட்டாதெனச் சாலும்.

## 287. பட்டசம்பந்திகளி னிலக்கணகண்டனம்.

பிறழ்ச்சியின்றிய அனுபவம் பிரமையென்பதும் பொருந்தாதாம், பிறழ்ச்சியின்றியதென்னும் பதத்திற்குத் தத்துவவிஷயாதிகள் அர்த்தமெனவாயிஞேகூறிய தூடணங்களே தொடராநிற்குமென்க.

## 288. நான்காவது விகற்பத்தில் விகற்போபந்யாசம்.

இனிப் பிறழ்ச்சியின்மை யென்பது அருத்தக்கைவிடா திருத்தலாம் எனக்கூறின், அதன்பொருள் யாதுகொல்! எக்காலே யருத்தமுளதாமோ அக்காலே ஞானமுளதாதலா, அல்லது யாண்டுப்பொருளிருக்கின்றதோ ஆண்டத்தேயத்திலேயேஞானமிருத்தலா, இனியெவ்வாறு பொருளோ அவ்வாறே ஞானம்யாதோ அதுபிரமிதியா? என வினவத்தக்கதாம்.

## 289. விகற்பத்தை விலக்கல்.

ஆதியதாகாதாம், சென்றனவருவனவற்றின் அனுமிதியாதிகளில் அவ்யாப்திவருதலின்: இரண்டாவது மியையாதாம், உணர்விஞேடும் ஒருநிலைக்களத்திராத பொருட்பிரமிதிகட்கு அவ்யாப்திவந்துறுதலின்; ஞானசம நிலைக்களத்திருக்கும் அருத்தத்தைத்தேகாதியின்கண்ணே ஆரோபிக்கப்பட்ட அனுபவத்திற்கும் பிரமாத்தன்மை வந்துறுதலின். மூன்றாவது மாறுறும், உணர்வும்பொருளும் வேறென்னும் மதத்தில் எல்லாவடிவத்தானும் அதனெப்புமை அமையாமையின்; வேறன்றென்னும் மதத்திலோமயலுக்கும் அங்ஙனம் அங்கீ

கரிக்கத்தக்கதாமென்னும் வழக்கானே அடையானது வாளா போமொழிதலின். அவ்வவ்விசேடங்களானே ஒப்புமையுரைக்கும் வேட்கையேல்முன்னர் உண்மையென்னுமிடத்திலுரைத்ததோடங்களே திரும்பிவருமென்றுணர்க.

## 290. பௌத்த இலக்கண கண்டனம்.

பயனற்றதல்லாத முயல்கையைப்பயக்கும் அனுபவம் பிரமையென்பதும் பற்றாதாம். பயனற்றதல்லாத முயல்கையைப்பயத்தலென்பது, மற்றொருஞானத்தானே அவ்வாறே புலப்படுத்தப்பட்ட பொருளுடைமையா? மற்றொருஞானத்தானே மாறுபாடாகமலர்த்தாதிருக்கும் பொருளுடைமையா? புலப்படும் வியாப்பியத்தை யுடையதன் விடயமுடைமையா? அல்லதுதானென் யாதேனும் வேறொன்றேயா?

## 291. முதற்கற்பத்தி லதிவியாப்தி.

முதலாவது முடியீராம், தாரையாய்ப் பெருகும்மயலுக்குப் பிரமாத்தன்மைவழக்காதலின்; பிரமைவடிவமாய வேறுணர்வுகூறும் வேட்கையாம் எனவிளம்பற்க; பிரமைக்கே இலக்கணமுடிவு பெறுத்தவேண்டியதா யிருத்தலின்.

## 292. இரண்டாவது விகற்பநீக்கம்.

இரண்டாவது மேறாதாம், பாதமுண்டாகாத மயலிலதிவியாப்தி வருதலினானும்; கெட்ட பொறித்தசையிலுளதாய சங்குமஞ்சளென்பது முதலிய உணர்வினானே புலப்படுத்தி விடயீகரித்த விபரீதவிடயத்தையுடைய நற்றசையிலுண்டாய வெண்சங்கு ஞானத்திற்கு அப்பிரமாத்தன்மை வழக்குவந்துறுதலினானுமென்க. பிரமையினாலே புலப்படுத்தப் பெறாத விபரீதப்பொருளுடைமை அஃதெனவறைய மவாவேலாயினேபிரமைக்கே இலக்கமுடிவு பெறுத்தவேண்டியதாயிருத்தலின் எனமுற்கூறியது பின்றொடராகிற்கும். கெட்டதல்லாத

காரணத்தாலுண்டாய உணர்வினுனே பாதிக்கப்படாமையே யஃதெனக்கூறும் வேட்கையெனின்? ஆயினதுவே பிரமைக் கிலக்கணமாகுக; மேலும், கெட்டதன்மையைக் கிளத்தாமல் கெட்டதல்லாததன்மையைக்கிளத்தமுடியாதன்றே; இத்துணை யானேயென்னேகெட்டதன்மையென்பது, விபரீதவுணர்ச்சியை யுண்டாக்கும் அதனேதுவிலிருக்கும் விசேடமென்பதாக இனி தாகவேயியம்பலாமன்றே; ஆகாதாம், விபரீதபகத்தால் விலக் கப்படுவது அறியப்பெருதாயின் அதுகொடுத்தும் வாளா போமாதலின். அதுகொடுக்கப்படாவிடினே ஞானத்தைப் பயக்குந்தன்மைமாத்திரம் கெட்டதன்மையெனக் கெட்டதல் லாதகாரணஜன்னிய ஞானமேயின்றென்றன்றேவாம்; விபரீத பதத்தானே விலக்கப்படுவது பிரமையேயாமெனின்? ஆகா தாம், அதற்கே இலக்கணமுடிவுபெறுத்தவேண்டியதாயிருத் தலின். அப்பிரமையினின்றும் விலக்கப்பட்ட பிரமையின் சொரூபத்திற்கு இன்றளவும் தோற்றப்பாடின்மையின் யாங் ஙனம் விலக்கமுணர்தலேலும்; எனவே விலக்கப்பட்ட அந்த ஞானமில்லாமல் விலக்கப்பட்டஅந்தஞானம் அசித்தமாமென ஆன்மாசிரய அன்னியோன்னியாசிரயங்களேனும் அநவஸ் தையேனும் ஆமென்றறிக. "பொங்கநேக விசேடப்பொரு ளினி, லெங்கோரேய்ந்த சிறப்புக்குறிப்பிட, லங்குதான்குறை யோடுமெச்சிறப், பிங்குவேறினும் வேறெனுந் தன்மையான்."

## 293. மூன்றுவது விகற்பநீக்கம்.

மூன்றுவது முற்றுறுதாம், வியாப்பிய சப்தத்தானே வியாப்பியமாத்திரம் கருதியதா? அதன்விசேடம் யாதேனுங் கருதியதா? ஆதியதேல், புகையோடு கூடியதீயை விடயமாக வுடையகனுவுணர்விற்காதல், ஆத்தனல்லான்றொடர்மொழியா லுண்டாய வுணர்விற்காதல், அப்பிரமைத் தகைமையாகாதாம். இரண்டாவது மியையாததே, அஃதென்னர்த்தக்கிரியையா ?

சாமக்கிரியா? இருபாலும் முற்றோட நீங்காமையின். ஒரே காலத்திலோயாண்டும் பிரமாணஞ்சம்பவியாமையான், முறையேபற்றின் அவ்வவ்வர்த்தக்கிரியை அவ்வச்சாமக்கிரிகளின் பரம்பரையைச்கவரும் நியமத்தையுடன்படின் ஒரேவிடயத்தில் புருடாயுளை முடிக்கவேண்டுமென்னும் வழக்காதலின். விட்டதைக் கோடினே ஈற்றுக்கவர்ச்சிக்குப் பிரமாணமாதலின்மையானே முதல்வரை அப்பிரமாத்தன்மை யடைவுறுதலின். உண்மையாய அவ்வர்த்தக்கிரியைத் தன்மையை நிரூபிக்கமுடியாமையானே விவகாரத் தகுதியின்மையின்; அவ்வாறு பிரதீதிமாத்திரத்திற்கு அப்பிரமைப் பொதுமைவந்துழுதலின்.

### 294. நான்காவது கற்பநீக்கம்.

ஆற்றேல், இங்ஙனமாயின் நான்காவதுபக்கம் ஆகுகவே, அங்ஙனமன்றோ:—அர்த்தக்கிரியாகாரி விடயத்தன்மைதான், பயனற்றதல்லாத முயல்கையைப் பயத்தலாம், "அளவையதாமவிசம்வாதி ஞானமாகும், உளவர்த்தக்கிரியைத் திதியேயவிசம்வாதம்" எனவுமன்றோ கூறியுள்ளாரெனின்? ஆகாதாம், பொதுவர்கப்புகலும் வேட்கையேலோமயலின்கண்ணும் வழக்காதலின், புலப்படும் வடிவத்தானே அர்த்தக்கிரியாகாரித்தன்மைபொருட்குப்புகலும் வேட்கையெனின்?– பொருந்தாதாம், தயருற்றுந்துணிய முடியாமையின். அதனர்த்தக்கிரியைகாண்டலானே அதன்றுணிபாமெனின்? ஆகாதாம். அர்த்தக்கிரியையில்லாமலும் அதன்காக்ஷி சம்பவித்தலின் அர்த்தக்கிரியைப்பிரமிதியன்றயும் வேட்கையேலாயினே துடித்தேயுள்ளேம், பிரமையே நிரூபிக்கவேண்டியதா யிருத்தலின். அபிப்பிராய அவிசம்வாதத்தானே பிரமாணம்யாவுங் கூறும்வேமெனின்? முடியாதாம், அக்கால் வாஞ்சையாலாய அவிசம்வாதம் கனமுதலியவுணர்வுகளின் கண்ணும் கதுவுதலின். அவிசம்வாதம் காலாந்தரமதாயினேதுயரமர்ந்தும் துணியமுடியுமோகாண்!

### 295. பிராப்தியோக்கியத் தன்மையவிசம்வாதித்வ மென்பதன் நீக்கம்.

இதனானே, பிராப்தியாதி யோக்கியதையேயவிசம்வாதப் பொருளென்பதும் நீக்கப்பட்டது; துயருற்றும்பாதிக்கமுடியாத்துபோற் றோற்றுகின்றது இத்தருமகீர்த்தியின் நெறியாமென ஈண்டு இளைப்பாறி வேரோடும் பரிகரிக்கத் தக்கதேயாகும்.

### 296. பௌத்தருடன்பட்ட வேறிலக்கணநீக்கம்.

பாதிக்கப்படாத அனுபூதியே பிரமையென்பதும் நீக்கப்பட்டதேயாம்; அக்காற்பாத மற்றதேலோ அதிவியாப்திவந்தும், வேறுகாலத்திலும் வீழ்தலில்லதென்பதோ நிரூபிக்கவேமுடியாதாம். தனக்குப் பாதமற்றதேலோ அதிவியாப்தியடைவுறும், சர்வஜனபாதமற்றதென்பதோ தன்புற்றும் துணியமுடியாததேயாகும்.

### 297. பிரமையின் அயலிலக்கணநீக்கம்.

தருக்கசமுசய விபரியய மிருதிகளினும் வேறாயபிரதீதியேபிரமையென்பதுங் கூடாதாம், மிருதியினும் வேறாயதன்மைக்கண்டன நியாயத்தானே நீக்கப்பட்டதேயாதலின்.

### 298. பிரமைத்தன்மை ஜாதியுடைமை பிரமையிலக்கண பக்ஷ நீக்கம்.

ஜாதிசங்கரத்தைப் பாதமென்று கொள்பவற்குப் பிரமைத் தன்மையிலக்கணஜாதியினது சம்பந்தத்தானே பிரமையென்பதுங்கெட்ட இலக்கணமேயாம். அறியப்பெறாத இதற்கு அதன்விவகாரத்தைப் பயக்குந்தன்மையுண்டாமேல் பிரமையின்கண்ணைப் பிரமைப்பிரம சமுசயங்களுண்டாகாவாம்; தோட்டத்தோடு கூடியதற்கு அவ்வாறுந்தன்மையேல், பிரமஞ்சமுசயம் பிரமைமுதலிய விவகாரங்களுண்டாகாத ஞானத்தின்

மாட்டு ஞானமென் மாத்திரமெனக்கவரும் உதாகரணத்தின் கண்ணும் பிரமாத்தன்மை வந்துறுதலின்.

299. அறியப்பெற்ற திலக்கணமாயினும் தோடமாம்.

அறியப்பெற்றதாய இவ்விலக்கணத்தானே விவகாரமா மெனின்றோ, யாங்ஙனமிதுவேயறியத்தக்கதெனக் கூறுதல்கூடும், ஆண்டுமானதக் காட்சியானோமாட்டாதாம், அவ்வாறாயினோ, சிலபாலுமாதாய பிரமையின்கண் அப்பிரமை விபர்யய சம்சயங்கட் கிடமின்மையாதிக ளாகவேண்டும், கருமியாகியபிர மையைப்போல மனத்தினானே நிர்ணயிக்கப்படுதலின்; வேறு சின்னவேட்கையோடுற்ற மனத்தானே அறிவதாம்; அச்சின் னத்தானேதான் இலக்கணமாகி யறிவிப்பதாம், என்பதூஉம் பிரதிபக்க ஆசைமாத்திரமேயாம். அச்சின்னத்தானே பிர மைத்தன்மைச் சாதிக்கற்பனை நிடேத அடைவுறுதலின் அவைகள் பலவெனவரூயின் யாவையவையெனக் கூறவேண் டியதாகும். உபந்யாசப்படி அச்சின்னங்கள்யாவுமே தூடிக்கப் பட்டிருத்தலின். பிரமாணமாதலின் பிறிதாலாமென்பஃதி நீக் குஞ்சமயத்தில் விரிவாகவெடுத்துப் பரிகரிப்பாம்.

300. பாட்டசித்தாந்த நீக்கம்.

இதனானே சக்திவிசேடம் பிரமாத்தன்மை அதன் சம்பந் தம் பிரமையினிலக்கணம் என்பதும் நீக்கப்பட்டது; துயர் செறிந்தும் துணியமுடியாமையின்.

301. எல்லா இலக்கணங்களினும் பொதுவான தூஷணத்தைப் பொருத்தல்.

பிரமைக்கிலக்கணம் யாதுசிறிது கூறப்பெறுகின்றதோ அஃதறியப்பெறுததாயாதல் அறியப்பெற்றதுமாத்திரமாயாத ல், பிரமாத்தன்மைவிவகார காரணமாகுமேலாயின் அதிவியாப் தியாம். பிரமையாலளக்கப்படுமேல், பிரமைதுணியப்பெறுதிரு

ப்ப அது துணியப்பெறுதல் எத்தையுற்றும் முடியுங்கொல்! துணியப்பெறுதொழிக, உண்மையாயே அவ்வாறேயாமெனின்? ஆகாதாம், உண்மையாக அவ்வாறன்றேயெனவாகாததென்னைகொல்லென வினவின் விடையின்மையே யடைவுறுதலினானும், பிரமாத்தன்மை நிரூபணம் வாளாபோந்தன்மையை மருவலினானுமென்றுணர்க. உண்மையாயோ, பிரமையினேனே கடாதித்தவிவகாரமும் ஆயின் ஆருகவெனவிரித்தது சாலும்.

## 302. இலக்கியப் பிரமாண கண்டனம்.

இவ்வாறு பிரமிதியானது கூறமுடியாமையின் பிரமையின்கரணம் பிரமாணம் என்பதும் பொருந்தாதாம்; கரணப் பொருள் கூறமுடியாமையினானும் என்க.

## 303. கரணத்தன்மையைக் கூறும் பூர்வபக்கம்.

அற்றேல், காரகாந்தரத்திற் பயன்பெறுதகன்றேறதுத் தன்மையே கரணத்தன்மையாம், கரணத்தைப் பயக்குங் கருத்தாவிற்கோ பயன்பெறும் பான்மையாம்; காரகாந்தரத்தில், சொரூபமாகப் பயக்கப்படாததன்மையிருப்பினும் வியாபாரத்தை வேய்தலானே பயக்கப்படுந்தன்மைகூடலின். அத்தகையவதற்கே கரணத்தன்மையுண்மையின். இங்ஙனமே கருமமும் காணத்தைப் பயந்தவழி பயனுடையதாம், கரணவியாபாரமோ கருமவிடயமாம்,கருமமிலதாயினேவிடயமிலதாகலின் கரணவியாபாரமே பயக்கப்படமாட்டாதாம் எனவதனைக் காத்தவழி அதற்கும் பயன்பெறுந் தன்மையாமன்றோ. இன்னணமே அதிகரணகாரகத்திற்கும் கரணவியாபாரத்தைக்காக்குந் தகைமைகதுவும். சம்பிரதான அபாதானங்கட்கோயாண்டுமிருப்பதனேதுத் தன்மையின்மையாம், கரணமோயாண்டுமிருப்பவைகட் கேதுவேயாமெனக் காரகாந்தரத்திற்பயன்பெறுது யாண்டுமிருப்பதனேதுவே கரணமாமெனின்?

## 304. பூர்வபக்க நீக்கம்.

இவ்வாறியையாதாம், ஆண்டிவ்விரித்தவுரை யாராயாத போது இரமணீயமாயமர்க. அந்தரசப்தமானது விசேஷ மாத்திர வசனமாயின் விலக்குவதாகாதாம், விசேடத்தை விலக்கிக்காரக மாத்திரம் எவரானும் உண்டாக்கப்பட மாட்டாதாம், யாது விலக்கப்படுவதாமோ. அந்தரசப்தம் அன்னியவசன மென்பது மாகாதாம், அவ்வாறுயினே எதனினின்றும் அன்னியமென விசேடங் குறிப்பிடப்படாதவழி கரணத்தினின்று மென வொருங்கு சேர்த்துரைத்தாலானே கிடைப்பதாகும்; அன்னியமான்மா, அன்னியமாகம் என்பதாதிகளிற்போலும். இங்ஙனமாகவே கரணத்தினும் அயலாய காரகக்கருத்தானே பிரயோகிக்கப்பட்டதாகும்; அஃதுமாகாதாம், இன்றும் கரணமே நிரூபிக்கப்படவேண்டியதாயிருத்தலினானும் அதிவியாப்தி யாதலினானுமென்க. கர்த்தா கருமங்களின் சொரூபத்தைத் தரும்பரமானது இவ்வந்தர சப்த மென்பது மாகாதாம், அவற்றானே அதிவியாப்தி வந்தடைதலின். கருத்தா கருமங்களைக்குறித்து வேறென்பதேயந்தர சப்தப்பொருளென்பதுந்தகாதாம், வாளாபோதல் வருதலின்; காரகத்திற்பயன் பெறுப்பான்மையே பகாற்பாலதாம். மிகுதிப்பொருள் பயவாததே யிதுவென்பதாகப் பிரயோகிக்கத் தக்கதாகாதாம் அந்தர சப்தமென்பதுங் கூடாதாம்; அங்ஙனமாயின் கரணத்தைப்பயக்கும் காமுதலியவை கரணமாகாவாம். வியாபாரத்தோடு கூடிய காரணமேயன்றோ கரணமெனப்படுகின்றது, பானேச்சையோகாதி வியாபாரத்தோடுகூடிய வன்னி முதலியவற்றிற் கவ்வாறுந் தகைமை யிருக்கின்றதேயாகும்; அதனைப் பயக்குந்தன்மை காமுதலியவற்றிற்கு முளதேயாகும். காமுதலியவை அகரணமென்பதாகவே யங்கீகரிக்கத்தக்கதாமென்னற்க; வியாபாரமுடைய காரணமாதலின்

னேயது காணமென ஒருதலையா யங்கீகரிக்க வேண்டியிருத்தலின். கருத்தா முதலியவற்றின் மாட்டுத்துயருற்றும் அடக்க முடியாமையின், ஏழாவது காரக அங்கீகார அடைவுண்டாதலின். அடுதன் முதலியவற்றில் அத்த முதலியவற்றிற்குத் தடையுண்மையின் ஹேதுத்தன்மையே யின்றும், ஹேதுத் தன்மை யென்னேயுளது எனவியம்பற்க; கர்த்தாவிற்கு மிவ்வாறே வழக்காதலின். புருட வியாபாரத்தானே தேக அசைவு முதலியவை, அவற்றானே குடாரக்கிரியை முதலியவை, அவற்றானே பிளவுபடன்முதலியவையா மெனப் பரம்பரைத் தடையுண்மையின். இவையாவுமே கர்த்தாவின் வியாபார பரம்பரையாகும், கர்த்தாவிற்குக் காரணத்தன்மையைக் கெடுக்காவெனின்? ஒப்பேயாகுமன்றே; ஆகலின், காரணத்தன்மையானே அவசியமங்கீகரிக்கத்தக்க அத்தாதியில் வியாபிக்காமையின் இஃதலக்ஷணமேயாம்.

### 305. அவ்வியாப்தியையாக்கல்.

இதனானும், காரகாந்தர சப்தம், கருத்தாகருமத்தினும் வேறைக்கூறுவது என்னும் பக்கம் நீக்கத்தக்கதாம்.

### 306. கரணத்தின் வேறிலக்கண நீக்கம்.

கர்த்தாவின் வியாபார விடயம் காணமென்பதும் கதுவாதாம், ஆகமசைவான் முயன்றானுடைய முயற்சி வடிவ கர்த்தாவின் வியாபாரத்திற்கு, உண்டாக்கப்பட்ட ஆகக்கிரியையாதல், கிரியையோடுற்ற ஆகமாதல் விடயமாகுமென அக்கிரியையின் கண்ணே காணமாகுமென, (அதிவியாப்தியாம்.) இஃதங்கீகரிக்கக் கூடியதாகாதாம், பவிப்பதற்கும், தன் பொருட்டும் காரகத்தகைமை கூடாமையின். நேரே கருத்தாவின் வியாபார விடயமெனச் சிறப்பித்துக்கோடினும் இவ்வதிவியாப்தியின் பரிகாரமின்றும்; நேரே விவகரிக்கும் மனமுத

விய கிரியையின்கண் வழக்காங்கே நிலைபெறுதலினுனும், அவ் யாப்தியுறுதலினுனுமென்க.

### 307. அயல்வகையானே கரண இலக்கணமும் அதன் கண்டனமும்.

இனி, அக்கிரியையின் ஹேதுவாகி அக்கிரியைக் கர்த்தாவின் வியாபாரவிடயம் அக்கிரியையின் கரணமாம் எனகினைகின்றனைகொல்! இவ்வாறெண்ணற்க; அநீசுரவாதத்தில் அங்குரமுதலிய வற்றிற்கு அகரணமுடைமை வழக்காதலின். துயின்ற பின்னுண்டாகும் பிரமைக்கு, கணக்கிட்ட கரணவுபாதிகளின் வேற்றுமையானே கணக்காய பிரமைக்கூட்டத்தினின்றும் வெளிப்படும் வழக்கன்றேவாம்; அசேதனத்திற்கும் கர்த்திருத்தகைமையேன் மிகு வழக்காதலின். ஈசுரவாதத்திலோ, ஈசுரவியாபார விடயமாயயாவுமே காரணமென அகாரணங் காரணமாகாதாம்; ஓமென வுரையாடினே அகாரணமாத்திரமே விலக்கப்படுவதா மெனக் காரணமே கரணமென்பதாகவே யியம்பலாமே, வாளாவிசேஷ பூரணப் பிரயாச மெற்றினுக்கோ!

### 308. விசேஷணத்திற்குப் பயனுடைமைச் சங்கையும் அதனீக்கமும்.

இனி, வேறுதருமியை விலக்குதற் பொருட்டு விசேஷணங்களன்றும், மற்றே, ஒரே தருமிக்கும் ரூபபேதத்தானே காணபதத்தாற் கூறுந்தன்மையைக் காண்பிக்கும் பொருட்டாம் என எண்ணுகின்றனைகொல்! இவ்வாறாயின் இந்தரூபாலிங்கிதத்திற்குக் கரணத்தன்மை யுண்மையின் இலக்கணமியம்ப முயன்றவுன்னுல் இலக்கியமாத்திர மியம்பியதாகும். இலக்கியப் பதப்பிரவிருத்தி நிமித்தம்போல இலக்கியப்பொருளென்பதின்றும்; கந்தமுடைமை முதலியவற்றிற்குப் பிருதி

வியாதிகளின் அலக்ஷணத்தன்மைபடை வுண்டாதலின். மேலும், இவ்வாறு வத்துமாத்திரம் கரணமெனக் கூறிக்கொண்டே கரணபதப்பிரவிருத்தி நிமித்தத்தையேன் காண்பிக்கலாகாதோ. எல்லாவிடத்தும் வத்துக்களிடத்திற் கரணவிவகாரமாகுமேலாயின் இவ்வாறாகுக வெனின்? ஆயின் நீ கூறிய இலக்கணமும் பலிக்குமேலாயின் எவ்விடத்தும் காரணத்திற் கரண விவகாரமாம் எனவுங் காண்குதி; கருத்தாவின் கண்ணுதல், கருமத்தின் கண்ணுதல், எவருக்குங் கரணவிவகாரம் ஆதலின்றும்,

## 309. கருத்தாவின்கண்ணே கரண விவகாரத்திற்குக் கௌணத் தன்மையைக் காட்டல்.

கர்த்தாவின் கண்ணே ஆண்டு 'பிரமாண மீண்டுத்தேவதத்தன்', என வுளதாமுலகில், 'மந்திரம் வைத்திய சாத்திரமிவைதா, மெந்தவாபிரமாண மாகியே யிலங்கும், அந்தவாறதன்பிர. மாணமுமாதலாம், சுந்தரவாப்தப் பிரமாண மாதலாண்', எனச் சாஸ்திரத்தின் கண்ணும் உளதாமெனின்? ஆகாதாம், இஃதென்மாணவகன்மாட்டுத்தீ விவகாரம் போலக்கௌணமா? அல்லது முக்கியமேயா? எனஸ்வயம் நிகழுழி, உன்னுனினிதுகற்பிக்கப்பட்ட, நிமித்தத்தானே முக்கியமாகுமேலாயின், அதே நிமித்தத்தானே கருமத்தின் கண்ணும் ஆகுகவே, எனப்பாதகங் காண்டலின் எஞ்சுதலானே கௌணமாகவே அதைநிலை பெறுத்துதல் பொருத்தமாகும்.

## 310. கருமத்தின்கண்ணே கரண விவகார இட்டச் சங்கையு மதனீக்கமும்.

கருமத்தின்கண்ணும் அவ்வடிவத்தானே புளதேயாம் எனின்? நூலிலும் உலகிலும் ஆண்டுக் காட்டக்கூடிய உதாகரண மிஃதெனவில்லையாகும். குடத்தைக்காண்கின்றான் என்

னும் பொருளிற் குடத்தாற் காண்கின்றனென்ன எங்கு கண்டனைகொல்! உன் மனத்தின்கண்ணே கேவல மிருக்குமாயின் அதன்கண் ணாதரவுசெய்ய யாமுற்சாகப்படேம். பிரமேய மாத்திரங் கரணமெனக்கூறுநின்ற வாமமதியன் மனத்தில் இனிது நிகழாநின்ற பிரமேயமாத்திரத்திலே கரணவிவகார மிருக்கும் பான்மையே யங்கீகரிக்கத் தக்கதாம். குடத்தாற் காண்கின்றே னென்பதாதியாகக் கூறுமையின்வயத்தானே பிரயோக மின்றும், எல்லாம் இலக்கண சம்பந்தமாயே பிரயோகிக்கப் படுவதின்று மெனின்? கூடாதாம் உளதாகா தொழிக, அஃதிலதாயின் அன்னியம் யாதுளதுகாண்! அவற்றின்பாற் கரண விவகாரம் எனக்கூறத்தக்கதாமது; அதனைக் காண்பிக்கவோ முடியாதாம்.

## 311. கரணத்தின் வேற்றிலக்கண நீக்கம்.

கிரியையோடு கூடாமையை விலக்கலானே சம்பந்திகரணமாமென்பதுங் கூடாதாம். அங்ஙனமன்றே:—கூடாமையை விலக்கலென்பது கூடுதலேயென்பதாக முடிவுபெறும் பெறவே சம்பந்தத்தாற் சம்பந்தியென்று கூறப்பட்டதாகும். ஆகவே கூறியது கூறலேயாம். எக்காற்சம்பந்தி யென்பதனானே காலவிசேஷ நியத சம்பந்தித்தன்மை சாற்றப்பெறுவதாமோ, அதனினும் அயற்போதினும் சம்பந்தித்தகைமை கூடாமையை விலக்கலென்னும்பதத்தானே விளம்பும் வேட்கையெனின்? ஆகாதாம், சம்பந்தியென்பதனானே காலவிசேஷநியத சம்பந்தித்தகைமை கூறப்படாததாம், எதனானே அயற்போதில் அடைவுறாத சம்பந்தித் தகைமையைக்கூறும் பொருட்டு வேறுபதங்கோடப்படுமோ. இனி, பொதுவாகக் கூறும் சம்பந்தி யென்பதற்குக் காலவிசேஷ நியதமாய சம்பந்தத்தைக்கொண்டும் முடிவிற் பயனுடைமை யவசியமுண்டாம் எனக்காலாந்தரத்தில் அசம்பந்தியாக இனி திராநின்ற

கருத்தா முதலியனவும் காணமாம், அதை விலக்குவான் காலாந்தரத்திற் சம்பந்தித்தன்மை வேறுபதத்தால் விளம் பப்படும் எனின்? இங்ஙனியையாதாம், ஆயின் அதனுனுஞ் சிலபாலே காலாந்தரத்திற் சம்பந்தித்தகைமை கூறப்படுமேல் அக்காலும் பயனுடைமை சம்பந்திபத நியாயத்தானே அப் பொதுவாகப் புகல்வதற்காம் என அதனினும் அயற்போதில் அசம்பந்தத்தை யகற்றுவான் வேறு விசேடணமும் புகுத் தத்தக்கதாம்.

## 312. அதிவியாப்தி வினவிடைகள்.

இனி, ஒருகாலும் எக்கூடாமையுளதோ அவ்வியாவற் றின் விலக்கம் விளம்பும் வேட்கையா மேலாயின் சம்பந்தி பதத்தின்கண்ணே இவ்வியம்பு மிச்சையிருக்குக, அதிகங் கொண்டு அவ்வறையுமாசையால் ஆற்றியதுபோதும். நிடேத விலக்கத்தானே எவ்விடத்திலுமுடைமையின் இலாபமாமெ னின்? ஆகாதாம், நிடேத விலக்கமானது விதியினும் வேறு பொருளாகாமையின் சமமேயாதலினென்க.

## 313. வினவிடைகள்.

அத்தருமியையுடைய (கோடரி) சம்பந்தத்தின் அசம் பந்த அசாமானுதிகரண்யம் என்பது, கூடாமையை விலக்க லான் என்பதனுனே கூறப்பெறும் எனின்? பெறுதாம், அத னது இருப்பின் காலத்தினும் ஆண்டிருப்பின்மையை யங்கீ கரித்திருத்தலின். எப்போது மெனின்? இயலாதாம், இங்ங னமேல், அஃதென்காணமின்றிய காலத்தும் காணத்தோடு கிரியைக்கு யோகமேயா? எதுவரையிருக்குமோ வெனின்? ஆயின், சம்பந்தியென்றது வீணும், இருக்கும் வரை கூடா மையை விலக்கலானே யாது விசிட்டமாயாதல் உபலக்கண மாயாதல் ஆமோ அது காணமென்பதாகவே யாகுக, சம்பந்தி

யெனவேயாதல் அவ்வாறு விளம்பும் வேட்கைப்படலாமென முன்பே மொழிந்தேம்.

### 314. கூறியது கூறுதலின் பரிகாரசங்கையுந் தூஷணமும்.

இப்பொருளே, ஏதாவதோர் குதர்க்கத்தானே சம்பந்தி பதப்பயனுடைமையைக்கூறி அறையுமவாவுளதா மேலாயின் அக்காலங் கூறப்படும்:—கிருத்திகையி னுதயக்கிரியையில்ரோகிணியி னடைவு மிங்ஙன் காரணமாகலாம், பின்னருண்டாவனவாய பதினொன்குடுக்களின் உதயப்பொருட்டு முன்னுண்டாவனவாய பதினொன்கெண்ணிக்கைவாய்ந்த வுடுக்களின் அஸ்தமயமுங் காரணமாகலாம் இவ்வாறே இயையுமென்னற்க; ஒரே காலத்துளதாதலின் காரணத்தன்மை கூடாமையாற்காரகமென்பது சேய்மையி லொதுக்கப்பட்ட வழிகரணமென்னுஞ் சம்பாவனை யேறுமையின்.

### 315. சம்பந்த அசத்வசங்கை பரிகாரங்கள்.

ஆண்டுச் சம்பந்தமேயின்று மென்னற்க; இயற்கைச்சம்பந்த வடிவமாய வியாத்தி துயருற்று மகற்றமுடியாமையின். இனி, காரிய காரணபாவம் சம்பந்தம் எனக்கூறுமவாவாம், ஆகாதாம், சாமக்கிரிக்குக் கரணத்தன்மை வருதலின்; ஓமெனின்? அஃதென்னே ஓமெனவுரைத்தே பயனுடையவனுயினை, கொல்! எம்மனோரூற் சாமக்கிரியும், காணமெனக் கருதப்பெறுமென்பதன் கண்ணே சிரத்தையுறுத எங்களையும் ஆ! ஆ!! பிரணவவாயிலாய ஏதாவதொருசுருதியையே யோதிச்சிரத்தை செய்விக்கலாமென வெண்ணுதியோ!

### 316. சாமக்கிரி கண்டன பூமிகை.

சாமக்கிரி காரணமல்லவாம், மற்றேூ, சாமக்கிரியேகதேசமாய நானுபூதந்தனித்தனியே காரணமாம். எதன்பின் காரியம் அவசியமுளதாமோ அவ்வித்துணைமாத்திர வடிவதே சா

மக்கிரியெனின்? ஆகாதாம், இத்தகைய சாமக்கிரி யிலக்கணம் காரணத்தினு மிருத்தலினுனே காரணத்திற்குச் சாமக்கிரித்தகைமைவந்துறுதலின். கிரியைக்கு விபாகாதிகளிடத்திலும் விபாகத்திற்குச்சம்யோக நாசாதிகளின் பொருட்டும் அவ்வாறுந் தன்மை யடைவுறுதலின்.

## 317. சாமக்கிரிக்குக் காரணத்தன்மையை யங்கீகரித்தல்.

சாமக்கிரி யேகதேசப்பொருட்டு நியதமாக முன்னிற்றன் முதலிய காரண இலக்கணம் யாதங்கீகரிக்கப்பெறுமோ அது சாமக்கிரியின் கண்ணுமுளதாமென யாங்ஙனம் அதற்ககாரணத் தன்மை? முற்போதையுள்ளடக்கிச் சாமக்கிரியாம், அத்தகைய அதற்கு முன்னிருப்பேயிலை யாமெனின்? இன்றும், அதனுனே முற்காலத்திற்கு அகாரணத்தன்மை யுண்மையின்காரணசாமக்கிரியின் கண்ணே அது புகுத்தப்பெறுமையின்.

## 318. அவ்வியாப்தியைக் கிளப்பல்.

மேலும், இவ்வாறியம்ப இச்சிப்பினும் காரணமாகாதாம், இருக்கும்வரை வியாபாரத்தோடு கூடியதாயினு மதற்குக் கிரியையைப்பயக்குந் தன்மையின்றும்; கிரியையின் காலத்திற்கணமாயினும் அதனுவிருத்தி நிட்டேதத்தே பிரமாணத்தைபுபந்யசிக்க அஞராடைந்து மனுகாலமையின் ஐயத்தானும் இலக்கணம் அசித்தியாதலின்; மாறுக, நெடுநேரந்திரம் பெற்றகரச்சையோகமுற்ற பொருளிற்பரிசப்பிரமையின்கட் காரணமாகிய பரிசன இந்திரியச்சையோக நிலைபேற்றிற்குத் துணியத்தகுதியாதல் கூடலின்.

## 319. அசம்பவ மறைதல்.

இருக்கும் வரையும் காரணமென்னுங் கூற்றில் யாண்டும் அஃதுள்ளகாலத்திற் காரணத்தன்மையாமென்பது பொருள்;

நியதமாகப் பூர்வகால சம்பந்த வடிவமாய காரணத் தன்மைக்கு ஒரு காலத்தே யிருப்பென்பது கூடாதாம்; காவப் பொருட்டு வேறு காலமின்மையி னென்றுணர்க.

## 320. வேறுபோருள் விலக்கல்.

இனி, கிரியையோடு கூடாமையை விலக்கலானே சம்பந்தி யென்பதற்கு இது பொருளாம், எஃதிருப்பின் அவசியம் கிரியை யுண்டாமோ என்பதாம்; இதன்பொருள் யாது கொல்! எதன்பின் கிரியை யவசிய முண்டாமென்பதா? அல்லது எது நிகழின் அவசியம் கிரியையுண்டா மென்பதா? அல்லது எதன் பின்னர்க் கிரியையிருப்பதே யாமென்பதா? அல்லது எது நிகழின் அவசியம் கிரியையிருப்பதாமென்பதா? ஆதியதாகாதாம், சாமக்கிரிக்குக் காணத்தன்மை வழக்காதலினும் அத்தமுதலியவற்றிற்கு அகாணத்தன்மை வழக்காதலினும், சுகதுக்காதிப் பிரமேயத்திற்கும் பிரமாகரணத் தன்மை வழக்காதலினும் என்க. பிரமேயமும் பிரமையின் காணமாமேயென வரையற்க; ஆண்டு அவ்வாறு எவருக்கும் விவகாரங் காணப்பெறாமையின். இரண்டாவது மேலாதாம், தீண்டப்படுவதோடு திரசையோகத்தையுடைய துவக்கிந்திரியத்திற்கு அவ்வியாப்தி வருதலின், அஃதிருந்தபோதினும் மனமயற்பான் மருவின் அதனாற் பிரமையுண்டாக்கப்படாமையின். மூன்றாவது முற்றுறாதாம், சாமக்கிரி முதலியவற்றிற்குக் காணத்தன்மை வழக்காதலினும் உற்பத்திக்குத் திதிக்கிரியைப்பொருட்டுக் காணத்தன்மை வழக்காதலினும் என்க. நான்காவதும் நலமிலாததே, ஒருங்கு கூடியுள்ளவைகட்குக் காணத்தன்மை வழக்காதலின் இனிக் கிரியையோடு கூடாமையை விலக்கலானே சம்பந்தித்தலைமை காணத்தன்மையென்பதற்கு இது பொருளாம், வியாபாரமுடையதற்குப்

பலப்பிறழ்ச்சி யில்லாமை யென்பதாம்; இங்ஙனியையாதாம், அத்தமுதலியவற்றே யவ்யாப்தி வருதலின்.

## 321. வியாபார விகற்பம்.

அவ்வியாபாரமென்பதிஃதென்னே! கரணத்தாலுண்டாய காரணமா? கரணத்தைப்பற்றிய காரணமா? ஆதியதாகாதாம், குறியாராய்ச்சியின்கண்ணே அது சம்பவியாமையின்.

## 322. அவ்யாப்தி பரிகாரசங்கை.

வியாத்தி மிருதி வாயிலாக இரண்டாவது குறியாராய்ச்சி வியாபாரத்தைப்பயக்கும், பக்கத்தின் முதற்புகை முதலிய காட்சிக்குக் கரணத்தகைமை கருதத்தக்கதாம். இவ்வாறுகவே, மெய்யாக இரண்டாவது வியாத்த அதன் ஆராய்ச்சி வியாபாரத்தையுடைய வியாப்பியத்தின் சொரூபமான பிரமிதி அநுமிதிகரணமென உடன்படலாமெனின்?

## 323. அவ்யாப்தியின் பரிகாரமின்மை.

ஆகாதாம், பிறிதினின்றுமுளதாய வன்னிதூமாதி வியாப்தி மிருதியுளதாகவே பக்கத்திருக்கும் முதற்றூமாதி தரிசனத்திற்கு அவ்வியாபாரமுடைமை யசித்தமாதலின். ஆண்டும் உபய கருமஜசையோகம்போல அதுவும் காரணமெனின்? ஆகாதாம், அபாவமுதலிய அவாவோடுகூடிய விசிட்டஞானம் போல முன்னுளதாய வன்னி வியாத்த தூமமிருதிக்கு முதலிலும் எவ்விது வன்னி வியாத்தமோ அவ்விது தூமமென ஆராய்ச்சி கூடலின். நித்தியம் அவாவிடும்பொருளில்ஆருக்க வங்ஙனம் பிறவிடத்தில்வேண்டாம்;முதலாவதங்ஙனமெனின்? அன்றும், முன்னக்கரணங்கூடில் அயற்பாலில்லை யிவ்வண்ண மென்னும் நியமத்தில் அளவையில்லாமையின். அதற்கு வியாபாரமின்மையினுன் அநுமிதியைப் பயக்கும்பான்மையே யில

தாமெனின்? வியாபாரமுடைப்தற்குக் கரணத்தன்மையென்ப தாகவே துணியப்பெருமாயின் இன்னணமுமாகுக.

## 324. உடன்பாடெதிர்மறைகளின் பிறிதோராற்றாற் பெறப்படும் வினாவிடைகள்.

ஆண்டுத் தூமாதி நிருவிகற்பமுடையதும் அவ்வியாபார முடையதும் கரணமாகலாமெனின்? ஆகாதாம், நித்தியமினிது பொருந்திய பொருள்போல நிருவிகற்பகமில்லாமலும் சவிகற் பக எழுச்சி கூடற்கு முரணிலாமையின் நீ மொழிந்த பிரக் கிரியை நியமம் அளவையற்றதாகும். நித்திய மினிதுகூடியதி லும் நிருவிகற்பகத்தை நிண்ணயிப்பேன் எனின்? ஒவ்வா தாம், அயற்காரணத்தானே யதுகிடைத்தவழி ஆண்டு நிரு விகற்பக கற்பனையின்கண் ணளவையின்மையின்; மாறாக, அவ்வினிது பொருந்தியதற்கு இயற்கையைத் தாண்டாமை யுடன்பட்டிருத்தலின்.

## 325. அவ்யாப்தி பரிகார வினாவிடைகள்.

ஆயினும். யாதொன்றதைப்பயப்பதோ அதுவே ஆண் டனுமிதி கரணமாக நிலைபெற்றுய்கவெனின்? உய்யாதாம், அவ்வாறே பொறி முதலியவற்றிற்கும் அனுமிதி கரணத் தன்மை யமைதலின் என்பதாகப் பெரிது விரித்ததுசாலும்.

## 326. விசேடணம் பிரயோகித்தலாற்றாடணம்.

சத்தசுரோத்திர சம்பந்தத்திற்கும் சுரோத்திர அவ்வியா பாரத்தன்மை வழக்காதலின்; வேறுயினே, சுரோத்திரத்திற் குச் சத்தவுணர்வின்கண்ணே அகரணத்தன்மை வழக்காதலின் சம்பந்தமே பொறியின்வியாபாரமெனப் புகலப்படும் என்ப தாக வேறு வியாபாரமும் அதற்குக்கணிகமாக அசித்தமாம், திரமேலாயின் றுதலிய தோடமேயாம். சத்தமேயதன் வியா பாரம் ஆகாதகென்னைகொலோ வெனின்? ஆகாதாம், கருமத்

தன்மையானே கரண கோடியினின்றும் வெளிப்பட்டிருத்தலின்.

## 327. அப்பிரயோஜகத்தகைமை வினவிடைகள்.

சிலபாலவற்றிற் கொருமையிருப்பினும் யாது கோதாமாலோவெனின்? என்னற்க, சத்தபுத்தியாகிய காரியத்தின் கண்ணே உபாதிவடிவத்தானே புகுந்த சத்தத்திற்குக் கரண வியாபாரமாதலானே காரணகோடியின் கண்ணும் புகுந்தவழி அங்கிசத்தான் நியமிய நியாமகத்தன்மை விரோதவடைவாதலின். குடமுதலிய புத்தியில் விழிமுதலியவற்றிற்கு விழிகுடமுதலியவற்றின் சம்பந்த வியாபாரமுடைமை யிருப்பினும் ஒப்பாமிஃதெனின்? எம்மனோர்க் கென்னும்? ஆகவே.— "பாதம திடமதாயிற் பகரய லொப்பினனே, யேதுகாண் டிடமதாயி னயலையு மெறியலாமான், மோதநீர் வசனவாதி முமுக்ஷுக்கள் முற்றினார்க்குக், கோதுறு மமதையெங்கே கொள்வதோ வறிகிலோமே", "அவ்வண மன்றே முன்ன மிதிலையினரசனை, செவ்விய மும்முக்ஷு வென்ன தெனுஞ்சிறை சிதைந்த மேலோன், இவ்விக முறைத்தா னிந்த மிதிலைதா னெரிந்ததென்னிற், றிவ்விய வெனது தாகஞ் சிறிதிலை சிவமாய் நின்றேன்"

## 328. இரண்டாவது விகற்ப நிஷேதம்.

குறியாராய்ச்சிக்கு அனுமிதியின்கண்ணே அகரணத்தன்மை வழக்காதலின் இரண்டாவது மியையாததாம். அதன்நிருவிகறபத்தையுடன்படினும், சவிகற்பகத்தைப் பற்றுமையின் பிரதானக்கிரியையின் அதன் ஹேதுவைப்பற்றுததற்கு அதன் ஹேது வியாபாரத்தன்மையேலோ மிருவழக்காம்.

## 329. பலப்பிறழ்ச்சியின்மை யங்கிசகண்டனம்.

மேலும், பலப் பிறழ்ச்சியின்மை யென்பதென்னே, அப்போழ்திலேயே பயனிருப்பி னியமமா? அல்லது அதன் பின்

னர்ப் பயனிருப்பி னியமமா? காரணத்திற்கு இன்றியமையாது முன்னிருப்புக் கூறவேண்டியிருத்தலின் ஆதியதாகாதாம். பின்னராதல், தடையிலாத பின்னராதலறைபு மவாவேலாயின் அக்கால் யாதோ சிறிது வியாபாரமுடையது காரணமென்னும் பக்ஷத்தில் அத்தமுதலியவை காரணமாகாம லொழிதலின் இரண்டாவதுங் கூடாதாம். பலம்வரை வியாபாரமுடையதற் கவ்வாறுயினோ கருத்தா முதலியவற்றி லதிவியாப்தியாம். இனித் தடையுற்றதற்கும் பின்னாதல் கூறும் வேட்கையே லாயின் அப்போழ்தும், யாதோ சிறிது வியாபார அபிப்பிராய மேல் இடையூறுகூடலின் அத்த முதலியவற்றி லவ்வியாப்தி யாம்; பலம் வரை வியாபார அபிப்பிராயத்திலோ தடையி லாமையின் காரகமாத்திரமே காரணமெனக் கழறியதாகும்.

## 330. விகற்ப நீக்கம்.

வியாபார முடையதற்கும் பலப்பிறழ்ச்சி யின்றென்ப தென், அவ்வியாபாரத்திற்குப் பலப்பிறழ்ச்சி யின்மையா? வியாபார விசிட்டத்திற்கா? அத்தாதி யகாரணத்தன்மை யடைவுறுதலின் ஆதியதாகாதாம். அதனுனே மற்றது முமனும், மகமுதலியவற்றிற்குத்துறக்க முதலியவற்றின் அகாரணத்த கைமை யடைவுறுதலின். அபூர்வ வாக்கியார்த்தத் தன்மை வாதியினும் ஈற்றுமகத்திற்குப் பல காரணப்பான்மை யங்கீகரிக்கப் பட்டிருத்தலின்.

## 331. உத்யோதகரராற்றிய கரணவிலக்கண நிராகரணம்.

இனி, எஃதுடையதே யியற்றுகின்றதோ அது கரணம், எஃதுடையதே யளக்கின்றதோ அஃதளவையெனக் கூறப் படுமெனின்? இங்ஙனியம்பற்க, அகரணங்களாய ஆன்மதன் மப் பிரத்துவம்சாதிகட்கு அளவைத்தன்மை வழக்காதலின்.

## 332. விசேஷணமீயினும் அதிவியாப்தியாதல்.

எக்கிரியைக்காரணத்தோடு கூடியதாகவே அளக்கப்படுமோவெனின்? அடாதாம், சுகமுதலிய பிரமிதியின்கட் கரணவியாபாரத்திற்கும் கரணத்தன்மை வழக்காதலின். ஒமெனின்? ஒண்ணுதாம், வியாபாரமற்றதாதலினுனே காரகமாகாமையின் காரகவிசேட கரணபாவங் கூடாமையின். வியாபாரமுடையதானுமெனின்? என்னற்க; இவ்வாறே வியாபாரமுடையதற்கேகரணத்தன்மையாகாதாம். வியாபாரமுடையவதற்கு வேறுவியாபாரமுடைமை யுளதாதலின்றன்றோ. இனி, வியாபாரமுடையதற்கு வியாபார அங்கிசம்தணந்து கரணத்தன்மையாம், ஆண்டோ உளதேயாம் இவ்விலக்கணம், எதற்குக் கரணத்வமுளதோ அதற்கு வியாபாரமுடைமையும் உளதேயாம் என வியாபாரமுடையது கரணமெனலாமெனின்? தகாதாம், ஆடையை யுயர்த்தித் தாழ்த்தித் தோய்ப்பவனுக்கு அவ்வாடை கருமமேயாகவும் கரணமன்றேவாம்.

## 333. இலக்கிய வடிவத்தை யுணராவிடின் இலக்கணந் தந்திரமாகாமை.

மேலும், யாததன் கரணத்தன்மையென இலக்கியமாயது அவசியம் இயம்பவேண்டியதாயிருத்தலின், கூறிய இலக்கண முடைமையேயஃதாமேலாயின், அப்போழ்தான் மாசிரயவடைவாம். சொரூபமெனின்? கூடாதாம், சொரூபமானது கரணந் தோறும் வெவ்வேறுதலின், ஒன்றை விடுதலானே அயலிடத்தில் இலக்கணம் சென்றதென்பதாக அதிவியாத்தியாம். விழியின் சொரூபம் செவிக்கின்றன்றோ.

## 334. எஃதுடையதேயளக்கின்றதோ என்பதன் கண்ணயற்றேடம்.

மேலுமிவ்வாறே பொறி முதலியவற்றிற்கும் பிரமாணத் தன்மையாகாதாம், அஃதற்றவாய அனுமாதா முதலியவற்றிற்

கும், பிரமாதாத்தன்மையாதலின். இது பிரத்தியக்கமன்றுமாலோவெனின்? அன்றும், இவ்விலக்கணமுந்தான் காட்சியொன்றனுக்கே யுன்னாற் செய்யப்படவில்லை யன்றோ. அற்றேல், பொறி முதலியவற்றிற்கு விசேடமாக விலக்கமெனினும் அச்சாதியையடைந்ததன் கரணமாத்திரத்தன்மையானே அச்சாதியமர்ந்தது மாத்திரத்திற்குவிலக்குதலிலாமையேயாம்; அனுமிதியாதியின்கண்ணும் அகரணச்சாதீய முடையது அளப்பதென்பதாக விலையன்றோவெனின்? என்னற்க, கரணமெனப் பொதுமையுற விதுகாறுந் துணிபுறுத்த வேலாமையின்.

### 335. அவ்யாத்தி பரிகாரவினாவிடைகள்.

இனி யெப்பிரமையை யெஃதுடையதே பயக்குமோ அதன் மாட்டது கூரணமாமெனின்? இங்ஙனிசையாதாம், கௌபீனமறைப்பு முதலியவற்றிற்கும் கரணத்தன்மை வழக்குக்கதுவலின். எச்சாதியுடையதையெனின்? இஃது மேலாதாம், பரோக்கப் பான்மைச்சாதி யுறாப்பிரமையைக்குறியுடையதேயாதல் சத்தமுடையதேயாதல் பயக்குமென நியமமின்மையின் அதற்கு அகரணத்தன்மை வழக்காதலின் சாக்ஷாத்காரித்தன்மை அனுமிதித்தன்மை முதலிய சாதிபேதங்கள் விளம்பும் வேட்கையினவாமெனின்? ஆகாவாம், தனித்தனி கோடப்படுமேல் அங்கிச அவ்வியாத்தியாதலின், ஒருங்கேகூட்டிக் கோடினே அசம்பவமாதலின் , நியமமிலாமலே கோடினே இலக்கணமிலையபிலாம விருந்தேகலின் என்றுணர்க.

### 336. வியதிரேக வாயிலாய்க்கரண சாமானியத்தையும் பிரமாணத்தையுந் தூடித்தல்.

எஃதிலாமையின் கருத்தா கருமங்கள் கிரியையுண்டாக்காவோ, அது கரணமாம்; அதனன் எஃதின்மையின் பிரமாதாப் பிரமேயங்கள் பிரமையைப்பயவாவோ, அது பிரமாண

மென்ன விலக்கணம் என்பதும் இயைபுறுதாம். பிரமாதாப் பிரமேயங்கள் இருந்து எந்நிமித்தமாகப் பயவாவோ எனவா? அல்லதில்லாமலும் எனவா? ஆதியதில் சென்ற வருவவாய கருத்ன் முதலிய கரணை அவ்வியாத்தியாம். இரண்டாவது மேலாதகே, பிரமாதாப் பிரமேயங்களினும் வழக்காதலின்; ஆண்டுக்கண் முதலியவையிலாமையின் பிரமை யுதியாதகே போலவே பிரமாதாப் பிரமேயங்களினும் இன்மையின்; அன்றாயினே, அவற்றிற்குக் காரணத்தன்மையே கதுவாமற் போம். இதனுனே பொதுவாகப் புகன்றது மறுக்கப்பட்ட தாம் நம்மனோர் முதலிய கருத்தாக்களாயவாகிய ஈசுரகருத் தாவையுடைய நமமனோர் முதலியோர் ஞானத்தில் நம்மனோர் முதலிய கருத்தாக்களின் காணத்தன்மையடைவுறுதலின். இங்ஙனமாகிய வழியும் வகைவேற்றுமையானும் பிரமாணப் பிரமாதாதி விவத்தையைப் பொருந்துறுமாறு செய்வித்தன் முடியாதாம்; எவ்வுருவத்தானே கருத்துருத்தன்மைமுதலிய வற்றுனே நம்மனோராதியர்க்குப் பிரமையின்மாட்டுச் சேர்க் கையோ அவ்வுருவத்தானே அவ்வபாவத்திற்குப் பிரமை யைப் பயவாமையின்கட் பிரயோஜநத்தன்மையுண்மையின் என்பதாம்.

### 337. வேற்றிலக்கண நீக்கம்.

ஈற்றுவியாபாரமுடைமை காணத்தன்மையென்பதுங் கூடாதாம், வியாபாரமின்மையின் குறியாராய்ச்சிக்கு அக ரணத்தன்மையடைவுறுதலின், சவிகற்பகவியாபாரமுடைய நிருவிகற்பகத்திற்கு ஆண்டுப் பிரமாணமாதலாமென்னற்க; கேவலம் விகற்பிக்கப்பாலதாய குறிவிடயத்தில் அஃதொவ் வாமையின். சமக்காரமுதலியவவை பற்றினே அநுமிதிக்குஞ ப்யந்தமையுண்மையின் கண்ணளவையின்மையின், காரியத்திற் குக் காரணமாகாததும் காரகவியாபாரமாகாதாமெனக. அன்றி

யும் அறியப்பெறுதகாரணத்தன்மை வந்தமைதலின். குறியே ஆராய்ச்சி வியாபாரமுடைமையானே கரணமெனல் கதுவு மென்னற்க; அனுமிக்கப்பட்ட அனுமான முதலியவற்றின் மாட்டாராய்ச்சி குறியாற்பிறவாமையானே அதன்வியாபார முடைமைகூடாமையின். ஆத்தனறைதன்முதலியவற்றானே ஆண்டமர்ந்திருந்தது புகையெனப் புலப்படுதலான். அப் போழ்து ஆண்டுத்தீயுமிருந்ததெனஎவ்வனுமானமாம் அவ ணின்மையின் புகையினுக்கு ஆராய்ச்சிவியபார முடைமையா னேகரணத்தன்மை சேய்ம்மையின் நூக்கப்படுமென்றுணர்க.

## 338. ஈற்றுத்தன்மை யேவிய தூடணம்.

மேலும், யாதாவதொன்றனைக்குறித்து ஈற்றுவியாபாரத் தன்மைக்கு எல்லாக்காரகப்பொதுமை யுண்மையின், எல்லாக் காரகங்களைக்குறித்து ஈற்றுவியாபாரத்தன்மைக்குத் தற்குறி த்து ஈற்றுத்தன்மை பொருந்தாமையான், யாண்டும் அசித்தி யாதலின். கருத்தாவைக்குறித்தெனின்? ஆகாதாம், கருத்தாத் தருமி மாத்திரங்குறித்து விளம்பும் வேட்கையேல், கருத்தா வின்கண் வழக்காங்கே நிலைபெறுமாகலின். வியாபாரமுடைய கருத்தாவ வாவைக்கருதினே கருத்தாவின்மாட் டவ்வழக் கேயாம். ஒருவியாபாரமுடைய கருத்தாவைக்குறித்து அய லயற்கருத்துரு வியாபாரத்திற்கு ஈற்றிலாந்தன்மையுண்மை யின். எல்லாவியாபாரமுடைய கருத்துருஅவாப்பக்கத்தினே காரணம் கழறுவான்காதலிருப்பினும் ஆகாதாம். பலசித்தி பரியந்தம் கருத்துருவியாபாரம் இளைப்பாறுமையின், வியா பாரம் விடுபடின் அதனேதிலக்கண விரிதல் வருதலின்.

## 339. வினாவிடைகள்.

எவ்வியாபாரத்தின்பின் வேறுகாரகம் வியாபாரியாதோ அஃதீற்று வியாபாரமெனவிட்டமாமெனின்? அன்றும், கட வுளைக்கோடும்பக்கத்திற் கருத்துருவியாபார மிளைப்பாறுமை யின், அதன்பின்னர்த் தாய்த்துணியப் பெறுமையின் அவர் க்குக் கரணத்தன்மையடைவுறுதலின்; கடவுளைக்கருதாப்பக்

கத்தின்கண்ணே பொறியொற்றுமை முதலியவற்றானே வியா பாரத்தோடுற்றகருமத்தின்கண்ணும் வழக்காதலின். பிளக்கப் படுவன முதலியவற்றிற்கோ கரணவொற்றுமைமுதலிய வியா பாரங்கடையதேயாம், ஆகவே யாங்ஙனம் அவற்றின் நீக்க மாதல்? அத்தத்தான் அவ்யாப்தி வருதலினானுமென்க.

## 340. கரணமாத்திரத்தின் வேற்றிலக்கண நீக்கம்.

பிற்பலங்கரண மென்பதும் பிழையாம், சிறப்பிலாதபிற் படுதல்சருவகாரண சாதாரணமாதலின், வியாபாரியை யவா வியதடையற்ற பிற்படுதல் மகமுதலியவற்றில் அவ்வியாப்தி யாதலின், வியாபாரம் அவாவியதோ அத்தாதியில் அவ்வியா த்திப்படுதலின், வியாபாரபரம்பரை யவாவியதற்கு எல்லாக் காரகத்தினும் வியாபித்தலின் என்பதாம்.

## 341. வியாபார தூடணம்.

மேலும், அதன் காரியங்கிரியையின் காரணமாக அது வியாபாரமென்ப திட்டமாயின் அக்காற் பொறியின்காரியமா கிய குறியாராய்ச்சி அனுமிதிக்கிரியையேதுவாமெனப் பொறி யைக்கரணமாகவுற்றதனுமிதியெனப் பொருந்தும். இனி (முக் கியக்கிரியை) யேதுவின் காரியமாய்க்கிரியையேதுவாமது வியா பாரமாம்; ஆகவே, அனுமிதியின் ஏதுவாகாத பொறிக்குக் கரணத்தன்மை யாங்ஙனங் கூடுமெனின்? என்னற்க, யாதனு மிதியின்கண்ணே பொறிக்கிலதாமோ அவ்வேதுத்தன்மை யாதுகாண்! நியதமாய்முன்னிற் பதாமெனின்? ஆண்டு முன்னிற்றற்றகைமையுளதாம், நியதத்தன்மையும்காரணத்தன் மையிற் சாதகமென விழையின். எவ்வுருவத்தானேனும், பொறிமுதலியவற்றிற்கு நியதத்தன்மை பொருந்துறுமாறு நின்னானே முயலத்தக்கதாம்; வேறாயினோ குறிபொறிமுத லியவை பரஸ்பரம்பிறழ்தலின் கரணமற்றதே பிரமையா கும்; உளவொற்றுமை முதலியவையே அவ்வாறாமேல் அப் பிரமைப் பொதுவாம். மேலும், பொறிமுதலனவற்றிற்கு

அகரணத்தன்மையினடைவாம், எப்பொதுவி லெப்பொதுச் சாதகமாமோ அச்சிறப்பினுக்கே அச்சிறப்பிற் சாதகத்தன்மை நியமங்காண்டலின். ஆகையால் எவ்வொருவடிவத்தானே பொறிக்குப் பிரமையில் நியதத்தகைமை நிகழ்த்தப்படுமோ அவ்வடிவத்தானே வழக்கின் ஒழுக்காம். இனிப்பிரமாத்தன் மையி லதுசாதகமாம் அனுமிதித்தன்மை முதலியவற்றிலோ ஆகாதாம் எனின்? ஆகாதாம், வேறொன்றாற் பெறப்படாத உடன்பாடெதிர்மறையுண்மை யொருபடித்தாதலின் உரைத்த பொருளினும் மிகுபொருளொன்றுங் காணாமையின் பொதுச் சாதகத்தகைமையானே விசேடத்தை விடுதற்கிடங்கிடையா மையின் என்க. அன்றாயினோ வியத்திக்கு அகாரணமுடைமை யடைவுறுதலின்.

### 342. பிரமாண விலக்கண மிதுவெனும் வினா.

இனிப்பிறவிடத் தொருவாறுகரண இலக்கணமுளதா குக, பிரமைக்குக்கூறவிழைந்த ஜாதிவிசேடத்தால் விலக்கப் பாடுடையது பிரமாணம், பேதமதிவிளக்கம்பேணுவனவாமிக் காட்சிமுதலிய வுணர்வுகளுன்கேயன்றோ; பிரமாதாவாதல் பிரமேயமாதல் அப்பேதவேதுவாகாதாம், அளவைகளோதக்க தக்கபடி நான்கன் கண்ணும் சிறப்புற்றனவேயாம் எனப் பேதமதிவிளக்கும் காரணங்களே யாகும்.

### 343. வினாவின் விடை.

இங்ஙனமியம்பற்க, விளம்பவிழைந்த பதமாண்டிலக் கணத்தில் வஞ்சகன்வரைவேபோலும் புருட இச்சைகட்கு நியதமிலாவிடயத்தன்மை யுண்மையின் பொருளாலுண்டாந் தன்மைக்கும் பிரத்தியக்குப்பொருட்டுப் பொறியாலுண்டாந் தன்மைபோன்றே யிருத்தலின்பொருட்டும் கரணத்தன்மை வழக்காதலின் ஆத்தன்கூற்றிலோ, கருத்தாவிற்கும் சாத்தப் பிரமைச்சாதிச் சிறப்புடைமையானே மிகுவழக்காதலின், ஓமெனும் விடைஎ யுரையாடினோ முன்னரே மொழிந்தா மென்க.

### 344. அயலிலக்கண தூடணத்தொடர்புணர்த்தல்.

அறைய அவாவிய சாதிபேத வுபாயத்தகைமையானே பிரமிதிய சமவாயிகாரணச் சிறப்புடையது பிரமாணமென்பதும் இதனானே மறுக்கப்பட்டதாகும்; என்பதாகப் பிரமாகரண நிருக்தித் தூஷணங்களாம்.

### 345. பிரமாணவிசேட இலக்கணகண்டனத்தொடர்புணர்த்தல்.

இன்னணஞ்சிறப்பானும் அளவையிலக்கணங்கள் மறுக்கத்தக்கனவேயாம். அங்ஙனமன்றே:—பொறிப்பொருளொற்றுமையானுண்டாயஞானம் பிறழ்தலிலாததுபிரத்தியக்கமென்பர்; யாதின்பொருட்டிஃதியம்பலாயதுகொல்! சஜாதீயவிஜாதீயங்களினின்றும் விலகிய வதன்புலப்பாட்டின்பொருட்டா? அல்லது சாக்ஷாத்காரித்தன்மைப் பிரதீதியின்பொருட்டக்குறியைபுணர்த்துவதிஃதாமெனவா? அல்லது விவகாரப்பொருட்டா? அல்லது காட்சியாதி சத்தப்பிரவிருத்தி நிமித்த நிண்ணயப்பொருட்டா? அல்லது வேறு யாதேனும் ஒன்றன் பொருட்டேயா?

### 346. விகற்ப விலக்கம்.

அவற்றுள் ஆதியதாகாதாம், அங்ஙனமன்றே:—சஜாதீயமெனப்பிரத்தியக்கத் தன்மையானே சமஜாதியுடையதை விரும்பியதா? அல்லது வேற்றுருவத்தானேயா? ஆதியதன்றும், ஆகலின் விலக்குவது வரை சஜாதீயமாதலின் விலக்கப்படாத்தன்மையுடைமையான் விலக்கப்பாடுடைமைகூடாமையின் விலக்குந்தகைமையையங்கீகரித்தலினானே அவ்வியாத்தி வருதலின் மற்றதும்பற்றாதாம், விஜாதீயபதங்கோடல் வாளாபோதலின், உளதேயாமன்றே, பிரமேயத்தன்மைமுதலியவற்றானே சர்வசஜாதீயத்தன்மை. இனிப்பிரமாணத்தன்மை முதலியவற்றானே சிறப்பாகச் சஜாதீயத்தகைமை விளம்ப விழைந்து இஃதியம்பப்படுமாயின், இலக்கியத்திற்கும் பிரமாணத்தன்மையானே சஜாதீயத்தகைமை யுண்மையான் விலக்

கப்படுங்கோடியிற் புகுத்தப்படுதலிற் சங்கிரகிக்கப்படுவதொன் றிலாவழக்குண்டாம். இலக்கியத்திற்கு யாது பிரமாணத்தன் மைமுதலியவற்றானே சஜாதீயமாமோ அது விலக்கப்படுவ தாம். இலக்கியத்தினதிலக்கியம் சஜாதீயமென்பதாக வாகா தாம்; ஆறும்வேற்றுமைப் பொருட்கு வேற்றுமை விளக்க விருப்புண்மையின் எனின்? இங்ஙனமாயின் இலக்கியத்தைக் குறித்து வேற்றுமையான் விலக்கம் என்பதாகவேயியம்பலாம் பிரமாணத்தன்மை முதலியவற்றானே சஜாதீயத்தகைமை கொண்டு பிரகிருதத்திலுபயோகமாகாததை வருணித்தலானே வரைந்ததுசாலும் இலக்கியத்தினின்றும் அயற்றகைமைமற்ற வற்றிற்குணரப்படுமாயின் அக்கான்மற்றவற்றினின்று மயற் றன்மையும் இலக்கியத்திற்குப் பொருளானறியப்பெறும், பெறவே முன்பே இலக்கணப்பயன் சித்தமாம், ஆகவே இலக் கணக்கதைக்கு வீணீந்தன்மையே பூணுமெண்க.

## 347. இலக்கணம் அறியப்பெறினும் பெறுவிடினும் விலக்குவதாதல் கூடாமை.

உளதாகுக தான்விளம்பும் வேட்கையின் விசித்திரவயத் தான் எங்ஙனமேனும் இத்தகையகூற்று. எனினும், அறியப் படாததேயாய இவ்விலக்கணத்தானே ஆண்டு விலக்கப்படுந் தோற்றம் அமைதலாகாதாம், மிகுவழக்காதலின். அறியப் பட்டதானுமாகாதாம் துயருற்றுந்துணிதல் கூடாமையின். அங்ஙனமன்றே:— ஆண்டுப் பொறிப்பொருளொற்றுமை யுதயங்காட்சிப்படாதாம் காட்சிப்பட்ட விசேடணத்தன்மை யுண்மையின். காரியக்குறியானுதல் அதன்பொருந்தாமையா னுதல் அதனுணர்வாமென்பது மடாதாம். அவற்றாற் பொது வாகக் காரணமாத்திர ஆக்ஷேபத்தானே காரணத்திருக்குந் தொடர்ந்தரூபந்துணியப்பெறுதவழி ஏகரூபவிலக்கணந் துணி யப்பெறுமையின். காரியத்தினது ஒருஜாதியுடைமையினானே ஒருஜாதியுடைய காரணசித்தியாமெனின்? ஆயின் காரியத் திருக்கும் ஒருஜாதியுடைமையை முன்னொருதலையா யுணர

வேண்ட லுடன்பட்டவழி, அதனானே சஜாதீய விஜாதீய விலக்கவுணர்வுளதாக, பாரம்பரியத் துட்டசிருட்டியாயிதனை வியற்றியதுசாலும்.

### 348. சிறுஉபாயத்தாற் சித்தித்தவழி குரு உபாயத்தின் முயற்சிகோதாதல்.

அற்றேல், இத்துணையானும் பிரகிருத இலக்கண கண்டனமாகாதாம், அவ்வியாத்தியாதல் அதிவியாத்தியாதல் உண்டாக்காமையின்; இங்ஙன் வலாதாம், முதலிலாதலானும், இன்றியமையாது அனுட்டிக்கத்தக்கதாதலானும், எளிதாயவுபாயத்தாற் றுணிபொருடுணியப்பெற்றுற்றவழி, ஈற்றினெய்தலானும் இன்றியமையா தனுட்டிக்கத்தக்கதாந் தன்மையின்மையானும் பேருபாயத்திற் பிரவிருத்திக்கும் நினக்கே இத்தோடமுண்டாக்கலாம், விளக்கில் வேறு விளக்கைக்கொழுத்தி இருணீக்குவான் முயலும் புருடனுக்கேபோலும். அவ்வயல் விளக்கிற் காசொன்றுமின்றும், மற்றேூ, அவ்வாறுக்குமவனே கடாவத் தக்கவனுவன். சருவசாதன சாதாரணமாகவித்தோடந்தானும், யாது இவ்வண்ணம் எளிதாய வுபாயத்தின்கண்ணே சம்பவிக்குந்தன்மையென்பதாமோ, எல்லாவளவைகட்கும் சொரூபாசித்திபோலும். ஆகலின் அதிவியாத்தியாதி தோடங்களுண்டாகவே வேண்டுவதின்றும் பொதுத்தோடத்தானே இவ் விலக்கணந் துட்டமாமென்பதாம்.

### 349. இரண்டாவது விகற்ப நீக்கம்.

இதனானே யிரண்டாவதும் நீக்கப்பட்டதாகும், சாக்ஷாத்காரித்தன்மையைபுணர்ந்து கோடாமல் அதனுணர்வுகூடாமையின், அதனுணர்வானே இதன துபுலப்பாடாமெனபுழி ஒன்றையொன்று பற்றும் வழுக்காம். உளதாகுக தான் மற்றொன்றெதுவேனும் பொறியாற் பயக்கப்படும்பான்மையிற் குறியாயினும், அஃதே சாக்ஷாத்காரித்தன்மையிலா துண்டாகாமையின் பிரத்தியக்ஷ லக்ஷணமுபன்யசிக்குக, முன்னிலையுணர்வு

டைமையின். அஃதின்றியமையாது வியாபகமெனக் கூற வேண்டுவதின்றாம் குறிக்கு அதன் வியாப்பியத்தன்மையானே கூடலின் எனின்? ஆகாதாம், யாண்டுக்குறி யவ்வியாபகத் தன்மையானேயிலதாமோ, ஆண்டுப்பொறியாற் பயக்கப்படும் பான்மைக்கு அளவையின்மையின் உணர்தற்குமுடியாமையின் யாங்ஙனம் அதனாற் சாக்ஷாத்காரித் தன்மை யுணர்வாதல்? சிலபாற் பொறியாற்பயக்கப்படுந்தகைமை பிரத்தியக்க ஜாதீய மாயே அளவையின்மையின் துணிய முடியாமையானே சாக்ஷாத்காரித்தன்மையின் வியாபகத்தன்மை வியாபகத்தன்மை யானே யறியப்படாதபோதினும் இலக்கணமாங்கால் அவ்வியாபகமாய அயற்குறியால் ஆக்கிய அபராதமியாதுகொலோ! இனி யாண்டது பொறியாற்பயக்கப்படுந்தன்மையிற் குறியாகாதோ ஆண்டு அயற்குறியால் அஃதுணரத்தக்கதாம். ஆயினும், அதுவே சாக்ஷாத் காரித்தன்மையின்கட் குறியாயிருக்குக, பொறியாற்பயக்கப்படும்பான்மை யனுமான வாயிலாக அதனனுமான கற்பனையானேயாக்கியது சாலும். இனி யவ்வாறு இருகுறியாமவை தனித்தனி அவ்வியாபகத்தன்மை யானே இலக்கணமாகாதாம் பொறியாற்பயக்கப்படும்பான்மை யோ அவ்வாறதாந் தன்மையார்தலின் இலக்கணமாமெனின்? ஆகாதாம், இலக்கணப்பிரயோஜனமாகிய சாக்ஷாத்காரித்தன்மையனுமானத்திற்கு இரண்டானுமே சித்திகூடலின் வியாபகமாகியவதனானே விளைத்தது சாலும்.

## 350. மூன்றாவது கற்ப நீக்கம்.

மூன்றாவது முற்றாதாம், அதுவே இவ்வடிவினதாம், யாது பொறிப்பொருளொற்றுமையான் உளதாயதோ அது காட்சியென்பதாக விவகரிக்கத்தக்கதாம். இப்பொருளும் இயைவதாகாதாம் இலக்கணத்தையறிய வேலாமையின். சாக்ஷாத்காரித்தன்மையானே அஃதுணரய்பெறுமாயின் சாக்ஷாத் காரித்தன்மையே விவகார நியமகாரணமாகவாகுக, தடையற்ற வுணர்வுடைமையின் என வுணர்த்தப்பெற்றதாகும்.

### 351. நான்காவது கற்பநீக்கம்.

இதனனே நான்காவதுமாகாதாம் கற்பனைக்கவுரவதோடமும் மிகாநிற்கு மெனக.

### 352. ஐந்தாவது கற்ப நீக்கம்.

ஐந்தாவதுமகாதாம் அத்தகையதைக் காண்பிப்பான் கூட்டாமையின் இதனனே யிலங்காநின்ற வடிவப்பொறியொற்றுமையானே யுளதாயது காட்சியென்பதும் நீக்கப்பட்டதாம். மேலும், பிரமாணவிசேட விலக்கணமாயவிது பிரமாணசாமானிய இலக்கணங்கவர்ந்தவற்றுட்சிலவற்றைக் கோடுவதாகவும், சிலவற்றை வீடுவதாகவும் கூறவேண்டும். பிரமாணவிலக்கணத்தானே பிறழ்வதின் நீக்கம் காட்டப்படும். அன்னணமாகவே கேட்டபடியாய விஃதலக்ஷணமாம், இலங்காநின்ற சுத்தைமுதலிய வாகாரத்தின் வியபிசாரியும் பொறியொற்றுமையான் உண்டாம். இனி விசேஷச்கருத்தானே இவ்விலக்கணை யியம்பத்தக்கதாம், ஆயினும் அசங்கதமாம்; அங்ஙனமன்றே:—சிறிதுமாத்திர மிலங்காநின்ற பொறியொற்றுமையான் உளதாந்தன்மையுரைக்கும் வேட்கையா? அல்லதென் யாவுமிலங்கும் பொறியொற்றுமையான் உளதாந்தன்மையா.? ஆதியதேல் வியபிசாரிவிலக்கப்படாதாம், நிர்விகற்பமுங் கவரப்பெறுதாம்.

### 353. இரண்டாவது விகற்ப நீக்கம்.

இரண்டாவதும் எலாதாம். விகற்பஞ்சகியாமையின்; அங்ஙனமன்றே:—விளங்குந்தன்மை விசிஷ்டத்தின் பொறியொற்றுமையா? விளங்குந்தன்மை யுபலக்ஷிதத்தினதா? ஆதியதாகாதாம், முன்னர் விளங்குந்தன்மையின்மையின் காரணத்திற்கு முன்னிருப்புத்தன்மை யுண்மையின். இரண்டாவதன் கண்ணும் லட்டிற்கு (நிகழ்காலங்காட்டும்லகாரத்திற்கு)விளம்பவேட்கைப்படாப் பொருண்மையா? விளம்பவேட்கைப்படும் பொருண்மையா? ஆதியதாகாதாம், அங்ஙனமன்றே:—விள

ங்காநின்ற எல்லாவடிவ வொற்றுமையா னுளதாயதாமிது கடமென் னுமுணர்வு, அக்காலான்மாவின்கட் காட்சியின்றாம், ஆன்மாவிற்கதனது விடயத்தன்மையின்மையின், பிரமாண மாதற்கும் விடயநியமத்தன்மை யுண்மையின். யாண்டுப்பிரா மாணியம் ஆண்டே விடயத்தில் அவ்விசேஷப் பிரத்தியக்ஷத் தன்மையுறையவேண்டி யிருத்தலின்; மாறாயினோ ஆடையி னிருப்பிற் குடமிஃதென் னுங்காட்சியைப் பிரமாணமாக்குபவ னுக்கு விடையாதுகொல்?

## 354. கருத்தறியாமையை மூலமாக்கொண்ட விஞவிலக்கம்.

அற்றேல், இவ்விடை குடவுணர்வு ஆடையிற்காட்சிப்ப டாதாம், அப்பொறி யொற்றுமையானே யுண்டாயதெனவாகா தாம். அஃதென் ஆன்மப்பொறி யொற்றுமையா லுளதாய குடவுணர்வு ஆன்மாவின் கண்ணே காட்சியேயா? யாங்ஙன மிங்ஙனமாகும்? ஆன்மப்பொறியொற்றுமையாற் குடவுணர் வுளதாயினும் ஆன்மாவிலங்காததாகலின் எனின்? அற்றன் றாம், இலங்குகின்ற தென்பதன்கண் இலட்டிற்கு விளம்பும் வேட்கைப் பொருண்மையிலாப் பக்கம்பற்றி இஃதுன்னுவி யம்பப்படுமென வெண்ணத்தக்கதாம். உளதேயாமன்றோ ஆன்மாவிற் கிலங்குவதாந்தகைமை யோரொருகா லெதனு லேனும், மாறாயினோ, அப்பிரமேயத்தன்மை வழக்காதலின்.

## 355. வேறுவிசேஷண விஞ விலக்கம்

இயம்பிய இலக்கணத்தையுடையது தன்விடயத்திற்பிரத் தியக்கம், பிறவிடத்துமென்பது பிழையாமாலோ வெனின்? அற்றன்றாம், தன்னென் னுஞ் சத்தத்தானே ஞானமாத்திரத் தைக்கூறும் வேட்கையேல் அக்கால் அத்தோடம் ஆங்கேநிலே பெறும். இனிஞானவியக்தியவாவப்பெறும், அக்கால் இலக்கிய வடிவம் அசாதாரணமாயிருத்தலின் அதனநீக்கத்தான் இலக் கணத்திற்குப் பிறவிடத்திற் செலுந்தன்மை யேய்தலின் அதி

வியாப்தியாம். இலக்கணத்திற்குப் பற்றுக்கோடாகியவேறு வியக்திக்கு ஒருவியத்தியோதிய இலக்கிய வடிவமாய அசாதா ரணரூபத்தன்மையின்மையின் வேறுவியக்தியும் இலக்கியமே இலக்கியமல்லாததன்கண்ணன்றே இலக்கணத்தின் செல்கை யால் அதிவியாப்தியாதல் எனின் ? அற்றன்று, யாது ஓரிடத் தில் அசாதாரணவடிவமா யிலக்கியத் தன்மையானே யுன்னுன் நிரூபிக்கப்படுகின்றதோ, அது அன்னியத்தினதுவடிவமன் றும், ஆகலின் யாங்ஙனம் அதுவும் இலக்கியம்என வும்மைச்சத் தத்தான் அநேகத்தைப் பொதுவாக்கிக்கூட்டுவிப்பான்கூடும்? எதுதான் சாதாரணரூபமோ அதுவும், வேறுவியக்தியை யிலக்குவதாகிய தன்விடயபதவிசேடணம்தரும் உன்னுனே அசாதாரணமாக்கப்பட்டதாம். தன்னென்னுஞ்சத்தம் ஞான மாத்திரப் பொருளதேல் தோடங்கூறப்புட்டிருத்தலின், தன் றன்மையின் றொடர்ந்தவுருவத்தையும் கூறுவான் கூடாமை யின் ; மாறாயினே, அன்னிய வியக்திவிடயத்திற்குப் பிற விடத்தில் அவ்வாறுந்தன்மையடைவுறுதலின்.

356. இலட்டிற்கு விளம்பவிரும்பிய பொருண்மைப் பக்க நீக்கம்.

இரண்டாவது பக்கமும் ஏலாதாம். விகற்பம் பொறுக்க முடியாமையின், ஒற்றுமையைக்குறித்து நிகழ்காலத்தன்மை யா ? அல்லதென் ஏதேனும் ஒன்றைக்குறித்தோ ? முதல தேல், விசேடணத்தன்மைப் பக்கத்தினும் விசேடமின்று மெனவிளம்பியதோடஅடைவாம். இரண்டாவதேலோ இலட் டிற்கு விளம்பும்வேட்கையிலாப் பொருண்மையேயாம், விலக் கப்பட்டனவாய இலங்கிய இலங்குவனவற்றிற்கும் அஞ்ஞான் றஞ்ஞான்று இலங்குந்தன்மை யங்கீகரித்தலின்.

357. பரன்விஞ்ஞவின் கண்டனம்.

பொறியொற்றுமையின்பின்னர் விளங்குந் தன்மை யவாவப்பெறும், ஆகலின் விளம்பும் வேட்கைப்பொருள்

எனின்? அற்றன்றும், ஆன்மாவிற்கும் பொறியொற்றுமை யின் பின்னரிலங்குந் தன்மையுளதாம். அது மனத்தாற் கவ ரப்பெறும்போது பொறியொற்றுமையின் பின்னரிலையென்ப தாகவில்லையன்றோ! பொறியொற்றுமைமாத்திரம் புகலும் வேட்கையின்றும், மற்றோ, எதன்பின்னரிலங்குந் தன்மையுள தாமோவெனின்? ஆகாதாம், அவ்வியாத்தி வழக்குண்டாத லின்,ஒரு விளக்கமாத்திரம் இலக்கணத்திற்கு நிலைபெறுதலின்.

## 358. விசேஷணமிடுகை வினாவின் விலக்கம்.

இனி எவ்விலக்கம் எவ்விடயத்தினது பொறியொற் றுமையானுளதாமோ அஃதாண்டுப் பிரத்தியக்ஷப்பிரமாணம் என நிகழ்த்திற் கோதின்றும். இங்ஙனியையாதாம், இதுகுட மாமென்னும் எவ்விளக்கம், எவ்விடயவான்மாவின் பொறி யோடொற்றுமையின் உளதாமோ; அவ்விளக்கம், அவ்வான் மாவின் கண்ணே பிரமாணமாம். ஆன்மாவதற்கு விடயமாகா தாம், ஆகலின் யாங்ஙனம் இங்ஙனமாம் எனின்? உன்னாலத னது விடயத்தின்என இயம்பப்படவில்லை யன்றோ; மற்றோ, பொதுவாக விடயத்தின் என்பதாம், அதனாலிஃதியம்பப் பட்டது. அதனதாந்தன்மை விசேடணத்தை நீ கொண்டு அஃதெனுஞ் சத்தத்தால் ஞானஜாதியமாத்திர பராமரிச மேல் அத்தோடம் ஆங்கே நிலைபெறும். ஞானஜாதியமாத்திர வியக்தி விசேட பராமரிசமாயினோ, அவ்வியாபகத்தன்மை யாம், ஞானந்தோறும் அஃதெனுஞ் சத்தப்பொருள்வேறாத லின், எதுவாந்தன்மையேனும் அதுவாந் தன்மையேனும் சிறிது தொடர்ந்த வடிவமாயிலையன்றோ!

## 359. பிரபாகர அனுசாரியான் இட்ட அடைவின் வினா விலக்கம்.

இதனானே ஆன்மவிடயத்தன்மை யனுயோகம்போலத் திரிபுடிப் பிரத்தியக்கவாதியின்பால் ஆடையுணர்விற்குக் குட

முதலியவற்றின்கண்ணே பிரத்தியக்க முளதாதலிற் பிரமாண மாதலனுயோகம் காணத்தக்கதாம், விழியொற்றுமையின் மையின்; மாறாயினோ, அவற்கிட்ட அடைவாதலின்; அதன் பொருட்டு, எப்பொறியொற்றுமையானே யுளதாயதென விசேடணமிடில் எதுவதுவெனுஞ்சத்தப்பொருட்குச் சிறப் பாந்தன்மையுண்மையின் அவ்வியாத்தி யடைவுண்டாதலின் எதுவதுவெனுஞ் சத்தப்பொருள்கள் தொடர்ந்தனவாமேன் மீண்டும் பிறவிடத்திலிது குடமென்னு முணர்விற்குக் காட்சித் தன்மையானே பிரமாணத்தன்மை பொருந்தாநிற்கும்.

### 360. அதிவியாத்திவிலக்க வினை விலக்கம்.

இனியயல் வேறுமென்றடையிடுவையேல் அஞ்ஞான்றன் னியவிடயத்திற்குப் பிரத்தியக்கத்தன்மையாகாதாம். அயற் சத்தத்தாற்றொடர்ந்த பொருளறையின் விலக்கத்தன்மை யின்மையின், குடவுணர்விற்கு மாடையிற் பிரத்தியக்கமாகப் பிரமாணமாதல் பொருந்தாநிற்கும்.

### 361. வேறிலக்கணத்தின்கண்ணும் தோடம்புகுத்தல்.

இதனானே, பொறிப்பொருளொற்றுமையான் உண்டா முணர்வு பிறழ்வற்ற பிரத்தியக்க மென்பதன்மாட்டும் இத் தோடமியம்பப்பட்டதெனக் காணத்தக்கதாம், அத்தகைய வுணர்விற்கும் வேறு விடயத்திற் பிரத்தியக்கத்தன்மையானே பிரமாணமாதல் வழக்குண்டாதலின். எப்பொருளினொற்று மையான் எவ்வுணர்வுண்டாகின்றதோ அஃதாண்டுப்பிரத்தியக்க மாகப்பிரமாணம் எனவறையினோ எது வெனுஞ்சத்த அது வெனுஞ்சத்தப் பொதுச்சிறப்புப் பொருளுரை விகற்பித் துரைத்த தோடவழக்காம்.

### 362. அவ்வியபிசாரிபதம் வீணாதல்.

அவ்யபிசாரிபதமும் வீணாம், இப்பியின்மாட்டு வெள்ளி யுணர்வு வெண்பொன் பொறியொற்றுமையான் உண்டாய

தன்றும் ; சமக்கார இலக்கணைப்பிரத்தியாசத்தி வெள்ளித் தகைமையின்கண்ணும் உளதாமெனின் ? ஆகாதாம். முன்னனுபவித்தவெள்ளித் தாதான்மியத்தின் சமக்காரமின்மையினனே கூறிய தோடமாங்கே நிலைபெறுதலின் குருமதத்தை யனுசரித்து முற்றினும் விசேடணம் வீணாதலின், அதனன் வியபிசாரமங்கீகரியாமையின். வெள்ளித்தகைமை வைசிட்டியத்தில் முன்னிருப்பதற்கு அஃதிலாமையின், அவ்வங்கிசத்தின்கண்ணேதான் அப்பிரமாணியமாம், வெள்ளித்தன்மைமாத்திரத்திலின்றும், அதற்குப் பிறவிடத்திலிருப்புண்மையின்.

### 363. பிரத்தியக்கவயலிலக்கண நீக்கம்.

இனிச்சாக்ஷாத்காரித்தன்மை பிரத்தியக்க இலக்கணமெனப்படுமேலாயின், சாக்ஷாத்காரிமயலினும் வழக்காம்; பிறழ்ச்சியிலதாந்தன்மையானே விசேடிக்கப்பட்டதவ்விலக்கணமென்றேனும், வேற்றுமைகவராமையினும் வேறுயவிப்பிரமாபாவமென்றேனுமாமெனின் ? ஆகாதாம், விகற்பஞ்சகிக்கொணுமையின், இவ்விலக்கணம் அறியப்பெற்றதாய்ப் பலவேதுவா ? அறியப்பெறுததாயா ? அவற்றுட்கடையதாகாதாம், அதனைக்கூறல் வீணும் வழக்காதலின். கூறுவதற்கு ஞானஉதய உபயோகித்தன்மையுண்மையின். அறியப்படாதவதற்கே பலசாதகத்தன்மையை யங்கீகரித்தலின். முதலதுமூரணும், பிறிதொன்றினின்றும் அஃதறியப்பெறுகின்றதா ? நினதிலக்கண வாக்கியத்தினின்றுமா ? பிறிதொன்றினின்று மேல் இவ்விலக்கணவியம்பும் ஆபாசத்தாலாயது சாலும். கூறுவதற்கு ஞானேதயத்தினுமயலாய பயனின்மையின், அதற்கும் மற்றொன்றினலேயே துணிவுபேறுண்மையின். கடையதேல், நின்கூற்று ஆத்தனுபதேசமாகச் சாக்ஷாத்காரித்தன்மையை யுணர்த்துகின்றதா ? அல்லது இலிங்காதிபாவத்தாலு ? கடையதுகதுவாதாம், நினது வாக்கியத்திற்குச்

சாக்ஷாத்காரித்தன்மை யன்னுபாவாதிகளைக் காண்பிப்பான் முடியாமையின். முதலதுமுட்டுறும், வாதியின்பொருட்டு நீ ஆத்தனுதலமையாமையின். அமையுமேலாயினே பதிஞ்ஞை மாத்திரத்தானே துணிபொருடுணியப்பெறுதலின் ஹேதுமுத லியவற்றையியம்புதல் அனர்த்தமுறுவதாக யாண்டுமேயாம்.

364. இலக்கணமியம்புதற்கு அயற்பயஞ்ந்தகைமை வினு.

யாவன் சாக்ஷத்காரித்தன்மையை யன்னியத்தாலறிவ னே பிரத்தியக்கவிவகாரகாரணமாக வறியானே அவன்பொரு ட்டுப் பிரத்தியக்கவிவகாரகாரணத்தன்மை இதற்கிலக்கண வாதியால் அறிவிக்கப்படும். அதுவும் அனுமான பாவத் தானே யறிவிக்கப்படும், ஆத்தவுபதேசத்தானன்றும். இத னுனே யிலக்கணம் கேவலம் வியதிரேகியனுமானமெனக் கிளத்தாநிற்பேம். அஃதெங்ஙனம்:—சிரவணுதிப் பிரமிதிக ளேனும் சாக்ஷாத்காரிப் பிரமிதிகளேனும், பிரத்தியக்ஷத்தகை மையானே விவகரிக்கத்தக்கன, சாக்ஷாத்காரிப் பிரமிதித்தகை மையுண்மையின், யாது பிரத்தியக்கமாக விவகரிக்கப்பட மாட்டாதோ அது சாக்ஷாத்காரியாக மாட்டாது, அனுமிதி யைப்போலும், அங்ஙனமே யிவையுமாம், ஆதலினங்ஙனம். இவ்வனுமானப் பிரதிபாதகவாக்கியமும் வாதியான் ஆத்த வாக்கியமாகப் பிரயோகிக்கப்படமாட்டாதாம்; மற்றே, வியாத்திமுதலியவற்றைப் பெற்றானுக்கே நினைப்பூட்டுவதாம், முன்னர்ப்பெறானுக்கேனும் அறியுமவாவையாக்கும் வாயி லாக இப்போழ்தே வாதியின்பால் அளவையையுண்டாக்கு வதாம்என வியம்பியதோட மிடம்பெறாதாம்.

365. வினு விலக்கம்.

பிரத்தியக்கமாக விவகரிக்கத்தக்கனவன்றும், என .விவ காரத்திற்கு விடயவேற்றுமை விசேடமா? அல்லதென் சத்த வேற்றுமைவிசேடமா?

## 366. விகற்பவாயிலாய் விலக்கம்.

முதலதில், இவன் விடயவிசிஷ்ட விவகாரத்தை யறியா திருப்பனேற் சாக்ஷாத்கரிப்பதன்கண் அவனுக்குத் தானி யற்றத்தக்கதை இலக்கணவாக்கியத்தானும் யாங்ஙனம் அறித லேலும்? அனலையறியான் அனுமானத்தானும் அனலொற் றுமை யுணர்த்துவிப்பானொனன்றோ இனி யறிந்திருப்ப னேல் அக்கால் அறிந்ததையறிவித்தல் வீணாதலின் இலக்கண ரூப மனுமானம் பயனற்றதாம். இனிப் பிரத்தியக்கவிவகா ரத்திற்கு ஒருசிறிது விடயமுளதாமெனப் பொதுவாக வுணர் கின்றனன், சிறப்பாகவோ வுணர்கின்றானில்லை, அவன் பொருட் டிஃதியம்பப்படும்; படாதாம், பொதுவாக நிமித்த முடைமையை விவகாரமாத்திரத்திற்குணர்கின்றனனோ? அல்ல தென் விவகாரவிசேடத்திற்கா? ஆதியதேல் விவகார விசே டஞ் சிந்திக்கப்பாலதாய் நிற்றலின் பிரகிருதத்திற் குபயோ கப்படாதாம். மற்றதேல், இவ்விவகாரத்தின் விசேடம் எதனாலாக்கப்பட்டதாம்என விகற்பித்தபக்கம் புகுதலல்லாமற் கடக்கமுடியாதாம்.

## 367. வேறிலக்கணத்தும் கூறிய தூடணங் கூட்டல்.

இதனானே எல்லா இலக்கியத்தி னங்கீகாரமுமே எடுத் தெறியத்தக்கதாம். அங்ஙனமன்றோ:—"அம்மவ் வப்பொரு ளங்கீ கரித்திடல், செம்மை யன்றுணர் வானே திரிதலான், அம்ம திக்கும தன்கண் ணளவையேல், விம்மு தற்கொளல் வீடுவர் யாவரே." இனியய லதுவிசேட மென்றொன்று யேற் கினத்தீத், தனிவளர் தகைமை தன்னைத் தவிசினைத் தந்தாயன் றோ, வனை தரு வடிவங்கொண்ட வாதமா மதற்கு நன்றாய், வினை தருமதுதான்வெட்டவெளியதாய் விளங்குமன்றே. அனுமிதித் தன்மையாதியளவையின் றன்மமெல்லாம், வினவியபொருளாற் றோற்றம் விரவுதலிலையதேபோற், பனுமத்தீப்பான்மைதானும்

பகரதேபோலவாகு,மெனுமிதாற்பொருளனார்த்தவியற்கையை
யெய்துமாலோ. அம்மதிச் சிறப்புத் தானும் அம்மதி யில
திங்கென்னே, செம்மையிற் செறியலாமோ செப்புமிப்படியே
யாக, விம்மது தானுமம்ம விளங்கது தானுமென்ன, மும்
மரப் படியிலோட முடிவிதற் கில்லையாமே. எங்கெலாவுலக
நூல்க ளேகமத் தியமாந் தன்னைத், தூங்கமாப் பற்றிமிக்கத்
துலங்கிடு மவ்வவ்வத்து, இங்கெழு மதிகடம்மி னினவிவ கார
ங்கட்குத், தங்குறுங் கதியமென்னே சாற்றுக வாதலானே.
அவ்வவ்வொண் மதங்களானே யறைந்திட முடிந்திடாத,
செவ்விய விவகாரங்கள் சென்றுசேர் சேர்க்கைநோக்கில், எவ்
வுல கழுமேவாழ்த்து மெழிலநிர் வசனவாதத், தவ்வெழிற்
பாதசேவை தன்னைவிட் டிலேயே யாமால்.

## 368. இரண்டாவது கற்பநீக்கம்.

இரண்டாவது மாகாதாம், அங்ஙனமன்றே:—இஃதனு
மானப்பொருளாம், கேள்விமுதலிய வுணர்வுகள், பிரத்தியக்ஷ
சப்தவிடயங்களாம், சாக்ஷாத்காரித்தன்மையுண்மையின் என்
பதாதியாம், அதுவுமாகாதாம், அசாக்ஷாத்காரியாய அனுமா
னாதிகளில் அச்சத்தப்பிரயோகஞ்செய்யாத மாத்திரையானே
சாக்ஷாத்காரியின்கண் அச்சத்தப்பிரயோகமாற்றப் படுமேலா
யின் முயற்கோடு ஜைமஸஉஸ் முதலாய சத்தப்பிரயோகமும்
சாக்ஷாத்காரியின்கட் செய்யத்தக்கதேயாம், விசேடமிலாமை
யின். இனி ஜைமஸஉஸ் முதலிய சத்தங்கள், பொதுவாகப்
பொருளுடையனவாய் வெளிப்படையனவல்லனவாம். யாண்
டும்பிரயோகிக்கப்படாமையின், முயற்கோடு முதலிய சத்தங்
களும் அசத்துவிடயங்களே யாமெனச்சித்தங்களாம், பிரத்தி
யக்காதி சத்தங்களோ சத்துவிடயமுடையனவாகப்பொது
வாய்ச்சித்தங்களாம். பிரத்தியக்கமுளதாமென்பது முதலிய
பிரயோகங்காண்டலின், உளது விசேடமெனின்? ஒவ்வாதாம்,

இச்சிறப்பானும் காட்சிமுதலிய சத்தங்கட்கு விலக்கமின்மை யின், அவைகட்கும் சாக்ஷாத்காரிமாத்திரத்திற் பிரயோக வழக்காம், சாக்ஷாத்காரித்தகைமையுளதாயவழியும் கேள்வி முதலியவற்றிற் காட்சிமுதலிய சத்தங்களின் பிரயோகமில தாம். இங்ஙனம் பிரத்தியக்காதி சத்தங்கட்கின்றுமேயெனச் சிறப்பாமாலோவெனின்? இன்னணமாயின் யாண்டுச்சாக்ஷாத் காரித்தன்மையின்றுமோ ஆண்டுப்பிரத்தியக்க சத்தப்பிரயோக மின்றும், யாண்டுச் சாக்ஷாத்காரித்தன்மையுளதாமோ ஆண்டு யாண்டுமுளதாமென யாவனுணர்கின்றனனோ அவன்பொ ருட்டு இலக்கணக்கூற்றென்பதாகவாம்; அவனும் வேறுவிவ காரம்போல வுடன்பாடெதிர்மறைகளானே வாச்சியவாசகத் தன்மையைத் துணிந்தவனுவன், ஆகவே இலக்கணம் வாளா போம்.

## 369. தோஷ அதிதேசம்.

இதனானே அனுமிதியாதி விலக்கப்பட்டு விவகரிக்க வேண்டும் என்பது கூறியவனுமான சாத்தியமாகக்கூறப்படு வது நீக்கப்பட்டதென்றுணர்தற்பாலதாம். முன்னருணர்ந்த வாச்சியவாசகப்பொருட்டே இலக்கணக்கூற்றுன் நினைப்பூட் டப்பெறுகின்றுன் எனின்? ஏலாதாம், சம்பந்தமுணர்ந்தா னுக்குப் பிரத்தியக்க சத்தத்தானே அதன் நினைவுகூடலின் இலக்கணக்கூற்றிற்கு வாளாபோந்தன்மையன்றோ வுண்டாம். சத்தார்த்த சம்பந்தத்தையுணர்ந்தவன் சத்தத்தானே நினைந்து இலக்கணத்தானே நினைப்பிக்கப்படுவனேலாயின் இலக்கண வாக்கியத்திருக்கும் பதக்குழுப்பொருணினைவின்பொருட்டும் அவ்விலக்கணமறையத்தக்கதாம்,சிறப்பிலாமையின் இங்ஙனம் அவ்விலக்கண வாக்கியத்தின்கண்ணும்என வரம்பின்றியோட லேயாம்.

**370. சாத்திரஞ் சீடன்பொருட்டாவதில் ஏது முதலியவை யியம்பல் வாளாபோதல்.**

அற்றேற் பிரதிவாதியின்பொருட்டு இலக்கணமியம்புதல் பயனுடையதாகாதாம், அவனால் வாதியாத்தபாவமங்கீகரிக்கப் படாமையின் ; மற்றோ, சீடன்பொருட்டுச் சாத்திரத்தில் இலக்கணமியம்பப்படுகின்றது, அவனோ சாஸ்திரத்தின்கருத் தாவை யாத்தனெனவே யெண்ணுநிற்பன். ஆகலின் சீடன் பொருட்டு ஆத்தன்மொழியாகவே ஆசிரியரான் அறையப் பட்ட இலக்கணவாக்கியம் பொருளைப்புகலாநிற்கும், எச் சாக்ஷாத்காரி சத்தார்த்தம் உன்னலறியப்பெற்றதாமோ அது வே பிரத்தியக்க சத்தார்த்தமென்பதாம். இஃதேலாதாம், வாதியின்பொருட்டுச்சாத்திரமன்றேல், சீடன்பொருட்டாமே லாயின் பதிஞ்ஞைமாத்திரத்தானே ஆத்தவசனத்தாற் சீட னுக்குப்பொருட்டுணிபுளதாதலின் ஏதுமுதலியவை கூறல் நூலிற்பயனில் கூற்றேயாகவன்றோ முடிவுபெறும்.

**371. சாஸ்திர இருவகைச்சங்கையும் சமாதானமும்.**

இனியாருக அப் பிரதிவாதியின்பொருட்டும் நூற்கண் யாண்டு ஏதுவாதியோடியையும் வாக்கியம், இலக்கணவாக்கிய மோ நூலாசிரியராத்தபாவத்தையுணர்ந்த சீடன்பொருட்டே பிரயோஜகமாமென நினைகின்றனைகொல்! அதுவுமொவ்வா தாம், இப்பொருள் பிறநூலாற்றுணியப்பெறுதலின் ; நாம லிங்காநுசாசன வியாகரணாதிய நூல்கள் முனிவர்களான் மொழியப்பெற்றனவாய்ச் சம்பந்தங்கவர்வனவாயுள்ளனவாம்; அயனூல்களான் அமையப்பெற்றனவாய அருத்தமும் உனது நூல் விடயமேலாயின் பகுதிவிகுதி வேறுபடுத்தலாற்சத்தங் களின் சாதனமும் சாற்றப்பெறாத தென்னைகொல்! சத்தங் களினிலிங்கந்தான் சாற்றப்பெறாததென்னைகொலோ! அத னறியாமையானும் தோல்விதோற்றுவதேயாகும். அல்லது

வியாகரணுதிவிடயம் விடுத்து நாமம்விளம்பல் எங்ஙனமே னும் உனது நூற்குவிடயமாயுளதாகுக; ஆயினும் இவ்விடயத்தில் மிகக்குறை வுனது நூற்காம், வேறு நூற்களில் விற்றிருப்பன்வாய்ப் பகுபெயர்களுளவாம் அவைகள் அறையப்பெறுதனவென்னைகொல்! இனி இந்நூற்கண்ணெச்சத்தங்கட்குபயோகமுளதோ அவைகள் இதனுலியம்பப்பெறும் பிறவெல்லாம் இயம்பப்பெறுவாமென வியம்பினும் ஒருதொடர்மொழியிலிருக்கும் பதத்திற்கு இலக்கணமியம்புதல்போலவே அவ்விலக்கணத் தொடர்மொழியிலிருக்கும் பதத்திற்கும் என்பதாக எல்லையில்லாது செல்லல் நூற்கேய்தராநிற்கும். நூற்கண்ணவ்வவ்விலக்கணத்தொடர்மொழிப் பிரயோகத்தின்மாட்டே அவ்வம்மொழிகட்குபயோக முளதாந்தன்மையுண்மையின். இனிநானுவிலக்கணம்புனையும் வாதியர்க் கையம் பிரத்தியக்காதிசத்தார்த்தத்தின்கண்ணே யிருத்தலின் ஐயமகற்றுவான் அறையப்பெறுகின்றது, அயலன்றும், ஐயமிலாமையின்என எண்ணுகின்றனைகொல்! எனினும் ஏலாதாம். வாச்சியத்தன்மைதியோத்தியத்தன்மை விவாதம்வாதிகளினர்த்தத்திலுளதேயாம், சிதுராதிபதங்களின் பொருளாயகருமகருத்திருத்துவ அகருமகருத்திருத்துவங்களில் விவாதமுளதேயாம், பாவசத்தத்திற்குச்சொரூப சத்துவசத்தாசர்மானியாதியருத்தத்தன்மையிலுளதேயாம், அதிகரணசத்தார்த்தத்திற்கு வீழ்ச்சித்தடைத்தன்மை சமவாயித்தன்மை முதலியவற்றின்கண்ணேயுளதாம். இவ்வாறே பிறவெண்ணின்மொழிப்பொருள்களினும் ஐயங்கள் விழித்தேவாழ்கின்றன. அவ்விலக்கணங்களறையாததென்னைகொல்! ஆகலின் ஓரிடத்தில் வித்தர அபிநிவேசஞ்சாலும்.

### 372. சாக்ஷாத்காரித்தன்மைகூற முடியாமை.

மேலும், அச்சாக்ஷாத்காரத்தன்மை, சிறப்பைச்சிவ்ணிய பொருட்பிரகாசத்தன்மையெனின்? ஆகாதாம், சிறப்பைச்

சிவ்ணியதாந்தகைமையுபலக்கணமாயின் அனுமானதிவியாத்தி யாம் (அதிவியாத்தியாம்) சிறப்பாயினோ, சிறப்புக்கோர்வை யிளைப்பாறின் எல்லாச்சிறப்பினுணர்விற் காட்சியிலக்கணங் கழிதரலான் மூலம்வரையுமே காட்சியிலதாமெனஅல்கதுவும். இளைப்பாறுதலிலதேலாமாயினோ அத்தகையதற்கே வியாத் திக்கவர்ச்சியுண்மையின் அனுமையின்மாட்டும் அத்தகைய சித்தியாமெனச்சாக்ஷாத்காரித்தகைமையினடைவாம்.

**373. அதிவியாத்தியகற்றும் வினவும் அதன்விலக்கும்.**

இனித்தொடர் பின்மையின் ஆண்டஃதனுமையன்றும், ஆயின் அதன்றொடர்ந்ததோற்ற முதலியனகூடாமையும், வியத்தியின் கருதலானே அசித்தியடைவும் ஆம்; வியத்தியில் லாது பொதுமைக்கெவ்வாறே அவ்வாறே ஆண்டச்சிறப் பிலாமல்வியத்திக்கும் கூடாமையொப்பாதலின்; தோற்றம் முடிவுபேறடையாமையின்மையின் பக்கதருமமாக முடிவி லாச்சிறப்புச்சித்தியாவாமென நினைகின்றனைகொல்! ஆயிற் றோற்றியது முடிவுபேறடையாமையின் அவ்வுணர்வு நேரே யொளிராநிற்கும்.

**374. அசம்பவமீவான்றோடங் காட்டல்.**

கவரற்கேலாத முடிபிலாச்சிறப்பொளிர்வின் கற்பனை யினும் தனித்தசாக்ஷாத்தகைமை யெனப்பெயரியசிறப்புக்கற் பனையே அற்பத்தன்மையார்தலின் மிகமேன்மையதாம். சாக்ஷாத்தன்மைவிவகாரம் வேறோராற்றால் விரவாமையாயகற் பனைவிரைக் கத்துணையானும் பயன்படும் பான்மைபற்றலின் எனக்கொண்டகற்பனையும் அதனானேயடாதாம், இதன்கண் விரிவோ விளம்பப்பெறும்.

**375. விசேடசத்தார்த்தத்திற் றோடங் காட்டல்.**

சிறப்பும் விலக்குவதாயின் நிருவிகற்பத்தவ்வியாத்தியாம், விசுவத்தைவிலக்கும் வடிவவொளிர்வான் அதுவுமவ்வாறெனி வாயின் சேய்மையிற் சாமானியக்காட்சிக்குக் காட்சியற்றதன்

மை கருவலாம்; ஆண்டு அகிலவிலக்கணத்தன்மையொளிர் மேவல் ஐயப்பாடுமுதலன வமையாமையின். ஆண்டும், உணர் பவன்முதலிய விலக்கமாத்திரவொளிர்வாற் சிறப்பொளிர் வாந்தன்மையேயாமேல் அநுமிதியாதியி லதிவியாத்தியாம்.

### 376. வேறுவகையாகக்காட்சி யிலக்கணகண்டனம்.

இனி, பொறிக்கரணமன்று மனுபூதித்தகைமையாம், ஆண்டுச்சாக்ஷாத்காரிஞானகரணத்திற்கே பொறித்தன்மையா னே ஒன்றையொன்று பற்றலாந்தகைமைபுறுவதாகு மென் பர் சிலர். அஃதேலாதாம், உண்மைச்சிறப்போடுற்ற அறியப் பெறுப் பிரமைக்கரணத்தகைமை பொறித்தகைமையெனப் புகலக்கூடலின் காரியக்கருவுஞ் சிறப்புச்சித்தியிலாது என் பொருட்டுக் காரணத்தகைமையே யுணர்தலாமெனப்பாதஞ் சாதிக்கத்தக்கதாம்.

### 377. கூறியகுற்றத்தைப் பாட்டமதத்தினுங் கோடேத்தல்.

இதனானே யறியப்பட்டதாம் பெற்றியொன்று அயலாம் அதைப்பயக்கும் பான்மையுணர்விற்குச் சாக்ஷாத்தன்மையாம் என்பதும் எள்ளப்பட்டதாம். ஒருவடிவுடைமை நிலைபெறாத வழிகாரணத்தகைமைதுணிய முடியாமையின். அறியப்பட் டதாந்தகைமையின் விலக்கணப்பான்மை அயலாற்றலமையப் பெறுமையானே அதன்பெறுதியாமென்னற்க; வேறுகாரண விலக்கணத்தன்மையானே அஃதமைதலின்.

### 378. வேறுகாட்சியிலக்கண கண்டனம்.

மேயத்தானுயதன்மையுமாகாதாம், மிருவழக்காதலின், தன்மேயத்தாலாயதாந்தகைமையேலோ தற்பொருள் விலக்கத் தாற்றொடர்பின்மையின், முற்குற்றமகலாமையானு மென்க.

### 379. அறியுமவாக்கருவுறும் அயலிலக்கண கண்டனம்.

இனி, எதனைறியப்பெற்றவழி அறியுமவா மீண்டும் ஆகாதோ அவ்வறிவுசாக்ஷாத்காரியென்பதும் அடாதாம்;

காட்சியாற்கண்ணுற்றபோதினும் இட்டமாய சுதாதியர்பாலறி யும்அவா நிகழக்காண்டலின். இனி யாதின்பின் வேற்றுப் பொதுமையதின் ஞானவேட்கை நண்ணுதோ அத்தகைமை யவ்வாறுந்தகைமையெனின், ஆகாதாம், அதன்சமஜாதியதை யறியப்படாதவழி அதன்வேற்றுச்சாதியதை யறியமுடியாமை யின், அனுமையாதியின் விடயமாய அரியினைசுவரியத்தைக் காண்பான்காதல் கதுவாமையானும் என்க. காட்சியாற்கண் ணுற்றபோதினும் கனவின்கட்சிவப் பசோகமலர்கொத் தென வையப்பாடுற்றுழி, புகைக்காட்சியாற் கனற்குக்கருதப் படலாந்தகைமைகதுவுதலி னெனவுஞ் சிலர் கழறுநிற்பர்.

380. வேறுவிதத்தானே காட்சியிலக்கண கண்டனம்.

அறியப்பெறுது சிறந்தகாரணமுறுமனுபவத் தன்மை யாதல், காரணச்சிறப்புற்ற பாவப்பான்மையாதல் சாக்ஷாத் காரித்தன்மையாம் எனின் ? ஆகாதாம், நீட்சிமுதலியகாட்சி யவ்வியாத்திநிகழ்தலின், ஆண்டவதிமுதலியவற்றின் றேற்ற வுவாவுறுதலின். ஆண்டவதியறியப்பெறுவதா யங்ஙனமாகா தாம், அவதியறிவோவாம், சென்றனமுதலவாய் அவதிமாட்டு மங்ஙனமுணர்வுகூடலின் எனின் ? புகைமுதலியகுறியின் கண்ணும் ஒக்குமன்றே, புகைக்காட்சியாலாண்டழலமர்ந்த தெனப் பின்னருங்கருதக்கூடலின். ஞானச்சிறப்பாக ஞேய ஹேதுத் தகைமை யொப்பதேயாம்.

381. மூன்றுவது கற்பமோசனம்.

சிறந்தகாரணமெனலாற் காரணங் கருதியதாமெனின் ? ஆகாதாம். கருதப்பட்டவருங்குறியுறும் வருங்குறியுற்றதன் கருதலின்கண் ணில்லாதகுறிக்குக்காரணத்தகைமை கதுவா மையின் அறியப்பெறுங் கரணமுடைமையின்மையின்.

382. பிரபாகர நீக்கம்.

ஆண்டுக்குறியறிவுகாரணமாம், அதுவும் சொப்பிரகாச வாதியாகிய எனக்கு அறியப்பெறுவதேயாமாண்டெனின் ?

ஆகாதாம், அதற்கும் அறியப்பெறுவதாகவே கரணகோடியுட் புகுதலின் மானமின்மையின். நுதலியவுணர்வுகட்கும் அவ்வாறுந்தன்மையின்மையின். வேறோராற்றாற்பெறப்படுவதாய அறியப் பெறுவதாந்தன்மையையும் அகற்றுதொழிலில், விழிமுதலியவற்றின்கருதலின்பின்னர்த் தெய்வத்தாலுளதாங்கடாதிக்காட்சி யவ்வியாத்தியார்தலின்.

## 383. நியமச்சிறப்பான்மாசையகற்றும் வினவும் அதன் விலக்கமும்.

நியமமாகவெனநிகழ்த்தின் நிலையாதாம், விதியில்வினைதலின்; நியமமாகவெனல் நிடேதத்தின் சிறப்பாமேல் தெய்வத்தாலறியப்பெறும் பொறியினுணர்வின் பின்புண்டாம் பிரத்தியக்கங்கூடலின் அசித்தியாம். விதியின்கண்ணே கரணத்தன்மையுட்புகுமாறே யிந்நியமமியம்பப்பெறும் எனின்? என்னற்க, ஆயினும் வாளாவே போதலான்; அன்றாயினோ மேல்வழக்காதலின் வாளாபோதலியாங்ஙன மெனின்? அன்றும் ஆயினும் மேல்வழக்கேயாதலின், இரதமுதலியவற்றின்சாக்ஷாத்காரத்தின்மாட்டுருவமுதலியவைகாரணமாகாவன்றோவேறோராற்றாற் பெறப்படுதலின் அன்றுமெனின்? அன்றும், கருதலினும் ஒப்பாதலின் மேலும்யாண்டுநிடேதம், அதன்பாலுற்ற ஒருருவப்பான்மையோதத்தக்கதேயாம், அன்றாயினோ, எதுகொண்டு நியமம் நிகழ்த்தமுடியுமெனக் காரியங்கதுவிய ஒருருவப்பான்மை யோதாமன்முடியாதாம். நியமபதப்புகுதலின்றியும் காரியங்கதுவிய ஒருருவப்பான்மையோதாமலிருக்கவியலாதேயாம். அறியப்படுவது அன்றீண்டுகரணம் எனவேகாரியவியத்தியைக்கருதியேயாமேல், அதன்முற்புலப்படுவனவற்றிற்கு ஆண்டகாரணத்தன்மைதுணியமுடியாதாம்; ஆகலின் அப்பொதுமையுடையதன்கண் அப்பொதுமையுடையதன் பிறழ்ச்சியனுசந்தானத் தவசியமுயல்கை கடனும். இனித்தடையற்ற

பொருட்பிரமைத்தன்மையவ்வாறுமாயின், எதுகுறித்துத் தடையறல், அஃதென்னெனவு மன்றதற்பாலதாம், பொறியைக் குறித்துத்தடையாம், அதுவும் அதனச்சந்நிகருடமாமென வரின், இந்திரியசந்நி கிருட்டப்பிரகாசத்தகைமை யென்பதா கக்கோணற்பொருளாம், அதுவும் அமையாதாம், தன்விழிக் கோளகக்கருதலி லதிவியாத்தியாகலின்.

### 384. வேறுவகையாக இலக்கணநீக்கம்.

உணர்வுபயவாவுணர்வாந் தன்மையஃதாமெனின்? ஆகா தாம், விகற்பத்தோடுற்ற விசேடவுணர்வி லவ்வியாத்தி வரு தலின்.

### 385. வேறுவிறு விலக்கம்.

இதனானே வேறுவிடயவுணர்வுவிளையாமை அஃதென்ப துமகற்றப்படும். சவிகற்பகத்திற்கு அதிகவிலக்கவடிவவிட யத்தன்மையாதலின் ; அதனவதியுணர்வு விளைத்தலின்.

### 386. காட்சிக்கயலிலக்கணங் கழித்தல்.

தன்விடயத்தடங்காப் பொருளுணர்வுவிளையாத் தீமை யதுவாம். எதிர்மறையோடுற்ற பொருட்காட்சியிலவ்வியாத் தியாமென்னற்க ; அடையடுத்தபொருளுட் புகுத்தப்பெற்ற எதிர்மறைக்கும், பிரத்தியபிஞ்ஞையின்மாட்டுத் தத்தைக்கே போலும் காட்சிவிடயத்தகைமையங்கீகரித்திருத்தலின் ; எதிர் மறையாகாத்தகைமையானே சிறப்பித்தலானுதல் ஆமெனின்? ஆகாதாம்; தன்னென்னும் பதத்தானே துயர்துடைத்துண் மையினானும், காரியவியாத்தியின்மாட்டு விளையாமைதுணிதல் கூடாமையினானுமென்க. அப்பொதுமையுடையதன்மாட்டு அப்பொதுமையுடையதன்பிறழ்ச்சிச்சத்திரங்கொளினே காரி யவோருருவப்பான்மையின்மாட்டே முன்போல் வீழ்தலா மென்க.

387. வேற்றிலக்கணங் காட்சிக்கு விலக்கல்.

தற்போதால் வரைந்துகொள்ளப்பட்ட பொருட்போதப் பான்மை சாக்ஷாத்தன்மை யென்பதாகவும் ஆகாதாம்; தற் பொருட்பகுப் பிலாமையின். கருதன்முதலியவற்றைக் கழித் தல்தா னியாங்ஙனமேலும்? ஆண்டு வியாத்தியாதி புகுந்த போது நியதப்பொருண்மையாம்; நிலாவெழு நிறைகடலெழுன் முதலியவற்றின்மாட்டுந் தற்போதுப் பொருட்டன்மை யாயி னும் ஆண்டும் வியாத்திபுகுந்ததன்மையே அத்தகைமைக் குத வியாவதெனின்? ஆகாதாம். எங்ஙனமேனுமாகுக, ஆயினும், தற்போதுவரைந்துகொண்ட பொருண்மைபொருந்தலின். எப் பொதுமையுடையது இவ்வாறேயெனச் சிறப்பாமென்னற்க; விலக்கணத்தன்மையே சமசாதித்தகைமை முன்னரேதுணி யப்பெறுமாயின் அயலாலியாது பயன்? அதுவுமடாதசேயென வறைவேம். வியாத்திமுதலியவை யிலாமலேயெனின்? வலா தாம். அதற்கே யாற்றலுண்மையின் தற்போதாங்கதை வாளா போதரலின்; எவ்வாறதுவுமாகாதோ அவ்வாறதையப்பெறும்.

388. தத்துவவுபப்புலவக்காரர் சாற்றியதூடண நீக்கம்.

தற்பிரகாசநிடேதத்தான் தற்போது வரைந்துகொண்ட பொருட்பிரகாசத்தகைமை சம்பவியாதாம்எனச் சிலர்செப்பு வதுந்தப்பாம். உண்மையாயோ யாதுதற்போது அதனையே யறையுமவாவாதலின்; நிகழ்காலப்பொருளொளிர் வவ்வாறு மென நிகழ்த்தன் முடிவு பேறுதலின். நிகழ்காலப்பொருளி யாவரானுமே யியம்பத்தக்கதாதலின். அவ்வாறே "நீதிசம் பத்தமும் நிகழ்தரலாய, போததும் விழிமுனும் பொறிகவர்ந் திடுமா, லாதலி னியாமுரை யாடிய தேதகும்" எனவுமறையப் பட்டுளது.

389. காட்சிக்கயலிலக்கணங்கழித்திடேதல்.

ஆறெற்றுமையினயலாலாகாவிடய நியமவுணர்வு அவ் வாறுமெனின்? ஆகாதாம். தோடவயத்தாலாய சாக்ஷாத்து

ணர்வின்மரட்ட ட்டீதமையாமையின். பிரமைச்சாக்ஷாத்கார மாண்டவ்வாறுமெனின்? என்னற்க, சாக்ஷாத்தன்மையானே பிரமைமுயற்கட்குச் சிறப்பின்மையின், பொதுவாய சாக்ஷாத் தன்மையே புகலவேண்டியதாதலின். இட்டபிலா மயன்மதி மதத்தில் ஆறொற்றுமைக்குந் தனித்தனிதழீஇய விகற்பங் கூடாமையின்.

## 390. பிரகாரமயலாற்பிரத்தியக்க நீக்கம்.

சாக்ஷாத்துணர்வு சொரூபவுணர்வாம், தன்வடிவத்தானே பொருளின் பொலிவாம் எனின்? அன்றும், அனுமானுதி யதி வியர்த்திவருதலின், அனுமானுதியின்கண்ணே குறிமுதலிய வற்றின் அவாத்தன்மையுண்மையின் அதுவரைந்துகொண்ட சமயசம்பத்தபோதத்தன்மை காட்சிப்படுவதில்லையாம் எனின்? என்னற்க, பிறழ்வுறுதலின், யாண்டுக்குறிமுதலியவை வரு வனவாதியை புணர்த்துவிப்பதாமோ ஆண்டு அக்காலத் தன்மை பிறழ்தலின். இதனானே, குறிப்போதுவரைந்து கொண்டவியாபகவிளக்கம் அனுமையாகாதாமேலாயின் பொய் வியாப்பியத்தாற்கருதப்பட்ட வியாபகமாயதெய்வ வயத்தான் மெய்வியாப்பியவியத்தி வேறுடையதன் றோற்றமுண்டாய வழி வியாத்திகாலம் வரைந்துகொண்ட வியாபகவடைவினானே அத்துணையங்கிசத்திற் பிரமைப்பெற்றியாதலைப் பிரமைச்சிற ப்பி னுள்ளடக்கமுடியாமை வந்தடையுமென்பதூஉம் நூக்கப் பட்டதாம். பூதாதிவியாபக அனுமானத்தில் வியாப்பிய காலத்தன்மை யசம்பவமாதலின். ஆயினும், அக்கினியாதி மதங்கிசமாத்திரத்திற் பிரமாத்தன்மை வீழ்த னீக்கமுடி யாமை நிகழ்த்தியிருத்தலின்.

## 391. அயற்காட்சியிலக்கணமகற்றல்.

அநுபகிதப்புலப்பாடே சாக்ஷாத்துணர்வெனின்? விசிட் டப்பிரவிட்ட விசேடியக்காட்சியி லவ்வியாத்தியாதலின். கரண

அநுபகிதத்தகைமைவிளம்பும் வேட்கையதெனின்! என்னற்க, பிறகரணவுபகிதத்தில் அவ்வியாத்திவருதலின், தற்கரணவுபகிதத்தகைமைக்கும், தற்பதவகட்டிற் புகட்டியதாந் தகைமையுண்மையின்.

### 392. இலக்கணம் வேறுகாட்சிக்கிரித்தல்.

வியாத்தியாதி யுபகிதத்தன்மை முதலியவற்றினின்மையாண்டொருங்குகூடுமோ அத்தீசாக்ஷாத்தீயெனின்? ஆகாதாம், வியாத்தியாதிக் காட்சியி லவ்வியாத்தியாதலினானும், அசித்தத்தன்மையுண்மையினானும் என்க. மலைதீயுடைத்தென்பதாகவே பதிஞ்ஞையாதலின், ஓசையானும் தற்புகலுதலிலாமையின், சாத்தாதிஞானங்கட்கும் காட்சியினடைவாம்.

### 393. காட்சியினிலக்கணமயலோன்று கடிதல்.

தடையிலாத்தீத்தகைமை சாக்ஷாத்தீத்தகைமையெனின்? தடைவிகற்பமடாமையின். நாப்பண்பொருட்சிறப்பின் நிலைபேறுதடையாமேல், அஞ்ஞான்றுகாட்சிப்படாவிபுவுணர்வுகட்குச் சாக்ஷாத்தன்மையினடைவாம். இனியுணர்த்துவிப்பதிஇணர்வுவாயிலா யசத்தைதடையாமேன் முன்மைமுதலியவற்றின் காட்சியின்மையினடைவாம். அடையடுத்ததன்கண்ணடையடுத்தமை தடையாமெனின்? ஆகாதாம், புகையடையடுத்ததில் அழலடையடுத்தலமையென்னுஞ் சொரூபத்திதியின்மாட்டவ்வாறுமேல், காரியகாரணபாவமுரணும்; புலப்பாட்டின்கண், புகையடையடுத்தமைக்குத் தருமிச்சிறப்புத்தகைமையேல் ஏதுவிற்கங்கிசத்தானே தன்மாட்டிருப்பாம், துணிபொருட்சிறப்புத்தகைமையேல் வியாத்தியைக்கவருங்காட்சியின்கண்ணும் தடையிலாமையிலாமையின் சாக்ஷாத்தகைமையிலதாம்.

### 394. காட்சித்தகைமைக்குப் போதுமைத் தகைமையில் விலக்கம்.

இனியுணர்விற்குச் சாக்ஷாத்தகைமையொரு பொதுமைவேற்றுமையாம். ஆண்டனுபவத்தன்மையானே பராபர

பாவங்கூடாதாம், மிருதிக்கும் சாக்ஷாத்காரித்தன்மையுண்மை யின் என்பர்சிலர்; அஃதொவ்வாதாம், மிருதிக்கவ்வாறுந்தகை மை யங்கீகரிக்கப்படாமையின் கனவிற்காண்டு மிருதித்தகை மை துணியப்பெறுமையின், துணியப்பெறலாயவழியினுதல் ஆண்டுச் சாக்ஷாத்தகைமை யாரோபமங்கீகரிக்கப்படுதலின். பாவனையின்பலம் பயந்ததற்கும்சிலபால் ஆலோகாதிதருமியை (அதிஷ்டானமாக)உடைய பிரியாதியாசிரயதரும ஆரோபத் தகைமையாம், இப்பிவெள்ளிமயல்போலும் மூடியகண்முதலிய வற்றிற்கும் கனுக்கடுப்பவே கதிகருதத்தக்கதாம்.

**395. காட்சித்தகைமைக்குப் போதுமைத்தகைமையேற் குற்றங்கூறல்.**

பரமாணுமுதலியவுணர்வு அநுவியவசாயத்தை யாற்று ழிப்பரமாணுப்புலப்பாட்டங்கிசத்தும் சாக்ஷாத்தகைமை யனு பவிக்கப்படுகின்றது என்பதன்கண் ணிதுவோஎம்மனோர்க்குப் பொருத்தமுறுவதாகாதாம்; மாறாயினோ, குறிஞானவிலக்கணை ச்சம்பந்தத்தானே தீயும்மானதக்காட்சியேயாம் குறியாற்பெற லாவதாகாதாம், எனப்பிறரான் இயம்பலெளிதாதலின், இன் னணம் ஒட்டியுணர்வதில் இவற்குமுற்றேயகாலசம்பந்தத்தைக் காண்கின்றேன்என யாவற்கனுபவம்? எதன்வலுவான் அன்ன ணமங்கீகரிக்கலாமோ; ஆகலிற்புலப்பாட்டுப்போராமிஃதென்க.

**396. சாக்ஷாத்தன்மைச்சாதிக்குக் காட்சிப்படல் கழித்தல்.**

சாக்ஷாத்தன்மைச் சாதி காட்சிப்படுவதேயாமேலாயின், புலப்பாட்டிற்சிலர்க்குக் காட்சிப்படுவதெனவும்,காட்சிப்படாத தெனவும் விவாதம்விளையாமற்போம். கடாதிக்காட்சித்தகை மையின்கண்ணே கலாம்விளைப்பதில்லையன்றே, சிலபால்வெ ளிப்படாமையின் விவாதமாமெனின்? ஆகாதாம், அங்கிசமற் றவத்துவின்கண் வெளிப்படைவிளக்கமின்மையாதாம்? ஒரு பொருட்சமவாயிகளாய மிகுந்தவற்றோடு தோற்றமேலாயின்

அது ஞானத்தன்மைமுதலியபோலும் சாக்ஷாத்தன்மையினு மாம், ஆகவே ஞானுதித்தன்மைகளில் விவாதமின்றும், சாக்ஷா த்தன்மையிலோ ஆமெனச்சிறப்புரைக்கப்பாலதாம். தரிசனம் புரிந்தார் விவாதமோ மாற்சரியத்தானுதல் வாங்மாத்திரத்தானு தல் அன்றும்; மற்றே, தத்துவ அபிமானத்தானேயாம்.

### 397. காட்சித்தகைமைக்குப் பொதுமைத்தகைமையேற் கலப்புக்கதுவல்.

காட்சிப் பொருட்டருமியையுடைய அநுமையின்கண் ணே சாக்ஷாத்தகைமை பரோக்ஷத்தகைமைச் சங்கரந்தடுக்க முடியாததாம். பரோக்ஷத்தன்மை பொதுமையன்றும்; மற் றே சாக்ஷாத்தன்மையேயவ்வாறும், கேவலம் சாக்ஷாத்தன் மையின்மையே பரோக்ஷத்தன்மையெனின்? ஆகாதாம், இப் பொருட்கு ஒருபக்கநிறுவு முகமிலாமையடைதலின் முற்று ணர்வோனைக்கருதுவோனது மதத்திலே அறியப்பெற்றகுறி யாதியையுடைய் கடவுளுக்குக் குறியையுடையதுமுதலிய வுணர்வின்கண் ணபரோக்ஷத்தகைமையானும் முாணும் குறி முதலிய வுணர்வுபயந்ததன்மை யனுமிதித்தன்மை முதலியவற் றின்பாற் சாதகமாமாலெனின்? ஆயின், சாக்ஷாத்தன்மையி னூடும் பொறியொற்றுமைமுதலியவை பயந்ததன்மையெனச் சாக்ஷாத்துமஃதாகாதாம்.

### 398. இலக்குவதிலாமையின் காட்சித்தகைமைக்குப் பொதுமைத் தகைமையினீக்கம்.

வியஞ்சகவுபாதி நியதமாகச் சாதியங்கீகாரமாம், அஃதி தன்மாட்டின்றும், பகர்ந்தவகையேபாதமாதலின் வியஞ்சக நியமமங்கீகரியாமையின் அஃதீண்டங்கீகரிக்கப்படாதெனப் பகாற்க; என்னுற்காணப்பட்டதா? அல்லதெவனுனேனும் அறையப்பட்டதா? வென அங்ஙனமையம் அமையாமையின் முன்னுளதாகிமரிக்கப்பட்டதாய அம்மதிநின்மதத்தின் மனத்

தோற்றுணர்வுவடிவச் சம்பந்தத்தானே காட்சிப்படுங்காற்சாக்ஷா த்தன்மைக்கவர்ச்சியின்மை வியஞ்சகாபாவமிலாது யாங்ஙன மாம்?

399. காட்சித்தகைமைக்கு அருத்த தருமத்தகைமையகற்றல்.

அருத்ததருமமும் சாக்ஷாத்தன்மையென்பது சுவப்பிர காசவாதத்தி லகற்றப்பட்டது.

400. காட்சித்தகைமைக்கு வேறு பொருட்டன்மை விலக்கல்.

அன்னணமாயினும் பாதிக்கப்படாத சாக்ஷாத்தன்மை மதிவிவகாரவலியான் முடிபாகச் சாக்ஷாத்தன்மையையயற் பொருளாயேனுமங்கீகரியாமற் கதியைக்காணேம், மயற்கும் மயலின்மைவாயிலாந்தன்மையாதலின் எனின்? ஆகாதாம், அதற்கும் சாக்ஷாத்கவர்ச்சியேல் ஓரிடத்தும் அவ்விவாதம் ஆகாதாம்என்பதாதி தோடமொப்பாதலின், அநுமானாதியால றியப்படுவதின்கண்ணே குறியாதிகூடாமையின், வியாத்தியா திக்கவர்ச்சியாண்டையதென்பதாதி விடைபகரமுடியாப்பரம் பரையே யாம். ஏழுபதார்த்தங்களின் நியமசாதனங்களும் யாங்ஙனம் முரணுமற்போம்

401. காட்சிக் கயலிலக்கணங் கழித்தல்.

குறிமுதலியவை பயக்கும்பான்மையின்மைக் குழூவுறு மதி சாக்ஷாத்தெனின்? இயையாதாம், பரோக்கவிடயசமுச யாதியின் கண்ணதிவியாத்தியாதலின் இத்தகையபிரமை யவ்வா றாமெனின்? என்னற்க, காட்சிமயலி லவ்வியாத்தி வருதலின்.

402. வேறுவகையானே யிலக்கணவிலக்கம்.

அகற்றப்பெற்ற அநுமானாதி யவ்வச்சிறந்தகாரணத்தா காதவுறிவு சாக்ஷாத்தெனின்? கூடாதாம், இவ்வாறே பிரத்தி யக்க அவ்வவ்வபரவயற்றீ அநுமானாதியாமென மாறுபடுதலே யாகாததென்னைகொல் லென்பதாக வொருபக்க நிறுவுமுக

யின்மையாம். விலக்கப்படுமவற்றி லொன்றிரண்டுமுதலியவற் றையொழித்து விலக்கப்படுவத னே துப்பயவாமையானும் சாக்ஷாத்தன்மைபோலும் ஆண்டாண்டுத் தொடர்புற்ற மறு மதியாதிமருவலின். விவகாரமேலோ நிமித்தம்வேண்டலாம்; நிமித்தத்தைவேண்டி விவகாரமின்றுமாலெனின்? என்னற்க, மேல்வழக்கின்வாயிலாகாத நிமித்தமே கற்பிக்கப்படுதலின், அவ்வப்பயக்கட்பட்டபான்மையின்மையும் அவ்வடிவத்தானே தொடர்ந்த விவகாரப்புலப்பாடுகளைவிளைக்கும் அயலானுமாகா தாம். அவ்வாறுமேல், காணப்பெற்றவியத்தி விசேடங்களியா வற்றினும் அயலாந்தன்மையானே விவகாரம் விரவலின் கோத் தன்மைமுதலியவை கெடுவதாம் வழக்காம். ஆகலின்:—
" அயலிதுவிதியினு லாயஞானமாஞ், செயலறுமின்மையாற் செயப்படாததாம், உயுமுறையிலையெனி னுனக்குக்கோதினை, யயலகற்றிடுவன்மேலாக்கலியாதரோ."

## 403. சாட்சியிலக்கணம் வேறுகடிதல்.

சத்தவனுமானவுபமானம்பயந்த மெய்யுணர்வினும் வே றுந்தன்மையைவேய்ந்து மெய்யுணர்வாந்தன்மைமேயது காட் சியிலக்கணமெனக் கழறியெவனேனுமொருவன் வெட்கிலனே லாயின் அவன் வினவப்படுவன், தனித்தனியாக இஃதிலக் கணமா? அல்லது, கலப்புற்று? தனித்தனிபிறழ்வுறுதலின் ஆதியதாகாதாம் மற்றதில், கலப்புற்றவற்றின் கழிப்பா? கழிப் புற்றவற்றின் கலப்பா? தனித்தனியே பிறழ்தலின் ஆதியதா காதாம், தனித்தனி யனுமிதியாதிகளிற்கலந்த அவ்வுருவம் பொருந்தாதன்றே. மற்றதுமாகாதாம், கலப்புற்றவனுமிதி யாதிகளிற்கழித்த கலப்புப்பொருந்துவதாயினும் காட்சித்த ன்கமை யங்கிகரியாமையின்.

## 404. விசிட்ட விலக்கண விலக்கம்.

மிகுதிப்பற்றுக் கோடுற்றவையாகமிழற்றிய நிடேதங் கட்கு இலக்கணத்தகைமையிலையாம், மற்றன்றே, வகப்பற்றுக்

கோடுற்றவைகட்காமெனின்? ஆகாதாம், சமுதாயிபேதமே ஹும் சமுதாயத்திற்கு அனுமிதியாதியேபோலும் ஒருமை யுப சாரவிரையொப் புடன்படலாமெனவே வழங்கப்படும். அச முதாயத்தன்மையோடுற்றதாயெனவும் விளம்பவேட்கையா மெனின்? என்னற்க, சமுதாயத்தன்மை விசிட்டத்தின் கண் ணே யங்கிசத்தாற்றன்பான் இருப்புமுரண்பாட்டச்சத்தான் அசமுதாயத்தகைமை யங்கிகரிக்கப்படவேண்டலான் அத்த கையவழக் கசுற்றற்கெளிதல்லவாம். ஞானத்திற்கிங்ஙனியம் பும் வேட்கையாமெனின்? ஆகாதாம் விசிட்டமாயஞானத்திற் கும் ஞானத்தன்மையானேயென்க.

## 405. ஏகசத்தார்த்த விகற்ப நீக்கம்.

ஒன்றென்பதூஉம், பற்றுக்கோடாயவியத்தியபேதமென வியம்புமவாவா? அல்லது அபின்னஜாதியுடைமையா? அல் லது ஒருபாதியுடைமையா? அல்லது ஒன்றன் எண்ணிக்கை யுற்றமையா? அல்லதுதானென் இரண்டுமுதலிய வெண்ணிக் கையின்மையா? ஆதியதில் அதன் விசிட்டத்திற்கு அவ் வியாபகத்தன்மைத்தோடமாம், வியத்தி வடிவமாய அபேதத் திற்கு விலகியிருத்தலுண்மையின் தன்மியினும் இலக்கணச் சிறப்பேல் அலக்ஷியதன்மத்தன்மை தன்மத்திற்காம், தனக்கே தனது தன்மத்தன்மை சாராமையின் ஆசிரய அபேதத்திற்கு பலக்கணத்தன்மையேன் முன்மொழிந்ததோடமாம்.

## 406. இரண்டாவது முதலிய விகற்ப விலக்கம்.

இரண்டாவதில், அதேயபின்ன ஜாதியுடைமை யிலக்கண மாகுக, ஒருதலையாயுளதாவதாய் முதன்மையானே புலப்படுவ தாதலின். மூன்றாவதும் முரணுறும், பரோக்கப்பிரமிதித்தகை மை அனுமிதியாதிகளின்மாட்டும் கலப்புற்றவற்றுமிருத்தலின். நான்காவதும் நலமலவாம், வைசேடிகபக்கத்திற்குணங்குண ஹீனமாகலான் அஃதிலாமையின்; உளதெனினும் அனுமிதி

யாதிமூன் றன்கண் ணிருப்பனவாய மூன்றபாவங்கட்கும் ஒருமையெண்ணிக்கையின் ஒருநிலைக் களப்பான்மை யுறுதலின் கலப்புற்றவைகட்கும் ஏகசமுதாயத்தை யனுசரித்து அவ்வாறுந்தன்மையாதலின். ஐந்தாவதும் நைந்தேகும், வைசேடிக மதானுசாரமாக அனுமிதியாதிய மூன்றன்கண்ணும் அதன்யாவஞ் சமமாயிருத்தலின், அதனினு மயன்மத வங்கீகாரத்திற் காட்சிவியக்திகளின்கண்ணும் இரண்டுமுதலிய எண்ணிக்கையியைதலினென்க.

## 407. ஏகசத்தார்த்த விகற்ப விலக்கம்.

ஆயினும், ஒருகாட்சி வியத்தியின்கண் ணிரண்டுமுதலிய பரிசமாப்தியின்றும், இரண்டுமுதலிய வெண்ணிக்கைப் பரிசமாப்தியபாவமும் அதனபாவசத்தத்தானே விளம்பும் வேட்கையாமெனின்? அன்றும், ஆண்டேயிருப்பாம் இரண்டுமுதலியவற்றின் பரிசமாப்தி, அது ஒருவியத்தியின்கண் ணின்றுமெனின்? என்னற்க, இங்ஙனம் ஏகத்தன்மைக்கும்யாண்டும் பரிசமாப்தியின்றுகும், அதற்கு ஆண்டே யிருப்பாகாதாம், ஆயின் அன்னியத்திற் கேகத்தன்மையின்மை வழக்காம், ஆகலின் ஒருமையெண்ணிக்கையுடைய வியத்தியின்மாட்டே யிரண்டுமுதலிய பரிசமாப்தியென்பதாகச் சமமேயாம்.

## 408. ஒருமையேண்ணிக்கையிற்பரிசமாப்தி வினவுமதன் விலக்கமும்.

ஒருவியத்தியின் மாட்டிருப்பது ஒருமையெண்ணிக்கை வியத்தி பிறவிடத்தின்றுமெனின்? கூடாதாம், சத்தைவியத்திக்கும் இவ்வாறுந்தன்மை வழக்காதலினானும், தொடர்பின்மைதொடர்தலினானும் என்க. சத்தை யொரேபொதுமைவடிவமாம், ஒருமையோ வியத்திதோறும்வேறும் பண்புப்பதார்த்தமாம் எனின்? அந்தோ? வைசேடிகானே வஞ்சிக்கப்பட்டவனையினை! இன்றுயின் சத்தேகவுணர்வுகட்கு அனுபவவிவ

கார்யிசேடங்களிருந்தும் எவ்வெவையோ சில்பலபொரு-த்தியிலாவக்ரங்களைப் புலம்புகின்றனை யாங்ஙனம்? சத்தை யொருமைக்குப் பராபரப்பான்மைபற்றுமையின் இன்னண மாமெனின்? ஆகாதாம். ஒப்பேயுறுதலின், ஜாதிபராபரப் பான்மைத்துணிபே யெவ்வுழியும் ஒன்றன்குறைந்த விருப்பி லளவையாம். யாண்டவ்வாறெனின்? என்னற்க, சயிலத்தன லத்தைக்கருதுங்கா லதனங்கிசத்தின்மாட் டியாண்டு முழுஞ் சாண்முதலியவை யுற்றனவெனத் துணிவுபெறுமைபோலக் கோதிலாமையின்.

## 409. அர்த்தாந்தரசங்கையும் அதன்நிவாரணமும்.

அற்றேல், ஒருமைதொடர்ந்ததாயாருக வலதாகாதொ ழிக, ஈண்டதனை யறைதலானென்னே! இருமைமுதலியவை யாண்டுமுடிவுபேறடையாவோ, மொழிந்தவபாவமூன்றுமுள வாமோ அது பிரத்தியக்கமாமெனின்? இங்ஙனியையாதாம், அனுமிதியாதி மூன்றனோடும் மும்மைமுடிவு பேறடைவதின் றும்; இன்னணமாகவே, அயலாயவை மூன்றுகளாகாவாம். யாதுபிறவிடத்துளதோ அம்மும்மைவியத்தி யயலாமெனின்? ஆகாதாம், யாதானுமொருமும்மைவியத்திக்கு அனுமிதியாதி மூன்றன்கண் முடிவுபேறின்மையின்.

## 410. மூன்றாவது கற்பநீக்கம்.

எம்மும்மை வியத்தியும் யாண்டுமுடிவுபேறடைவதின் றேவெனின்? அன்றும், அவ்வியாபகத்தன்மை யுண்மையின். பிரத்தியக்கத் தன்மைக்கும் மும்மைவியத்திக்கும் ஒரு தலை யாக ஒருநிலைக்களமுறுவதாந்தைசைமைமைய வைசேடிகமதத்தி னின்றுங் கிளம்பியவுன்னுன் அங்கீகரிக்கவேண்டலின்; மாறு யினேனு, பிரத்தியக்க வியத்திகள் மூன்றென்பன வாகாவாம் யாண்டு மும்மை முடிவுபேறடையா நிற்குமோ அதுவேயன் றோ மூன்றென மொழிவதாம்.

## 411. நுதலிய விசேடணத்தானும் அதிவியாத்தி நீங்காமை.

மேலும், ஆயினும் அவ்வதிவியாபகத்தன்மைத்தோட
மேயாம்; மும்மையானேவரைந்துகோடப்பட்ட வனுமிதி
யாதிவியத்திகளில் நீ நிகழ்த்திய மூன்றபாவங்களுமுள்ளன
வாம். ஆகவே யாண்டும் பிரத்தியக்கவிலக்கணம் அடைவுற்ற
தென வதிவியாத்தியறையப்பெற்றது. அதனைநீக்கும்பொரு
ட்டு, எம்மும்மைவியத்தியும் யாண்டுமுடிவுபேறடைவதின்றே
வென வுன்னானுரையாடப்பட்டது. இன்னணமியம்பினும்
அவ்வதிவியாத்தியகலமாட்டாதாம்; ஆண்டுமறைந்ததிறப்புமா
ந்திருத்தலின். மும்மையான் வரைந்துகொண்டு தன்கண்
ணியாதொருமும்மைவியத்தியும் முடிவுபேறடைவதில்லையன்
றே! மும்மைவடிவமாய வோருபாதிவரைந்துகொண்டவதன்
கண் அயன்மும்மைவியத்தி யனையுமேனும், அப்பற்றுக்
கோடுகொண்டேயனையும், முடிவுபேறடைவதில்லே யின்
றன்றே! யாண்டுத்தன்மிகளின்கண் மும்மையுபாதி பூதமா
யுரைக்கப்பட்டதோ அவற்றின்மாட்டு மும்மையின் முடிவு
பேறு காணப்படுமாயின், அக்காட்சியானே ஆண்டுத் தன்மி
மாத்திரத்தில் இலக்கணநீக்கம் துணியப்படும். மும்மைவிசிட்
டத்தன்மியின்கண்ணேயின்றன்றே! ஆகலின், அதிவியாபகத்
தன்மை யவ்வாறே நிலைபெறும். மூன்றபாவங்களும் மும்
மையுபாதி வரைந்துகோடலானே இனிதுதிதப்பின்மையை
யெய்திய விசிட்டதருமியின்கண்ணிகழும், அவ்விசிட்டத்திலன்
றும், தனித்தனி யவைகளின்பால் அபாவமூன்றன் அமைப்
பை யறைவான் ஆற்றலின்மையின்.

## 412. அதிவியாத்தி விலக்கங்கள்.

இனி, அத்தகைய விசிட்டத்திற்குப் பிரமிதித்தன்மையி
னானே விலக்கம்என நினைகின்றனைகொல்! அபாவமூன்றுடை
யமும்மைச் சிறப்பைப்பற்றுக்கோடா யதன்பக்கத்துள்ளடக்கி

அத்தருமிவியத்திகளிற் பிரமிதிப்பெற்றி பிறங்குவதின்றும்; மற்றோ, அத்தருமிகளின் சொரூபமாத்திரத்தாம்; நுதலியவ பூர்வமூன்றும் பிரமிதித்தகைமையும்என்னுமிவை யாண்டுள வாமோ அது பிரத்தியக்ஷமெனவே கூறுவேமெனின்? கூறுவதாம்; பின்னும் பின்னபின்ன தன்மத்தான் வரைந்து கொள்ளப்பட்டதருமிக்கே பிரமிதிப்பெற்றியும், அபாவமூன்றுடைமையும் ஒருதலையா யுடன்படத்தக்கதாம். அங்ஙன மன்றோ:—பிரமிதிப்பெற்றிக்கொருபாலுறைவதாத லினியா மகம்நிகழ்த்தப்படாதாயின் யாவும்பிரமிதியாம் அல்லது ஒன்றும் ஆகாதாம். "அன்னியான பேக்ஷையா னமநியாமக, மன்னுமேற்சத்தசத்தேனுமாமெங்குந், தன்னியாமகந்தனுற்பாவ மாந்தமக், குன்னுமாறோரிட முறுவதாதலே"

418. விகற்பவாயிலாய் நியாமகநீக்கம்.

அந்நியாம்கம் ஆசிரயத்தில் விசேஷணீபூதமாயாதல், உபலக்கணபூதமாயாதல், உரைக்கவேண்டும்; ஆதியதில், பிரமிதிப் பெற்றியின் பற்றுக்கோட்டின்சிறப்பு யாதோ அதுவே அம்மூன்றபாவத்திற்கும் ஆமேலாயின் மும்மையான் வரைந்து கோடப்பட்ட அனுமிதியாதியின்மாட் டபாவமூன்றுங் காட்டப்பட்டிருத்தலின் மும்மையான் வரைந்துகோடப்பட்ட ஆண்டும் பிரமிதிப்பெற்றிய[illegible]வண்டும், வேண்டவே பிரமிதிப்பெற்றியானே அதன்விலக்கமின்றும். இனியன்னியம் வரைந்துகொண்டதிற் பிரமிதித்தகைமை, அன்னிய தன்மம் வரைந்துகொண்டதிலோ மூன்றபாவசம்பந்தமேலாயின் நின்பக்கத்தும் (அபாவமூன்றனோடு) பிரமிதித்தகைமைக்கு ஒருதரும விசிட்டாசிரயத்தன்மைவடிவ ஏகாசிரயத்தகைமையின்றும். விசிட்டமாயதருமியின்கண்ணுற்றதும் தருமியாசிரிதமேயாகும் எனக்கொண்டும் பிரமிதித்தன்மைக்கு அபாவமூன்றன் சமானாசிரயத்தகைமையில் அனுமிதியாதி மூன்றினும் வழக்கவ்வாறே நிலைபெறுமென்க.

### 414. உபலக்கண பக்க நீக்கம்.

இரண்டாவது மியையாதம், உபலக்கணிபூதமாய யாதாவ தொருதருமத்தானே எவ்விவ்வுபலக்கிததருமியுள்தோ அதுவே யுரனுய் மும்மைவிசிட்டமுமாம்; விசேடணத்தோடிருப்பனவேனும் விசேடியவத்துக்களெவையும் விசேடியவத்துவடிவமாயிருத்தலின், தண்டியாயபுருடனும் புருடனேபோலும் இன்னணமாகவே உபலக்கிதத்திலுமயல்வடிவமாகா மும்மைவிசிட்டமாய அனுமிதியாதியின்கண்ணும் பிரமிதித்தகைமையாசிரித்திருக்கும்; நியாமகமாய வுபலக்ஷணத்தானே வுபலக்ஷியவ்வபேதவியவத்திதியினுனே அதற்கும் வரைந்து கொள்ளப்பட்டதாந்தன்மை யுண்மையின்; உளதாகவே யதிவியாத்திவச்சிரப்பூச்சாமென்க.

### 415. அதிவியாத்தி வினுவிடைகள்.

ஆயினும் உபலக்கணத்தான் மும்மைவிசிட்டமாக வித்தருமியுபலக்ஷிதமாகவில்லை; மற்றே சொரூபமாகவெனின்? எவாதாம், இதன்கண்ணியம்பப்பட்டது, யாதுதான் அதனுபலக்ஷிதமாமோ அதுவே விசிட்டமுமாம், ஆயினும் விசிட்டவடிவத்தானே ஆண்டுபலக்ஷிதமாக வில்லையேயெனின்? உபலக்ஷிதமாகவேண்டாம், அவிசிட்டமாகவும் அஃதுபலக்ஷிதமாகவேயிலையாம், அன்றுயினே பிரத்தியக்கத்திலும் வேற்றுநிலைக்களத்தகைமை யடைவுறுதலின்.

### 416. உபசங்காரம்.

மேலோங்கும் பல்லவம்வெட்டும் விலாசவிளையாட்டாமதுசாலும்; ஆகலின், இங்ஙன மயலிலக்கணத்தும் அறையப்பட்ட இத்தூஷணக்கூட்டந் தாமேயுய்த்துணரத்தக்கதாம். “பார்த்திது தன்னையே பட்ட பாதரால், வார்த்தை யிங்கிது மிகவழுங்க லாயதாஞ், சேர்த்திடு மிலக்கணஞ் செப்ப லாவதோ, வார்த்தவெவ் வங்கிசத் தாலமை யுமே” அயற்கருத்தா

லறையப்பெற்றதாயினு மது பொதுவாகவும் பொருத்தமு டையதேயாம்.

### 417. அனுமானகண்டன ஆரம்பம்.

அனுமானமுமென் னறையப்பெறும்? கரணபக்கத்திற் குறியாராய்ச்சி யனுமானம்எனின்? குறித்தகைமை யாது கொல்! வியாத்தத்தற்குப் பக்கதருமத் தன்மையெனின்? ஐய மும்பலக்கணமாயின் ஆண்டு வியாபகத்தைக்கண்டும் அவ்வா ராய்ச்சியி லதிவியாத்தியாதலின். இதனானே, நிகழ்வதாயவதற் கும் (உபலக்கணத்தன்மை) இன்றும் அஃதிலாக்காலத்தும் உபலக்கணத்தன்மையுண்மையின், விசேஷணமாயின், வியாப கத்தை யனுமித்துத் தருமிநாசம்போலும் முயல்வின்மை யடைவுறுதலின் பக்கதருமத்தான் ஹேதுவினானே பக்காங் கிச விசேடியத்திற் சாத்தியசித்தியாம்; இத்தகையதாம் வே ற்றுநிலைக்களத்தகைமை இஷ்டமே யாமென்பதனானே இவ்வா றின்றுமெனின்? இன்றும் பக்கம்பற்றி வேற்றுநிலைக்களத் தன்மையேல் நியதமான ஒருநிலைக்களத்திலிருத்தலாந்தகை மை யிலக்கணவியாத்திக்கு லோபம் வந்துறுதலின், ஆயினும் விசேடியங்கொண்டு அஃதுளதாமேயெனின்? ஆகாதாம், யாண் டுச் சாமானியம் வியாத்திவலுவால் வரலாயதோ, ஆண்டுச் சாத்திய விசேடசித்தியும் சாமானியத்தோற்ற முடிவடையா மை வலுவானேயாமெனச் சாமானிய விசேடசித்தி யுபயோக மில்லாத பக்கதருமத்தன்மை யுனதிட்டமாம், கேவலம் துணி ந்ததைத் துணிதனீக்கற்பொருட்டே அனுமிதிகாரணத்தன் மையானே யிட்டப்படத்தக்கதாம். துணிந்ததைத் துணித லும் தன்பொருட் டனுமானத்திற் றேடமன்றுமென அனு மிதிமாத்திரஹேதுவின்கட் புகுவதன்று மஃதென்பதாம், விட விழைந்த:—“சிரவண மனனமெய்த் தியானத் தானுமே, வரையறு காட்சியான் வழுத்து மான்மனிற், றிரிவித மளவைக

டிராஞுஞ்சங்கர, மருவுமுங் தம்பொருட் டாகமாங் தரே" இத ஞனே ஐயத்தகுதியும் நீக்கப்பட்டதாம்.

### 418. வியாப்பியத்தன்மை இலிங்கத்தன்மையாமென்னுங் கடாவிடைகள்.

வியாப்பியத்தன்மையெனின்? வஸ்து கதியாய் வியாப்பி யத்திற்குச்சொரூபமாக வாராய்ச்சியனுமானமா? வியாப்பியமா கவா? ஆதியதாகாதாம், வியாத்தியைக் கவராதவனுனும் புகை முதலியவற்றின் ஆராய்ச்சிக்கு அனுமானத்தன்மை வழக்காத லின். இரண்டாவது மியையாதாம், வியாத்தியை யிலக்கும் அளவைக் கனுமானத்தன்மை வழக்காதலின். அதற்கும் வியாப்பியத்தகைமையைக் கவருந்தகைமை யவசிய மறைய வேண்டலின். இதனுனே இரண்டாவது மூன்றாவது சிறப்பு களும் சிதைக்கப்பட்டனவாம். தாரைப்பெருக்கில் அவ்வா றுந்தன்மை யடைவுறுதலின். வியாத்தியைக் கவர்ந்தவனுனும் ஒரோபோ திரண்டின் கவர்ச்சியேல், இவையிரண்டும் வியாப் பியவியாபகங்கள் என்னும் ஆராய்ச்சிக்கு அனுமானத்தன்மை வழக்காதலின். அஃதனுமானமே யாமென்னற்க; ஐயப்பாட் டையானே பக்கத்தன்மை யின்மையான் அதன் றன்மமாய ஹேதுவிற்குத் துணிந்ததைத் துணிதல்போலும் பக்கதரு மத்தன்மை யின்மையின்.

### 419. துணிந்ததன்கண்ணும் ஐயமிருத்தலின் மாசென்னும் விஞ்மாற்றம்.

தன்பொருட் டனுமானத்தி லித்தோடமின்றுமெனின்? அன்றும், காட்சியிலக்கணங் கதுவுதலின் சாக்ஷாத்தன்மைய ராக்ஷாத்தன்மை விரோதம் விரவலின். அவ்வியாபக விஷயத் தன்மையோடுங் கூடியெனின்? கூடாதாம், வியாப்பிய விட யத்தன்மையின்மை வழக்காதலின், வியாப்பியத் தன்மையோ பிரதியோகி யுடையதைக் கவர்வதாம், ஆகவே இதனது வியா

ப்பியம்மிதெனக் கவரப்பெறும்; பெறவே விசேஷணமாகிய வியாபகத்தினது கவர்ச்சியை யொருதலையாயுரையாடல்வேண் டும்; இன்றாயினோ; விசிட்டக்கவர்ச்சி விளம்பற்கேலாதாம். விசேடமாகவியாபக அவிஷயத்தன்மையோடுங் கூடியெனின்? என்னற்க, அக்கினிதூமங்கள் வியாத்தங்கள் என்னும் ஆத்த உபதேசத்தான், முன்னர் மிகுதியாகக்கவர்ந்த தீப்புகையுட னிகழ்ச்சி யுடையவன்றன், தீப்புகைகளைக் கவராதகாலத்தில் நினைப்பின் வயத்தானுதல் உண்டான வியாத்திக்கவர்ச்சியுடை யவன்றன் வியாப்பிய ஆராய்ச்சியனுமானமாம் ஆராய்ச்சி புணர்வுமாத்திரமன்றும், ஏதனுன் முதற்கவர்ச்சியில் வழக் காமோ. மற்றோ, ஒட்டியுணரு முணர்வாமெனின்? ஆகாதாம், விசாரத்தின் முன்னேனும், ஆத்த உபதேசத்தின் முன்னே னும், வியாத்தியையுணர்ந்து, மீண்டுமாத்த வுபதேசத்தானுதல் விசாரத்தானுதல் என்னுல் எவ்வியாத்தி கவரப்பெற்றதோ அதுவேயிதுவென வொட்டியுணர்பவனது வியாத்திஞானம் அனுமானமாம், விசேடமாக வியாப்பிய விடயத்தன்மையோ டுங்கூடியெனின்! கூடாதாம், அவ்வியாபகத்தன்மை வழக்கா தலின். ஒருவியத்தி விடயத்தன்மை வேறு வியத்தியிற்சம்பவி யாமையின், பொதுவான வியத்திவிடயத்தன்மையோ அதி வியாத்தியை யடைவித்தலின்.

### 420. விகற்ப உபந்யாசவாயிலாகச் சாத்தியஞாபகத் தன்மைத்தூடணம்.

மேலும், புகையுடைமையினுனே மலைமுதலியவற்றிற்கு எப்போழ்தேனு மொருபோழ்து தீயுடைமை தோற்றுகின் றதா? அல்லது அப்போழ்தே தீயுடைமையா? ஆகியதாகா தாம், அப்போழ்தே போலமற்றைய போழ்தினும் அழல் விழைந்தோன் முயல்கையாண்டு வேண்டலின். இரண்டாவது மினிதாகா, அக்கால் அழலுடையதாக வியாத்தத்தன்மை யறி

வமையாமையின். அக்காலெனப் புகைப்போழ்தவாவியதா மெனின்? ஆகாதாம், சிலபால் அயற்சமயத்தும் புகையினிருப்புளதாமென வேறுகாலத்திற்கும் புகைக்காலத்தன்மை யுண்மையின். அப்புகைக்காலம் அவாவியதாமெனின்? என்னற்க, அதுவெனுஞ்சத்தம் விசேட வியத்தியைக் கூறுவதாயின் தோற்றுவியாத்தி யுடைமையாம், யாதாவதொரு வியத்தியைக்கூறுவதாயினோ அறைந்ததோடத்தினடைவாம். ஹேதுவின்பக்கதருமமாகவும் மலமுதலியவற்றி விராததருமந்துணிபொருளாகாதொழிக, அதனுனே வேறுகாலத்தேனுகாதோ? அக்காலத்தை யுள்ளடக்கிப் பக்கத்தன்மையேல், யாங்ஙனம் பின்னர் நடுங்காமன் முயலுதல்? புகைப்போழ்தையுள்ளடக்கியெனின்? வழங்கியது திரும்பிவரும்; அப்புகைப்போழ்தெனின் அங்கிசத்தாற்றன்பாலிருப்பாம்.

## 421. வியாப்தி கண்டனம்.

வியாத்திசத்தப் பொருள்யாதென விளம்பவேண்டும், அவிநாபாவமெனின்? ஆகாதாம், ஒன்றன் இன்மையின்மையுளதாக மற்றொன்றன் உண்மை அவிநாபாவபதப்பொருளா? அல்லது ஒன்றன் இன்மையாயவழி மற்றொன்றன் இன்மையா? ஆதியதேலாயின் இன்மையினின்மை யுண்மைப்பொருளாம், ஆகவே ஒன்றன் இருப்புளதாயவழி மற்றொன்றனிருப்பாமெனக் கூறப்பட்டதாம். இவ்வாறுகவே, மண்ணுலாயதாந்தன்மை, இரும்பாற்போழ்தலாந் தன்மைகளின் உடன்பாடுகளும் வியாப்தியாம்.

## 422. எல்லா விடங்களிலுமாஞ் சம்பந்தவியாத்திகண்டனம்.

சிலபாலாஞ் சம்பந்தம் வியாத்தியன்றும், எல்லாவிடங்களிலும் ஆவதற்கே அவ்வாறுந்தன்மையெனக்கூறும் வேட்கையுண்மையின் எனின்? இவ்வெல்லா விடங்களிலுமாந்தன்மையென்பது யாதுகொல் சம்பந்தத்திற்கு? எல்லா அச்

ப்பியம்பிஃதெனக் கவரப்பெறும், பெறவே விசேஷணமாகிய வியாபகத்தினது கவர்ச்சியை யொருதலையாயுரையாடல்வேண்டும்; இன்றாயினோ; விசிட்டக்கவர்ச்சி விளம்பற்கேலாதாம். விசேடமாகவியாபக அவிஷயத்தன்மையோடுங் கூடியெனின்? என்னற்க, அக்கினிதூமங்கள் வியாத்தங்கள் என்னும் ஆத்த உபதேசத்தான், முன்னர் மிருதியாகக்கவர்ந்த தீப்புகையுடனிகழ்ச்சி யுடையவன்றன், தீப்புகைகளைக் கவராதகாலத்தில் நினைப்பின் வயத்தானுதல் உண்டான வியாத்திக்கவர்ச்சியுடையவன்றன் வியாப்பிய ஆராய்ச்சியனுமானமாம் ஆராய்ச்சியுணர்வுமாத்திரமன்றாம், எதனான் முதற்கவர்ச்சியில் வழக்காமோ. மற்றே, ஒட்டியுணரு முணர்வாமெனின்? ஆகாதாம், விசாரத்தின் முன்னேனும், ஆத்த உபதேசத்தின் முன்னேனும், வியாத்தியையுணர்ந்து, மீண்டுமாத்த வுபதேசத்தானுதல் விசாரத்தானுதல் என்னால் எவ்வியாத்தி கவரப்பெற்றதோ அதுவேயிதுவென் றொட்டியுணர்பவனது வியாத்திஞானம் அனுமானமாம், விசேடமாக வியாப்பிய விடயத்தன்மையோடுங்கூடியெனின்! கூடாதாம், அவ்வியாபகத்தன்மை வழக்காதலின். ஒருவியத்தி விடயத்தன்மை வேறு வியத்தியிற்சம்பவியாமையின், பொதுவான வியத்திவிடயத்தன்மையோ அதிவியாத்தியை யடைவித்தலின்.

### 420. விகற்ப உபந்யாசவாயிலாகச் சாத்தியஞாபகத் தன்மைத்தூடணம்.

மேலும், புகையுடைமையினானே மலைமுதலியவற்றிற்கு எப்போழ்தேனு மொருபோழ்து தீயுடைமை தோற்றுகின்றதா? அல்லது அப்போழ்தே தீயுடைமையா? ஆகியதாகாதாம், அப்போழ்தே போலமற்றைய போழ்தினும் அழல் விழைந்தோன் முயல்கையாண்டு வேண்டலின். இரண்டாவது யினிதாதா, அக்கால் அழலுடையதாக வியாத்தத்தன்மை யறி

வமையாமையின். அக்காலெனப் புகைப்போழ்தவாவியதா மெனின் ? ஆகாதாம், இலபால் அயற்சமயத்தும் புகையினிருப்புளதாமென வேறுகாலத்திற்கும் புகைக்காலத்தன்மை யுண்மையின். அப்புகைக்காலம் அவாவியதாமெனின் ? என்னற்க, அதுவெனுஞ்சத்தம் விசேட வியத்தியைக் கூறுவதாயின் தோற்றுவியாத்தி யுடைமையாம், யாதாவதொரு வியத்தியைக்கூறுவதாயினோ அறைந்ததோடத்தினடைவாம். ஹேதுவின்பக்கதருமமாகவும் மலைமுதலியவற்றி லிராததருமந்துணிபொருளாகாதொழிக, அதனானே வேறுகாலத்தேனுகாதோ ? அக்காலத்தை யுள்ளடக்கிப் பக்கத்தன்மையேல், யாங்ஙனம் பின்னர் நடுங்காமன் முயலுதல் ? புகைப்போழ்தையுள்ளடக்கியெனின் ? வழங்கியது திரும்பிவரும்; அப்புகைப்போழ்தெனின் அங்கிசத்தாற்றன்பாலிருப்பாம்.

## 421. வியாப்தி கண்டனம்.

வியாத்திசத்தப் பொருள்யாதென விளம்பவேண்டும், அவிநாபாவமெனின் ? ஆகாதாம், ஒன்றன் இன்மையின்மை யுளதாக மற்றொன்றன் உண்மை அவிநாபாவபதப்பொருளா? அல்லது ஒன்றன் இன்மையாயவழி மற்றொன்றன் இன்மையா ? ஆதியதேலாயின் இன்மையினின்மை யுண்மைப்பொருளாம், ஆகவே ஒன்றன் இருப்புளதாயவழி மற்றொன்றனிருப்பாமெனக் கூறப்பட்டதாம். இவ்வாறுகவே, மண்ணுலாயதாந் தன்மை, இரும்பாற்போழ்தலாந் தன்மைகளின் உடன்பாடுகளும் வியாப்தியாம்.

## 422. எல்லா விடங்களிலுமாஞ் சம்பந்தவியாத்திகண்டனம்.

இலபாலாஞ் சம்பந்தம் வியாத்தியன்றும், எல்லாவிடங்களிலும் ஆவதற்கே அவ்வாறுந்தன்மையெனக்கூறும் வேட்கையுண்மையின் எனின் ? இவ்வெல்லா விடங்களிலுமாந்தன்மையென்பது யாதுகொல் சம்பந்தத்திற்கு? எல்லா அச்

சாதியையுடைய வியத்திகளில் இருக்குந்தன்மை யெனின்? எல்லா அச்சாதியையுடைய வியத்திகளை யறியாதபோழ்து இது துணிய முடியாதாம். எல்லா அவ்வியத்திகளையுஞ் சிறப் பாகவுணர்வான் முடியாதாம். அவ்வவ்வுணர்வின் காரணமமை யாமையின்.

## 423. சாமானியப் பிரத்தியாசத்தி கண்டனம்.

பொறியாற் சாமானிய இலக்கணைச் சம்பந்தத்தானே வியாத்தியைக் கவரும்வேலையில், எல்லா அச்சாதியையுடைய வியத்திகள் கவரப்பெறுகின்றனவாம், இதை யங்கீகரியா விடின் அவியைமணந்து முடையின்மகவுவேண்டுதல்போலும் என வாசஸ்பதியாக்ஷேபங்கூறி யுள்ளாரெனின்? இங்ஙன மேலாதாம், சாமானிய இலக்கணைப் பிரத்தியாசத்தியினனே வியாத்தி கவர்பவனுக்கு முற்றறிவுண்மை வழக்காதலின். யாண்டும் அறியாமை நினக்குறுதொழிக வென்பதாகச் சர் வஞ்ஞத்தன்மையின் சம்பாதனமாமெனவிலக்கும் வேறுதே வதையும் விளைவுறுதாம். பிரமேயமாக வியாத்திகவருங்கால் எல்லா அச்சாதியையுடைய வியத்திகளிற் பிரமேயத்தன்மை யானேயாவும் அஞ்ஞான்றறியப் பெறுவதேயாம், அயலுரு வத்தானே அல்லவாமெனின்? அல்லவாம், வேற்றுருவத்தா னே யது பிரமேயமாமேலாயின், வேற்றுருவமுடையதும் பிர மேயத்தன்மைக்குப் பற்றுக்கோடாதலானே யாங்ஙனங்கவரா மையாம்? இனிப்பிரமேயமன்றேல் வேற்றுருவத்தானே யஃ திலதேயாம். எவ்வுருவத்தானேயுளதாமோ அவ்வெலாவற்று னே பிரமேயமென இருக்கும் ஆகாரமுழுவதானும் அறியப் பட்டதாந்தன்மைவழக்காம்; அவ்வாறுந்தன்மையை யங்கீ கரிக்கினே, பிரமேயத்தன்மை தரிசியாநின்றால் எமது மனே விருத்தியறியப்பெறும், பெறின்விசுவசிப்பேம்.

## 424. பேத அபேதமதம்பற்றி விஞவிலக்கம்.

உளதாகுகவிது தான், அன்யோன்யாபாவ வைதர்மியாதி பேதம் தனித்ததாவதேபோல வத்துக்களின் ஐக்கியமுமாம், அதனுற் பிரமேயத்தன்மையாதியும் தருமிகளின்ஒருமையொன் றேயாம், ஆகவே பிரமேயத்தன்மையானே அறியப்பெற்ற அவ்வியாவுமே அவ்வைக்கியத்தானே புலப்படும் ஒருவியத்தி வடிவனவாகவே அறியப்பெறுவதாகும் என யாங்ஙனம் அவ் வொருமையையறிபவனுக்கு முற்றறிவுண்மையாதல்? வியத்தி களின் நாஞத்தன்மையும் பிரமேயமென அதுவும் தருமியாகக் கவரத்தக்கதேயாமெனக்கழுறற்க. எதனுலதுவும் பிரமேயத் தன்மைமுதலியவற்ருனே கவரப்படுவதா யொன்றேகவரலா குமோ, அதனுல்:—"ஏகபாவங் தத்துவத்தானே, யெதனுற் கண்டன மதனுற்கண்டனம், சர்வபாவங் தத்துவத்தானே" என்பதாம்; தத்துவத்தானே, அவ்வுருவமுடைமையானே ஒரே வடிவமாம். அவ்விதுவும அமைவுரு தாம், நாஞ ஏகம்என்ப தாக முரண்பட்டதோற்றமுன்னிற்றலின்.

## 425. இரண்டாவது கற்பநீக்கம்.

இனி, வேற்றுருவத்தானே நாஞத்தன்மை பிரமேயத் தன்மை முதலியவற்ருனேயோ ஐக்கியம், என்னும் விவக்ஷை யினுனே வியாகாதம்வராதாம்; ஆயின், பிரமேயத்தன்மைக் காதாரமாய வியத்திபேதமுழுவதையும் கவர்தலின் முற்று முணர்தலினடை வவ்வாறேயாமென்க.

## 426. சர்வவியக்திக்கவர்ச்சியை யங்கீகரித்தும் வியாத்திக் கவர்ச்சியசம்பவமாம்.

மேலும், சாமானிய இலக்கணைச்சம்பந்தத்தானே அச்சா தியுடையதன்விசேடக்கவர்ச்சியேல் அவ்வெல்லாவியத்திகளி லும் சம்பந்தமுளதாமென்பதி லளவையாதாம்? எல்லா வியத்திபோலு மதன்சம்பந்தக்கவர்ச்சியிலும், வியாத்தியைக்

கவரும் பொறியேயளவையாமெனின்? அற்றாயின், சிலபா விங்ஙன் றுணிந்ததற்கு எப்பிறழ்ச்சிகாணப்படுகின்றதோ அஃ தாகாதாம், அச்சம்பந்தம் பொறியாலுணரப்பெறுதலின். பின்னர்ப்பாதிக்கப்படுதலி னுண்டுச்சம்பந்தத் தோற்றம் மயலா மெனின்? ஆகாதாம், சாமக்கிரியபேதமாக, ஒன்றுமயலற்ற தெனவும், மற்றொன்று மயலுற்றதெனவும் வேறுபிரித்தல் கூடாமையின், தோஷஅதோஷ விசித்திரத்தன்மையின் பகுப் புத் துயருற்றுந் தொகுக்கமுடியாததாகலின்.

427. காரியவிலக்ஷணத்தன்மையானே காரணவிலக்ஷணத் தன்மையென்னும் வினாவிலக்கம்.

காரியபேதத்தானே சாமக்கிரிபேதமுமுன்னத்தக்கதா மெனின்? உன்னுக, அதுதானே யெங்ஙனுன்னத்தக்கதென உரைக்கவேண்டும். எல்லாவிடத்தினுமாஞ் சம்பந்தவுண்மை யின்மை வடிவினதாகவாண்டாகாதாம்; அக்கால்வருஞ் சம் பந்தங்கட்கிருப்பின்மையினானே அகாரணத்தன்மையுண்மை யின். அச்சாதியுடையவைகடம்சம்பந்தத்தின் புலப்பாட்டின் முன்னர்ப் பொதுவாகச் சத்துவம் மயலுண்மை மயலின்மை களின் சாதாரணமாயாம்; ஒருபாலுஞ்சம்பந்தமிலதேன் மய லுதியாமையின்.

428. இரண்டாவது கற்பநீக்கம்.

இதனுனென்னே! ஆயின், காரியவேற்றுமையானே காரணவேற்றுமையயலே கற்பிக்கப்படுமெனின்? அஃதென் னேபொறிச்சககாரிபூதமா? வேறுகாரணமேயா? கற்பிக்கப் படுவதென்ப தியம்பவேண்டும்; ஆதியதாகாதாம், பொறிக் குப் பாவிபூதசம்பந் தாங்கிசத்திற் பிரமாணத்தன்மைக் கற் பனையிற் பிரமாணமின்மையின், மாறாக, உபாதியையுற்ற பொறிவியாபாரத்தையுடைய விசாரவானுக்கு, முன்னர்த் தோற்றுஞ்சம்பந்தத்தையுடைய தருமியிரண்டினது வியாத்தி

யின்றுணிவு காண்டலின். அப்போழ்தும், மனமுளதுபொ றியாகவெனின்? உளதாகுக, அக்காரியத்தின்கண்ணே மனங் காணமாவதன்கண்ணே அளவையொன்றுங்காணேம், இன்றி யமையா தினிது கற்பிக்கத்தக்கதாய பிறிதொன்றுனே எல் லாக்கூடாமையும் உபசாந்தியாதலின். காரணத்தன்மைமாத் திரமோ, விழிமுதலியவற்றுல் விளைந்தஞானம்போலும் மன திற்கண்டாம். விழிமுதலியவைபோலும் கரணம்பிறிதொன் றேயது கற்பிக்கத்தக்கதென ஏழாவது பொறியாதல் அயல ளவையாதல் இலையயும், அன்றியே, விழிமுதலியவற்று லாய புலப்பாட்டின்கண்ணும் விழிமுதலியவற்றிற்குக் கா ணத்தன்மை கதுவுறுதாம். ஆண்டும், அவற்றுண்மனமே யின்பமுதலியவற்றின் புலப்பாடேபோலும் கரணமெனக்கழ றல்கூடும், விழிமுதலியவையோ சககாரிமாத்திரமாம். இரண் டாவது பின்புறுதாம், வேறுபொறிவழுக்காதலினுனேனும், வேறளவைவழுக்காதலினுனேனுமென்றுணர்க.

429. பாவபதத்தோடு நகாரசம்பந்த கற்பவிலக்கம்.

வினுபாவம், ஒன்றன் இன்மையானே பிறிதொன் றன் இன்மையின்மையாமதனீக்கம் அவினுபாவமாம் என் னும் இரண்டாவதுபக்கமும் இனிமையற்றதாம், இவ்வாறே இரும்பாற் போழ்தலாந்தன்மையின்மையும், மண்ணுலாயதாந் தன்மையின்மையும், சிலபாலுளதாமெண மண்ணுலாயதாந் தன்மைக்கும் இரும்பாற்போழ்தலாந் தன்மைக்கும் அவிநா பாவமடைவுறும். இன்மைகளொருகாலுறலும் எல்லாவிடங் களினுமுறலாகவேண்டுமென விளம்பும் வேட்கையாம், ஒருபா லினுறலாந் தகைமையல்லவாம், அதனுனே யறையப்பெறுங்கின் றது அவிநாபாவநியமமெனவெனின்? ஆகாதாம், எல்லா விடத்துமுறலாதலி னுடன்பாட்டுத் துணிபைநீக்கிய நியாயத் தானே எல்லாவிடத்துமுறலாதலி னெதிர்மறைத் துணிபிற்கும்

முடியாமையுண்மையின், முடியுமேலோ, உடன்பாட்டுத்துணி பே யுளதாகுக, வெல்லாவிடத்துமுறலாதல், எதிர்மறைத் துணிபாங் கோணலிணையியற்றியது சாலும்.

### 430 வியாத்தியின் வேற்றிலக்கண விலக்கம்.

யாண்டு விபக்கத்தின்கண்ணிருப்பதிற் பாதகமுளதோ அவற்றின்சேர்க்கை வியாத்தியாமென்பர் சிலர்; அஃதொவ்வா தாம். விபக்கத்தின்கண்ணிருப்பதிற் பாதகமியாதுளதோ அது பிரமாணமாயாதல் தருக்கமாயாதல் இருக்கவேண்டும்; முதல தில், ஆண்டிந்திரியமாகாதாம், அது சம்பவியாமையின், மாறு யினே, பிறழ்ச்சிபிறழ்ச்சியின்மையையமாகாதாம்; அனு மானமுமாகாதாம், எல்லையில்லாது செல்லலாமென்னும் வழுக் காதலின்; அருத்தாபத்தியுமாகாதாம், அனுமானத்தினுமய லாகாமையின், குறியுடையதனின்மையினுனே குறியின்கூடா மை வேறுகவாயினும், அதனுனே குறியுடையது துணியப் பெறுதலின் அனுமானத்தாலாற்றியதுசாலும்; இன்னண மாகாதாயினே அவற்றிற்கு வந்த தென்னேகொல்!

### 431. அங்கீகரித்துந் தோடங் கூறல்.

உளதாகுக தான் எங்ஙனமேனும் ஆண்டர்த்தாபத்திப் பாதகம், ஆயினும், எத்தகையதங்கீகரிக்கப் பெறுவதெனை வினவப்படும், விபக்கவிருத்திபாதக சகிதமாக யாண்டுச் சில பாலன்வயம் வியாத்தியா? அல்லது அஃதோடும் எவ்விடத்து முறுமன்வயமா? அல்லது, விசேடணநேடலாணெமக்காக வேண்டுவதென்னே, அதனோடுகூடிச் சாமானியமாக அன் வயம் வியாத்தியா? அல்லதுதான் எவ்விடத்துமுறுமன் வயமா? அதுவும் விபக்ஷத்திற்பாதகத்தானுணரப்பெறுவதா? ஆதியதாகாதாம், விகற்பம்பொருந்தாமையின், அங்ஙனமன் றே:—விபக்கத்திலிருப்பதிற் பாதகம் எல்லாவியத்திவிடயமா? அல்லது சாமானிய விடயமா? ஆதியதில், யாண்டுதான் அனு

மானம் முயல்வுறுத்தப்பெறுமோ ஆண்டின்றியமையாதிருப்ப தாய வேறுவிதமாய் விளைதலாம் பாதகபூத அருத்தாபத்தியி ஞனே துணிபொருடுணியப்படுதலின், அநுமான விசனங் கொண்டவதிப்படல் சாந்தமாம்.

432. இரண்டாவது விகற்பநீக்கம்.

இரண்டாவதில், சிலபாற்பிறழ்வுறினும், சிலபாற்பிற ழாமைகொண்டு பாதகத்திற்குப் பயனுடைமையாம், புகை யுடைமைமாத்திரம் அழலுடைமைமாத்திர வியதிரேகியென்ப தானவடிவமன்றே சாமானியமாக விபக்ஷபக்ஷம், ஆண்டும் பாதகம் அவற்றின் அவிரோதத்தின்கண் முடிவுபெறும். அவி ரோதமும் சிலபாற் கூடியிருத்தலாளொருதலையாயுண்டாம்என மண்ணுலாந்தன்மைக்கும் இரும்பாற்போழ்தலாந்தன்மைக்கும் இவ்வாறுய வியாத்தத்தன்மை வழக்காம்.

433. இரண்டாவது மூன்றுவது நீங்கல்.

இரண்டாவது மேற்றமுருதாம், விசேஷணம் வீணாத லின், எவ்விடத்துமுறுமன்வயம் எனவேயியம்பலாம், அதுவும் பொருந்துருதென அறையப்பட்டதன்றே. மூன்றுவதும் முரணும், பாதகத்திற்குச் சாமானிய விசேட விஷயத்தன்மை விகற்பத்துட்கூறிய வூகத்தானே நீக்கியிருத்தற்றன்மை யுண் மையின்.

434. நான்காவது விகற்ப நலமிலாமை.

நான்காவதும் நலமின்றும், அங்ஙனமன்றே:—யாது வயத்திற்கு எவ்விடத்துமுறுந் தகைமையியம்பவேண்டும், எல்லாப்புகை வியக்திகட்கும் தீச்சம்பந்தித்தகைமை யாதுள தோ அது வியாத்திகவரும்போது கவரப்பட்டதாயின், புகை யுடைய வியத்தியாய பக்கத்திற்கும் தீயுடைமை முன் கவரப் பெற்றது நினைக்கப்படுவதே யாகுமென வனுமானஞ்சென்ற

தாம். சாமானியவனனுடைமையதற்கும் கவரப்பட்டதே யாகும், விசேடமாகவோ கருதப்பெறுமெனின்? விசேடமாக வென வென்னனுடைமைக்கு விசேடம் வியத்திரூபமாய் விளம்பும் வேட்கையா? அல்லது காலதேசாதி சம்பந்தம் அதற்கா? ஆதியதாகாதாம், எல்லாவியத்திகளும் வியாத்தியின் கண்ணே புலப்படுவனவாக நீயேயுடன்பட்டிருத்தலின். இரண்டாவதுமின்புறுதாம், அக்கினியுடைய வடிவத்தானே நினைந்த புகையுற்ற விசேடபக்கமாயவதற்கு விழிமுதலியவற்றானே மலைத்தன்மைமுதலிய தேசகால விசேடாதியுடைமையானே பரிச்சேதம் விளைதலின். முன்னனுபவம்வைத்த சமஸ்கார சகிதவிழிமுதலியவற்றானே அளவிடப்பட்ட இக்காலத்தாதல் தேசவிசேடத் திருத்தன்முதலியவற்றை யுடையவனுக்கு, அவனேயிவனென்னும் ஒட்டியுணருமுணர்வா லறியப்பட்டதாந் தன்மையங்கீகரிப்பதேபோல வீண்டுமுளதாகுக, அனுமானத்தாலாற்றியது சாலும்.

## 435. உபமானசத்தங்கட்குப் பாதகத்தன்மை விலக்கம்.

உபமானமும் பாதகமாக விபக்கத்தில் விளம்பவியையாதாம், அதற்குநியதமாய விடயத்தன்மையுண்மையின் இத்தகையவிடயத்தில் உதயமாகாமையின். சத்தமுமாகாதாம் உபதேசிக்கப்பட்ட ஆத்தனிலனுயின் வியாத்தியுணராமை வழக்காதலின்.

## 436. அநுபலப்திக்குப் பாதகத்தன்மைநீக்கம்.

அபாவமோ ஒருகாலாகலாம், அதுவும் நிரூபிக்கப்படுவதாம்பிபாருந்துவதில்லை, இன்னணம் அஃதறையத்தக்கதாம், வன்னியிலாமற் றாமமிருக்குமாயின் அவ்வாறுபுலப்படலாமே புலப்படுவதோ இன்றும், ஆகலின் புலப்படாமையின அஃதிலாமலிராதென்பதாம். அதுவுமொல்லாதாம், அங்ஙனமன்றே:—இலபாற்பிறமுதல் காணாமையின் இவ்வபாவம்பிரவிருத்

திக்கின்றதா? யாண்டும் பிறழுதல் காணுமையினு? ஆதியதா காதாம், மண்ணுலாயதாந்தன்மைக்கும் இரும்பாற்போழ்த லாந்தன்மைக்கும் வியாத்தத்தன்மைவழக்காதலின் இரண்டா வதுமாகாதாம், யாண்டும்போக்கிய அநுபலம்பமா? அநுப லம்பமாத்திரமா? என்பது கூறவேண்டும்; முதலதுமுாணும், யாண்டும் யோக்கிய அநுபலம்பஞ்சம்பவியாமையின். மற்றது மற்றதாம், மண்ணுலாயதாந்தன்மைக்கும் இரும்பாற்போழ்த லாந்தன்மைக்கும் சம்பவித்தலின். ஆண்டுவச்சிரமணியின் கண்ணே பிறழ்ச்சியாமெனின்? என்னற்க, அதனது அதரி சன தசையிற்பிறழ்ச்சி அறியப்பெறுமையின், அதனது தரி சனதசையில் ஆண்டுளதாம்பிறழ்ச்சி. யாண்டொருகாலும் பிற ழ்ச்சித்தரிசனமிலதாமோ ஆண்டுவியாத்தியெனின்? என்னற்க ஈண்டும் பிறழ்ச்சிகாணப்பெறுவதில்லை யென்பதன்மாட்டும் நியாமகங்காணுமையின்.

437. தருக்கத்திற்குப் பாதகத்தன்மைவிலக்கம்.

விபக்ஷத்திற் பாதகந்தருக்கமெனவும் விளம்பமுடியா தாம், தருக்கத்திற்கு வியாத்திமூலத்தன்மையை யங்கீகரிக் கின் எல்லையில்லாதுசெல்லும் வழக்காதலின், அஃதுடன் படாவிடின் மூலஞ்சிதிலமானதாற் றருக்காபாசத்தன்மை வந் துறுதலின்.

438. உதயனருரைத்த விஞநிரூபணம்.

இனியது கூறமுடியாதெனக் கூறுதியோ அங்ஙனமன் ளே:—அனற்புகைப்பிறழ்ச்சிச்சங்கையிற் பாதகந்தருக்கமிது பகரப்படும், புகைதீயைவிட்டுப் பிறழுமாறுற் காரணமற்ற தாய் நித்தியமாம், உளதாகாமலேனும்போம், அவ்வித்தருக் கம்உத்தரமற்றதாம், ஆண்டுச்சங்கையில் வியாகாதம்வருத லின், எதன்கண்ணே ஆசங்கைசெய்யின் தனதுகிரியை வியா காதமுதலியவையாந் தோடங்கள் அவதரிக்கமாட்டாவோ; அதுவேயாசங்கிக்கப்படுமென்ப தலகம்ரியாதையாம்; இன்

ணம், யாண்டும் உத்தரமற்றதருக்கம்பாதகமாகக் கூறத் தக்கதாம்.

## 439. வினவிலக்கம்.

இங்ஙனமியையாதாம், இவ்வாறுவினவத்தக்கதாவென்? எதன்கண்ணேது பலபாவமேயுண்டர்காதோ, இவ்வாறேவின வத்தக்கதாம்; அக்கினியைவிடுத்து அன்னியவேதுவினுனும் இஃது திக்குமென. இங்ஙனமாயின் புகைக்கு ஏகஜாதித்தகை மையாகாதாம் என நவிலற்க, சிலபாற் பொறிபயந்ததகைமை யும், சிலபாலனுமானுதிபயந்ததகைமையு மிருப்பினும் ஞான ஒருஜாதியுடைமைபோலு மஃதொல்லலின், ஆண்டுப்பொறி முதலியவற்றிற்கு, உள்ளடங்கியசாமானியமாகிய சாக்ஷாத்கா ரித்தன்மை முதலியவற்றிற் சாதகத்தகைமையாம், ஞானத் தன்மையின்கண்ணின்றுமெனின்? இன்றும், ஞானத்தன்மை காரணமற்றதாமென்பதைப் பரிகரிக்கும்பொருட்டுத் தொடர் ந்தவதன்காரணம் உன்னுலின்றியமைய்யா துரையாடத்தக்கதா கலின். வன்னிக்கும் தூமவிசேடத்தின்கண்ணே சாதகத் தகைமையது போல் வினவக்கூடலின். ஆண்டுத் தீக்கிளப்பிய விசேடம் புகைக்கண்ணேகாணப்பெறவில்லையெனக் கூறுதொ ழிக; அதன் காணப்பெருமைக்கு ஆராய்விலாமல் வேறு ஹேதுவாக்கப்பட்ட உள்ளடங்கியஜாதிகாணுமையானே தகுதி யிலாமையின் விகற்பிக்க முடியாமைபொருந்தலின்; வேறு ஹேதுவாலாக்கப்பட்ட விசேடந்தூமத்திற்குக் காணப்படுமா யின் அது விகற்பிக்கப்படுமென்னுஞ் சம்பாவனை நீக்கமுடியா மையின்.

## 440. ஞானத்தன்மை காரணமற்றதாவதிற் சங்கையுஞ் சமாதானமும்.

ஆன்மமனயோகம் தொடர்ந்தகாரணமாக ஞானஉற்பத்தி யின்கண்ணே யுளதாமெனின்? ஆகாதாம், ஆன்மமனயோகத்

தானே உண்டாவது ஞானமாயின் இச்சைமுதலியவைவயும் ஞானமெனவாகுமன்றே. அதிர்ஷ்டவிசேஷமேனும், ஆற்றல் வேற்றுமையேனும், ஞானத்தன்மைப் பொதுமையேனும், ஞானமுன்னின்மையேனும், ஆண்டுத்தொடர்ந்த காரணமெனக்கழறப்பெறுமாயின், அதனினயலினும், வன்னிப்பிறழ்ச்சியினுந் தூமத்திற்கு ஒருஜாதியுண்மைப் பிரயோஜகமாகச் சங்கிப்பான் கூடியதேயாம்.

### 441. கண்டதிருப்பக் காணுதலைக்கற்பித்தலின் விளுவிலக்கம்.

திருஷ்டம்பிறழின், அதிருஷ்டாதியானே ஏகஜாதியுண்மையினிதுகற்பித்தலாமெனின்? ஆகுக திருஷ்டத்திலங்நிச்சயம், ஈண்டும் பிறழ்ச்சிகாணப்படாதாம் என்பதன்கண்ணே நியாமகமிலாமையின் வினவப்படும். இவ்வாறுவினவப்பட்ட வுனக்கு ஓரிடத்துமனுமானமுண்டாகாதாம் பிரதிவாதி யாத்மாதியனுமானதியில்லாமற் கதையின்கண்ணே முயல்கை கூடாமையின் சுயம் தம்மாற்செய்யத்தக்கனவாய அனுமானதிகளிலித்தகைய சங்கை மேவுதலின் அதுவேவியாகாதமாமெனின்? ஆகாதாம், புகைபோலவியத்தியினும் (வன்னியினும்). வன்னிகாரணவிசேடவனுமானத்திற் கிவ்வாறுகவே நல்லனுமானத்தன்மைவழக்காதலின். சாமக்கிரியின்சமத்தானே பிரமையப்பிரமை விசித்திரத்தன்மை கூடாமையின். சாதாரண தருமதரிசனவிசேட அதரிசனதிகளிருந்தபோதினும் சங்கையுமுதியாதிருப்பின் சாமக்கிரியிருந்தபோதினும் காரியமுற்றாகாமையின் பிறனுக்குணர்வுதிப்பான் வசனதிவடிவஞான சாமக்கிரியையுண்டாக்குவான் முயன்றவுனக்கும் தற்கிரியை வியாகாதஞ்சமமாம்.

### 442. வியாகாதசாம்யாபாவ சங்கைபரிகாரங்கள்.

வியாகாதமேவிசேடமாதலின் அதன்காட்சியின்சங்கைச் சாமக்கிரியே யென்பக்கத்திலில்லையாகலின் யாங்ஙனவியாகா

தம் ஒப்பாதலெனின்? அன்றும், அதுவோ ஆண்டு ஆகாராதி காரணத்தான் ஆவதெனை அங்கீகரிக்கத்தக்கதாகாதாம், கூட விஷயமாய அதற்கு மேல்வழக்குண்மையின்; கூடத்தி (பொய்மி)னும் வேறாய துசம்பாதகமாக அளவையான் அளக்கப்பட்டதற்கேயாமெனின்? அதற்குத்தருக்க அவசரத்தின்கண் ணீக்கப்படுந்தன்மையுண்மையின். ஆகலின் எவ்விவ்வியாகாத ரூபவிசேடதரிசனம் சங்கைப்பகையாய்ச் சாற்றப்படுமோ அஃதென்னே அளவையானேயாண்டேனும் உண்டாவதாக வுரைக்கத்தக்கதா? தருக்கத்தானா? முதலதேலோ, சங்கையி னிருப்பும் அவ்வளவையானே கோடற்பாற்றும், சங்கையி ருந்தவழிவியாகாதம் வருகின்றமையின்; சங்கையில்லாத வழியும் வியாகாதமாமேலாயினே, சங்கிப்பவனுக்குஞ் சங்கி யாதவனுக்கும் வியாகாத ஒப்புத்துணியப்பெறுவதேயாம்; சங்கையின்மாட்டும் அஃதளவையாகுக்கேவ இத்துணையானே யென்? முன்னுண்டாயசங்கையைப்பற்றி நிலைபெற்ற வியா காதரூபவிசேஷதரிசனத்தான் வேறுசங்கையுண்டாகாதாமெ னின்? ஆகாதாம், வியாகாதமிருக்குங்கால் அதுபற்றுஞ்சங் கையினானே சங்கிக்கப்பட்டவியபிசாரத்தன்மையாம், அச்சங் கை யுபாமத்தையுறினோ அதைப்பற்றும் வியாகாதரூபவிசேஷ மிலாமையின் வேறுசங்கையுண்டாயின் நீக்குவது யாதோ வென்பது விளம்பத்தக்கதாம்.

## 443. வியாகாதமின்மையி னங்கீகாரத்தால் வினாவிடைகள்.

அக்கால் வியாகாதவடிவவிசேடம் ஆகாதுதானெழிகவே, ஆண்டதனுணர்வாதல் அதனாலாக்கப்பட்ட சமக்காரமாத லுளதேயாகுமன்றே, விசேடவுணர்வதன் சமக்காரங்களும் விரோதிகளேயாம். சொரூபமாகவுருவானும் விசேடத்தின் நிலைபேறு அவ்வாறாகாதாமெனின்? என்னற்க, பற்றுக்கோ டுள்ளளவுமிராது முன்னிருந்தவிசேடத்தின்காட்சியாதல் அத

ஞலாயசமக்காரமாதல்யாதோ அதற்கு அயற்சமயத்தும் அத னநுபிரதிகூல சமுசயப்பலைத்தகைமைபோல் சினியுடைய தன்பாகபக்கத்திற் பரமாணுவின் பாகபக்கத்திற் பூர்வம் கறுப் பாகவுணரப்பெற்றுக் காலவேறுபாட்டில் ஊளவாயபாகமு டைய கும்பத்திற்கும், பரம்பரையாகவதைத்தொடங்கும் பர மாணுவிற்கும், பாகத்தாலாயரூபவிசேடமுடைமையில் ஐயம் நிகழாதொழியவேண்டும். சங்கையின்பால் வியாகாதம் ஆமே லாயின், சங்கையைப்பற்றிய விசேடரூப வியாகாததரிசனத் தான் சங்கையிலயற்சங்கையாகாதொழிக, பிறழ்ச்சியைப்பற் றியதாயினோ பிறழ்ச்சியுளதேயாம், வியாகாதஆசிரயமாய விய பிசாரத்திற்கும் அளவைபாலளத்தலைமைதலின்.

## 444. அநவஸ்தைப்பரிகார சங்கைப்பரிகாரம்.

ஆநாதிமூலபூத் வியாப்தியையுடையனவாம் அத்தர்க்கங் கள்எனின் ? என்னற்க், அம்மதிக்கு அளவையாலளக்கப்படுந் தன்மை துணியப்பெறுமையின்; தேகத்திலத்தகையதனதான் மமதிக்கும் அப்பிரமைத்தன்மையங்கீகரித்திருத்தலின், அநா தித்தகைமை துணியப்பெறுமையும் இருபாலும் ஒப்பாதலின்.

## 445. தருக்கத்தானே வியாகாத வுணர்வின்நீக்கம்.

இதன்கட்பிறழ்ச்சியாமெனச் சங்கிப்பின் வியாகாதமாம், என்னும் வடிவினதாயதருக்கத்தானும் வியாகாதவுணர்ச்சியுண் டாகாதாம்; வியாகாதத்தைப் புகலுந் தருக்கத்திற்கு மூலஞ் சிதிலமேலோ தருக்கப்போலித் தகைமைவந்துறுதலின். அத் தகையதிற்கும் வியாகாத சாதகத்தன்மையாமேலாயின் வியா காத அடைவுமொப்பாம்; தருக்கப்போலியானே உனக்கும் வியாகாத மடைவிப்பான் எளிதாகவே முடியும்.

## 446. தருக்கத்திற்கு வியாத்தி மூலமாயின் அநவத்தையாதல்.

இனித் தருக்கத்திற்கு மூலபூதமாக வியாத்தியங்கீகரிக்கப் படும், ஆண்டும் பிறழ்ச்சிச் சங்கையுளதாயவழி மீண்டும்

வரம்பின்றியோடலேயாம்; ஆண்டும் வியாகாத சம்பாதனமா
மேன் மீண்டும் இன்னணம் எல்லையில்லாமற் செல்லலேயாம்;
"ஆகலினும் மரும்பொரு ளிதன்கண் ணக்கரஞ் சிலசில
மாற்றி, யூகமினினது காதையே யினிதா யோதுவங் கேள்வி
யாகாதம், வகலற் றிருப்பிற் சங்கையு மிருக்கு மிலையெனிற்
சங்கைதிண் ணமதாற், சாகிகல் வரையா சங்கையாந் தருக்கஞ்
சங்கையி னவதியெங் கேயோ"

447. வியபிசார சங்கையினுனே யனுமானங் துஷ்டமாதல்.

பிறழ்ச்சியின்மையும் ஒன்றன்பரித்தியாக விலக்கத்தான்
மற்றதன் சேர்க்கையாம், சமசமயதிருஷ்ட நஷ்டத்திலும்
அதிருஷ்டம் சங்கிக்கப்படும் என்பர்.

448. வியாத்தியின் வேற்றிலக்கண கண்டனம்.

இயற்கையாய சம்பந்தம் வியாத்தியென்பன்பிறன்,
அவன் வினவத்தக்கவனுவன், எதன்து இயற்கையாயது,
சம்பந்திகளினதா? அல்லது பிறிதினதா? கடையதாகாதாம்,
மாறுபாடுமருவுதலின்.

449. இயற்கைச் சத்தார்த்த விகற்பம்.

ஆதியில், யாது இயற்கையாயதன் சத்தார்த்தமென வின
வல்வேண்டும், சம்பந்தியியற்கையைப்பற்றியதா? சம்பந்தியி
யற்கைபயந்ததா? சம்பந்தித்தன்மையாற் கூறும் வேட்கையா
யியற்கையயலற்றதா? சம்பந்தியியற்கைவியாப்பியமா?
சம்பந்தியியற்கையினும் அயலொன்றால் ஆக்கப்படாததா?
அயலாகவே யாதேனுமறையுமவாவா?

450. இயற்கையாய்தென்னுஞ் சத்தார்த்த நீக்கம்.

ஆதியதில், மண்ணலாயதாந் தன்மைக்கும், இரும்பாற்
போழ்தலாந் தன்மைக்கும் வியாத்தத்தன்மைவழக்காம்.
இரண்டாவதுமியையாதாம், அதிவியாத்தியினுனும் அவ்

வியாத்தியினுனுமென்க; அதனுனே மூன்ருவது முற்ருரு தாம்; நான்காவதும் நலப்படாதாம், வியாத்தி விளம்பமுடி யாமையானே வியாப்பியத்தகைமை விளம்பமுடியாமையின், சம்பந்தத்திற்கு வியாப்பியத்தன்மையேலோ ,சம்பந்திகளாய வியாபகங்கட்குச் சம்பந்த அதிகதேசகாலஞ் சம்பவித்தலி னுனே, ஒருசம்பந்தியின்காட்சியுற்றவழி மற்றதனனுமானப் பொருட்டு நியாமகத்தகைமைகூடாமையின்; ஐந்தாவதும் நைந்துபோம், ஆக்கப்படாதது என்பது பயக்கப்படாததெனு வாமேலாயின், சம்பந்தஞ் செய்யப்பெருதென்னும் பக்கத் தில் அயலொன்ருல் என்னுமடைவாளாபோம், செய்யப் பெருத்தைச் சம்பந்தியியற்கையும் பயவாமையின். சம்பந்தஞ் செய்யப்பெறுவதென்னும் பக்கத்திற் சொரூப அசித்தியே யாம், சாமக்கிரியினது சர்வசம்பந்தமாதலின் முடிபினுங் கால தேய அதிருஷ்டாதிகளினும் அஃதுண்டாந்தன்மையையின் றியமையாமற் கூறவேண்டலின் ; ஆருவதுபக்கமுமழிந்தொழி யும், அதுநிகழ்த்தமுடியாமையின். இன்னணமே இக்கடை விகற்பத்தைவிகற்பித்துயாண்டு முபந்யசித்துத்தூடிக்கத்தக்க தாம்; குறைவாந்தன்மைச்சங்கை யச்சத்தானென்பதாம்.

## 451. வேறுவியாத்தி யிலக்கண கண்டனம்.

உபாதியற்றதாயசம்பந்தம் வியாத்தியென்பன்மற்றை யன், அவன் வினவத்தக்கவனுவன், எஃதிலாமலுபாதியற்ற தாதல் ஆமோ அவ்விவ்வுபாதியென்பது யாதுகாண்! துணி யப்படும் பொருளோடு கூடிநின்று துணிவிக்கும் பொருளோடு கூடிநில்லாதது உபாதியாம் "பரப்பரப்பற்றறுபவைகடங்கட் குப், பரப்பொருதுணிபொருளவினு பாவமேற், பரப்பொரு ளின்மையினவினு பாவியாம், பரப்பெதனின்மையிங் கஃது பாதியே", வியதிரேகமுகமாகவெதனின்மை அஃதுபாதியாம் எனச்சேர்ப்பிக்கும் இக்கவிக்கது முடிவானபொருளாம்; அதன்

றன்மபூதமாயவியாத்தியும், வெண்பளிங்குமணியிற் செம்பருத்தம் புட்பத்தின் செவப்பேபோலச்சாதனமெனப்பட்ட திலிலங்குகின்றதெனக்கொண்டு இஃதுபாதியெனப்படும். அவ்விது "கட்டயல்களயலவர்காட்டிய மட்டவியாத்திகண் மண்ணிப்பிழைப்பவாம், திட்டமாயினுமேயவைதேர்தலா, விட்டமேயிலைசாத்தியத் தேற்றமே" எனக்கூறப்பட்டுளதாம். அவ்வுபாதியும் நிச்சிதம்போன்றுசங்கிதமும் என (இருவகையாக) ஆம். அதன்கண் "எதுவரையிருப்பதாகவேது தான்விபக்கந்தன்னிற், சமதிறொரு கூறுனுஞ்சங்கைய துண்டாங்கண்டீர், அதுவரையேதுவிற்கிங்கருந்துணி பொருளோயாய்ந்தேதிதமுறத்தேற்றமாற்ற நிகழ்வதெங்குண்டாமன்றே" என்னுமிஃதியம்பப்பட்டுளதா மெனின்?

## 452. உபாதிகண்டனம்.

துணிபொருளொடுநிலவும் பக்கவியற்றன்மையின் கண்ணும் வழக்காதலின், அதனினும்வேறுயென்பதுமாமெனின்? ஆகாதாம், பாதத்தாற்கருதப்பட்ட அதற்கு அவ்வியாப்திநேர்தலின்; அன்றாயினோ, நிருபாதி சம்பந்தத்தன்மையிற்பாதமசித்தமாதலின், பாதத்தினாலேனும் உபாதிகருதத்தக்கதாம், அன்னியத்தாலேனும் எனயாதொரு சிறப்புமில்லையாம்; இதன்பொருட்டாகவும் சிறப்பிக்கப்பாற்றுமெனின்? என்னற்க, எனினும்துணிவிக்கும் பொருளொடு நிகழாமையோடுமென அதன்வியாத்தி துணியாதவழி துணியமுடியாதாம், இங்ஙனம் துணிபொருளொடு நிகழ்வதுவென்பதுமாம்.

## 453. சக்கரகாபத்திபரிகார சங்கையின் பங்கம்.

காணப்பிறழ்ச்சித்துணி பொருட்டன்மை துணிபொருளொடு நிகழுந்தன்மையாம் எனநினைக்கின்றனைகொல்! நினையற்க, வத்துகதியினேனே பிறழ்ச்சியையுடைய துணிபொருட்கும் ஆராய்தலின் முன்னர்க்காணுதபிறழ்ச்சித்துணி பொருட்

டன்மை சம்பவித்தலானே அதற்குமுபாதித்தன்மையினடை வாதலின். காணப்பெறமாட்டாதெனவுங் காட்டிவிடமுடியா தாம். வியாத்திகவருங்காலையிலோ துணிபொருட்டன்மை யின்மையானே அதன்பிறழ்ச்சியின்மையாங்ஙனந்துணியமுடி வதாகும்? துணிபொருள் வியாபகமவாவியதாமெனின்! ஆகா தாம், வியாத்தியறியப்பெறுதவழி வியாபகப்பொருள்விளங் கரமையின்; சம்பவித்தவியா அபகபாவவியாபகம் வாவியதா மெனின்? என்னற்க, வியாபகத்தை விளம்பாதிருப்ப எவ்வடி வத்தானே சம்பாவனைதாணியற்றல் கூடும்? இனித்துணிபொ ருள் வியாபகமென்பதேகவினும் அஞ்ஞான்று துணிபொருட் டன்மையிலதேனும் துணிவுபெறுத்துவான்றகுதியைச்சாற்ற அவாவுண்மையின் எனின்? ஆகாதாம், இதுவேதுணிவுபெறு த்தத்தக்கது இஃதன்று எனயாங்ஙனங்கொல் லறியத்தக்கதா தல்? வியாபகத்தன்மையான் என வியம்பவேலாமையின். துணிவிக்கும் பொருளொடு நிகழாமையாண்டுந் துணிவான்மு டியாதாம், அவன்கரியன், மைத்திரன்மைந்தனுந்தன்மையின் என்புழிச்சாகாதி யாகாரபரிணமபரம்பரையின்மை மைத்திர மைந்தன்மாட்டுணர்தலரிதினு மமையாமையின்.

## 454. ஐயுற்றவுபாதித்தன்மை நீக்கம்.

யாண்டுக்கூறிய இலக்கணத்திற்குத் துணிபாய அளவை யுளதோ ஆண்டுத்துணிவுற்றவுபாதித்தன்மையாம் பிறவிடத் திலையுற்றவுபாதித்தன்மையாம், மைத்திரமகன்மை வியாப்பிய சாகாதியாகாரபரிணமை பரம்பரையாய் நிலைபெறுகவென்பத தன்கண்ணே நியாமகமின்மையின் எனின்? என்னுதொழிக, மைத்திரமகன்மையாயவேதுவினானே அதனையுந்துணியில் அச்சங்கையையுமறுப்பா னுற்றலின்மையின். ஆண்டும் அவ் வச்சாமக்கிரி யெனவுபாதியபரம்பரை உரைப்பினோ அதனை யும் மைத்திரமகன்மையானே துணிதல்புரியமுடியுமாதலின்.

## 455. அநவத்தையகற்றல்.

இன்னணமே யெல்லையில்லாமற் செல்லலாமேயெனின்? என்னற்க, உபாதியுபந்யாசத்திலே வரம்பின்றியோடல்வாராத தெங்ஙனம்? சாத்தியசாமக்கிரியான் உபாதித்தன்மையேற்பு கையனுமானப் பொதுவாம், இவ்வாறுகச் சாத்தியத்திற் சாமக்கிரியுபாதித்தன்மை யகற்றற்பொருட்டும் இலக்கணஞ் சிறப்பிக்கத்தக்கதாம்; கருமைமுதலியவற்றைத் துணியுங்காற் சாக்கியாகாரபரிணமைபரம்பரை முதலியவற்றிற்கும், அதைத் துணியுங்காற்கருமை முதலியவற்றிற்கும் உபாதித்தன்மை யுண்டாதலான் உபாதியுந்தான்றுணிவான் எங்ஙனமேனுமா லோவெனின்? இன்னணமியம்பற்க, தனித்தனியிரண்டையும் மைத்திரமகன்மை முதலியவற்றுனே துனிவுழி துணிவிக்கும் பொருளொடு நிகழாமையைச் சங்கிப்பான்முடியாமையின்; மாறுயினே, கருத்தாவுடைமையைத் துணிவுழி அதிட்டம் பயந்தமையும், அதிட்டம்பயந்தபான்மையின் மாட்டும் கருத் தாவுடைமையும், உபாதியாமெனவிரண்டுந் துணியப்பெறு வரம்; இவ்வாறே, மதிபொதிவாயிலாந்தன்மையின் முயல் வுறுவாயிலாந்தன்மையும், முயல்வுறுவாயிலாந்தன்மையின் மதி பொதிவாயிலாந்தன்மையும்; இங்ஙனமே, வன்னியுடைமை யினும் காஷ்டவன்னியுடைமையும் அதன்கண்ணே வன்னி யுடைமையும் உபாதியாமென்பதன்கண்ணும் எல்லா அனு மானமுமே யிடர்ப்பட்டுவரும்.

## 456. சர்வஞ்ஞ நாராயண மதநீக்கம்.

இதனுனே, சாத்தியசாதன சம்பந்தப்பொருட்டு வியாப கத்தகைமை சாத்தியவியாபகத்தகைமை யிட்டமாமென்பதும் நிராகரிக்கப்பட்டதாம்.

## 457. நிச்சிதவுபாதியின்கண்ணும் சாதனஅவ்வியாபகத் தகைமை கவரமுடியாமை

உபாதி துணியப்படுமிடத்தினும் புலப்படா வுபாதிவிட யத்தில் அதனின்மைக்குச்சாதன அவ்வியாத்தியின்பொருட் டுக் கருதப்படுவதாதலின்கண் ணுபாதியுடையதாகச் செய்யுஞ்

சாதனத்தானே சற்பிரதிபக்கங்குயிற்றுவான் கூடலின்; அங்ஙனமாயின் ஆண்டுச் சங்கிதவுபாதித்தன்மையே தடையற்றதாக நிலைபெறுவதாகும் எனின்? ஹேமந்த! இங்ஙன நியதமியம்புபவனுக்குக்கேவலம் வெட்கத்தையே வெற்றிகொண்டவனாகின்றனே, பிரதிவாதியையன்று; அங்ஙனமன்றே:—அங்கீகரித்தநிச்சிதவுபாதிபாவத்திற் சங்கிதவுபாதித்தன்மைவிழவேயனுகூலமெனநினைபவர் வெட்கம் வெற்றிகொண்டநினையலாமல் வேறுயாவருளர்? ஒருபால் நிச்சிதஉபாதி யங்கீகரியாதவழி அச்சங்கையாற்றமுடியாதாம். யாண்டுக்காட்சியானேயுபாதிநிச்சயமாமோ அதுவே அதன்றரிசனவிடமாகவாமெனின்? என்னற்க, பொறிச்சம்பந்தம் பாதிக்கப்படவே அதன் ஜாதியுற்ற பொறிக்குவிடயமாகாததை அப்பிரயோஜகமாக்குமேதுவினனே சாதிக்கக்கூடலின். யாது ஓரிடத்தில் ஒரு ஜாதியுற்ற பொறியதாமோ அஃதயலிடத்திற் பொறியதாதலைப் பாதிக்கப்பெற்றவழி ஹேதுவின்வலுவாற் பொறிக்கெட்டாததெனச் சாதிக்கமுடியாதாமெனச் சாற்றற்க; சடரவனலாதிபாகங்காண்டலின். துணிவிக்கும் பொருளொடுநிகழாமையுடன் றுணிபொருளொடு நிகழுதலென்பதும், சாகாதியாகாரபரிணும பரம்பரையாற்றுணியப்பெற்றதை வியாபியாதென அவ்வியாபகத்தன்மைத் தோடமுற்றதாம். சாகாதித்தன்மையென்பது யாதேனுமொன்றன்றும், யாதுதுணிபொருளை வியாபிக்கலாமோ.

458. சாகாதித்தன்மைக்குத் தொடர்பிருப்பினும் தோடமாம்.

உளதாகுகதான் எங்ஙனமேனும் அங்ஙனமாயினும், கருமையை வியாபிக்கமாட்டாதாம், இந்திரநீல சிலாதிக்கருமை ஆகாரம் பயந்ததாகாமையின்; காயக்கருமை துணிபொருள் இது அதைத்தான் வியாபிப்பதே யாகுமெனின்? ஆகாதாம். வியாத்தியின்கண்ணேயுபாதி யோதவேண்டலின், புருடக்கரு

மையானே வியாத்தியின்றாம், ஹேதுபக்கதருமமாகலின்றாற் றான் சாத்தியம்பக்கதருமமாகச் சித்திக்கின்றதேயன்றி வியாத்தியானன்றாம், மாறாயினோ, விலக்குவதாய புருடபதத்திற்கு அடையாகாமை யடைவுறுதலின்; பரம்பரைச்சம்பந்திமை முதலிய நுச்சுக்கருமை விலக்கற்பொருட்டேலோ, சையுக்தமான கரியன்கட்சமவேதித்த பரம்பரைச்சம்பந்தியின் கருமையை விலக்கலியாங்ஙனமாம்? சாத்தியசாதனசம்பந்தத்திற் பிறழ்ச்சிகாணாமையே சாத்திய வியாபகத்தன்மை யாகாதாம், உருவத்தைநேரே காணுங்கரணத்தன்மை முதலியவற்றானே தேஜசாதித்தன்மைகளைச் சாதிக்குங்கால் வெளிப்பட்டவுருவமுடைமை முதலியவை யுபாதிகளாகாமலேகுக. சிறப்பாகப் புகுத்தப்பட்ட சாதனத்தானும் கேவலசாத்தியவியாபகம் விலக்கப்படுவதாமேலாயினோ, பிறழ்ச்சிச்சங்கையைக் கவருமாற்ற லுற்றவதற்கு முபாதித்தகைமையாகாதாம். இனிவிலக்கப்படுவது யாதொன்று மின்றாமாயின், சிறப்புத்தன்மையசித்தியேயாம், பிரயோஜன மாத்திரையானே சிறப்பானது அருத்தமுடையதாகாதாம். மற்றோ, சிறிதுவிலக்குவதானு மென்பதாம், ஆகாதாயினோ, கருத்தாவுடைய தாகாததாந்தன்மையிற் சரீரிசனியாமைபோலும் வெளிப்படையாக அசித்தியின்கண் முடிவுபேறுடையதாகுமென்க.

### 459. கேவலவியதிரேகி ஹேதுஉபாதிகளின் கண்ணே யிலக்கண அவ்வியாத்தி.

மேலும், வாழுங்காயம், மண்முதலிய எட்டுப்பொருள் களினுமயலாய, அநேகம்பொருள்களையுடையது உயிர்ப்புமுதலியவற்றோடுறுந்தன்மையதாதலின் என்பதாதியின்கண்ணுள்ள வியதிரேகிப்போலியாய பக்கதருமவேதுவின்மாட்டு இவ்வுபாதியிலக்கணம் யாங்ஙனம் நிலைபெறுத்தப்படும்? போலிவியதிரேகியனுமான வடிவத்திலெத்துணிபொருளோ அஃது

பாதியானே வியாத்தமென வங்கீகரிப்பதில்லையாம், பிறர்கரு தியவதற்குச் சிலபாற்சித்தியமைதலின். வெதிரேகங்களின் வியாத்தியில் உபாதியாமேலாயின், வெதிரேகத்திலியாது வியாப்பியமோ அதனது வியாப்பியமாக வுபாதியைய வசிய மெண்ணவேண்டும், அன்றாயினோ, உபாதியி னன்வயமாகத் துணிபொருளன்வய அடைவாமெனவுபாதி வெதிரேக வியாத் தியவசியமாதலே யங்கீகரிக்கவேண்டலின் உபாதிக்கெதுவியா பகமோ அதனபாவம் உபாதியபாவத்தின் வியாப்பியமாக வெண்ணத்தக்கதாமெனப் பரசாத்தியவடைவாம் சமநிலாவி யாத்திபுடையவற்றிற்கு அன்னுவயவியாத்தியிலுள்ள சாத் திய சாதன பாவவேறுபாடாக வெதிரேகமாம் வியாத்தியினு னே யாகலாம், ஆயினயற்றேடமேயன்றே வறைந்ததாகுமெ னவறையற்க; ஹேதுவிற்குப் பக்கதருமத் தன்மைத்திதியில் வியாத்தி விலகும்பொருட்டுன்னுலுபாதி யுடன்பாடுரணுக்கப் படுதலின்.

460. வியாத்திசித்தியை யங்கீகரித்துந் தூடித்தல்.

உளதாகுகதான் யாதேனுமொன்று வியாத்தியாக, அஃ துளதாகவே யனுமிதியுளதாகலின் அதற்கு மனுமிதிக்கும் வியாத்தி யங்கீகரிக்கத்தக்கதாம், அதனுனேதற்பற்றுதலாம், அவை வேறாயினோ தொடர்பின்மை துணிபின்மைத் தோடங் களாம்.

461. பக்கதருமத்தன்மைக் கண்டனம்.

வியாத்திபக்க தருமங்களைக்கொண்டு அனுமிதியை யுண் டாக்குதலென்பதன்றோ விளம்புதல், இப்பக்கமென்பது யா தோ, எதன்றன்மத்தன்மையானே பக்கதன்மத் தன்மையா மோ; சாதிப்பான் வேட்ட தருமமுடைய தருமியாமெனின்? ஆகாதாம், சாதிப்பான் விரும்பியதும், விளம்புவான்வேட்கை யா? அறிவானவாவா? ஆதியதேற் றற்பொருட்டாமனுமிதியுதி

யாதென்னும் வழக்காம்; மற்றமிதேலோ, தீநாற்றத்தாலனுமிக்கத்தக்கதீயவிரதவிடய தற்பொருட்டனுமிதிபுதியாதென்னும் வழக்காம்.

### 462. இரண்டாவது விகற்பநீக்கம்.

துணியப்பெறாத தருமத்தையுடைய தருமிபக்கமென்பதுமாகாதாம், ஹேதுவுடையதாகவேனும் துணிவிலதேலாயின் அனுமான உதயகாரணத்தகைமை யடைவுறாமையின். துணிவின்மையினுனே துணியப்பெறாததருமத்தன்மைதுதையாமையின்.

### 463. இரண்டாவது கற்பமகற்றல்.

துணியப்பெறாதஹேதுவிடயதருமத்தையுடைய தருமிபக்கமென்பது மாகாதாம், அங்ஙனமன்றேல்:—எதனுற்றுணியப்பெறாததருமம்; ஆண்டு அனுமானப் பிரயோகமாற்றுவனுகாதாம், தானேபுணராதபோது பிறன்பொருட்டுப் பிரயோகிக்கமுடியாமையின். பிரதிவாதியினுனெனின்? ஆகாதாம், பிரதிவாதி விதித்தபொருளில் வாதியாக வொன்றற்கொன்று வித்தையின்மேன்மை தாழ்மைகாட்டற்பொருட்டு அனுமானங்காண்டலின்.

### 464. வேறுவகையாக விகற்பித்துத்தோடம்.

அவ்வாறு துணியப்பெறாததும், ஒருசிறிதுஹேதுவிடய தருமகோசரமா? வாதிபிரயோகிக்கத்தக்க ஹேதுவிடயகோசரமா? ஆண்டாதியதாகாதாம், அனலுடைமைநிச்சயதசையின்கண்ணும் அவ்வவ் வேதுவிடய மிகமி ஙவயற்றருமங்க டுணியப்பெறுமையின் புகையைக்குறித்து மலைக்குப்பக்கத்தன்மை வழக்காதலின்; இரண்டாவதுமேலாதாம், ஆயினுமாண்டுவழக்காதலின், அவ்வேதுக்கட்கும் வாதியாற்பிரயோகிக்கப்பட்டதாந்தன்மையுண்மையின், ஒன்றைமற்றொன்று பற்றுந்தோடத்தானுமென்க; பக்கதருமத்தன்மையானே ஹேதுத்தகைமை

நிரூபணத்தான், வியாத்தபக்கதருமத்தன்மைக்கு ஹேதுத் தன்மையுண்மையின், ஹேதுவினுனே பக்கநிரூபணத்தான், தற்பொருட்டனுமானத்திலோ ஹேதுவிற்குப் பிரயோகிக்கப் பட்டதாந் தன்மையின்மையின், பக்கமின்மையினுனே அனு மானமுதயமாகாதென்னும் வழக்காதலின், விருத்தஹேதுவின் கண்ணே பக்கத்திற்குப் போலித்தகைமை வழக்காதலின் (பக்கதருமத்தன்மையின்மை வழக்காதலின்), ஆண்டுத் துணி பொருட்கு அவ்வேதுவிடயத்தன்மையின்மையின், ஹேது விற்கே துணிபொருண்மாறுய வியாத்தியினுனே தூட்டத் தன்மையுண்மையின்.

## 465. தூடணத்தைத் தொடர்த்தல்.

இதனுனே ஐயுற்ற துணிபொருட்டருமமுடைய தரு மிபக்கமாம், துணிபொருட்டன்மையும் தற்பரன்பொருட்டனு மானப் பொதுவாக வுண்டாக்கப்பட்ட வுணர்வுத்தன்மையா மென நீக்கப்பட்டது.

## 466. பக்கதருமத்தன்மை நீக்கம்.

உளதாகுக தான் ஏதாவதொன்று பக்கமாக, இப்பக்க தருமத்தன்மையென்பதுயாதாம்? பக்கத்தைப்பற்றியிருக்கும் பான்மையெனின்? ஆகாதாம், நையாயிகாதியர்பொருட்டுப் பிரமேயத்தன்மை ஹேதுவாகாதென்னும் வழக்காதலின், விடயவிடயிபாவத்திற்கு ஞேயஞானசொரூபத்தினுமயலாந் தகைமையங்கீகரியாமையின், அவற்றிற்கும் ஞேயத்தைப் பற்றியிருக்குந் தன்மை கூடாமையின்.

## 467. இரண்டாவது விகற்பநீக்கம்.

வியாத்தியின் வீரத்தாற் பொதுவாக வியாபகத்தைக் கவர முயன்ற தோற்றத்தைக்கொண்டு கேவலம் சிறப்பை முடிவுபெறுத்துவான் வியாப்பியத்தினுற்றல் அஃதாமெனின்? ஆகாதாம், சாமானியவிடயமாயவதுபொருந்தாமையினசித்தத்

தான் வியாத்திபோலும் பொருந்துதலின், பொருந்தாமையுடையதாந் தன்மையேல் வியாத்தியனுப் பிரவேசமாதலின், அதிகவிடயவவர்வாந் தன்மையேற் பொறுத்து வியாபாரம் பொருந்துதலின் அயலளவையாந் தன்மையடைவுறுதலினுேனும்; விசேடவிடயத்திற்கும் பொருந்தாமையேலோ நிலைபேறின்றென்னும் வழக்காதலின். பக்கதருமத்தன்மையானே சாத்தியவியக்திபேதஞ் சித்திக்குமேலாயின் அனுமித்ததனைக் காட்சியானே கண்டு புருடசத்தத்தானே புருடனையனுமித்துக் காட்சியானே இருபுருடத் தரிசனமுறவே அதன் சிறப்பையப்பாடிலாதவனுகவேண்டும். முன்னர்ச் சிறப்பின்றரிசனமிலாமையின் அவ்வாறுமெனின்? ஆகாதாம். பின்னராண்டது தரிசிக்கப்படுதலின் ஐயப்படவேண்டியதின்றென்பதாம்.

## 468. உபமான கண்டனம்.

உபமானமும் என்னுரைக்கப்பெறும், ஒப்புமையுணர்வுபமானமென்பர் சிலர், அஃதாகாதாம், மிருதியின்மாட்டும் வழக்காதலின், அனுபவமெனவறையினும் ஒப்பநிற்பனவிவையென்னும் பொறியயக்திலும் வழக்காதலின், அதுவும், ஆமா ஆவினையொக்கும் ஆமாத்தன்மையான் அயலாமாபோலும், என்னுமனுமானத்திற்கும் அத்தகைமையடைவுறுதலின்; இங்ஙனம் ஆத்தன்மொழியிற் பிறந்ததிலுமாம்.

## 469. விகற்பமிரண்டன் நீக்கம்.

அன்றியும், இஃதுபமிதியிலக்கணமா? உபமிதிகரணவிலக்கணமா? ஆதியதாகாதாம், ஒப்புமைக்குபமேயத்தன்மையடைவுறுதலின், ஒப்பாவதிலோ வுபமேய விவகாரமுளதாம், மதியுபமேயம் வதனமென்பதாதியாம்;ஒப்புணர்வு அஃதாமெனின்? ஆகாதாம், அக்கமுதலிய கரணங்கள் அமையாதவழி அதனுதாகரணந் துணியப்பெறுமையின், இரண்டாவதுமினிதன்றும், வேறுபிரமாணங்களின் வியாபாரமமையப்பெறுத பலம்

பயக்கும் பான்மையானே யெல்லா வொப்புமை யுணர்விற்கு மே காண்பிப்பான் கூடாமையின்.

## 470. ஒப்புமைக்கு விசேஷணத் தன்மையேனும் உப லக்கணத் தன்மையேனும் உரைக்கிற்றேடம்.

ஒப்புமை யொன்றாய்த் தொடர்ந்ததா யிலதாம்; வதன வொப்புமைக்கும் அத்த வொப்புமைக்கும் வேற்றுமைப் பட்டே புலப்பாடு காண்டலின்; ஒப்புமை யுருவத் தன்மை யவற்றின் மாட்டுந் தொடர்புற்றதே யாமெனத் தோட மின்று மென்னற்க; அங்ஙனமன்றே:— ஒப்புமையோடு கூட வொப் புமையில் அநேகத்திருப்புண்மை முதலியவற்றே யொப்பு மை யுருவத்தன்மைப் பற்றுக்கோடாயவழி யொப்புமை யுரு வத்தன்மைக்குப் பற்றுக்கோடாத லுடன்பட்டவழி யொன் றை யொன்று பற்றுதலாம். உடன்படாவிடினே, தொடர் பின்மையாம். அவற்றி னேற்றுமையை யுடன்படா விடினே பிறவிடத்தும் அவ்வாறடைவாம், மேலும் வேற்றுமைப் புலப் பாட்டிற்கும் அயலளவைத் தகைமை யிவ்வாறும், ஒப்பாத லின். இங்ஙனமே யங்கீகரிக்கினே எண்ணியவளவை மிகும் வழக்காதல், எண்ணப்பட்டவைகளின் மாட்டே யொப்புமை யுணர்விற்கும் உள்ளடக்க மாதலா மென்பதாம்.

## 471. மீமாஞ்சகன் மிழற்றிய வுபமான விலக்கண நீக்கம்.

புலப்படாததற்குப் புலப்படுவதோடு ஒப்புமையுணர்வு உபமானமென்பதாகவு மாகாதாம், ஆத்தனது தொடர்மொழி யானும் அன்னணமறிவாதலின்.

## 472. மீமாஞ்சகன் விளம்பிய இலக்கண தூடணம்.

யாண்டவ்வியாபார மின்றாமோ வெனின்? அன்றும் அதுவும் இதுவும் அபின்னம் என்பதொப்ப அதுவு மிது வும் ஒப்புறுவன வென முன் : றேற்றியதற்குத் தோற்றுவ

தோடு பொறியாலாய வொப்புமைப் புலப்பாட்டின் மாட்டும் வழக்காதலின். பொறியொற்றுமை யற்றதற்கா மெனின்? என்னற்க, கண்கூடாகக் கோமரை யொப்புமையைக் கண்டு, அக் கோவும் மரையோடொக்கும் கோப்பான்மையான் இஃதொப்ப வென்னு மனுமிதியின் பாலும் வழக்காதலின். குறியாற் பெருமையு மெனின்? என்னற்க, என்னை, இன்னணமேல், காட்சி கருதலுரைகளாற் கிளம்பாமையோ டுற்றதாயென வுரைத்தன்றோவாம், ஆகவே, சிறப்பே யாற்றலுற்றதாம், உறவே, புலப்படாததற்கு என்பதாதி வாளாவன்றோ வீழும். அயன்மொழி கொள்ளத் தக்கதாகாததேயாமெனின் ? ஆகாதாம், அருத்தாபத்திக் கவசிய மடைவுண்மையின். அதனோடும் இதனது ஒப்புமைக்கு இதனோடு அதனது ஒப்புமையிலாது பொருந்தாமை யுண்மையின், மாறுயின், ஒவ்வாமையா லுணர்வி னுற்பத்தி யுண்டாக்குவதாக அயலளவை அடைவுறு நிற்கும்; ஆதலின் இது குறுகியது என்னும் புலப்பாட்டினுக்கு இதனினும் அது நீண்டது என்பதூஉம் அயலாற்றல் என்ன பிரமையாம்? பொருளடைவை அயலளவை யென அவாவாதவனுனும் இப்பொருளடைவு கருதலிலேனும் அடக்கத் தக்கதாகும், தனியளவையாகவேனு மாற்றத்தக்கதாகும்.

## 473. அயலுபமான இலக்கண மகற்றல்.

இதனனே, புலப்படாத ஆமா அயலாவின் சாமியத்திற்குத் திட்டாந்தங் கூடாமையானே யனுபமானங் கூடாமையின் இவ்வாமாவோடு மொப்பாயது அவ்வாவென்னும் மிதி உபமிதியா மென்பதும் நூக்கப்பட்டது; அதனோடு இதனொப்புமைக்கு இதனோடு அதனொப்புமையிலாது பொருந்தாமையே துணியப்பெற்ற தென்க.

## 474. உதயனருளுற்றிய இலக்கண நீக்கம்.

அறியப்பெறாத ஒற்றுமையையுடைய பெயரோடு கூட்டப் படிக்கப்பட்ட தொடர்மொழிப் பொருளின், பெயருடைய தன்கண் ணனுசந்தானம் உபமானமென்பதும் ஏலாதாம்; மறந்த வொற்றுமை எதனுனோ அதற்குக் கூறிய வகையாய வுபமிதி வியாபியாமையின். மறக்கப்பெற்ற வொற்றுமை யென அறையத்தக்க தெனின்? ஆகாதாம், அனுபவிக்கப் பட்டு மரிக்கப்பட்ட டயற்சமயத்தின் மறக்கப்பெற்ற வொற்று மையின் அவ்வியத்தி வருதலின். மரிக்கப்படாத வெனினோ? அன்றும் ஒரொருகான் மரிக்கப்படாமை ஆண்டும் கூடலின். எஞ்ஞான்றும் மரிக்கப்படாமை எங்குங் கூடாமையின் உப மிதியின் முற்போதெனின்? உபமிதி யிலக்கியப்படு மேலாயின் ஆருகவேதானிது அதன்பொருட்டே யன்றோ இந்நினது சூக்குமல்.

## 475. ஒற்றுமையின் அறியப்பெறுமையின் விகற்ப நீக்கம்.

மேலும், யாவரானும் அறியப்பெறாத வொற்றுமைத் தன்மைக்குப் பிரகிருதத்தினும் அசித்தமாதலின். எவனுனே னும் அறியப்பெறாத வொற்றுமைத் தகைமைக்குத் தொடர் மொழி பயந்ததினும் கூடலின். உபமாதாவான் என்பதும் முன்போல் நீக்கத்தக்கதாம். எப்பிரமிதிக்கு எப்பிரமாதா வான் எனக் கூறினும் தொடர்ந்த வடிவ மிலாமையின்; வியத் தியில் வீழ்தலான் இலக்கணத் தொடர்பின்மை தொடர்த லின் என்க.

## 476. பெயர் என்னும் விசேஷண நீக்கம்.

பெயரென்பதும் ஆகுலமாம், ஆவிற் கொப்பாய ஆமாப் பெரும்பாலும் கானனத்தின் மிகவும் காணப்படும் என்னுந் தொடர்மொழியைக்கேட்டுக் கானனபதவொற்றுமையை யறி

யாதவனும், ஆமாபத வொற்றுமையை யறிந்தவனும், ஆயவனுக்குப் பெயர் பெயருடையதன் ஒற்றுமை யுணர்வின் பயனுயவழி இத்தகைய வுணர்வின்மாட்டுச் செல்கையானே அதிவியாத்தி வருதலின். இலாமலேனும் பெரும்பான்மைச் சத்தம் கூறியவதனனுசந்தானத்தில் வழக்காம். ஆண்டுக் கானனப் பெயர் பெயருடையதன் ஒற்றுமைத் துணிபிலும் பிறண்டுபோன்றே வேறு பதத்தோ டொக்கப் படிக்கப்பட்டதி னின்றும் எழுந்த வேறோராற்றுற் பொருந்தாமைக்குப் பிரமாணத்தன்மை யுண்மையின், உபமானத்திற் கின்றும்; உபமேயப் பெயரோடொக்கப் படிக்கப்பட்ட வென வடை கொடுக்கினே நீக்கம் முன்னிகழ்த்தியதேயாம்.

### 477. தொடர்மொழிப் பொருள் என்னும் விசேஷண நீக்கம்.

தொடர்மொழிப் பொருள் என்பதும் அத்தகைத்தேயாம்; உணரும்போழ்து உபதேசித்த வாக்கியத்துட்பட்ட கானுதி பதார்த்தங்களை மறந்தானுக்கு அவ்வாருய வுணர்வின் அவ்வியாத்தி வருதலின். தொடர்மொழி யொருசிறிதுபாகத்தினுக்கும் தொடர் மொழித்தன்மையானே விளம்ப விழைவுண்மையேல் ஒப்பாயது ஆமாவென்பதாதியை மரித்தானுக்கும் உணர்வில் வழக்குண்டாதலின் புலப்பா டுண்டாதற்பொருட்டுச் சாதகபூதமாக எத்துணையோ அத்துணைத் தொடர்மொழி விளம்ப விழைந்ததாம் எனின்? ஆகாதாம், உள்ளடங்கிய வன அதிகரண அத்தகைய வுணர்வின் பொருட்டு அதற்கும் சாதகத்தன்மை யுண்மையின். உபமிதியின் பொருட்டென்பதோ முன்போன்றே நீக்கப்படும். எத்துணைப் பெயர் பெயருடையதன் புத்தி சாதனம் ஆமோ அத்துணையறையும் அவாவாமெனின்? ஆகாதாம், இலக்கணத்தோடு நிகழும் பெயரி னுபதேசத் தொடர்மொழிப்பொருளனுசந்தானத்தில் அதிவியாத்தி யாதலின்.

## 478. அயலதிவியாத்தி.

மேலும், தருக்கானுசந்தான மற்றவனுக்கு இவ்வகையாய அனுசந்தான மிருந்தபோதினும் ஒப்புமையே ஆமாபதப்பிரவிருத்தி நிமித்தம் என்பதாக மிதிபய்ஞ்க வுண்டாங்கால், அப்பிரமையின் கரணமாய வதற்கும் உபமானந் தன்மையான துண்டாம். பிரமையாம் பயனையுடையது என்னும் அடையோடும் பக்கத்தினும், ஆராயப்பட்ட தன்வடிவத்திற்கு விவகாரியத்தன்மை அனுமிதி யுண்டாக்கலானும் இத்தன்கைய அனுசந்தானம் உபமானமாம். அவ்வியாத்த விஷயப் பிரமையைப் பலமாகவுடையதெனச் சிறப்பிக்கத் தக்கதாமெனின்? ஆகாதாம், வத்துகதியால் அவ்வியாத்தத் தன்மைக்கு உபமேயத்தின் கண்ணும் இன்மை யுண்மையின். வியாத்தத் தன்மையினே அறியப்பெறுதற்கு எனச்செயினே, யாதின்பொருட்டுத் தற்குறியதனேடு வியாத்தத் தன்மையானே யறியப்பெற்ற வுபமிதிகரணமும் வியாபியா தாதலின். உபமேயத்தோடு வியாத்தத் தன்மையானே அறியப் பெறும் பான்மையைக் கூறியபோதினும் அனுமானத்தில் வழக்காங்கே நிலைபெறும். அனுமேயத்தோடு எனவாற்றினும் அஃதகலாமையின் அவ்வியாத்தி யாங்கே நிலைபெறும்.

## 479. எஞ்சிய கற்ப விஞ விலக்கம்.

பெயர் பெயருடையதன் ஒற்றுமைப் பிரமையின் கரணம் ஆமெனின்? ஆகாதாம், அவ்வாறுந் தன்மை யாகாமையின், அருத்தாபத்தி முதலியவற்றானே அதன்சித்தியைமேற் கூறப்போதலின். அனுமிதியல்லாததைப் பயக்கும் அத்தகைய பிரதிசந்தானம் உபமானமாமெனின்? ஆகாதாம், இப் பொதுமை யுடையதற்கு அனுமிதியைப் பயக்குந் தன்மை யுண்மையின்; வியத்தி யபேக்ஷையின் கண்ணே பயக்கும் பான்மைக்குச் சாமானியாகார முடிவுபேறுடைமையின் நித்

தியம் வியத்தியின்கண்ணே சம்பவியாமையானும் தொடர்ந்து தோற்றுமையானும் பொருந்தாமை யுண்மையின் என்ப தாம்.

## 480. சம்பந்தப்பிரமைக் குபமானபலத் தன்மையேயாதல்.

மேலும், ஆவொப்புமைவிட்டு ஆமாத்தன்மை பொது மையின்கண் ஆமாசத்தார்த்தத் தன்மைப் புலப்பாடு, கற்பனு லாகவமெனப் பெயரிய தருக்கம் நீக்கியாகாதாம் என வதன் உபந்யாசம் திதிபெற்றவழி ஆண்டு ஆமாத்தன்மைக்கு ஆமாப் பதவாச்சியத்தன்மைப் பிரமிதியிது அனுமானத்தாற் பெறப் படுவதெனவே யேன் அங்கீகரிக்கலாகாது? பிரயோகமுஞ் சம்பவிக்கின்றதே யன்றோ:—விப்பிரதிபத்தி விடயம், ஆமா சத்தப்பிரவிருத்தி நிமித்தம், அவ்வாறுந்தன்மையின் மாட் டுத் தருக்கத்தா லுணர்த்தப்பட்ட இன்மையுடைமையதா தலின், எஃதிவ்வாறுகாதோ அஃதிவ்வாறுகாதாம், ஆத்தன் மைபோலும், அவ்வாறேயிது, ஆகலி னவ்வாறே யென்பதாம். மூலசிதிலத்தன்மை முதலிய தோடமற்ற தருக்கமருப்பித்த விபரியயப்பொருளும் அவ்வாறுகாதா மெனச் சம்பவமின் றும். அல்லது, ஆமாப்பதம் அசம்பவமாகப் பிரவிருத்தி நிமித்தாந்தரம் பொருந்தப் பெறுததாய்க் கூறிய ஆவொப்பு மைச் சாமானுதிகரண்யம் பொருளால் ஆமாத்தன்மை பிர விருத்தி நிமித்தகத்தகைமையை ஆக்ஷேபிக்கின்றது என அருத்தாபத்தியே யீண்டுப் பிரமாணமாக வாகுக. அதுவும் உன்னல் வியதிரேகியாக்கி அன்னியனுல் தனியாகவே அவசி யம் பிரமாணிக்க தக்கதாம்.

## 481. சத்தப்பிரமாண கண்டன ஆரம்பம்.

சத்தமும் யாதோதப்படும், ஆத்தவாக்கியமாகிய சத்தம் பிரமாணமெனல் கூடாதாம் விகற்பம் பொருந்தாமையின்

## 482 ஆத்தத்தன்மை யறைய முடியாமை.

அங்ஙனமன்றே இவ்வாத்தனென்பது யாதுகாண்? உள்ளபடி கண்டதை யுரைப்போனெனின்? மயலான்மன்னியதை வழங்குபவன் வாக்கியத்தும் வழக்காதலின்; பிரமாணத்தாற் கண்டதை யெனச் சிறப்பிக்கினே அவ்வாறாயதை வேறோராறாய்க் கூறுவதில் வியாபித்தலின். எவ்வாறு பிரமாணத்தாலென வியற்றினும் அங்கிசத்தி லவ்வாறாயதைக் கூறுபவன் வாக்கியம் உண்மையல்லாம லிருந்தபோதினும், எத்துணை யெவ்வாறு பிரமாணத்தாற் கண்டதையென வியம்பினும் இலக்கியங்கட்குப் பெரும்பாலும் அவ்வாறாகாத் தன்மையானே அஃதவ்வியாத்தியாதலின் எத்துணை யளவையா லளக்கப்பெற்றதோ அத்துணை யறையப் பெறுவதின்றாம். உள்ளபடி யளவையா லளக்கப்பெற்றதே வக்தாவின் வாக்கியமென வழங்கினும், யுதிஷ்டிரர் வாக்கியத்திற்கும் இவ்வாறாந் தன்மை யின்மையானே அவ்வியாத்தி வருதலின். ஆண்டு விடயத்திலெனச் சிறப்பிக்கினும் விசேடரூபமாய விடயத்திற்குச் சிறப்புண்மையானே அவ்வியாபகத்தன்மை வந்தடைதலின்.

## 483. நிர்த்தோஷ வாக்கியத்திற்குப் பிரமாணத்தன்மை நீக்கம்.

இனித் தோஷமற்றவன் றன்வாக்கியம் அவ்வாறாமெனின்? அன்றாம், குடமில்லையென இயம்புவா னிச்சித்ததோடத்தோடு கூடியவனுக்குக் குடமிருக்கின்றதெனத் தெய்விகமாகக் கிளம்பிய வுண்மைத்தொடர்மொழியி லவ்வியாத்தியாம். அது பிரமாணமாகாததேயாமெனின்? ஆகாதாம், முன்னர் மொழிந்த விடையதாதலின். முயன்றதின் ஆற்றலினானே பிரமாணமாதல் துணிதல் கூடலின் தொடக்கத்திலையமேனும் மாசின்மையானே பொதுவதாக மாசற்றமாண்பு

பீமனுக்கு முன்பிறந்தோன் பாலுமின்மையின் சிறப்பதாக அவ்வாருந்தன்மைக்குச் சிறப்பதாந்தகைமை முடிவுபேறு டைமை யுண்மையின்.

## 484. மூன்ருவது கற்ப நிராகரணம்.

உள்ளபடியுரைத்த தொடர்மொழியாகிய சத்தம் பிரமாணமென்பதன்கண்ணே யாதுகோதாமெனின்? என்னற்க, ஆண்டு முதலின் முன்மொழிந்த உள்ளபடிப்பான்மைத் தூடணங்கள் உளவாம்! உள்ளபடி யென்னும் விசேஷணத்திற்கு முன்போல் விலக்குந்தன்மை விலக்காத்த ன்மைகளின் ருேடமோ இரண்டாவதாம். வாக்கியத்தன்மை வழங்க முடியாமையோ மூன்ருவதாம்.

## 485. வாக்கிய இலக்கண நீக்கம்.

அங்ஙனமன்ருே, இவ்வியாக்கியம் என்பதுதானியாதோ? ஒருபொருளால் வரைந்துகொண்ட சொற்கூட்டம் வாக்கியம் ஆமெனின்? ஆகாதாம், ஒருமைவிடையத்தன்மை வரைந்துகொண்ட தன்மைகட்குக் கூறவேண்டிய தூஷணங்கள் ஆண்டுளவாகுக. பதபதார்த்தமோ சிந்தித்துப்பார்ப்பாம்.

## 486. பதமுதலிலக்கண கண்டனம்.

வேற்றுமை முடிபு வினைமுடிபுடையது பதமாம் என்பர்சிலர். விபக்திமுடிபுகளாய வருணங்கள் பதமாம் என்பர் மற்றையர்; ஆண்டுத்தனித்ததற்கும் ஒருங்குகூடியதற்கும் அவ்வியாபகத்தன்மை யுண்மையின் ஆதியதாகாதாம். தனிப் பிரவிருத்தி நிமித்தத்தன்மையின்கண்ருே வாக்கிய இலக்கண அவ்வியாபகத்தன்மை வந்தடைதலின்.

## 487. இரண்டாவது பத இலக்கண கண்டனம்.

இரண்டாவது மியையாதாம் வேற்றுமைப்பொருளின் ருெடர்பின் கூடாமையுண்டையின் விபக்தியென்பதனுமே

வேற்றுமை வினைவிகுதிகட்கும் பிராக்தி சோவிபக்தி யென்ப தனுனே தசின்முதலிய விகுதிகட்கும் தனித்தனியே வியக் திப்பெயர் விளம்பியிருத்தலின் சத்தசாமியத்தானு மிலக் கணஞ் சாராமையின்.

## 488. விபக்தியந்த வருணங்கள் பதமென்னு மிலக்கணத் தின் கண்டனம்.

மேலும் வருங்ணகளெனப் பண்மையை விளம்பவிழை யின் யானென்பதாதிகட்குப் பதமின்மை வழக்காம். விளம்ப விழைவின்றெனின்? தேவதத்தவென்னும் ஈற்றகாரத்திற்கு பதப்பான்மையி னடைவாம். அதற்கு விபக்தியந்தத்தன்மை யுண்மையின். பயனுடைத்தாய தவ்வாறுமெனின்? என்னற்க, பவதியென்பதாதியின்பால் ஸபகாராதிகட்குப் பதப்பான்மை வழக்காம், ஸப்புக்குப்பயனுடைத்தாந் தன்மையுண்மை யின் யாண்டு விதிக்கப்பெற்றது விபக்தி அஃதாமெனின்? ஆகாதாம், ஸபகாரத்தை விடுத்துப் பதப்பான்மை வழக்காத லின். அதனிடையுட்படுதலின் ஸபகாரமும் கவரப்படும் எனின்? ஆயின் யாண்டு விபக்தி விதிக்கப்பெறுமோ ஆண்டு அதன் விபக்தியிடையுட்பட்டது பதமென அறையுமவாவா? யாண்டு விபக்தி விதிக்கப்பெறுமோ அது அதன் விபக்தி யிடையுட்பட்டதோடுற்றது பதமெனவா? ஆதியதேல், ஸப காரத்திற்கும் தனித்தே பதப்பான்மை வழக்காம். இலக்கணத் திற்கும் அவ்வியாபகத்தன்மையாதலின் இரண்டாவதேலோ, தேவதத்தவென்பதற்குப் பதப்பான்மையின்மை வழக்காம். இடையுட்பட்டதின்மையானே இடையுட்பட்டதோடுற்ற தென்னும் அடையின்மையின் சிலபால் இடையுட்பட்டதோ டுற்றதற்குஞ் சிலபாற் கேவலத்திற்கும் எனப்பொருந்திய வாறே யாமெனின்? ஆகாதாம், ஏகத்தொடர்பு வடிவங் கூறுக்

14 A

கால் இலக்கணத்திற்கு அவ்வியாபகத்தன்மை யடைவக்ற முடியாமையின்.

## 489. பதவிலக்கண விலக்கம்.

மேலும், தேவதத்தசுவென்பதும் பதமாம், இனியபச த்தமிது, பதப்பான்மை பெறலாயவழி ருத்வாதிவிதி யின்றி யமையாது இயையவேண்டலின் எனின்? அன்றும், எத ஞனே இஃதபசத்தமாமோ அதனுனே நினக்குத்தோடம் நேரும், அபசத்தத்திலும் பதவிலக்கண மடைகின்றதன்றோ. ஆகலின், ஆசிரியர் பாணினிபாரற் சத்தசித்தியின் பொரு ட்டு ருத்வாதிவிதியை யனுசரித்து அபசத்ததசையின்கண் ணே இப்பதசம்ஜ்ஞை நதிசம்ஜ்ஞைபோலும் அயலாய செப் பப்பட்டதாம்; இலௌகிக பதவிவகார சித்தியின் பொருட் டுச் சாதுசத்த விசேடத்திலின்றும் ஆகலினுனே, அதற்கு அயலாகவே யிலக்கணமியம்பத்தக்கதாம். அன்றுயினே, தாக்ஷீநந்தனர் (பாணினியார்) கூறிய கானகத்தலி நீதிசம்ஜ் ஞைப் பிரத்தியபிஞ்ஞையுளதாயவழி நீரைவேண்டியவனுகிப் பொய்யுணர்வுடைய நீயாண்டு முயல்க.

## 490. பதத்தின் வேற்றிலக்கண மாற்றம்.

இனி, சருவ இலக்கணப் பிரவிருத்தியினுனே யடை வுற்ற விபக்தியந்தமே வியாவகாரிகபதமென விலக்கணமாகுக வென்றியம்பின், இன்னணமாகாதாம், சருவ இலக்கணப் பிர விருத்திக்கு யாண்டுஞ் சம்பவமின்மையின். சம்பவிக்கப்பட்ட சருவ இலக்கணப் பிரவிருத்தியினுனேயெனின்? என்னற்க, சம்பவித்தலும், அப்போழ்தா அயற்போழ்தா அறையுமவா? ஆதியதேல், தேவதத்தரு என்பதும் பதமாம், ருத்வம் விதிக் கும்போழ்து விசர்க்கஞ் சம்பவியாமையின். அயற்காலென் னும் பக்கத்தும் தேவதத்த என்பதும் பதமாகாதாம், என்ப

தாதிபத பூர்வகாலத்தாவதாய யத்தன்மைய லோபாதிகளா காமையின்.

### 491. அவ்வியாத்தியகற்றற் பொருட்டு அயற்சிறப்பென்னுஞ் சங்கை யகற்றல்.

வேறு சத்தசந்நிதி யில்லாமலே எஃதாமோ விலக்கணம் அஃதறையு மவாவாமெனின்? ஆகாதாம், ஜீவிகையாற்றி வியாக்கியானித்தான் என்னும் பொருளில் ஜீவிகையைச் செய்து வியாக்கியானித்தான் எனப் பிரயோகிக்கப்படும் வாக் கியமாகும். ஒரு பொருள் வரைந்துகொண்ட பதக்குழுவிற்கு ஆண்டுமடங்குந்தன்மை யுண்மையின். செய்து என்பதனோடு சம்பத்தமாய ஜீவிகையை யென்பதற்குக் கூறிய பதவிலக்க ணத்தானே யினிது கவரப்பெற்றதன்மை யுண்மையின்.

### 492. வேறுவகையாகப் பதவிலக்கண விலக்கம்.

எவ்வுபாதியை யுஃடையதா யெவ்விலக்கணப் பிரவிருத்தி அவ்வுபாதி சம்பத்தியுளதாகவே அதனாலடைவுற்றது அவ் வாறுமெனின்? ஆகாதாம், யாண்டுபாதி சம்பத்தியின்றுமோ ஆண்டுக் கேவலத்தி லஃதுளதாக வென்பதனின்மையினே பத மன்மை யடைவுறுதலின். எவ்வவத்தையின்கண்ணே எவ்வி லக்கணத்திற் கினிதுறலாமோ அவ்வியாவுமுளதாக விபத்தி யந்தம்பதம் ஆமெனின்? ஆகாதாம். எவ்வவத்தையின் கண் ணேயென அவத்தைகட்கு வேற்றுவேற்றாகாரமாக ஆராய்வா மேல் இலக்கணத்திற்குத் தொடர்பின்மையின் அவ்வியாபகத் தன்மைத்தோடமாம். அவஸ்தைகளின் ஒருமைஅறையுமவா வின்றும் அமையாமையுமாம். எஞ்ஞான்றும் எல்லா அவத் தைவிடயத்தில் இலக்கண வழக்காதலின் என்க. அதுவும், பவந்தி பவதி பவதியென வொன்றும், பவதியஸ்தியென வொ ன்றும், படம் படங்களென வொன்றும், படத்தைப் படமெ னவொன்றும், என்றதிவியாத்திடோம்.

### 493. மீமாஞ்சகமதத்தில் அதிதேசம்.

இதனானே, அபௌருஷேயம் வாக்கியம் அஃதென்பதும் அகற்றப் பெற்றதாம்.

### 494. அருத்தாபத்தி கண்டனம்.

இனி, அருத்தாபத்திதானென்னென் றதையப்பெறும். அயலோராற்றா லமையப் பெறுமையாமெனின்? அமையாதாம், எதனானே அன்னியத்தன்மை அதன் சித்தியின் முன்னர் அதன் அசித்தியாதலின்.

### 495. மீண்டுந் தூடித்த பக்கத்தின் நிராகரணமே செய்தல்.

சித்தத்தாற் பொருந்தாமையாமெனின்? ஆகாதாம், விசேடனத்தானே விலக்கப்படுவதன் புலப்பாடிலதாயவழி அது வாளாபோகவே அதனைக் கொள்ளாக்கால் எல்லாவாற்றானும் பொருந்தாமைப் பொருட்டன்மையின்மாட்டோர் பயன்முரண்படுதலின் எதனானும் பொருந்தாமைப் பொருட்டன்மையின்மாட்டோ துணிபொருட்பெறுதி முடிவுபேறடையாமையின்.

### 496. வேறு வகையானே போருந்தாமை யகற்றல்.

பிரமாணங்களின் முரண்பொருந்தாமையெனின்? துணிவுபெறுத்தன்மை யுண்மையின்; பிரமாணத்தன்மையானே அபிமானஞ் செய்யப்பட்டவைகட்கு ஆமெனின்? ஆகாதாம், அபிமதத்திற்கு மயற்பொருட்டன்மையேன் மிகு வழக்காதலின்; ஞானப்பொருட்டன்மையேனும் நிகழ்த்தியதோட நீக்கமின்மையேயாம், நிண்ணயிக்கப்படாத பிரமாணமாதலின் மைகளில். என்பதின்கண்ணும் அவ்வாறேயாம். அங்ஙனமன்றே:—சற்பிரதி பக்கத்திலும் அதற்கு அதன் சம்பாதகப் பிரமைப்பயனுண்டமை யுடைவுவருதலின் ஆண்டு முரண்ப

டில் வியாகதியால் ஏக அப்பிரமாண்ய நிச்சயமாம். யாண்டு. தான் இவ்வாறிலதாமோ அஃதறையவேட்கையெனின்? அன்றும், இங்ஙனம் சற்பிரதி பக்கம்போலும் பிறவிடத்தும் முரண்பட்ட பொருட்டன்மையானே போலித்தன்மை சமமாதலின் தருக்கங்களின் முரண்பாடு அவாவப்பெறும் எனின்? பெறுதாம் பரஸ்பரம் விரோதத்தானே தருக்கங்கட்கும் போலித்தன்மை யுண்மையின்.

## 497. மீண்டும் வேறு வினவின் விலக்கம்.

விசேடத்திற் பிரவிருத்தித்த பிரமாணத்தின் அருத்த நிட்டேதத்தை விடயமாகவுடைய தன்மையின் கண்ணேயும், அவிசேடத்திற் பிரவிருத்தித்த பிரமாணத்தினும் விபரீத அர்த்தப் பிரமாணமுண்டையதன் விரோதமாயெனின்? ஆகாதாம் விபரீதத்தன்மையில் விசேட விடயப்பிரமாண முணர்த்தியதோடும், அதன் விருத்த அருத்தத்தன்மை அங்கிசத்தி வலுவிலாத வையத்திற்கு இடங்கிடையாமையானே அவிசேடப்பிரவிருத்த பிரமாண விடயத்தன்மையாகிய வதனைதக் கோசரிப்பதற்குங்கூட ஆற்றலின்மையினானே யென்பதாம். அவிசேஷப் பிரவிருத்த பிரமாணத்திற்கு அதன் மாறுபட்ட பொருள் விசேட விடயப் பிரமாணதரிசனம் அதனினயல் விசேட விடயப் பிரமையைப் பலமாகவுடையது அவ்வாறுமெனின்? ஆகாதாம், அவிசேஷப் பிரவிருத்தப் பிரமாணத்தின், அதன் மாறுபட்ட பொருள் விசேஷ விஷயப் பிரமாணத்தின் விடயங்கட்கு அதனின் விபரீதத்தன்மை விசேஷணப் புலப்பாட்டை யங்கீகரித்தலினானே கிடைக்கப்பெற்ற பரஸ்பர விருத்தத்தன்மை புலப்பாடாயவழி தருமிகளின் விருத்ததருமம அத்தியாச பேதத்திற்கு விரோதத்தின் பகுப்பில் வெளியாயதன் கருப்பத்துட்புகுந்த தன்மையினானே

அதனோடு ஞேயத்திற்கு அதன் முடிவு பேறின்றியதற்காதல் பிறவிடத்திற் போலப் பிறிதனோ னடைவு கூடலின்.

### 498. வேறு வகையானே அருத்தாபத்தியின் நீக்கம்.

மேலும், அவிசேஷப் பிரவிருத்தமாய அதற்கேவிசேஷ விஷயத்தன்மையா? இனிச் சாமானியமாகப் பிரவிருத்தத்தின் முடிவு பேறிலாமையானே முன்னரே விசேஷ விஷயத் தன்மையானே யறியப்பெறாத விசேஷவிஷயத்திற்கு விசேஷ விஷயத்தன்மையா? அல்லது சாமானியமான அதன் விஷயத்திற்கு விசேடமா? அல்லது அது விடயஞ்செய்த விசேடத்திருக்கும் வேறு தருமம் யாதேனும் இப்போதளக்கப் பெறுகின்றதா? அருத்தாபத்திக்குப் பிரமகரணத்தன்மையின் அடைவாதலின் ஆதியதாகாதாம். அதனனுவியவசாய உற்பத்தியினானே அதன் விடயப் பிரதீதி யசம்பவமாதலின் இரண்டாவதூ மியையாதாம். உள்ளடங்காத ஆசிரயத்தை யுடைய சாமானியத்தை நீக்க முடியாமையின் முன்னரே அதன்றுணிபு கூடலின் மூன்றாவதுந் தோன்றாதாம்.

### 499. நான்காவது விகற்ப நீக்கம்.

நான்காவதும் நன்கன்றாம், அதோ புலப்படாநின்ற விரோதியையுடையதினும் வேறாயதன்மையா? அல்லதயலேயா? அதன் புலப்பாட்டின்மாட் டாற்றலே யினிதுகாட்டமுடியாமையானே அநியம் வழக்காதலின் ஈற்றது மாற்றதாம். தொடர்ந்த தொடராத ஜாதிவியத்தி விழிகவர்ந்த கவராததாதி வியத்திகந்தாதி தாதான்மியவாதி மதத்தில் அவ்விரண்டு பிரமைகளின் தாதாத்மிய விடயத்தன்மை விலக்கமிலாது விரோதந் துணியப்பெறாமையின், அதன்கமனிகையாற்றலுக்கே யசித்தியாதலின். அவ்விரண்டன் புலப்பாட்டின் மாட்டும் அதன்றுணிபின் முன்னரே அதன்றோற்றத்தால் அருத்தாபத்தி யனுவாதத்தன்மை யடைவாதலின்.

## 500 அனுபலப்திப் பிரமாண கண்டனம்.

யோக்கிய அனுபலம்பம் அபாவப்பிரமையின் கரணம் என்பதும் தகாதாம், பிரமாண அபாவத்திற்கு அவ்வாறுந் தன்மையேன் மயிலுதயமாகா வழக்காதலின் உபலம்ப அபாவமாத்திரத்திற்கு அவ்வாறுந்தன்மையேலோ சங்கத்தின் வெண்மையை நினையவனுக்கு மஞ்சண்மயல் எழாவழக்காதலின், போதின் பேதத்தாலாண்டு முரணின்றுமெனின்? முரணுறுதாம், ஆயினும் சம்பாந்தமுற்றவற்றின் அன்னியோன்னிய அபாவக்கவர்ச்சியின்மை வழக்காதலின். தாதாதமியத்திற்குச் சொரூப மாத்திரத்தினும் வேறாகாமை யுண்மையின் அபாவ இயக்கத்திலோ அஃதியங்க வேண்டிய தோர்தலையாதலின்.

## 501. யோக்கியதையாலுதிக்குந் தூடணம்.

மேலும் யோக்யதையோ அவ்வவ்வவினாபூத அன்னியப் பிரதியோகியை யளப்பதன் சாகல்லியமாமென அவாவப் பெறும்; பெறலாயவழி யாண்டுப்பாவ உபலம்பமாமோ ஆண்டும் அபாவப்பிரமையாம். ஆண்டு ஹேது வில்லாமையானுதல், உளதுதானுதல் அதனப்பாவப்பிரமை யுற்பவியாதாம். அவ்வவ்வவினாபூத விரகசகித அஃதவ்வாறுமெனின்? ஆகாதாம், அவ்வவி நாபூத வியதிரேகத்திற்கு, அதன் வியதிரேகத்தானே வேறோராற்றாற் பெறப்பட்ட சந்நிதிக்கும் ஹேதுத்தகைமையை யங்கீகரிப்பதிற் பிரமாண மின்மையின். இதனானே ஆலோகத்தின் அத்தியகணத்தில் அவயவத்தானுதல் அவயவியினுதல் ஆலோகாந்தர முடைமையில்லையாம், ஆலோகத்தான் வேறோறுற்றுற் பெறப்பட்ட சந்நிதி ஹேதுவல்லவாமென ஆலோக அபாவக் கவர்ச்சியில் அஃதவாவப் பெறுவதில்லையாம்.

## 502. அசம்பவ மறைதல்.

பொருட்பொறியோகமோ பொருள் வியாத்தமாகாதாம். அங்கிசமா யைக்கியமிருத்தலின் அதனபாவசகிதமா மஃதவ்வாறுமெனின் ஆகாதாம், பொறியொற்றுமைக்கன்றே பிரதியோகியின் அநுபலம் பத்தில் ஆண்டேதுத்தகைமை யங்கீகரிக்கப்படுகின்றது; ஆண்டென்றொற்றுமையிலாதவழி காரியமுதயமாகாத உதாரணம் அங்கீகரிக்கத்தக்கதா? இல்லையா? இலதாமேல் ஆயின், ஒற்றுமைக்கேதுத் தகைமையைத்தானேனுடன்படல்வேண்டும். வேறோராற்றானே காரியோற்பத்திகூடலின்; அங்கீகரிக்கத்தக்கதெனின்? அவ்வுதாகரணத்தின்மாட்டே தடைப்படுத்துவதால் பொறியொற்றுமையில்தாம்வழி உண்மையாயோ இன்மையுடையதாகக் கூறியகாரணங்கூடிநிற்றலின் இன்மையுணர்வுளதாதல் வேண்டும். பிரதியோகியைப் புலப்படுத்துவதற்கேதுவாய தடைப்படுத்துவதின்மை ஆண்டிலதாமெனின்? அற்றன்றும், ஒற்றுமைக்குட்பிரமை வியதிரேகப் பிரயோஜகத்தகைமைத் துணிபுதாரணமே யஃதாயினுகாதாம் தடையானது ஒற்றுமைவிரோதியாதலினானே பிரமை விரோதியாம் எனின், ஆயின் தடையின்மையொற்றுமை யுற்பத்தியின்மாட்டுக் காரணமேயலாது அபாவப்பிரமை விசேடவுற்பத்தியின் மாட்டுக் காரணமாகாதாம் என நிலைபெற்றவழி அவ்வழக்காங்கே நிலைபெறும்; ஒற்றுமை யின்மையினானே அஞ்ஞான்று கூறிய காரண அடைவின்மையாம் என்னற்க. பிரதியோகியொற்றுமை யபாவப்பிரமையை யுண்டாக்குமேல் எப்போதும் அதன் அநுற்பத்தியடைவு வருதலின். இதனானே, தடையற்றதென அதிககாரணம் அங்கீகரிக்கத்தகாதாம், பொறியொற்றுமையின் கண்ணே அது கூடலின்; ஆசிரயசாக்ஷாத்காரமும் அதிககாரணமாக அங்கீகரிக்கத்தகாதாம்; முன்னின்மைக்கவர்ச்சிமுதலியவற்றே பிறழ்தலின் என்க.

## 503. மீண்டும் வேறுசங்கை நீக்கம்.

அற்றேல், தடைப்படுத்துவதிருந்தபோதினும் யான் டுண்மையாக அபாவமிருக்கின்றதோ ஆண்டுக்கூறியகாரணத் தான் அபாவத்துணிபுளதேயாம் யாது விரோதம் அது? ஆண்டுப் பாவமிருக்கு மிடத்தும் அத்துணையானே அதன பாவப்பிரமை அடைந்திடாதாம், ஆயின் பிரதியோகியபாவத் தோடுற்ற அனுபலம்பமே அபாவப்பிரமாணமாகுக; தகுதிச்சிற ப்பைப்புகுத்தும் வியசனத்தை தரித்திருதொழித்தி தகுதிச் சிறப்பைத் தாராதொழியில் அநுபலம்பமாத்திரத்தான் உண் மையாகப் பிரதியோகியில்லாவிடத்தும் அபாவநிச்சயமாகா தாம், ஒரொருகாலோ ஐயப்பாடுளதாம்; ஆகலின் யாங்ஙன மங்ஙன மங்கீகரிக்கப்படுகின்றதெனின்? ஆயின் மறைப்பிருப் பினும் இவ்வண்ணமேமெனத் தகுதிச் சிறப்பைத் தரினும் சமமேயாம்.

## 504. அங்கீகரித்துத் தூடண மறையல்.

அன்றியும், மேயத்தின் வாஸ்தவசத்வம் பிரமாணபக் கத்திற் புகுத்தத்தக்கதாகாதேயாம், மேயவஸ்துசத்வ நிண் ணயப் பொருட்டேயன்றோ பிரமாண அப்பிரமாண விவே கம் செய்தல் ஆராயப்புகுந்தோர்; மாறாயினோ, அனுமானத் தில் வியாத்தியின்மாட்டுபாதிநீக்கும் ஆபாசம் ஷீணன்றோ வாம் வியாபித்தபக்கதருமத்தன்மை ஞானமாத்திரத்திற்கே காரணத்தன்மை யங்கீகரித்தலான் நன்னிலைநண்ணலின். முன்னின்மைப் பிரமிதியின்மாட்டோ அபாவப்பிரமாணத் தன்மையை எண்ணுதியேல்ஆயின் அஃதாகாதாம். ஆண் டிஞ்ஞான்றுண்டாகும் அபாவப்பிரமையின் உற்பத்தியின் மாட்டு அபாவவாஸ்தவ சத்தையின்மையும் இஞ்ஞான் குறியாண்டேனும் சம்பவித்தலின். பலவிடயகாலத்திய அபா வஉபலக்ஷித ஆசிரயாதிகள் காரணகோடியிற் புகுத்தப்படு

மேற் சிறப்பின்மையின்; அதனுலுபலக்ஷிதத்தன்மைவாய்ந்த சிறப்பிற்கே சிறப்புறுந்தன்மையேன் மிகுவழக்காதலின், ஆயினும் பொதுவாகச் சிறப்பின்மை மயசித்தாமெனின்? ஆகாதாம், அதனதுண்மையில் நிர்வசனம் நேர்தலின்.

பிரமாண கண்டன முற்றிற்று.



## 505. ஆபாசகண்டனாரம்பம்.

இவ்வசித்தவென்பது தானென்னேகோல்! அங்ஙன மன்றே வியாத்தி பக்கதருமத்தன்மைகளானே அளக்கப்பெறுத தசித்தமாம் என்பதிலக்கணமாகாதாம், இங்ஙனமாமேலாயின் மற்றைய ஹேதுப்போலிகட்கும் அசித்தத்துட் புகுதலாம், வியாத்தி பக்கதருமத்தன்மைப் பிரமிதியையாதல் யாவை எதிர்க்கின்றனவில்லையோ அவற்றிற்கேது தோடத் தகைமை கூடாமையின்.

## 506. நையாயிகர்விஞதல்.

அற்றேல் இஃதித்தகைதாயதாகாம், அங்ஙனமன்றே:— சில தோடங்கள் வியாத்தி பக்கதருமத்தகைமைகளின் பிரமிதி யபாவவடிவுடையனவாம்; மற்றுஞ் சிலவோ வியாத்தியாதி பங்கத்தில் இலிங்கபூதங்களாம் தோடங்கள். தடைப் படுத்துவதானே அனுமதியினுற்பத்தியைத் தடுப்பனவாய்ச் சில தோடபாவத்தைத் தோய்கின்றன. ஆண்டு முதலில் அசித்தியினிடையிற்றானே புகுகின்றன, அஃதாமாறு:— வியாப்பியத்வ அசித்தம் சோபாதி வடிவதாம், உபாதியோடு கூடாததாய சம்பந்தித் தகைமையே வியாத்தியாகும், உபாதியோடுகூடிய தன்மையும் அநுபாதித்தன்மையினின்மை வடிவமேயாம், இவ்வண்ணம் அதிகரண அசித்தியும் அசித்தியின்

பாலே யடங்கிக்கிடப்பதாம், பக்கபதத்தாற் பற்றக்கிடந்த பற்றுக்கோடாயதன் இன்மைவடிவதன்றோவது.

## 507. சித்தசாதனம் அசித்தியூடடங்கல்.

சித்தசாதனமும் அத்தகையதேயாம், துணிதல் வேட்கைத்தன்ம, அடையடுத்ததற்றோ பக்கமெனப் பகரப்படும், யாண்டுத் துணிபுளதோ ஆண்டுத் துணிதல் வேட்கையிலதாம், ஆதலின் ஆண்டு அடையினின்மையாலாக்கப்பெற்றதாகும் அடையடுத்த பக்க ரூபத்தின் இன்மையென்க; பிறழ்ச்சித்தன்மையின் வியாத்தி நாத்தியாக்கப்பெற்றதெனத் தனித்தே பிறழ்ச்சிக்குத் தோடத்தகைமையாமாறு துணிபுண்மையின் · ஆண்டுத்துணிதல் வேட்கையிலதாமெனத் துணிபுண்மைக்கும் தனித்தே தோடத்தகைமையடைவுறும், குறிவாயிலாக அசித்திமுடிவுபேறுண்மையின், மாறாயினோ, வியாத்தியாதியின்மை முடிவுபேறடைதன் மாத்திரையானே பிறழ்ச்சிமுதலியவையும் அசித்தியின்மாட்டே யடங்காநிற்குமென அறையற்க; துணிதல் வேட்கையின்மை, துணிபுண்மைக்குறியானே யறிபவனாலறியப்பெறாமையின்; மற்றோ, அவ்விழைவின்மையின் உள்ளவாறு காண்கை காட்சிமுதலியவற்றானே காணப்பெறும். விழைவேதானுண்டு யாதிலதோ ஆண்டுத் துணிபுண்மை சாதகம் என்னுமித்துணை மாத்திரையானே துணிந்ததைத் துணிவதிற் றுணிபுண்மை யுரைக்கப்பெறுகின்றதாம், குறியினானே விழைவின்மையைக் கருதுவானல்லவாம். இன்னணம் சொரூபாசித்தியும் பக்கதருமத்தன்மையினின்மை வடிவதேயாம்.

## 508. விருத்தத்திற் கசித்தத்தினும் தனித்தன்மை.

யாவை வியாத்தி பக்கதருமத்தன்மை யின்மைக் குறிவடிவங்களாயோ அவை அசித்தத்தினும் தனித்தவையேயாய ஹேதுப்போலிகளாம். அஃதெங்ஙனம்: — விருத்தமென்

பது துணிபொருள் விபரீத வியாத்தமாம், ஆண்டுத் துணி பொருள் வியதிரேக வியாத்தத்தன்மை ஏதுவிற்குத் துணி பொருள் வியாத்தத் தன்மையின்மையன்றாம். அஃதென்னை கொல்? துணிபொருளின்மையோ டுபாதியற்றதாஞ் சம்பந் தம் அயலேயஃதாம், இம்முறையே யிது பக்கதருமத்தன்மை யின்மைவடிவதூஉம் ஆகாதாம்; அஃதென்னைகொல்? அதற் குத் துணிபொருளின்மையோ டுபாதியற்ற சம்பந்தத்தன்மை யுண்மையின், ஆண்டுத் துணிபொருள் வியாத்தி யிதற்கின்று மெனக் கருதலாம், அவ்வாறுயவழி துணிபொருள் வியாத்தி யின்மைக் குறியாய் விருத்தம் தனித்ததாகவே ஹேதுப் போலியாமென்க.

## 509. அனைகாந்திகத்திற்கு வியத்தின்மை ரூபத்தன்மை யின்மை.

இம்முறை அனைகாந்திகமும் வியாத்தியின்மை ரூபமன் றும், மற்றேறு, அதன்குறியேயாம்; அங்ஙனமன்றேறு:— ஹேது வின் உடனிகழ்ச்சிக்காதல் தனடனிகழ்ச்சிக்காதல் உள் தாம்பிறழ்ச்சி துணிபொருட்சாதன வியாத்தியின்மை வடிவ தன்றும்; மற்றேறு பிறழ்ச்சி ஏதுவிற்குத் துணிபொருள் வியாத்தி யின்மை யிலாமற் பொருந்துறுதாமெனக் குறிப் பான்மையானே வியாத்தி நாத்திவை யறிவுறுத்தா நிற்கும். துணிபொருலோடு சம்பந்தம் நிருபாதியா யிதற்கேனுமாயின் பிறழுவான் யாங்ஙனமேனும்? ஆகலின் வியாத்தியின்மைக் குறி பிறழ்ச்சியே யலாது வியாத்தியின்மை யல்லவாம். பக்க தருமத்தன்மையின்மை ரூபத்தன்மையோ அனைகாந்திகத் திற்குப் பொருந்துறுதேயாம்.

## 510. சற்பிரதிபக்கம் அசித்தியினும் அயலாதலும் அதன் வடிவமும்.

சற்பிரதிபக்கத் தன்மையின் மாட்டோ அறியப்பெறாத சிறப்புப் பிரதிபக்கப் பெருந்தடையான் எத்துணிபொ

ருட்டுணிபு பிறப்பியாமை ஹேதுவிற்கு அது தடையுள்ளதாய வழி காரியத்தைப் பிறப்பியாமை அயற்காரணப்பொதுவத்து வியற்கையாம், அதற்கு வியாத்தி பக்கதருமத்தன்மை யின்மை ரூபத்தன்மை பொருந்துறுதமேதயாம்.

## 511. பாதம் அசித்தியினும் அயலாதல்.

பாதமோ துணிவிக்கும் பொருளுடைய பக்கத்திற் றுணிபொருளின்மையை யுணர்த்தும் வடிவதாக வாய்ந்த போதினும், வியாத்தியின்மை யுணருருவாகாதாம், பொதுவதாக உபாதியற்ற சம்பந்தரூபமே வியாத்தியாம், துணிவிக்கும் பொருளுடைய பக்கத்திற் றுணிபொருளின்மை உபாதியோடுற்ற தன்மையாகாதாம், அதற்குத் துணிபொருண் முரணுவியற்கை யுண்மையின் ; இதுபொதுவதாகத்துணிபொருடுணிவிக்கும் பொருளொற்றுமையி னின்மைரூப மாகாதாம், பாதமிருந்துழியும் பொதுவதாகத் துணிபொருடுணிவிக்கும் பொருள்களின் றிட்டாந்தத்தாற் பெற்ற வொற்றுமையைத் தணர்தலேலாமையின், பாதத்திற்குச் சிறிது சிறப்பு விடயத்தன்மை யுண்மையின், பொதுவடிவமாகக் கவர்ந்த வொற்றுமை வேறு சிறப்பைக்கொண்டு முடிவுபேறடைதல் முரணுமையின்; ஆகலின் சிறப்பின் பாதத்தாற் பொதுவதாக வொற்றுமைக் குபாதியோடுற்ற தன்மை கருதப்பெறும், உபாதியற்றதன்மையேலாயிற் பாதம் போதாமையின் "பாதத்தாலுதல் அயலாற்றுலுதல் உபாதி யுன்னப்பெறும் என்பதுயாதொரு கோதுடையது மன்றும்" என வியம்பியுமுள்ளார்.

## 512. வாசஸ்பதிமதம்.

சற்பிரதிபக்கம் போலப் பாதத்திற்கும் தடைத்தன்மையேயாம் அதனாற் பாதமுளதாயவழி தடைப்படுதலின் துணிவதின்று மேதுவென வியாத்தி பக்கதருமத்தன்மைத் தோட

மாலோசியாது பாதத்திற்கு அயலாற்றானே தோடத்தன்மை யைப் பிறரோ பிறங்காநிற்பர்.

## 513. மும்மைவகைமுடிபு.

ஆகலின் வியாப்தி பக்கதருமத்தன்மை யுணர் வுண்மை களின் யாண்டு நேராகவே இன்மையெழுச்சியாமோ ஆண்டசித்தமாம், யாண்டுதான் வியாத்தியாதி யின்மைக்குறி யுபந்நியாசமாதல், சற்பிரதிபக்க விபந்நியாசமாதல் ஆமோ ஆண்டு அயலேதுப்போலியாம்.

## 514. நியம ஆக்ஷேப பரிகாரங்கள்.

ஆற்றேல், உபாதியோடுற்ற தன்மை முதலியவையும் எதனு லறியப்பெறுகின்றனவோ அஃதியாங்ஙனம் தனித்தூடணம் அநைகாந்திகத்தன்மை முதலியவற்றைப் போலும் ஆகவில்லையெனின்? அற்றன்றும், அநைகாந்திகத்தன்மை முதலியவைகட்கு வியாத்தியாதி யின்மை யுணர்த்துவதிற் குறியுண்மை நியமத்தாற் றனித்துபந்யாசமாம்; உபாதியோடுற்ற தன்மை முதலியவற்றிற்கோ காட்சியாலும் புலம்படுதலுண்மையின், குறியுண்மை நியதத்தை யாண்டு நிகழ்த்துவதொருசிறிதுமின்றாம். யாண்டுப் பொறிக்கெட்டாததாதியாம் விடயத்திற் குறியால் உபாதியோடு கூடியதாந் தன்மை முதலியவற்றின் றோற்றம் ஆமோ ஆண்டு அக்குறி தனித்தே தூஷணமாகக் கூறத்தக்கதாம், அநைகாந்திகத்தன்மை முதலியவையும் யாண்டினு முளதாய வியாத்தியின்மைக் குறியின தென்பதாக விலதாமெனு ஹேதுப்போலி மிகுதியாகப் பொருந்துமென் றியம்பற்க; அநைகாந்திகத்தன்மை முதலியவைபோலும் அக்குறிகட்கு ஒரு வடிவுண்மையானே காண்பிப்பான் முடியாமையின் தனித்தனி யேதாகுதல் நாமமிடல் நண்ணுதன்றோ, என்னை? எண்ணமுடியாமை வந்துறுதலின்

என்பதாம். அதற்குப் பெயரிடாமைக்கு ஹேதுவை மேலே யிழற்றுவேம்.

## 515. தனித் தூடணத்தன்மை யின்மைவினா.

அற்றேல், தகாதகன்றோ கூறப்பெற்றது, வியாத்தியாதி யின்மைக் குறியானே அநைகாந்திகத்தன்மை முதலியவற் றிற்குத் தனித்தூடணத்தன்மை என்பதாக; எதனான் வியாத்திபக்கதருமத்தன்மைகளோடு கூடிய குறியானுணரப் பெறும் திணிபொருட்கருதல், அதனழிவான் ஆகாதாமோ; எதனாற்றான் அஃதாகாதோ அதுவே அதன்கட் டூடணம் என வியம்பற்றகுதியாம், இக்கருதலினுதயகாரணம் ஈண்டின் றும் என; வியாத்திபக்கதருமத்தன்மைகளையும் அவற்றின் உணர்வுகளையும் விடுத்து அயலொன்றதனுதய வேதுவாக வியதிரேகமாய்க் காண்பிப்பான் றகுதியாயிலதாம்; ஆதலின், கருதற்றோடத் தோற்றகாரணத்தன்மை அநைகாந்திகத் தன் மைமுதலியவற்றிற்காம், நேரே தோடத்தன்மையாகாதாம்; தோடத்தை யியம்பும் வாயிலாயேனும் தோஷத்தன்மையாம், நேரே தோடத்தன்மை உபஜீவியாதுரைத்தன் முடியாதென முக்கியதோடத்திற்கே தோடமதாகக் கிளப்பல் பொருத்த மாம், பிறழ்ச்சி முதலிய வற்றிற்காகாதாமாகவே பகுக்குஞ் சூத்திரம் பயனில் கூற்றன்றோவாமெனின்.

## 516. வினாவிலக்கம்.

உண்மையே யுரைத்தனை, நேரே தோடத்தன்மை, தடைக்காதல் வியாத்தியாதியின்மைக் காதல், விருத்தத்தன் மைமுதலியவற்றிற்கோ அதனை யளத்தலினானே தோடபக் கத்தில் வீழ்தலாம், எனினும் விருத்தத்தன்மை முதலியவை எத்தோடத்தை யியம்புவதாக வியம்பப்பட்டதோ அதனுதய வெளிதிற் கோடலையனுசரித்து வியாத்தியாதியிலதாண்டுதிப்

பதிலேது செல்வதற்கு முடியாதாம், அநைகாந்திகத்தன்மை முதலியவற்றின் கண்ணே உதிப்பிப்பதில் வியாத்தியாதியின்மை பொருளாற் கிடைக்கும்; வியாத்தியாதியின்மை யிலாது அநைகாந்திகத்தன்மை முதலியவற்றிற்குப் பொருத்தமின்மையின். அதனினும் நீண்டது இதுவென்புழி இதனினும் குறுகியது அதுவென்பது பொருளாலுணரப்படுமன்றே! ஆண்டறையவேண்டியதாக மற்றோரவாவிலதாம், அதுபோன்றே ஈண்டும், அனலின்றியவிடத்திற் புகையுளதாமெனப் புகலப்பெறின் அனலானது வியாத்தமாகாதாம் எனப்பொருளாலுணரப்படும். அனலானே வியாத்தமாம், அனலிலாவிடத்துமிருக்கும் என்பது பொருத்தமற்றதன்றே! இதனானே, அநந்தமாதலினானே அதீந்திரிய வுபாதியாதி குறிகளாய எவைகட்கு முன்பெயரிலாமை பொருந்தினுமோ அவைகளின் பெயரிலாமைக் கிதுவுங் காரணமாம். அவ்வுபாதிக் குறிகள் பொருள்வயத்தான் உபாதியை யவாவாதனவாயறியப் பெறுவனவாகாவாம்; எதனானைவைகட்கு வியாத்திதுணியப்பெறவில்லையோ, அதன்பொருட்டு அதனை யறைவதொழிந்து அறையமுடியாமையுங் கூடலின். அநைகாந்திகத் தன்மை முதலியவற்றை யுணர்வதன்மாட்டோ வியாத்தியாதியின்மை யுணர்வின்பொருட்டுப் புகலவேண்டற்பாலதாய மற்றொன்றன் அவா எம்மதிமானுக்குஞ் சம்பவியாதாம் என்பதாகப் பூர்வபக்கம் தொகுக்கப்பெற்றது.

## 517. சித்தாந்தத் தொடக்கத்தே அசித்தியிலக்கண நீக்கம்.

இன்னணம் அசித்த இலக்கணம் நிலைபெற்றுழி இப்பாதமியம்பப்பெறும், இதனானே எத்தகைய அசித்த இலக்கணம் ஆயுண்மானால் நிலை பெறுத்தப்பெற்றதோ, வியாத்தத்தன்மை பக்கதருமத்தன்மைகளானே அளவிடப்படாதது அசித்தமென ஆமேல் ஆண்டுவிருத்த முதலியவற்றில் இலக்கணம்

இலதா? அலதுளதா? இலதாமேலாயின் வியாத்தி பக்க தருமத்தன்மைகளான் அளக்கப்பெற்றனவேயாய் விருத்த முதலியவை அடையப்பெறுவனவாம், இனி உளதாமேலாயின் அவையும் அசித்த வேற்றுமைகலேயா யடைவனவாம். இனி இவ்விலக்கண மிருந்தபோதிலும் அவை அசித்தத்துட் படாதனவாம், ஆயின் இவ்விலக்கணம் அதிவியாத்தியை யடைந்ததாம், இனியாண்டு வியாத்திபக்க தருமத்தன்மைகளின் அளக்கப்படாத்தன்மை நேராக உதிக்குமாயின் அஃது அசித்தமென அறையப்பெறும், ஆயின் இலக்கணமயவிஃதி யம்பியதாகும், இதுவும் பொருத்தமுறுவதன்றும், யாண்டு வியாப்பியத் தன்மையசித்திக்கு வியாத்தியின்மை மாத்திரம் இயம்பப்படுகின்றதோ ஆண்டு வியாத்தி பக்கதருமத்தன்மைகளின் அளக்கப்பட்டதாந் தன்மைகளின் ஹானம் சேர்க்கையாக உதிப்பதின்றும்மென விஃதசித்தமாகாதாம், இங்ஙனம் எல்லா அசித்தச் சிறப்புங்கூறி வழக்கு விதிக்கத்தக்கதாம்.

## 518. தனிப்பக்கவினு அதன்பரிகாரங்கள்.

இனித்தனியாகவே யிவ்விலக்கணமாகுக, வியாத்தி யளக்கப்படாமையானே நேரேயுதிப்பிக்கத்தக்கது அசித்தமாம், பக்கதருமத்தன்மை யளக்கப்படாமையானும் என்பதாம், ஆயின் அன்னியோன்னிய உதாகரண அவ்வியாத்தியினுனே அவ்வியாபகத்தன்மை யிரண்டினுக்குமாம், இனி யிரண்டினுக்கும் அசித்தச் சிறப்பு இலக்கணத்தகைமை யுண்மையின் அன்னியோன்னிய விடய அவ்வியாபகத்தகைமை தோடப் பொருட்டாகாதாமென நினைக்கின்றனை கொல்! கூடாதாம் பொதுவிலக்கணம் புகலுவான் பொருந்தாதபோது இச்சிறப்பிலக்கணமுந்தா னெங்ஙனம் பொருந்தும். இனிக் கருதலுக்குச் சிறப்பாய ஹேதுவின்மையை யுதிப்பித்தல் பொதுவிலக்கணமாகுகவே, ஆகாதாம், சற்பிரதிபக்ககற்பனை

யங்யனமாமென அதிவியாத்தியாதலின்; பாவரூபமாக வே துச் சிறப்பேல் நிருபாதித்தன்மையின்மைக் கற்பனை யவ்வி யாத்தியாதலின், சொரூபாசித்தி எல்லா அளவைப் பொதுத் தோடமென்பதன்கண்ணே யதன் கற்பனை யவ்வியாத்தி யாத லினுனுமென்க. இனிவியாத்தத் தன்மை பக்கதருமத்தன் மைகளானே யளக்கப்பட்டதன்மையினின்மை யாண்டு நேராக உபந்யசிக்கப்படுகின்றதோ அஃதசித்தமெனக் கூறப் படின், இதுவும் அலக்ஷணமேயாம் அவ்வியாபகத்தன்மை யுண்மையின். யாண்டு வியாத்தியாதியின்மை யுபந்யசிக்கப் படுகின்றதோ ஆண்டு வத்துகதியான் வியாத்தத்தன்மைப் பிரமிதியினின்மை யுளதாகுக தான் உபந்யசிக்கப்படுவதூஉ மின்றும், பயனின்மையின். வியாத்தியின்மைத் தரிசனத் தானே கருதலங்கக்கெடுதல்வடிவ தோடத்தின் கற்பனை முடிவுபேறடைதலின்; ஆகலினுண்டு அளக்கப்படுந்தன்மை யின்மைக் கற்பனையிலதாமென அவ்வியாபகத்தகைமை தோ டமாம்.

## 519. வினு விடைகள்.

அற்றேல், அடைமுதலியவற்றினின்மையும் உண்மை யாக அடையடுத்ததன் இன்மையேயாமெனக் கூறிய தோட மிலாதாம் எனின்? இலதாம். அடை முதலியவற்றினும் அடையடுத்ததுமிகுமாயின் அக்கால் அதனின்மை வேற்று மையும் ஆம்; இனி மிகாதாயினே அப்போழ்து அடையின் மைத் தன்மை யுண்மையின் அடையடுத்ததன் இன்மைத் தன்மை அஃதயலாம் என அடையடுக்கற்பாலதன் இன்மைக் கும் அவ்வாறுயவழி தனித்தே யடையடுத்தத னின்மைத் தன்மைப் பொருளவற்றிற்காமெனத் தொடர்பின்மையே யாம், தற்பொருட்டுக் கருதலசித்தி யவ்வியாத்தியுமாம், கற் பனையின்மையின் என்பதாம்.

## 520. மீண்டும் வினவிடைகள்.

இனியாண்டு வியாத்தத்தன்மை பக்கதருமத்தன்மை யுணர்வினின்மை நேரேயுரையிட முடியுமோ அஃதசித்தம், உரையாட முடியுந்தகைமை யுரையாடாவிடினும் பொருந்தலின் அவ்வியாபகத்தகைமை யாகாதாம் என வியம்புதியேல்; இதுவும் பொருந்துறுதாம், அங்ஙனமன்றோ:— உரையாட முடிதலும், வடிவங் குறித்தன் மாத்திரை முடிதலா? அளவைபடுத்தி முடித்தலா? ஆதியதேல், அநைகாந்திகாந்திகளின் கண்ணும் வியாத்தி சூனியத்தகைமைப் பதிஞ்ஞை கூடல் கூடியதேயாம். மற்றதேலோ நேரேயென்பது காட்சியான் எனப் பொருள்படுமாயின், காட்சியா லளவைப்படுத்தற்றன்மை, வியாத்தி பக்கதருமத்தன்மை யுணர்வின்மைக்குக் காட்சி யெதிர்மறை யுடைத்தாமின்மைக் காட்சித்தன்மை வாதி மதத்தில் விருத்தாதியி னிடத்தும் உளதாமென அதிவியாத்தியாம்; அயன்மதத்தோ, யாண்டு மிலதாமெனச் சருவ அவ்வியாத்தியாம்.

## 521. விசேஷணத்தின் கண்ணும் தோஷநீக்க மிலாமை.

இனி வியாத்தி பக்கதருமத்தன்மை யின்மைக்கும் காட்சி யளவைப்படுத்துதல் விளம்பும் வேட்கையாயது பொருத்தமற்றதாம், இயம்பிய இலக்கணவாக்கியத்திற்கு வியாத்தி பக்கதருமத்தன்மை யின்மையியம்பாமை யுண்மையின்; அதனின்மையின் கண்ணும் கருத்துடன்படில், தனித்து விரவியிலக்கணத்தன்மை விகற்பத்தானே அவ்வியாபகத் தன்மை வந்தடைதலின். பொறிக்கெட்டாப் பக்கமுதலிய இன்மை விடயத்திலோ அஃதிலாமையின் அவ்வியாபகத் தகைமை வந்தடைதலின்.

### 522. தூடனந் தொடர்ப்படுத்தல்.

இதனானே, குறியவாவாத்தன்மை நேரின் பொருளேல், அதுவும் அகற்றப்பட்டதேயாம்; இனி, யாண்டு வியாத்தத் தன்மை பக்கதருமத்தன்மை யுணர்வினின்மை, பிரதிபாதிக் கத்தக்க அயலொன்றை யவாவாமன் அதனை யளவிடுங் குறியின் உபந்யாச வின்மையாற் கற்பனைகூடல் ஆமோ அஃத சித்தமென அறைந்திடினே; இதுவும் பொருத்தமுடையதாகாதாம், அதிவியாபகத்தன்மை யுண்மையின்; அங்ஙனமன்றே, விருத்தாதியின்கண்ணே யுபாதியோடு கூடியதாந்தன்மை, ஆண்டு விபக்கத்திருக்கும் தண்டவடிவ தருக்கமின்மையின் உணர்வான் கூடியதேயாகும். "யாண்டனுகூல தருக்கம திலதோ அஃதப்பிரயோஜகமேயாகும்" எனக் கூறியுமுள்ளார். ஆகலின் அவற்றிற்கு மிங்ஙனம் இலக்கணச் சேர்க்கை யுண்மையின் அசித்தத்தன்மைவழக்காம். அத்தகைய தருக்க அவிடயத்தகைமையும், அறையத்தக்க வயலை யவாவாத வியாத்தி பக்கதருமத்தன்மை யுணர்வின்மையளவிடுங் குறிவடிவமே யெனக் கூறற்க; அன்னணமாயின் விருத்தத்தன்மை முதலியவைபோலும் அதற்கு ஹேதுப்போலியயற்றன்மை வழுக்காதலின்.

### 523. தருக்கவின்மைக்கு ஹேதுப்போலியயற்றன்மை வினாவிடைகள்.

இனி, அவ்வாறுரைக்கப்படுவதாமது அசித்தமாகுக, துணிபொருள் விபரீத வியாத்தித்தன்மையாதியானே தூடிக்கப்படுவது விருத்தாதியேயஃதாம், உரையாடும்வகைவேற்றுமையானும் வேற்றுபாடாம் விவத்தை ஹேதுப்போலிகட்காம்; ஈண்டு ஆத்தன்மை பரித்தன்மை முதலியவற்றிற்கே போலும் மிகவும் விரவலின்மை வேண்டப்படுவதின்றாம், மற்றே; அளவை அளக்கப்படுபொருட்டன்மைபோலும் வகைக்

கலப்பின்மைமாத்திரம் என்பதாம் எனக் கூறப்படுமாயின்; அதுவும் பொருத்தமறப்புகன்றதாம், எவ்வகையானே அசித் தத்தன்மையா மென்பதனையத்தக்கதன்றோ, ஆண்டறைந்த இலக்கணத்தாலாகாதாம், விருத்தவுசிதவகையா னுஃரயாட்ப் படுவதற்கு அவ்வாறுகற்பிக்க முடிதல் கூடுதலின். எவ்வாற் ருனும் வகையற்ற அசித்ததன்மிக்கு அக்கற்பனை யமையா மையின், அவ்வாறு கற்பிக்க முடிதலும் அசித்திக்குண்டாக் கலாம் என்னற்க; எதனுல் வகைவேற்றுமை விவத்தையித னுலாமோ. கற்பிக்கமுடியும் என்னும் பதத்தானத்தில் உதிப் பிக்கப்படுதல் எனப்புரியிற் ருண்டலாமென்னற்க; உபாதி யோடுகூட்டியதாந்தகைமை முதலனகற்பிக்கப்படுங்கா லுணர் வினின்மைக்கற்பனை வாளாபோதலின் செய்யப்படமாட்டா தென அதன் அவ்வியாபகத்தன்மை அடைவுறலா மென்பது முன்னரே மொழியப்பட்டிருத்தலின்.

## 524. சூத்திரத்திற்சொற்ற அசித்த இலக்கண நீக்கம்.

இதனுனே துணிபொருட்டுவ்லிய மென்பது மறுக்கப் பட்டதாம், எவ்வாறேனு மொருவாருகத்துணிபொருட்டுல்லி யத்தகைமை யாண்டும் பொதுப்படுதலின், துல்லியச்சிறப் பிற்கும் கூறியவகையாய் முடிவுபேறடைதலன்றி யயற்கமை தி யின்மையின்; வேற்றிலக்கணங்களின்மாட்டோ சொற்ற தூஷண வகைகள் பொருத்தமாமாறு ஈண்டுப்புகுத்தற்பால னவா மெனச் சாலும்விரித்தது.

## 525. விருத்தகண்டனத் தொடக்கம்.

மேலும், அசித்த இலக்கணச்சிறப்புகளில் அளவைவி லக்கிடுவது ஒழித்து ஒழிந்துள்ளதான் விலக்கப்படுவதுயாது அஃதென் ? ஒன்ருல் விருத்தம், ஒன்ருலயல் எனின் ? விருத் தந்தானென்னென்று கூறப்படும்? அங்ஙனமன்றோ:—துணி

பொருளினின்மையானே வியாபிக்கப்பெற்றது விருத்தமென விளம்புவர்; அஃதமையாதாம். துணிபொருளின்மையோடு வியாத்தியும் முற்றினுமா? அநௌபாதிகமா? சுபாவிகமா? சம்பந்தம் என்றற்றொடக்கத்தனவாய கூற்றுகளால் விசேட முற்றதோ டொற்றித்து நிற்றலே நிகழ்த்தப்படும்; அவ்வா றாயின் துணிபொருளின்மையோடு ஒருநிலைக்களத்திலே விசே ஷண விசேடத்தோடு கூடியதாம் விருத்தத்தன்மையென விளம்பப்பட்டதாம். எப்போழ்திங்ஙனமாமோ அப்போழ்து துணிபொருனின்மையின் ஒருநிலைக்களத்திருத்தலே ஹேது விற் கடக்கமிலாமையிலாற்றலாம் என அம்மாத்திரமெழுப் பத்தக்கதாம், மடமையேயடை யிடல்; எனவே அநைகாந்தி கமே யிஃதாம்.

### 526. அநைகாந்த விருத்தங்களின் வேற்றுமை வினுவிலக்கம்.

அற்றேல், துணிபொருளின்மைச் சம்பந்தம், விருத்தம் அநைகாந்தம் என்னுமிரண்டன்கண்ணு முளதாமெனினும் பொருணெறியான் இயற்கையாமிது விருத்தத்தின்கண்ணே யென்னும் இத்துணைமாத்திரஞ் சிறப்புக்கூறும் வேட்கை யால் விருத்தத்திற்கு அநைகாந்திகத்தினும் வேற்றுமை விளம்பியதாம் எனின்? இங்ஙனமியையாதாம், விடைவிடுத் திருத்தலின், பொருணெறியானே இச்சிறப்புப் பொருந்துவ தாயினும் கிளப்பத்தகாததாமென வுபேக்ஷிக்கத்தக்கதா மென்றுரைக்கப்பட்டதாம்; அங்ஙனமன்றோ:—இஃதிதனது சாதகமாகாதாம், இத்துணிபொருட்பொருட்டு விருக்தத் தன்மையுண்மையின் எனப்புகன்றபழி விருத்தசத்தார்த்தக் கூற்றில் அதிக அடைநிகழ்த்தி நியாயத்தான் பரிகரிக்க முடி யாமையின். இதனானே அநைகாந்திகத்தில் ஐயப்பாட்டாற் றொடங்கூறலாம், விருத்தத்தின்மாட்டோ இன்மைத்துணிபா

லென்னுஞ் சிறப்பாலிவற்றை வேற்றுமையாக விளம்பல் கூடும் என்பதற்கு மிடங்கிடையாதாம். அனுமிதியின் காரண மின்மையே ஹேதுதோடமாம், அனுமிதி காரணமும் ஒன்று வியாத்தியாம், அதனால் அதனின்மைக்குத் தோடத்தன்மை யுண்மையின் அத்துணைமாத்திரம் அறிவுறுத்தற் பாலதாம் அதுவும் ஹேதுவிற்கு விபக்க வேற்றுமையைக் கிளப்புகை மாத்திரையானே யறியப்பெறும், ஆகலின், அனுமிதி ஹேது வியாத்தி யுணர்வுகளின் இன்மையை யுணர்த்தற் பொருட்டு ஐயத்தையும் வியதிரேகத் துணிபையும் கிளப்பியபோதினும் அவைகடா மெவணிருந் துண்டாயின வென்புழி விபக்க சம் பந்தமாத்திரம் நியதமாய வதன் சம்பந்தம் என்பவை யொரு தலையா யுரையாடத் தக்கனவாமென்க, எனவே அச்சம்பந்த மாத்திரமே யுளதாகுககாண், வியாத்தி யதனுணர்வுகளி னின்மைக்குக் குறியா யுண்மையிற் கிளப்பத்தக்கதாம் மற்றவற்று லாற்றியது சாலும்.

## 527. அறைய வவாவாத நியம அநியமப் புலப்பாட்டி னீக்கம்.

லகாரபேதப் பிரயோகத்தில் அவ்வவ் விலகாரங்களாற் கால விடய விசேடம் விளம்பலே போலும், வேற்றுமைக ளாற் பாலெண்முதலியவை யறிவிக்கப் படுவதே போலும், மலை தீயுடைத் தென்பதாதியின் கண்ணே தருமியாதிகளைச் சாற்றலே போலும் இது பொருந்துறுதாம்; ஆண்டுப் பதப் பிரயோகத்திலாதல் விசிட்டபோதனத்தின் கண்ணுதல் வே ேறாராற்றுர் பெறப்படுவனவாய் கருத்திலா விடயங்களாய அவற்றின் போதன மெங்ஙனமாமோ அங்ஙனம் ஈண்டும் வியாத்தியின் கருத்திலா விடயத்தன்மையேலோ அஃதனை காந்திகப் பொதுமையானேயாம், அன்றுயினே அறைந்த தோடம் விலக்காமையானேயாம்.

## 528. வேறு கண்டனம்.

அநைகாந்திகத் தன்மையைக் கிளப்பாதவனாற் றூதல், அறியாதவனாற் றூதல் விருத்தத்தைக் கிளப்பவு முடியாது அறியவுமுடியாது அதனையண்டிப் பிழைக்குந்தன்மை யுண்மையின், ; னித்தூடணமாகாதாம், விசேடியத்தை விளம்பல் விசேடியத்தை யுணர்தலிலாது விசிட்டத்தை விளம்பலும் விசிட்டத்தை யுணர்தலும் முடியாதாதலின். இவ்வாறு பிறவிடத்தும் விசேடியத்திற் காற்றலுறுங்கால் விசேடணத்தின் சாதகமின்மை தானே ஊகிக்கத்தக்கதாம்; அஃதெங்ஙனம்:— இது சாதகமாகாதது சாதாரண அநைகாந்திகத்தன்மையான் என்பதன்கண்ணே சாதாரண மென்னும் விசேஷணத்தில், சபக்க விபக்கத் திருக்குந் தன்மையான் என்பதன் கண்ணே சபக்கத்திருக்குந் தன்மை யிருப்பினும் கிளப்புவதில் (அப்பிரயோஜகத் தகைமை) ஆம் இங்ஙனம் அசாதாரணத்தினுமாம், இது சாதகமாகாதது ஜாதித்தன்மையின் என்புழி ஜாதித்தன்மையைப் பகுத்தபோது தனது வியாகாதவிடை ஜாதி யெனவாம், ஆகவே எல்லாம் அசத்து ஞேயத்தன்மையான் என்பதாதி அஜாதி ஜாதி சாதாரணமாய தனது வியாகர்தத் தகைமைக்கே மாசுதரு மாற்றன் மாண்பான் விடைத்தகைமை விளம்பலில் (அப்பிரயோஜகத் தகைமை) ஆம்.

## 529. விருத்த இலக்கண கண்டனம்.

மேலும், துணிபொருள் விபரீதமென்பது துணிபொருளின்மையெனப் பொருள்படுமாயின், இன்மை வடிவமாகவே துணிபொருள் சிலபாற்சிவணுங்கால் ஆண்டு அதன் விபரீதத்திற்குப் பாவப்பான்மை யுண்மையின் அஃதிலக்கணத்திற் கவ்வியாபகத் தகைமையாம். விபரீத சத்தத்திற்கு விரோதி மாத்திரமாகப் பொருட்படுத்தின் பாவ அபாவ இரண்டன்

வியாத்தியாமென விளம்பற்க; பாவ அபாவங்களின் விரோ. தம் கூடியிராமை யென்றன்றோ கொள்ளுதல், இராமையும் ஒற்றுமை நிடேதமாம், அதுவும் பாவ அபாவங்களின் அன்னியோன்னியங்கட் கிருப்பின்மையேயாம், அவற்றிற்குப் பரஸ்பரம் நிடேதரூபத்தன்மை யுண்மையின். அவ்வாறாக வே பாவ அபாவங்களின் சொரூபத்தைக் கோடாக்கால், தனித்தனி யவ்வியாத்தியாம், ஒருங்குற்றதற்கோ அசம்பவ மேயாம். பாவ அபாவங்களின் விரோதம் விளம்பலின் விலக் கம் மேன் மிழற்றுவாம்.

## 530. அனைகாந்திக கண்டன ஆரம்பம்.

அன்றியும், இலக்கணத்துட் புகுந்த வியாத்தி பதத்தால் விலக்கத்தக்கது யாதுகொல்? அனைகாந்திகமெனக் கூறின்? அவ்வனைகாந்திக மென்பதுதா னியாதோ? அங்ஙனமன் றோ:— அனைகாந்திகமென்பது பிறழ்ச்சியுடையது எனல் அலக்ஷணமாம். பிறழ்ச்சி யுடைமையும் விபக்கத்திருக்குந் தன்மையேல் அக்கால் விருத்தத்தினும் வழக்காம், அசாதா ரண அனைகாந்திகத் தவ்வியாத்தியுமாம். இனிச் சபக்கவிபக் கத் திருப்பின்மையேலாயின் அப்போழ்து சாதாரண உதாக ரணத் தவ்வியாபகத் தன்மையாம்.

## 531. விகற்ப விலக்கம்.

இனிப் பிறழ்ச்சியுடைமை சபக்கவிபக்கப் பொதுத் தகைமை கருதிபதாகும், அதுவும் உடன்மாட்டான் பொது அனைகாந்திக வியாபினையாம்; எதிர்மறைபாற் சிறப்பனைகாந் திக வியாபினையாம் என வியம்பப்படும், சபக்கவிபக்கப் பொ துமைமாத்திரம் உடன்பாட்டானுதருன் எதிர்மறையினுனுத ருன் சிறப்புடைமையானே விளம்பும் வேட்கையிலதாம், ஆகலின் பொதுச்சிறப்பு அனைகாந்திக மிரண்டன் கவர்ச்சியு

மினிதாயாம். விவாதகற்பனை யெவையும் கணிகமாம் உண்மையாதலின் என்பதாதி யனுபசங்காரியத்திற்கும். சபக்க விபக்க சூனியத்தன்மையானே சபக்கவிபக்க இருப்புண்மை யின்மையான் ஒப்பாம். இவ்விசாரிக்கத்தக்க வியாக்கியானம் ஆண்டுக் கேவலந் தொடக்கத்தேயாகுக ஆயினும் எதிர்மறை யாற் சபக்கவிபக்கப் பொதுத்தகைமை சபக்க அவ்வியாபக நல்லேதுவாந் தூமவிசேடாதிகளிற் செல்லுகின்றமையின் அதிவியாபகத் தன்மையன்றோவாம். இத்தோடத்தை விலக்கற்பொருட்டு எல்லாச் சபக்கவிபக்கப் பொது அநைகாந்திகம் எனக்கூறின், அப்போழ்து எதிர்மறை மாத்திரத்தான் எல்லாச் சபக்கவிபக்கப் பொதுமை புகையனுமானாதி மேனடவாதொழிகுகதான், உடன்பாட்டானே எல்லாச் சபக்கவிபக்கப் பொதுமையானது விபக்கசபக்கத் தேகதேசஞ் செல்லும் பொது அநைகாந்திகமாம் சத்தம் நித்தியமன்று காட்சிப்படுதலின் என்றற் றொடக்கங்களைக் கவரமாட்டாது என்பதாக அவ்வியாத்தியாம் ஆகவே ஒன்றைக்கருத மற்றொன் றிழந்த தன்றோவாம்.

## 532. அங்கீகரித்துந் தோடம் ஆங்கே நிலைபெறல்.

மேலும் உடன்பாடெதிர்மறைகளான் எல்லாச் சபக்க விபக்கச் செல்கை யுண்மையின் புகையனுமானாதிகளில் அதே வழக்காம் சிறப்புருவத்தான் அவற்றைக் கூறும் வேட்கை யின்மையின்.

## 533. இலக்கணவிகற்ப நீக்கம்.

அன்றியும், எல்லாச் சபக்கவிபக்கப் பொது அநைகாந்திகம் என்னுந் தொடர்மொழியில் எல்லாமென்பது விபக்கத்திற்குஞ் சிறப்பாயின், விபக்கத் தேகதேசத் திருப்பதாய்ச் சபக்கவியாபியாய்ச் சாதாரண அநைகாந்திக மென்னும்; மும்

மையணு, காரிய அவயவத்தோடுற்றது, பெருமை யுடைமை யான், குடம் போலும், என்பதாதிக்கு இவ்விலக்கணம் அவ்வியாபகமன்றேவாம். இனி எல்லாமென்பது விபக்கச் சிறப் பன்றுமாலாயினே இன்மைபற்றி விபக்க சர்வசபக்க சாதாரணம் அனைகாந்திகம் என்னுமிது விபக்க ஏகதேச மாத்திர விருத்தியாய விருத்தமென்னும், க்ஷிதி, நித்தியம், அவயவத் தோடுறுதலின் என்பதாதியிற் சென்றமையின் அதிவியாபகமாம் என்க.

## 534. வாசகயுக்தி நீக்கம்.

மாசுறுதெங்ங னிவ்வாசகயுக்தி. சபக்கவிபக்க சாதாரணம் அனைகாந்திகம் எனப்புகலில் எல்லாம் நன்கு கவரப் பெறுகின்றது உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் என வாம், ஆகவே யெங்ஙனம் சபக்ஷவிபக்ஷமற்றதாய அநுபசங் காரிக்குச் சபக்கத்திலாதல் விபக்கத்திலாதல், உடன்பாட்டா லாதல் எதிர்மறையானுதல் பொதுமையாதல்கூடும்? அவை யே யிலாமையின். சபக்கத்திலும் விபக்கத்திலும் சாதாரணத் தன்மை இருபாலும் சொரூப அனுகமம் எனச் சொல்ல விழையினே அஞ்ஞான்று அசாதாரண அனைகாந்திக அவ்வி யாத்தியாம். இனி அவ் விருபாலும் அசத்துவம் அஃதா மென அறைய விருப்பமேலாயினே எல்லா அவ்வியாத்தி யாம், என்னை, அதனசத்துவத்திற்கு அதன்றருமத்தன்மை யின்மையின். இனி யதன் உபயத்திருக்கும் இன்மை யெதிர் மறைத்தன்மையாதல், அதனுபய சம்பந்தத்தின் எவ்வின்மை யுளதோ அதற்குப் பற்றுக்கோடா யிருக்குந்தன்மையாதல் கருதிடினே, அப்போழ்தும் சாதாரண உதாகரண அவ்வி யாத்தியாம். இனி அதனுபயப் பொதுமையென்பது ஒன் றன்கண்ணே எவ்வுருவமா யிருக்குந்தன்மை யேதுவிற்கோ. சத்துவமாதல் அசத்துவமாதல் அவ்வுருவமா யிருக்குந்தன்

மை மற்றதன்பாலும் யாததுகூறப்படும், படவே அவ்வியா பகத்தன்மைத்தோடம் அணுகாதாம் என்றெண்ணுகின்றாய் கொல்! இங்ஙன் இயையாதாம், ஏதுவின் ஏகரூபமாயிருத் தற்குச் சபக்கவிபக்கங்கள் ஆசிரயங்கள் என முக்கியமா யாண்டு வசனப்பொருள் பொருந்தாதாம். ஏகரூபத்தன்மை யை யுடைய ஹேதுவிற்கு அவைகள் ஆசிரயங்கள் எனவா யின் என்னைமாலோவெனின்? என்னும், அங்ஙனையின் அசா தாரண அவ்வியாத்தியாம், ஆண்டுச் சபக்கத்திலும் விபக்கத் திலும் ஹேதுவிற் கசத்துவ முன்மையினேனே அதனுசிர யத்தன்மை சம்பவியாமையின். ஆதலான் சபக்கத்திலும் விபக்கத்திலும் சாதாரணத்தன்மை ஹேதுவிற்கு அனைகாந் திகத்தன்மை யென்பது பொருந்தாததேயாம்.

## 535. முன்மொழிந்த ஹேவின் அனுவாதம்.

அசத்துவ பக்கத்தில் ஹேதுவிற்கு அவற்றைப் பற்றி யிருத்தல் கூடாமையின் சபக்கத்திலும் விபக்கத்திலும் என ஏழாம் வேற்றுமையைக் குறிப்பிட்டது அசங்கதமாதலின், அதன் இன்மையை யபேக்ஷித்து ஆசிரயத்தன்மையின் பொ ருத்தமாயவழி ஹேதுவிற்கு அதனுசிரயத்தன்மையில் வந்த தென்னே? வருகதான்சிறிது, ஆயினும் சாதாரண வுதாகர ணங்களில் ஹேதுவின்மை யபேக்ஷையால் சபக்க விபக்கங் களில் ஆசிரியத்தன்மை ஏழாம் வேற்றுமைப் பொருளன்றாம்; மற்றோ, ஏதுவின் அபேக்ஷயானேயாம் என்க, என்னின் அநேகார்த்த முடிவுபெறுயினோ, வாக்கியத்திற்கு இலக்கண அவ்வியாபகத்தன்மை யடைவேயாம்.

## 536. சாமானிய விசேட இலக்கணங்களின் நீக்கம்.

மேலும், சபக்கவிபக்க சாதாரணத்தனைமை பொதுவ தாக இலக்கணமெனப் பொதுச்சிறப் பனைகாந்திக பேதமி

ரண்டன் நற்கவர்ச்சியின் பொருட்டுக் கூறப்படுமேலாயினோ, அப்போழ்து சபக்க விபக்கங்களில் அன்னியத்தகைமை முதலியவற்றால் ஹேதுவிற்குப் பொதுமையுளதாம் பிறவிடத்தும் என அதிவியாத்தியாம். இனி அதிவியாத்தியை யகற்றவவாவி அன்னுவய வியதிரேகங்கலானே சபக்கவிபக்க சாதாரணம் அனைகாந்திகம் எனக்கூறும்பக்ஷத்தில், அக்கால் உடன்பாடெதிர்மறைகளின் தனித்தனி சேர்ந்த விகற்பம் பொருந்தாமையானே அவ்வியாபகத்தன்மையி னடைவாம்.

## 537. வேறுவிதத்தானே வியபிசார விலக்கம்.

ஆகுக இது, தன்னியற்கைவிரோத ஆசிரயங்களால் ஆசிரிதமாய சபக்கவிபக்கத்தன்மை, சபக்க விபக்கப் பொதுமையாம் என அதையும் வேட்கையுறுதலாம் உறவே அவ்வியாப்தியும் அதிவியாப்தியும் இன்றாம்; அதுவும் அசத்தாம், அங்ஙனமன்றோ:— உளதாகுக ஆண்டுச் சர்வபத விசேஷணங் கோடல் வீடற் பக்ஷத்திற்பகர்ந்த தோட அடைவாம், சர்வசப்தத்தைக் கோடின் தாம அனுமானாதிகளில் வழக்குமாம். தன்னியற்கைவிரோத சப்தார்த்தமாய ஒன்றற்கும் தொடர்ந்து நிற்றல் சம்பவியாமையின், இலக்கணந் தொடர்ந்திராமை தோடமாம்; அவ்வவ் வின்மைகட்கேயன்றோ விரோதம் உடனிராமை இராமையும் இருப்பின் நீக்கமாம், அது பாவத்திற்கு அபாவ சொரூபத்தினும் வேறு அன்றாம், அபாவத்திற்கும் இராமையினது பாவ சொரூபத்தினும் வேறு அன்றாம்; மற்றோ, அதேபாவத்தின் சொரூபம் ஆண்டுத் தன்னியற்கைவிரோத ஆசிரயமாம் என்பதற்குப் பயனுடைமை ஒருசிறிதும் தேடினும் அகப்படாதாம். தன்னியற்கை விரோதாசிரயம் என்னும் வசனம் ஆராயத்தக்கதாம், தன் இயற்கைகட்கு விரோத விசேஷணமாகி வந்தவழி ஆதேய கோடி புகுதலுண்மையின் அடைபடுத்த சொற்பொருள்

அடை கடிதமூர்த்தியாக வமைதலின், அதற்கு ஆகாரத்தன்மை கூடாமையின், அதிவியாபகத் தன்மையுமாம், உடன்பாடு பற்றிச் சபக்கத்திலும் எதிர்மறைபற்றி விபக்கத்திலும் நிகழ்வதற்கும் கூறிய இலக்கணங் கூடலின். தன்னியற்கை விசேடிக்கப்படாத விரோதத்திற்கு ஆச்ரய மறைவதேலாயினே சர்வானுமான வியாபகத்தன்மை அனைகாந்திக இலக்கணத்திற்கு அடைவுண்டாம்.

## 538. மூன்றுவது கற்ப நீக்கம்.

தன்னியற்கையுபலக்ஷித விரோதம் அங்கீகாரமாம், அதனுல் விசேஷணபக்ஷத்திற் பகர்ந்த தோடத்திற் கவகாசமின்றும் என அறையற்க; தன்னியற்கைகளால் விரோதமாத்திரமாதல் அதன் வியத்தியாதேனுமாதல் குறிக்கப்படுவதேலாயின்; முதலாவதில், தன்னியற்கைகளால் எவ்விரோத மாத்திரமே குறிப்பிக்கப்பட்டதோ, அதுவே அபலும் என அறைந்த அதிவியாப்தி அவ்வவத்தையதேயாம்; தன்னியற்கைப் பதங்கோடல் வாளாவுமாம். இனியிரண்டாவது, அக்காலிலக்கணத்திற்குத் தொடர்பின்மையாம், ஈண்டினிது கவ்ரப்பெற்ற ஒருவிரோத வியக்தி விசேடத்திற்கு வேறு விரோத வியக்தி வடிவமாகாமையின். இனி யெத்துணை யவாவப்படுகின்றனவோ விரோதவியத்திகள் அத்துணையன உபலக்ஷிக்கப் பெறுகின்றன வெனக் கூறப்படுமாயின், உபலக்ஷிக்கப் பெறுகின்றன வின்றுவென் ? (உபலக்ஷிக்கப் பெறுகின்றனவேயாம்) , மற்றே, யாதேனும் தொடர்ந்தவடிவத்தாறு ? அல்லத்து தனித்தனி விலங்கியவடிவத்தாறு? முதலதில் உபலக்கண உபந்நியாசப் பிரயாசத்தால் என்னே யென்னும் அதுவே கூறத்தக்கதாம்; அதுசம்பவியாதாம், விரோதமாத்திரத்திற்கு அதிவியாபகத்தன்மை வருதலின். தனித்தனி பரித்து வியத்திகளின்வடிவம் உபலக்ஷிக்கப்படுமாயின் அவ்

வாறே அவற்றிற்கு இலக்கணம் புகுதலாமெனக் கூடியவற்றிற்கு இலக்கணத்தன்மையேல் சர்வ அவ்யாப்தியாம், தனித்தனி இலக்கணத்தன்மையேலோ பரஸ்பர உதாகரண அவ்யாப்தியாம்.

## 539. அநைகாந்திகத்திற்கு அயலிலக்கண மகற்றல்.

சபக்கத்திலேயும் விபக்கத்திலேயும் இராதது யாதோ அது அநைகாந்திகமென இலக்கணம் அமைக, அதன் சாதாரண அசாதாரண அநைகாந்திக உதாகரண வியாப்தி ஆமென ஆருகதானிது; இதுவும் அலக்ஷணமாம், நல்லேதுவாய தூமாதியின்மாட்டும் சென்றமையின். இது விபக்கத்திலேயே இராததாம், எல்லாவகையானும் ஆண்டிருமையின்; சபக்கத்திலேயே யிருப்பதும் ஆகாதாம், பக்கத்திலும் இருக்கின்றபடியால். இனிப்பக்கத்திருப்பதெனச் சிறப்பிக்கின்றனை, ஆயினும் நல்லேதுவை விடமுடியாதாம், பக்கத்திருக்குந்தன்மையானே சபக்கத்திலேயே யிருப்பின்மையின், அசித்த அநைகாந்திக சங்கர அவ்வியாத்தியுமாம். இனிப் பக்கத்தினும் வேறுற்ற வென்னுஞ் சிறப்பைப் பெய்தியேல் அஞ்ஞான்று, அடைவற்றதை யகற்றுதல் அமையாமையாம். பக்கத்தயலற்றது சபக்கமாதல் விபக்கமாதல் அகப்படுத்தப் படாதாமெனச் சபக்கத்திற்கும் விபககத்திற்கும் எங்கும் விலக்காத விசேடணமேயாமிது அவற்றிற்கு எங்ஙனம் பொருந்தும். இனிப்பக்க வியதிரிக்தத்தில் நிகழ்வது என விசேடிப்பையேல், அப்போது அசாதாரண அவ்யாப்தியாம், இது பக்க வியதிரிக்தத்தில் நிகழ்வதாகாதாம். இனிப் பக்கவியதிரேகத்தால் என விசேடணந் தருதியேலாயின் அக்காலும் பக்ஷ வியதிரேகமாய பக்ஷவிரகரூபத்திற்கு உபலக்கணத்தனமையாதல் ஹேதுத்தன்மையாதல் இரண்டும் பக்கமாத்திரவிருத்தியாய அசாதாரண அநைகாந்திகத்திற் சம்பவியாதாம்,

பக்கவின்மைக் காண்டசம்பாவத்தானே யாமென்ச. நிஷேத்திய விசேஷணத்தன்மையேலோ இதற்கு நல்லேதுவின்கண்ணே செல்லுகையாம்.

540. பிறண்டு தூடணம்புகுத்தலும் அயல்வினை வகற்றலும்.

இதனுற் பக்கமின்றி பக்கத்தை விடுத்து, என்பதாதியக்கரங்களாற் சிறப்பாகச்செப்பல் சிதைக்கப்பெற்றதாம். இனிப்பக்க விதிரிக்தத்தில் நிகழ்கின்றது என்னின், அப்போழ்து சபக்கத்திலே விபக்கத்திலே இராததுயாதோ அஃதனைகாந்திகமாம், ஆகவே அசாதாரணத்திற்கும் வியாப்தியாம், நல்லேதுவின்கண்ணும் அடைவின்மையாம் என எண்ணுதிகொல்! அக்கான் மிகமிகவும் மயங்கினுய்தான்! இவ்விதமாமேலாயின் உடயத்திற்குஞ் சங்கிரகம் ஒல்லாதாம். அசாதாரணத்தி லாண்டு பக்கவியதிரிக்தத்தில் நிகழ்கின்றதேலாயின், இதுசர்பவியாதாம், பக்கமாத்திரத் திருக்குந்தற்கு ஒருகாலத்தினும் பக்கவியதிரிக்தத் திருப்பின் சம்பாவனை ஒவ்வாமையின்; சாதாரணமாய நிச்சிதமாஞ் சபக்க விபக்க விருத்தியினும், பக்கவியதிரிக்தத் திருக்குமேல் என ஏற்பொருள் காண்கிலேம். நிச்சிதமாய தருத்தன்மைவாய்ந்த அசோகின்கண்ணே, அசோகவிருக்ஷ மாகுமேல் எனப் பிரயோகித்தல் முடியாதன்றே; அஃதெவ்வேதுவினுன்? ஐயத்தா னிலைபெற்றனவாய இருகோடிகளி னின்றும் ஒருகோடியின்கண் ணதுபற்றில் சிறிது தருமத்தைக் காட்டும்பொருட்டு ஆரோபிக்கப்பட்டதில் ஏலென்பது பிரயோகிக்கப்படும்; நிச்சிதமேயாய வத்துவின்கண்ணின்றும். ஆகலின் அசாதாரண அனைகாந்திக சங்கிரகப் பொருட்டு ஏல் என்பதாதி கொண்டதாம்; அது சாதாரணத்தையும் வியாபித்ததாக ஆகாதாம்.

541. வேறு வகையானே அனைகாந்த விலக்கண நீக்கம்.

இனி விபக்கத்திலே சபக்கத்திலே யாது ஹேதுப் போலி அது அனைகாந்திகம் எனநினைதியேல், அதுவும் பொருந்தாதாம், அனைகாந்திகத்தன்மை துணியாததற்கு முன்பே ஏதுப் போலித்தன்மைத் துணிபாமேலாயின் அதனானே ஹேதுவிற்குச் சாதகத்தன்மையின்மை துணியப்பெற்றதாமென அதனுபஜீவியாய அனைகாந்திகத்தன்மை யுபந்நியாசத்தா லுனுற்றி முடித்தது சாலும். இனி முன்பே ஹேதுப் போலித்தன்மை துணியப் பெறுவதில்லையாயின், அக்கால், இலக்கணத்திற்குத் துணியப் பெறுமையாம், அடையாய ஹேதுப் போலித்தன்மையின் றுணிபின்மையின்.

542. அனைகாந்திகத்திற்கு அயலாரு யிலக்கணமிரித்தல்.

இனி, அசித்த விருத்த சற்பிரதிபக்க பாதங்களினும் அயலேதுப்போலி யனைகாந்திகம் எனக்கூறுதியேல், அதுவும் கூறிய நியாத்தானே நிராகரிக்கப்பட்டதாம். மேலும், இவ்வண்ணம் அசித்தியாதி கலந்த அனைகாந்திகத்தின் சங்கிரகம் ஆகாதாம். அது அசித்தாதித் தன்மையானே ஹேதுப் போலியாகுமென அறையொணுதாம்; அயல் அனைகாந்திகப் போல விபக்கத்துட் செல்கையாதிய வற்றுனும் உற்பாவன முனுற்றுழி தோஷத்தன்மை சம்பவித்தலின்.

543. வகைவேறுயாட்டானே அனைகாந்தலக்ஷண மகற்றல்.

இனி சாதாரணத்வ அசாதாரணத்வங்களின் இன்மைகளால் சேர்ந்தவற்றுல் சிறப்புற்றதினும் அயலாந்தன்மை சாதாரண அசாதாரண அனைகாந்திகவியாபி சாமானிய இலக்கண மாகுகவெனச் சிந்திப்பாயேல், அவ்வகையானும் ஆகாதாம், வியதிரேக மிரண்டன் சிறப்புற்றதினும் அயலாந் தன்மையேலாயின் அந்தச் சிறப்புற்றதன் விசேடியத்தினும்

விசேஷணத்தினும் இது உளதாம் என அதிவியாத்தியாம். வியதிரேக மிரண்டுற்றதன் உபலக்ஷணமாயின் அக்காலுப லக்ஷிய சொரூபங்கட்காம், பேதத்தானே யுபலக்ஷியத்தன்மை மேலாயின் அப்போது வியதிரேகமும் சிறப்புற்றதற்ற அதன் கண்ணிருக்கும், யாது சிறப்புற்ற தற்றதேயாமோ தன்மாத்திரம் சிறப்புற்றது இலதாம் இவ்வண்ணம் அபேதத் தானும்; பேதாபேதத்தான் அதுவேயெனின்? அன்றும், அதுவல்லாததும் என்னும் வழக்கு ஆங்கேயுறுதலின். அத னினும் அத்தியந்தம் அன்னியப்பான்மை இலக்கணமெனி லோ? ஆகாதாம், அசித்தியாதி கலந்த அநைகாந்திக உதா கரணங்களில் வியாபியாமையின்; சொரூபங்கட்கும் அநந் தத்தன்மையானே அதன் எதிர்மறையையுடைய அயற்றன் மைத் துணிபின் முடியாமையாம், அவற்றிற் கனந்தத்தன்மை யுண்மையின். அதன் இடையில் வீழ்ந்த சிலபல அன்னி யத் தகைமையேலோ பிருண்டு சிலபலவற்றே வழக்கு ஆங்கே நிலைபெறுமாதலின். உபலக்கணத் தன்மையேலோ இரண்ட னின்மையின் அன்னியத்தன்மைப் பிரதியோகி கோடி புகா மையால், அது சங்கிருகித்த வியதிரேகப்பக்கத்தன்மை வீழ்த லின். இவ்வண்ணமுறவே வாஞுதி காஞுதவனுல், இத் தகைய வடிவினதாம் கோத்தன்மையின் வாஞுதிவிஷாணித்வ அனுமானம் செய்யத்தக்கதென வருதலின். (விஷாணி - கொம்புடையது) ஹேதுப்போலி யயலும் இங்ஙனம் என்னே யினிதுகவரவில்லை யென்னுஞ் சிந்தையின் இதரங்களினின் றும் விலக்கியதரும்பம் இவற்றிற்கு யாதுதான் கூறத்தக்கதா மோ அவ்விலக்கணமேகூறவேண்டியதாக அடைதலின்என்க.

## 544. அநைகாந்திகத்தின் அயல் இலக்கண நீக்கம்.

அசித்தத்தன்மை முதலிய வகையினும் அயல்வகை யானே ஹேதுப்போலி அநைகாந்திகம் எனின்? அநைதி

யேல் ஆயின், அவ்வகையி னுணர்வின்றி அசித்தியாதி வகை யினும் அயற்றகைமை எதனது ஞேயத்தன்மையாம். மேலும் இங்ஙனமாயின் அசித்தத்தன்மையினும் அன்னியம் அனைகாந்திகம் எனவியற்றி விருத்தாதிகட்கும் அனைகாந்திகத்தன்மையானே நற்கவர்ச்சியாக முடியவே விருத்தாதி போலும் ரூபாந்தர நற்கிராகிய மல்லனவாய சாதாரண அசாதாரணங்கட்கே எவ்விவ்வகையானே நற்கவர்ச்சி செய்கியேலாயின், ஆண்டு நியதமான ருசியே நினக்கு நியந்தாவாம். எக்காற்றானீர் அசித்தாதி அயலதாக அனைகாந்திக லக்ஷணம் புரிகுவீரோ, அக்கால் அசித்தாதி பேதகப்பிரகாரத்தை யறியாமல் அதனயலாந்தன்மை அறிய முடியாதாம், என அதனையறையவேண்டியதாகவே அதனைப் பற்றினவாக எத்தோஷங்கள் காண்பிக்கப்பெற்றனவோ அவற்றானும், மிருதியயற்றன்மையிற் கூறிய தோஷங்களானும், நிராகரிக்கத் தக்கவராவீர்.

## 545. அனைகாந்திகத்திற்கு லக்ஷணாந்தர நீக்கம்.

துணிபொருளானே அவ்வியாப்பியத் தன்மையோடுற்று அதனபாவ அவ்யாப்தமாவது அனைகாந்திகம் என்பதும் ஆகாதாம், துணிபொரு ளவிசிட்டத்திலும் சென்றமையின், சிறப்பாயிருக்கும் துணிபொருள் அவ்வியாப்பியத்தன்மை யறிவினும்; முதலாவது அவ்வியாப்பியத்தன்மை யசித்தியே உபஜீவிய தூஷணமாம். விசேஷணாங்கிசத்திற்கேதான் சாதகத்தன்மை யின்மைச் சாதன சாமர்த்தியத்தான் வியர்த்த விசேடியத் தன்மையுமாம். வத்துகதி வியாபகமுற்ற தன் மாத்திர முடிவுபேறுடையதாதல், அதனின்மையுற்ற தன் மாத்திர முடிவுபே றுடையதாதல், அக்கால ஜயமுற்ற அன்யதர வியாபகத்தன்மையேல், சத்தம், அநித்தியம், சுரோத்திர விசேடகுணத்தன்மையால், என்பதாதிய சாதாரணத்தில்

அகன்றிருத்தலினாலும். உண்மையாகச் சாத்திய அவ்வி யாத்தமேல் அக்காலத்திலுந்தான் சற்பிரதிபக்கமாகத் துணி யப்பெறாத சாத்திய வியாத்தியையுடைய பிரகரண சமத்திற் சென்றமையானும் என்க. இதனானே அனைகாந்திகம் பிறழ்ச்சியுடையது என்பது நிராகரிக்கப்பட்டதென்றுணர்ந் துகொள்க; பிறழ்ச்சியுடையதைக் கூறியவகையினும் அதிக மாகக் கூறுவதற்கு முடியாதாகலின் என்பதாம்.

## 546. சற்பிரதிபக்ஷ கண்டன ஆரம்பம்.

மேலும், கூறிய இலக்கணச்சிறப்பாற் பிரமாண விலக்கு தலின் அன்னியத்தான் விலக்கப் படுவதியாது? யாதாவது சற்பிரதிபக்கமா? யாதாவதயலா? எனின். யாது மறுத்து சற்பிரதிபக்கம்? அங்ஙனமன்றோ. சற்பிரதிபக்க விலக்கணம் வினவ, சமானபல முணர்த்தப்பெற்ற துணிபொருளின்மை யுடையது ஹேதுவாக வுடன்பட்டது சற்பிரதிபக்கமெனக் கூறின்; அஃதாகாதாம், இவ்வாறும், ஈண்டென்னபலம் விளம்பவிளைந்ததோ! சாமர்த்தியம் என்குதியேல், அஃதெவ் விடத்தில் காரியத்தில், ஆண்டு எல்லாக்காரியங்களிலு மில்லை யாம்; சற்பிரதிபக்க வேதுக்கட்கு வெறு விடயவுணர்வை யுண்டாக்குவதாக எல்லாக்காரியத்திலும் ஒப்பாற்றலுடைமை யொவ்வாதாகலின், எங்கேனுமொரு காரியத்திலென்பதும் இயையாததேயாம், பிரகிருத சாத்தியப்பொருட்டுப் புலப் படும் அசித்தத்தன்மை முதலிய தோடத்தாலும் பிரமேயத் தன்மைப் பிரதிபாதனாதிகளிற் சமர்த்தமாய மாறேதுவாற் சற்பிரதிபக்கத்தன்மை யடைவால் எல்லா ஹேதுக்கட்கும் சற்பிரதிபக்க ஹேதுப்போலித் தகைமை யடையமுடியுமாத லின். முன்னேது சாத்திய அபாவமறிவிக்கும் வடிவ காரி யத்திலு மிலேயாம், பின்னேதுவிற்கு இவ்வண்ணம் சற்பிரதி பக்கத்தன்மை யின்மையெய்தவே தற்சாத்திய சாதகத்தன்

மை யடைதலின். மாறேதுவிற் கென்னின்? இன்றாம், அம்மாறேதுவிற்கு ஆற்றல் இல்லாமையானே ஒப்பாற்றலுடைமை ஒவ்வாமையின். இவ்வண்ணமே ஹேதுசாத்தியத்தின் இன்மையுணர்த்துவதிலு மில்லையென்பதாம்.

## 547. தார்க்கீகர் உடன்பட்ட பலசப்தார்த்த நீக்கம்.

இனி, தனது தனது பிரகிருதசாத்தியத்தில் எச்சாமர்த்தியம் பக்ஷ சபக்ஷத்திலகி விபக்ஷத்துவிலகிப் பாதிகப்படா விடயத்தன்மை வடிவம் ஆமோ அது சற்பிரதிபக்க ஹேதுக்களில் துல்லியமாம், அக்கருத்தானே இச்சமபலக்கூற்றாம், அதனால் இது இயம்பப்பெற்றதாம். பக்ஷ சபக்ஷத்திலகி விபக்ஷத்தேவிலகிய பாதித விடயத்தன்மைகளால் ஒப்பானேயுணர்த்தப்பெற்ற துணிபொருளின்மை சற்பிரதிபக்கமென்பதாம். இது இயைபுடைய தாகாதாம், தோற்றாநின்ற பாகாசித்தித் தன்மையானும் மாறேதுவாற் சற்பிரதிபக்கத் தன்மை வழக்கான். எப்பக்ஷத் திருந்தபோதினும் அதற்குப் பக்கத்திருப்புண்மையின். பாகாசித்தத்தானும் சற்பிரதிபக்கத்தன்மை யுடன்படத்தக்கதேயாம் என்னற்க. புலப்படாநின்ற வேறுதோடத்தானும் அங்ஙனமாயின் சற்பிரதிபக்கத்தன்மையுடன்படத்தக்கதே யாமன்றோ! ஆகவே ஹேதுப்போலி வேறுறுதல் ஒப்பாதலின். சர்வபக்ஷம் எனப்புரியின் இத்தோடமியையாதாம் எனவியம்பற்க; யாண்டு ஒரே பக்கம் மாறேதுவில் அதன் சற்பிரதிபக்கத்தின் அவ்யாபனமாதலின். ஆண்டுப் பக்கத்திற்குச் சர்வ சப்தார்த்தத்தன்மை யின்மையானே, சர்வபக்ஷத் திருப்பின்மையான் உரைத்தவிலக்கணங் கூடாமையின். இதனானே எத்துணையெனவும் பக்கவிசேஷணத்தில் தோடம் கூறியதாகவே கொள்க.

## 548. சற்பிரதிபக்ஷ லக்ஷணத்தில் அவ்யாப்தி.

மேலும், அன்வயவியதிரேகிக்குக் கேவலவியதிரேகியா னும், கேவலவியதிரேகிக்கு அன்வய வியதிரேகியானும் சற் பிரதிபக்கத்தில் இலக்கணமிஃதில்லையாம். சபக்கத்தன்மை யோடு துல்லியத்தகைமை ஆண்டின்மையின். சபக்ஷசத் தையோடு துல்லியத்தால் என இலக்கணத்தில் அதனனுசார மாகச் செய்யத்தகாததேயாம் என்னற்க, அங்ஙனமாமேலா யின், அசாதாரண அநைகாந்திகத்தன்மையானே நிச்சிதத் தானும் சற்பிரதிபக்கத்தன்மை வழக்காதலின். அன்வய வியதிரேகியானே அன்வய வியதிரேகிக்கும் கேவல வியதிரே கியானே கேவல வியதிரேகிக்கும் சற்பிரதிபக்கத்தன்மை யின்றும், மாறுகவேனும் என்னும் நியமம் அங்ஙீகரித்தற்கு முடியாதாம்; இரண்டினுக்கும் அறியப்பெறுத வேறு தோடத் தன்மைத் தசையில் ஒரு சம்பந்திதோஷம் அவசியம் அமை யவருவதால் எதற்கு வியாப்பியத்தன்மை பக்ஷதருமத் தன்மை, யுணர்ச்சி எனக்கு மயக்கமென்னும் புத்திபற்றி ஆராய்பவனுக்கு நிச்சயவுற்பத்தித் தடைவருவிப்பான் கேவல வியதிரேகியின்கண் அன்வய வியதிரேகியின், அன்வய வியதி ரேகியின் கண்ணும் கேவல வியதிரேகியின், மாறேதுவின், சாமர்த்தியத்தை மாற்றமுடியாமையின். சற்பிரதிபக்கத் தன்மையின் தோஷத்தன்மை யங்கீகரிப்பதில் இதுவேதான் மூலம், யாதுதான், வியாப்தி பக்ஷதர்மத்தன்மை யுணர்ச்சி இதன்கண் ணுளதாக உண்டாதற்குத் தகுதிய தாறுததாமோ வென்பதாம்.

## 549. சற்பிரதிபக்கத்தின் இலக்கணம் வேறுவிலக்கல்.

இனி, பக்கசபக்கத் திருப்புடைத்தாய் விபக்கத்தில்லா தாய்ப் பாதிக்கப்படாத விடயத்தன்மை கூடியதா னுணர்த்

தப்பட்ட சாத்தியவிபரீதம் சற்பிரதிபக்கம் எனக் கூறுதியேல்; கூடாதாம், நீக்கப்பட்ட பெற்றியதேயாதலின்; பக்கபதத்தில் சர்வசப்த விசேஷணங் கொடுத்தல் விடுத்தல் ஆம் பக்கத்தோதிய தோடமும் கேவல வியதிரேகி அவ்வியாபகத்தன்மைத் தோடமும் வருதலின். மேலும், சோதியை யசித்தவய லறைபவர்தம் மகத்தே சோபாதியதாக நிச்சயமான போதினும் கூறியபடியாவுமேயாய இவ்விலக்கணம் உளதாமெனவதனுறும் சற்பிரதிபக்கத் தன்மையாம்.

## 550. வேறு வகையானே யிலக்கணம் விலக்கல்.

இனி, அசித்த விருத்த அனைகாந்திக பாதித விடயத் தன்மை யற்றதாற் போதிப்பிக்கப்பெற்ற சாத்திற அசத்வம் சற்பிரதிபக்கம் எனவியம்புதியேல், இதுவும் இன்னிலையெய்தாதாம், தொடக்கத்திலேயே தோற்றுத்தோடத்தால், வத்து கதியாலும் அசித்தியாதி தோஷவானல் சற்பிரதிபக்கத்தன்மை யங்கீகாரத்தான் அதன் அவ்வியாபகத் தன்மையான் என்க. மேலும், மாறுபொருளைக் கவர்வனவாய சற்பிரதிபக்க ஹேதுக்களின் மத்தியில் அவசியம் இரண்டிலொன்றுய அசித்தியாதி தோஷத்தால் ஆகவேண்டும், மாருயினோ, தருமிக்கு விருத்ததர்ம அத்தியாச வழக்காதலின். ஆண்டொன்றற்குப் பிரித்துத் தோடநிச்சய மாகாமையின், மாறேதுவின் மாட்டும் அசித்தியாதி தோட ஆசங்கை யுளதாகியவழி அசித்தியாதி ஹீனத்தாலென இலக்கணுங்கிசம் நிச்சயப்படாமையின் இலக்கணந் துணிதல் முடியாதாம். யாதின்பொருட்டுச் சற்பிரதிபக்க ஹேதுகட்கு இரண்டி லொன்றசித்தியாதி யவசியம் அங்கீகரிக்கத் தக்கதாம், சற்பிரதிபக்க விலக்கண தோஷ துஷ்டத்தன்மையானே அவற்றிற்குத் தருமியின் விருத்ததரும அத்தியஸ்தத் தகைமை பொருந்தாதாம் எனக்கூறற்க; அவசியம் துஷ்டமான ஹேதுவின்கண்ணே

வியாப்திக்காதல், பக்கதருமத்தன்மைக்காதல், இல்லாமை யோடிருக்குந்தன்மையாம், அதன் சத்தையை யங்கீகரிக்கின் சாத்தியசத்தையின் அங்கீகார வழக்காதலின் என்பதனுன். பாதாதிகட்கும் உபாதியை யுணர்த்தும்வாயிலாய் வியாத்தி யாதி பங்கமே முடிவுபெறுதலின். சற்பிரதிபக்கத் தன்மை யான் உணர்த்தப்படுவதும் வியாத்தி பக்கதருமத்தன்மைப் பங்கம் சிறப்பித்து ஓரேதுவின்கண்ணே நிண்ணயஞ் செய்ய முடியாதாம், இரண்டி லொன்றன்கண் வியாத்தியாதி பங்கத் தானும் சற்பிரதிபக்கத்தின் பொருத்தம் இருத்தலின். ஆகை யால், அவிசேஷத் திருப்பதானே அஃதுணர்த்துவதாக விருந்தவழி நேராக விதுநிண்ணயஞ் செய்யின் அக்கால் அசித்தியாம். இனி, குறியால் அனுமிக்கப்படின் அக்கால் அநைகாந்திகாதியின் யாதாவதொரு தூடணம் வத்துக்தியா னுள்தாம் சற்பிரதிபக்கத்திலது யாங்ஙனம் அசித்தியாதி யாதேனுமொன்று ஆண்டங்கீகரியாமை கூடல்? ஆகலின் அவ்வத்தோடத்திற்கு யாண்டு இரண்டனிடையில் இருப்புள தாமென இரண்டிலொன்று துணியாதபோது மாறேதுவின் கண்ணும் அச்சங்கையுளதாக அசித்தியாதி ஹீனத்தால் என்னும் இலக்கண அங்கிசம் நிச்சயிக்க முடியாமை நீக்க முடியாததேயாம்.

## 551. மீண்டும் வினுதல்.

ஆருகதானிது, அசித்தியாதி ஹீனத்தன்மையாகிய இலக்கண அங்கிசத்தின்நிச்சயம் உளதாம், ஐயமும் ஆண்டு ளதாம் அவ்வையத்தால் சங்கிக்கப்பட்ட சற்பிரதிபக்கத் தன்மைத் தோடபீடையானே அசாதகத்தன்மை தூடிக்கப் பெற்ற அனுமானத்தின் சங்கிக்கப்பெற்ற உபாதியிற்போ லும் அசித்திசங்கையான். எவ்வசித்தியாதி சங்கையை யுப ஜீவித்து சற்பிரதிபக்காதி சங்கை தோடமாமோ அதுவே

அக்கால் தோடமாமெனை வறையற்க; அசித்தியாதி சங்கைக்கே அத்தகைய மாறேற்துகாட்டும் மூலத்தகைமையாதலின் அதனுபஜீவகத்தன்மை யுண்மையின் எனின்?

## 552. விஞ விலக்கல்.

இங்ஙனம் ஏலாதாம், சங்கிக்கப்பெற்ற வுபாதியால் அசித்தத்தானும் இவ்வண்ணம் சற்பிரதிபக்கத்தன்மை யுண்டாம். அற்றேல், இன்னணமும் ஆகுக, ஆனதால் என்ன தானய்விடும்? அதற்கு அசித்தத்தன்மை யுண்மையானே ஹீனபலத்திற்குச் சித்தியாதியுடையதால் பக்ஷபாதம் விடுத்து ஒருசிறிதாம் அயலின்றும், ஆயின்பாதத்தானே, அதனல் சற்பிரதிபக்கத்தன்மை யின்றுமெனின்? அற்றன்று, ஐயப்பாடுற்ற அசித்தத்தன்மையானே சற்பிரதிபக்ஷ ஹேதுவிற்கும் ஆயின் யாங்ஙனம் பரஹேது அசாதகத்தன்மைப் பிரசாதகத்தன்மையாம், ஹேதுப்போலித்தன்மை யொப்பாயிருத்தலின். ஹேதுப்போலி யயல் தோடவைய சம்பாதகமாகாதாம் ஆகலின் இவ்வண்ணம் இலதாமெனின்? இலதாம், ஆயின், எவ்வுபாதிபற்றிக் குறைந்தபலத்தால் பாத்தியத்தன்மையாமோ அதுபற்றியே அவ்விதவுபாதிக்குத் தோடசமுசய வாற்றலுண்மையானே. மேலும், சிலபாற் சற்பிரதிபக்கத்தன்மை நிச்சய அபாவம் உற்றவழி சமுசயங் கூடாமையாம்.

## 553. சற்பிரதிபக்ஷ இலக்ஷணந்தர நிராசம்.

இனி வேறுவகையாகாரம் இலக்கணம், அசித்த விரோத வியபிசார பாதவின்மையானே புலப்படுவதாற் போதிக்கப்பட்ட எத்னது சாத்தியத்தி னில்தாதல் ஆமோ அது சற்பிரதிபக்கமாம் எனக் கூறிதிபேல், இதுவும் ஆராய்ச்சியைச் சகிக்காததாம், எவனல் அவ்வாறு தோற்றுந்தகைமை

யங்கீகாரம் மாறனுமானம் பிரயோகிப்பவனலா? இனி முதலாவது அனுமான வாதியாலா? இருவரானுமா? எவ னெனும் ஒருவனலா? ஆண்டாகியதாகாதாம், தானே தோ டத்தை யறியினும், தூஷணம் வேறு விளங்காதபோது இத் தோடத்தை நினைந்திலனாயின்' அக்கால் அபீஷ்டமேயாம். இனி, நினைந்திடுவனாயினோ அஞ்ஞான்று அயல்வகையானும் தோஷம் வேறு தோற்றாத எனது தோல்வியில் இவனால் கதையிற்கக்ஷாந்தரம் ஏறியவழி சாகாந்தரமேனுந் தாண்டற் பொருட்டு அவகாசம் அடைவேனாகவும் என்னும் அபிப்பிரா யவானாகிய அற்பப்பிரஞ்ஞை யுடையவனுக்கு என்பாற் கூறி அசத்பக்ஷத்தையும் நிர்வகிப்பன் என உலகில் மேன்மை வெளிப்படுத்தற் பொருட்டு எங்ஙனமேனும் கிரந்தக்காரர் முதலியோராற் கூறப்பட்ட அவ்வித மாறேதுவின் நிர்வாகப் பொருட்டு அயலாகப் பொருந்திய மேலாய அறிவுற்றவன் பால் தோற்றுந்தோடத்தானும் மாறேதுவானே சற்பிரதி பக்கஞ் செய்யக் காணவருதலின். ஆண்டு அயலானல் தோடமுண்டாக்காதவழி வெற்றியு முண்மையின்.

## 554. இலக்கணத்துள்ளடங்கிய புலப்படுந்தன்மை விகற்ப நீக்கம்.

மேலும் புலப்படுந்தன்மை, துணியப்பெறுந்தன்மை யெனக் கூறவிழையினோ, அக்கால் அசம்பவமேயாம், ஒன் றற்கு விருத்த அருத்தங்களில் அவசியம் தோடமாகலின். அத்தோடமும் எதற்குளதாமெனை அப்போது துணியமுடி யாமையின் மாறேதுவின் கண்ணும் அவ்வையம் உளதாத லின். இனி, புலப்படுந்தன்மை சம்பாவனையேல், ஆண்டுற் பாவன சம்பாவனையைத் துடித்து யாது கூறுவேமோ அது வே தூஷணம் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

### 555. இரண்டாவது மூன்றாவது நான்காவது கற்ப நீக்கம்.

இரண்டாவது மூன்றாவது நான்காவதுகளுங் கூடா வாம், பரபுத்தியைத் துணிதல் கூடாமையினானே, பரனது அசித்தியாதி யின்மைமதி யீண்டுண்டாம் என முன்பு துணிதற்கு அளவையின்மையானே முடியாமையின், எங்ஙனம் சற்பிரதிபக்கத்தன்மை பதிஞ்ஞைசெய்து உணர்ந்த முடிதலாம்? வேறு சங்கையும் ஈண்டு நீக்குவோம்.

### 556. தூஷண அதிசேஷம்.

இதனானே, அசித்திவிரோத பாதவியபிசார முடைமையாதல், வியாப்தி பக்ஷதருமத்தன்மை யின்மையுடைமையாதல் கவரப்பெறாததால் உணர்த்தப்பட்ட துணிபொருள் மாறுபாடு சற்பிரதிபக்கம் என்பது நீக்கப்பெற்றதாம், எவ்வாற் கவரப்பெறாமையென்த் துணிந்து கூறமுடியாமையின்.

### 557. இலக்கணமூன்றன் சாதாரண தோஷம்.

மேலும், எல்லா இவ்விலக்கணங்களுக்குமே, தர்மியாதி கவரும் அனுமான பாதிதத்தினும் செல்லான் அதிவியாபகத் தன்மையாம். இதனால், தன்பொருட் டனுமானத்திலாதல் அதன் போலியிலேனுமாதல் சற்பிரதிபக்கத்திற்குத் தோடத் தன்மை யகற்றப் பெற்றதாம்.

### 558. சற்பிரதிபக்கத்தில் விசேடசங்கை நீக்கம்.

இனிக் கவரப்பெறாத விசேடத்தால் உணர்த்தப்பட்ட துணிபொருளின்மை சற்பிரதிபக்கம் எனக் கூறப்படும். ஆண்டு யாவனாற் கவரப்பெறாமை என்பதாதி விகற்பதோடக் கூற்றுளதாகுக: யாதாவதொரு விசேடம் விசேடசப்தத் தாற் கருதப்பட்டதாம் எனவாயின் அஞ்ஞான்று அதன் கவர்ச்சியின்மை எவ்விடத்தும் இல்லையாமெனச் சர்வ அவ்

யாப்தியாம். இனி, ஹேதுதோடவடிவ விசேடம் அங்கீகார மாயின், அப்போது தர்மியாதி கவரும் அனுமான பாதிதத் திலும் செல்கின்றமையின் அதிவியாபகத் தன்மையாம், கவ ரப்பெறுத ஹேது தோஷரூப விசேஷத்தால் உணர்த்தப் பட்ட துணிபொருள் வேறுபாடுண்மையின் அதற்கும், ஆண்டு ஹேத்துதோட அபாவத்தானே கவரப்பெறுத விசே டத்தன்மை யுண்மையான். அக்கிருகியமாண பரமார்த்தத் தித ஹேதுதோடரூப விசேடத்தால் எனச் செய்யின் தாண்டி விடலாம் என்னற்க, அங்ஙனமாயின் சற்பிரதிபக்ஷ ஹேது வையுடைய சற்பிரதிபக்ஷம் வியாப்பியப்படாதாம். உண்மை யாயிருப்பதாகவும் காட்டவேண்டும் அல்ல அறிவது எனவும் பேரறிவேயாம். கவரப்பெறுத ஹேதுதோஷ ஹேதுகுண ரூப விசேடத்தால் எனச் சிறப்பிக்கக்கூறும் விழைவேனும் தாண்டமுடியாதாம். வியதிரேகியின்கண் அன்வயவியதிரேகி யால் சற்பிரதிபக்கத்தில் ஹேத்துகுணரூப விசேடம் சபக்கத் திருக்கும் வடிவதாகக் கவரப்பெறும் என அதன் அவ்யாப கத்தன்மை யடைவு வருதலின்.

## 559. விசேஷணாந்தர சங்கை யகற்றல்.

இனிக் கவரப்பெறுத வியாத்தி பக்கதருமதாபங்கரூப விசேடணமெனச் செய்யினோ. அக்கால், வினவத்தக்கது, எதைக்குறித்து விசேடத்தன்மையிது இஷ்டம் ஆதல், யா தேனுமொரு சிறிதை யபேக்ஷித்து எனக்கூறின், அக்கால் வெளியாய அகித்தியர்தி பாவமுற்ற ஹேதுப்போலியைக் குறித்து விசேடம் கிரகிக்கப்படும் சத்தனுமானவடிவ மாறே துவில் என வாண்டவ்யாபகத் தன்மையாம்.

## 560. இரண்டாவது கற்பநீக்கம்.

இனிப் பிரகிருத விரோதி யேதுவைக்குறித்து என்பதா யினோ இலக்கண வாக்கிய மித்தகையதாக எஞ்சாநிற்கும்,

வியாப்தி பக்ஷதர்மத்தன்மைப் பங்காபங்க ரூபம் பிரகிருத ஹேதுவினால் எதனது விசேடமாகக் கவரப்பெற வில்லையோ அதனால் உணர்த்தப்பட்ட எதனது துணிபொருள் வியதிரேகம் அது சற்பிரதிபக்ஷம் என்பதாம். இத்தகையதாகவும் இவ்வாக்கியம் வியாக்கியானமாகத் தகுதியாம் அங்ஙனமன்றே:— வியாப்தி பக்கதருமத் தன்மையெனச் சேர்ந்ததற்குப் பங்காபங்க பதசம்பந்தஞ் சாற்றவாதையேல், தனித்தனியுதாகரண அதிவியாத்தியாம், அதன் பங்காபங்கரூபமென்பதாய மிலிதத்திற்கும் விசேடபத சம்பந்தம் அபிப்பிராயப்படின் எல்லாவற்றானும் சம்பவியாமையானே அசம்பவமாம்.

## 561. வேறு தோடம் விளம்பல்.

மேலும் இங்ஙனம் இவ்வாக்கியத்தினது பொருளியம்பத்தக்கதாம், வியாத்தி பங்கரூபம், வியாத்தி யபங்கரூபம், பக்கதருமத்தன்மைப் பங்கரூபம், பக்கத்தருமத்தன்மை யபங்கரூபம், பிரகிருத ஹேதுவைக்குறித்து விசேஷம் கவரப் பெறுவதின்றி எதற்கு அதனால் உணர்த்தப்பட்ட எதனது சாத்திய வியதிரேகமோ அது சற்பிரதிபக்கமாம். அவ்வாறுயவழி, பரமாணு. அவயவமற்றது, இளைப்பாறிய பரிமாணதர தமாதி பாவத் தன்மையான், விண்போலும் எனப் புகன்றபோது, பரமாணு, அவயவத்தோடமைந்தது, மூர்த்தத்தன்மையான், கடங்கடுப்ப, எனப் பிரதிவாதி கூறிய எதிர் அனுமானத்தானே பரமாணு தருமியைக் கவர்வதாயினும் அணுப்பரிமாணதர தமாதி பாவம் ஓரிடத்தில் இளைப்பாறுவதாம். பரிமாணதர தமாதி பாவத்தன்மையான், மகத்பரிமாணதர தமாதிபாவம் போலும் என்பதாதி நல்லனுமானமாக இஷ்டப்பட்டதற்கு, பக்கதருமத்தன்மைப் பலத்தினானே அதனது நிரவயவத்தன்மை யிருப்பினும் பிரமாணத்தன்

மையை யடைந்ததற்குச் சற்பிரதிபக்கத் தன்மையாம். யாவனிதற்குச் சத்தனுமானத்தன்மையை யுடன்பட்டிலனே அவன் பொருட்டு இவ்வகையனவாய அநேக உதாரணங்கள் உள்ளனவாமென அவற்றில் வழக்காம். அதுவும் அவ்வாறுளதேயாம் என்னற்க, அதற்குத் தருமி சித்தியின் பொருட்டு உபஜீவியத் தன்மையானே பலமுடைமையான்.

## 562. வேறு விசேடண சங்கை விலக்கல்.

அதனை விலக்கற்பொருட்டு அது பிரகிருதம் சற்பிரதிபக்கம் என இயற்றத் தக்கதாமெனின்? அவ்வாறாயினும் பொருந்தாதாம், ஈண்டோ, எதற்குக் கவரப்பெற வில்லையெனச் சம்பந்தமாமோ அதனால் எச்சம்பந்தித் தன்மையதாகக் கவரப்பெறவில்லை யென்னும் அர்த்தம் விளம்ப விளைந்ததாமேலாயின், அவ்வியாபகத்தன்மை தோடமாம்; அங்ஙனமன்றே:— யாண்டு இரண்டேதுகட்கும் பரமார்த்தமாகச் சாதாரண வியாத்தியாதி பங்கமாம், சற்பிரதிபக்ஷ தசையின்கண்ணே கவரப்பெறாததாம் ஆண்டின்றா மிவ்விலக்கணம், ஆண்டு வியாத்தியாதி பங்கம் விசேடமன்றாம், பின்னையோ பிரகிருத ஹேதுவோடு சாதாரணமேயாம்.

## 563. அதிவியாப்தி பரிகாரசங்கை யகற்றல்.

அற்றேல், அத்தியந்தம் அசத்தாய வியாத்தியாதி பங்கரூப விசேடத்திற்கும் முதலிலாண்டு கவரப்பெறாமை யுளதாம், அதனைக்கொண்டே இலக்கணம் அதன் வியாபியாகும் எனின்? ஆயின் யாண்டுவாதி தன்ஹேது சாதாரணம் வியாப்திபங்காதி தோடத்தைத் தெரிந்து மாறேதுவின்கண் ணிருப்பதாக பரனுக்குண்டாக்குவானே; பரனும் நீக்குவதற்கு முடியாதவன் ஆவனே, ஆண்டும் இவ்வண்ணம் சற்பிரதிபக்கத் தன்மை யழியாததேயாம்; கூறிய வடிவ விசேட முடைமை

யானே அவனால் இது கவரப்பெறுமையின், உரைத்தவடிவம் சமானத்தன்மையினானே அவ்வாறு கவரப்பெறுதலின்.

### 564. மீண்டும் வேறுசங்கையை விலக்கல்.

ஆயினும் மாறேதுவாதியின் ஆண்டு விசேடமுடைமை யானே கவரப்பெற்றதாம், அவனுக்கு அதன் சாதாரண பாவத்தோற்றமின்மையின், பிராந்தி அப்பிராந்தி சாதார ணமே மீண்டுக் கிரகணமாத்திரமெனக் கூறு வேட்கையுண் மையின் எனின்? என்னற்க, மாறேதுவாதியபிப்பிராயத்தான் கவரப்பெறுமை பக்ஷத்திற்கு முன்னரே நீக்கியிருத்தலின். மேலும் வேறேதுவாதியும் சாதாரணத்தகைமையை அத்தோ ஷத்திற்கு அஞ்ஞான்றே பார்ப்பானேல் அக்கால் ஆங்கதி யாதுகொல்? இவன் வாதி யேதுவின் கண்ணும் தோடங் காண்பனேல், அக்கால் அதனை யுண்டாக்கலாம், அங்ஙன மாகவே ஆண்டே கவிதக்கலப்பாம் சற்பிரதிபக்ஷத்தை யுபே க்ஷித்து எனின்? இலதாம், பார்த்தும் பிரதிவாதி யாண்டு தோடம், இங்ஙனம் மந்திரிப்பால், இப்போழ்து பிரதிஞ்ஞை செய்த சற்பிரதிபக்ஷத்தன்மையை விடுத்துத் தோடமய லொன்றை யுதிப்பிப்பனேல் ஆயினும் பதிஞ்ஞைபாறலர்ற் பங்கமே யெனக்காம், இனி யுதிப்பியேனேலாயினும் பதிஞ் ஞை செய்ததோட அநிர்வாகத்தால் எனக்குத் தோல்வியாம்; ஆகலின் இங்ஙனம் வேறுதோடமேற் கிளப்புமாயாசம் வாளா வாமெனச் சிந்தித்துச் சும்மா விருப்பனேல், அக்கால் யாது கதியாம்?

### 565. எதன் என்னுஞ் சப்தத்திற்கு விசேடபதத்தோடு சம்பந்த மிருப்பினுந் தோடமாம்.

இனி, எதன் விசேடம் எனக்கூறிய இல்க்கணவாக்கி யத்தில் பதசம்பந்தம் நின்று அபிமதமா? ஆயின் அதையப்

பட்டது: ஆண்டுத்தோடம், அயற்றோடமுமாம். வியாத்தியு பங்காதியின் விருத்தார்த்த ஹேதுக்கட்குச் சாதாரணத்தின் அசம்பவமாதலின், விலக்காததாகிய விசேடபதத்தோடு விசேஷண விசேடியபாவம் பொருந்தாமையின்.

## 566. வேறு விசேடணம் வைக்குஞ் சங்கை நீக்கம்.

இனி வியாப்தி பக்கத்தருமத்தன்மைப் பங்காபங்கரூபப் பிரகிருத ஹேத்வபேக்ஷ விசேஷமுடைமையானே யுண்டாக்காமையி னுணர்த்தப்பட்டது எதனது சாத்திய விபரியயமோ அது பிரகிருத சற்பிரதிபக்கம் எனக் கூறுவதாயினும் பொருந்துறுதாம்; பரன் நிறுத்த இம்மாறேது இன்னணம் முறிந்த வியாத்தியது எனவே யியம்பின், எனது ஹேதுவினுமிது விசேஷமன்றாம் எனவுமியம்பின், வேறுபாசத்தன்மை தோற்றிவைத்தலானே மாறேதுவிற்குச் சற்பிரதிபக்கத்தன்மைப் பங்கத்தான், அப்போதும் இங்ஙனம் சற்பிரதிபக்ஷத்தன்மை நீங்கமாட்டாதாம். அவ்வாறாகவே தான் புலப்படாநின்ற அசித்தியாதியானும் சற்பிரதிபக்ஷகரணமாற்றலேலும் என நன்கு நவிற்றலாயது சர்வ அனுமான அனுகூலமாம்.

## 567. உண்டாக்காமையை விகற்பித்து இலக்கண தூஷணம்.

மேலும் எக்காலத்தில் அவ்வாறு உண்டாக்காமை யவாவப்படுதலாம், எக்கால் மாறேது உண்டாக்கலானே பரஹேதுவைத் தூடிப்ப பின்னர்க் கூறிய போதினும் மாறேது தோடத்தில் முற்போதிய உண்டாக்காமை யுற்றவழி மாறிச்சேறல் யாதுமிலதாம் என, எல்லா ஏதுப்போலிகளானும் சற்பிரதிபக்கஞ் செய்தல் துட்டமன்றாமென அனுமான கதையாற்போயதாம். இனி மறுவாதியாற் கூறியபோது எப்போது மீண்டும் வாதிவசன அவசரம் அப்போது உண்டாக்காமை

யிட்ட மேலாயின், இவன் இங்குச் சிறப்பாகத் தோடத்தை உற்பவிக்கச் செய்யான் என்று அஃதெங்ஙனம் முன்பில் மாறனுமான வாதியாற் றுணிதல்கூடும்?

## 568. தோடமுண்டாக்காமைத் துணிபின் சங்கை நீக்கம்.

தனது பிரதி ஹேதுவிற்குத் தோடசூனியத்தன்மை புண்மையின் சமர்த்தன் அதனை நிர்ணயஞ்செய்ய முடியக் கூடியவன் ஆவன் எனின்? ஆகான், கூறப்பட்ட நீண்டுத் தோற்றுந்தோட முடையதானும் சற்பிரதிபக்ஷஞ் செய்தல் சம்பவிக்கும்; ஆண்டு பரனால் தோஷம் உண்டாக்காதவழி வெற்றியுமுண்டாம். மேலும் விசேடதோட சூன்யத்தன்மையும் தனது ஹேதுவிற்கு எங்ஙனமிவன் றுணிவுறுவன், ஆண்டு முரணுற்ற பொருளுற்ற ஹேதுக்களுக்குள் ளொன்றற்கு இன்றியமையாது தோடத்தோடுகூடலாம்; ஆண்டு அவனால் தனது ஹேதுவில் தோடங் காணப்படாததேபோலப் பரவேதுவின்கண்ணுமாம். அதன் றரிசனத்தில் அதனையே யுற்பவிக்கச் செய்ய வேண்டும். என்னலுள்ளத்தன்றன் நிச்சித தோடத்தை யுபேக்ஷித்து தோஷத்தோடு கூடியதை நிர்த்தோஷ சாமானியமாக நிலைபெறுத்தி நிற்பன், ஆகலின் தோஷத்தோடு கூடியதாயினும் தோடத்தைப்பாராமலிவன் தன்னாலதரிசனம் தோஷாபாவத்திற் பிரமாணப்படுத்துவான் றக்கவனாகான்.

## 569. வேறு விசேடத்தால் அசம்பவ சங்கையின் பரிகாரம்.

இனி வியாத்தி பக்ஷதருமத்தன்மைப் பங்காபங்கரூபப் பிரகிருத ஹேதுவபேக்ஷ விசேடமுடைமையானே உண்டாக்காமையாய்ச் சம்பவிக்கப்படுவதான் உணர்த்தப்பட்ட எதனது சாத்தியத்தின் விபரியயம் அதுபிரகிருத சற்பிரதிபக்கம் எனின், இதுவும் நிலைபெறாதாம், உதிப்பிக்குங் காலத்தி

னும் பூர்வகாலத்திய சம்பாவனை சாற்ற விருப்பேலாயினோ, அக்காலத்திய உண்டாக்காத பக்கத்துரைத்த தோடத்தையே யமைத்துக்கொள்க. இனி யுண்டாக்குவதற்குள்ள அவசரம் அக்காலத்தியதாக ஆகுமாயின் சற்பிரதிபக்கத் தகைமையை விளம்பரஞ் செய்யுங்கால் அஃதின்றுமெனச் சிறப்பின்மையின் இலக்கணமிலதாம்.

## 570. காலமாத்திர சம்பந்தி சம்பாவனை நீக்கம்.

இனி எத்துணைச் சம்பாவனை தொடர்ந்து நிற்குமோ அத்துணை சற்பிரதிபக்கத் தன்மையாம், சம்பாவனைக்குக் காலநியமந் தேடலானே என்பயனெனின்? இங்ஙனம் இயம்பற்க, இங்ஙனமே, மாறேதுவிற்குத் தோட முண்டாக்காத வழி, மாறுக, நிர்த்தோஷமாகவே கவர்ந்தவழி தோஷமுண்டாக்கும் சம்பாவனை நீங்குதலின், 'சற்பிரதிபக்கத்தன்மை நீங்கும், அவ்வாறுகவே இவ்வாறியற்றலானே வாதி சற்பிரதிபக்கத் தன்மையை பரிகரிக்குகவென நன்கேபொலியும் மாறேதுவிற்கு மாறுபாடியற்றுமல் அங்கீகரித்தே யதை சற்பிரதிபக்ஷத்தன்மை சமைத்தற்பாலதாம். மாறேதுவினை யங்கீகரித்தலானே தோல்வியாம் என்னற்க, சற்பிரதிபக்கத் தன்மையைப் பரிகரித்தற் குபாயமாகவே யங்கீகாரஞ் செய்தலின், அங்கீகரித்தவழி சம்பாவனை நீக்கத்தால் அவ்விலககண முடைய சற்பிரதிபக்கத்திற்கும் நீக்கமாதலின், ஆகையால்; அங்கீகாரமு மிது பரனது அநிஷ்டார்த்தமாம், சித்த சாதனத்திற் பரனது சாத்திய வங்கீகாரம் போலும் குணத்தின் பொருட்டாம். அங்கீகரிப்பவனுக்குத் தோடப்பொருட்டன்றும்.

## 571. இலக்கணத்தை யனுவதித்துத் தோடங்கூறல்.

வாதிகட்குச் சமானப் பிரதிபக்க தரிசன ஜனிதத்தான் தன்னேதுவி லாபாசத்தன்மைச் சமுசயத்தான் சற்பிரதிபக்க

மாமேலாயின், யாண்டுமே சற்பிரதிபக்கத்தன்மை யிலதாகும், தன்னேதுப் பக்ஷபாதத்தான் பரஹேதுவின் கண்ணே தோடஞ் சிறிதுளது என்னுற் கவறப்பெறவில்லையென அவர்களால் எண்ணிக்கொள்ளப்படுதலின்; "நிச்சயித்தவரேவா தம் நிகழ்த்துவர்" எனக் கூறப்படுதலின். இனி யுசிதமாதலின் நீக்கமற்ற வையத்தாற் சற்பிரதிபக்கத்தன்மை யாமேலாயின், எல்லாவிடங்களிலுமே வாதிக்குச் சர்வானுமானங்களின் சற்பிரதிபக்கத்தன்மை நீக்கமுடியாததாம். அஃதெங்ஙனமெனின்:— சப்த அநித்தியத்தன்மை யனுமானத்தால், மதிமான்களால் நூறுவகையானே, சப்தநித்தியத்தன்மை வாதி வெற்றியான்; சப்த நித்தியத்தன்மை யனுமானத்தானும் பேரறிவாளிகளால் நூறுவகையானே சப்த அநித்தியத்தன்மை வாதி வெற்றியான். இருபக்கங்களிலுள்ள அனுமானங்களில் யாதுமொழுண்மையாக வுண்மையனுமானம் என்னத் தக்கவனுக்குத் தோடசமுசயம் நீக்க முடிதல் கூடாமையின்.

## 572. பாத கண்டனத் தோடக்கம்.

பிரகாரபேத அபாவத்தானும் பாதம் பேதியாதாம். அஃதிங்ஙனமாம்:— பாதிதவிடயம் பாதமென்பது அலக்ஷணமாம்.

## 573. மூவகையாக விகற்பித் தாதியதிரண்டன் நீக்கம்.

அங்ஙனமன்றேல்:— பாதித விடயத்தன்மை என்னென்று இயம்ப இச்சை? ஆண்டுப் பலவாறுற் போதித விடய விபரீதம் எதனுக்கு அத்தகைமையா? கேட்டபடியாயதற்கு சற்பிரதிபக்கத்தின் பாலும் செல்கின்றமையின்; ஆண்டு மாறனுமானத்திற்குப் பக்கதருமத்தன்மை முதலிய பலஞ் சம்பவிப்பதான் முதலனுமான விடய விபரீதம் விளக்குந்தன்மை யுண்மையின். இனிப்பலவாறுல் என்பது அதிக

வஃதுவால் எனக் கூற விழைவாமேலாயினும் கேவல வியதிரே கிக்கு அன்வய வியதிரேகியானே சற்பிரதிபக்ஷஞ் செய்யிற் செல்கின்றமையின் அதிவியாபகமாம், ஆண்டன்வய வியதி ரேகியின் மாறேதுவிற்குச் சபக்க சத்வலக்ஷண பலமதிகம் எய்துகின்றமையின்.

## 574. இரண்டாவது விகற்பத்தின் வேறு கண்டனம்.

மேலும், இங்ஙனம் காட்சியாற் கருதற்போலிப் பாத முண்டாகாதாம், காட்சிக்குப் பொறிப்பொரு ளொற்று மையா னுண்டாய மயலற்ற வுணர்வின் கரணத்தன்மை மாத் திரம் பலமாம், கருதலுக்கோ பக்கதருமத் தன்மையாதி மிகுதியாய பலமாம்.

## 575. மூன்றாவது கற்ப நீக்கம்.

இனி அயலாற்று லடையப்படாமைப் பலத்தைப் பகர விழைந்து இது கூறப்பெறும், அயலாற்று லடையப்படாத வதனால் உணர்த்தப்பட்ட எதனது சாத்திய வியதி ரேகம் அஃதாதல் பாதித விடயத்தன்மையாம் என எண்ணு தியோ இங்ஙனம் எண்ணற்க, அவ்வாறாயினும் உண்மையாக அயலாற்று லடையப்படாததால் சர்பிரதிபக்கத்தின் கண் ணும் செல்கின்றமையின்.

## 576. மூன்றாவதிற் கவுரவங் காட்டல்.

மேலும் அயலாற்றல் என்பது அயல் வகையால் எனப் படும், அன்றயலாற்றல் என்பது அன்றயல்வகையால் எனப் படும், எதனின்ன்றும் அன்றயலாந்தகைமை அதனானே யெனப் பொருள் பொருந்தும், அங்ஙனமாகவே அவ்வன் னியத் தகைமைப் பிரதியோகி யாதென வோதவேண்டும்? பிரமாணமாதல் அஃதெனின்? அகோ! தங்கள் துர்வித்வத் தகைமையை யென்னென்பதோ! பிரமாணமாதலான் எனக்

கூறவேண்டியதிருப்பப் பிராமாணியத்தினும் யாது அன்னியம் அதுயாது ஆகாதோ அதன்வகையானே யாது சித்தம் பிரதீதம் உற்பன்னம் ஆமோ அதனல் என அறைந்தீரே.

## 577. பிரமாணத்தால் என்னும் பதமுற்ற இலக்கணத்திற் ருேடம்.

ஆயினும், அளவையா லறிவிக்கப்பட்ட விபரீத விடயம் எதற்கோ அது பாதமாம் எனின், ஆகாதாம், இது வெள்ளியென இப்பியை விடயஞ்செய்யும் காட்சிப்போலியாய் இது வெள்ளியல்ல வென்னும் அளவையால் வாதிக்கப் படுவதினும், ஹேதுப்போலிச் சிறப்பு இலக்கணமிது செல்வதாலதிவியாபகத்தன்மை அடைவுருநிற்கும். இங்ஙனமே, வாதிக்கப்படும் விடயங்களில் வாஞ்சை வந்தவழியினும் செல்லுமென்றறிக. அளவையா லறிவிக்கப்பட்ட எதனது விடயத்தின் அயலாருதல் அவ்வேது பாதமாம் எனின்? அன்ரும், முக்கியப் பொருளுடையதே லேதுசப்தம், அக்கால் ஹேதுப்போலித்தன்மை வியாகாதமாம், இனி அமுக்கியப் பொருளுடையதே லாயினே, அதனது பொருளியாது கொல்! யாண்டிது நிலைபெறுத்த வேண்டுமென யாதோதப்பெற்றதோ அது அறையப்பெறல் வேண்டும். அளவையாற் போதிக்கப்பெற்றது எதனது விடயத்தின் வியதிரேகம் அது ஹேதுப்போலியாம் பாதம் எனின்? முதலில் ஹேதுப்போலியின் றன்மையின் றுணிபுருதபோது இலக்கணத்தின் றுணிபுறுதல் கூடாதாம். இனிப் பாதிதத்தன்மை நிரூபித்த அளவே ஹேதுப்போலித் தன்மையின் நிர்ணயமெனின். அதனுனே துஷ்டத்தன்மையின் சித்தியாதலின் பின்னர்த் தோற்றுநின்ற வாதம் வழங்கலி னுபந்யாசத்தா லாற்றியது சாலும். அவ்விதுநின்மதத்தே யிலக்கணமாகுக ஆகாதுதானெழிக, சாமுத்திரிகப் பிராமாண்யத்தான் மீண்டும் பெரிதானவிது இலக்க

ணம் பாதம் வழங்கற்கு, எதனலிதற்கு வெளியாக ஹேதுப் போலிப் பேதபதத்தில் அபப்பிரமிச மீயப்பெறுமோ.

## 578. ஹேதுப் போலிப் பதத்திற்கு ஒப்புமைப்பொருள் உடைமையிலும் முன்மொழிந்த தோடமாம்

இனி, ஹேதுப்போலிப் பான்மை, ஹேதுப்போல விலங்குறும் பான்மை, ஹேதுவிற் கொப்பாகப் புலப்படும் பான்மையாம், ஹேது தோடமுடைமை யன்றும் எனக் கூறுதியேல், இங்ஙனமியையாதாம், ஹேதுவோடு துல்லியத் தகைமையும் அஹேதுத்தகைமை யுணர்வி லது உணர்தற்கு முடியாதாம். பின்ன அதிஷ்டான வொப்புமைக்கு அவ்வாறே புலப்பா டுண்மையின், மாறுயினும், ஹேதுவிற்கும் ஹேதுப் போலித் தன்மை வருதலின், அதனானே ஹேதுரூப அழிவுபாட்டை யின்றியமையாது அடைய வேண்டி யிருத்தலின் முன்மொழிந்த தோடநீக்க மின்றும்.

## 579. பக்கபதம்பதிந்த விலக்கணத்திலும் தோடமாதல்.

பிரமாணத்தால் போதிக்கப்பட்ட எதனது பக்கவின்மை அது பாதமெனின், ஆகாதாம், ஆசிரயாசித்த வியாபனமாதலின், ஆசிரயாசித்த வயல் எனச் சிறப்பிக்கவெனின்? சேராதாம், விசேஷணாதி யசித்தியான் ஆசிரயாசித்தத்தோடு கலந்த வாதவுதாகரணம் இங்ஙனம் வியாபியாமல் அவ்வியாப்தியாம்.

## 580. முன்மொழிந்த இலக்கணத்தில் அதிவியாப்தி பரிகார சங்கை நீக்கம்.

அளவையாற் போதிக்கப்பட்ட எதனது சாத்தியத்தின் வியதிரேகம் அது பாதம் எனின், ஆகாதாம், காட்சிப்போலியிற் கலத்தலின், ஆண்டுந்தான், ஞாப்பியரூப சாத்தியத்தின் அபாவம் பிரமாணத்தாற் போதிக்கப் படுகின்றதேயாம்.

அளவையா லுணர்த்தப்பட்ட எதனது துணிபொருள் வியா பகத்தின் வியதிரேகமோ அது பாதம் எனின்? அன்றும்; பிரமாணத்தா லுணர்த்தப்படும் அபாவத்திற்குப் பிரகிருத ஹேது வியாபகத்தன்மை யசம்பவத்தான் என்க. பிரமா ணத்தா லுணர்த்தப்பட்ட எதன் பதிஞ்ஞைத் துணிபொரு ளபாவமோ அது பாதமெனின்? ஆகாதாம், தன்பொருட் டனுமானத்தில் பாதத்திற்கு இவ்வண்ணம் அவ்வியாப்தி வருதலின்; ஆண்டுச் சத்தரூபப் பதிஞ்ஞை யின்மையின்; சத்தத்திற்குப் பிறர்பொருட்டாந் தன்மை யுண்மையின். பிர மாணத்தாற் போதிக்கப்பட்ட பக்கத்தழூத்திய எதனது துணிபொருளின்மையோ அது பாதமெனின்? ஆகாதாம், அவ்வகையாயதற்குப் பக்கப்போலித்தன்மை யங்கீகரித்த லான் முக்கிய பக்கார்த்தத்தன்மை யசம்பாவத்தான். பக்ஷ பாசநிஷ்டத் தன்மையோடு கூடியெனச் செய்யினே பூர்வம் பக்ஷாபாசத்தன்மைப் பிரதீதி யப்பிரதீதிப் பக்ஷங்கட்குத் தனியாக ஹேதுப்போலித் தன்மைத் தோற்றந் தோற்றமின் மைப் பக்கத்துரைத்த தோடம்போலுந் தோடம் காணத் தக்கதாம்.

### 581. பக்கத்தன்மை யபிமதத்தன்மை யென்பதை மூன்றுக விகற்பித்துத் தோடம்.

பக்கத்தன்மை யபிமத அம்சபூதத்தின் எனச் செய் யினே கேட்கத்தக்கதாம், பக்கத்தன்மை யபிமதத்தன்மை யென்பதென்? பக்கமதாக அங்கீகரித்தலாந் தன்மையா? அல்லது அது அத்தகையதாக அளவையால் அளந்து கொள்ளுதலா? அல்லது பிரத்தியக்ஷமாகப் புலப்படுந்தன் மையா? ஆதிபதாகாதாம், தூடகன்பொருட்டு அஃதசம்பவ மாதலின், அவனுற் பாத்திய சாத்தியத்திற்குப் பக்ஷாபாசம தாகவே மாறுயங்கீகரிக்கப்படுதலின். அனுமானவாதியபே

கைஷயினுலும் நியமாபாவமாம், நல்லனுமானந் தோற்றுத வழி மந்தப் பிரஞ்ஞையனேனும் பேரறிவாளனென்னும் பேரபிமானமுடையவனுல், யான் புகலும்போது வெளியாக மாசிருப்பினும் யாவன் மாசுறுத்த வல்லான் என்னுங்கருத் தால் இட்டமட்டில் அறிந்து ஆசுப்பிரயோகமும் அமைத லின், ஆண்டனுமானவாதியால் பக்கத்தன்மை யங்கிகார மின்மையான், அவ்வாறுய பாதித வனுமான அவ்யாபகமாம் இவ்விலக்கணம் ஆம். பக்கமதாக வுபசுயசிக்கப்படுதலாதல் அங்கீகாரப் பொருளென்பது பொருந்தாதாம், அங்ஙன மாயின் தன்பொருட் டனுமானத்தில் வாத அவ்யாப்தியாம்.

## 582. பக்கத்தன்மையானே யளவிடற்படற் பக்கநீக்கம்.

இரண்டாவது மாகதாம் பக்கத்தன்மையானே யள விட்ட விடயத்தில் வாத அவகாசம் வராமையின்.

## 583. அவ்வாறுந்தன்மையானே தோற்றுதன் மாத்திரம் என்னும் மூன்றுவது கற்டநீக்கம்.

மூன்றுவதும் முடியாதாம், அக்காலோ இங்ஙனம் இலக் கணம் இஃதியையாநிற்கும், பிரமாணத்தாற் போதிக்கப்பட்ட எதனது சாத்திய பக்கப்பிரதீதி விடய அங்கிசத்தின் அபா வமோ அது பாதம் என்பதாம்; இத்தொடர்மொழிப் பொருள் ஒருபோதேனும் சம்பவிக்குமென எண்ணிலேம்; எக்காலாண்டுப் பிரமாணத்தாற் றுணிபொருளின் இன்மை யுணர்வாமோ, அக்காற் பக்கத்தோற்றமிலதாம், விசேடதரி சன முளதாக மயற்கிடமிலாமையின், அதனுனும் அக்கால் பக்கம் புலப்படுதலின்மையான் அவ்விடயத்தன்மை யின்மை யின் அவ்விடய அங்கிசத்தின் என விசேடணுபாவ அதீன மாம் விசிட்ட இலக்கணவடிவ அபாவம். எக்காற்றுன் பிர மாணத்தாற் றுணிபொருளின்மை யுணர்ச்சியிலதோ அக்கால்

அவ்விலக்கண பாகத்திற்கே யபாவத்தால் இலக்கணுபாவ மென நித்தியம் அசத்வமில்லைமை வாய்ந்த விலக்கணத்தால் இலக்கியத்தை நிலைபெறுத்திக்கொண்டு தங்களுடைய பேர றிவையே வியந்து கோட னலனன்றே. வைசேடிகப் பிரக் கிரியையைப் பின்பற்றி அழியவத்தையதேனும் பக்கத்தோற றம் அக்காலத்திற் சம்பவியாதாம், அதனது துணிபொரு ளின்மை யுணர்வால் நீக்கப்படுவதாழது; அதன் றுணிபொரு ளின்மை யுணர்வும் மிகுமுன்பே யிருப்பதாக இன்றியமை யாம லுடன்படல் வேண்டும், அன்றாயினோ அளவையால் அறிவிக்கப்படுந்தன்மை யாங்ஙனம் துணிபொருளின்மைக்கு அக்காலறியட்பெறும்.

## 584. பிரதீதி விடயத்தன்மைக் குபலக்ஷணத் தன்மையிலும் தோடம்.

பிரதீதி விடயத்தன்மை யென்னுமிது விசேஷணமா காதாம், மற்றோ உபலக்கணமாம், உபலக்கணத்தானும் அசத்தேனும் வேறுபடுத்தும் பிரதீதியுண்டாம், எங்ஙனம் காகவான்கள் தேவதத்தன்வீடுகள் என உபலக்கணீபூத காகமுடையதாகத் தேவதத்தகிருகத்திற்கு விவகாரத்தி லாமோ எனக்கூறற்க; ஆண்டு உபலக்ஷிய தேவதத்தகிருகத் திற்கு இயற்கையாய விசேடம் விவகாரகாலத்தி லிருக்கின்ற தாதலின் அதனுற் காகமுடைமை யின்றேனும் அதனைப் பற்றி விவகாரநியமப் பிரவிருத்தியாம், ஆண்டும் அசத்துப லக்கணத்திற்குக் காரணத்தன்மையின்றாம். ஈண்டோ, வியக் திகளின் உபலக்ஷியத்தன்மையில் இலக்கணத்தின் றொடர் பின்மையாம், அநுகதமாகவோ சிறிதுபலக்ஷியம் குறித்தி டக்காணேம்; ஆகலின் அறைந்த வாக்கியார்த்தையே பற்றி முயன்ற இலக்கணவடிவ சாதனத்தில் விசேஷணசித்தி நீக்க முடியாததாம்.

585. ஹேதுத்தன்மை யபிமதத்தன்மைப் பக்கத்திற்கும் நீக்கம்.

இதனுனே, பூர்வஞ் சங்கித்த ஹேது வென்பதற்கும், காட்சிப்போலி விலக்கற்பொருட்டுக் கொண்டதன் ருனத்தில் ஹேதுத்தன்மை யபிமதவென்னு மித்தகையதற்கும் காரணம் தூடித்ததாகவே யாமென்றறிக.

586. பாதிதத்திற்கு இலக்கணமயலின் நீக்கம்.

பிரமாணத்தானே யுணர்த்தப்பட்ட எதனது சாத்தியத்தின் அபாவமோ அது காட்சியி னயலாய பாதமெனக் கூறினே; இதுவும் நன்றிலைமையுறுதாம், சப்த உபமான ஆபாசப்பொதுவாதலின்.

587. அதனயற்றன்மைக்கு மூன்ருய் விகற்பித்து நீக்கம்.

அதனினும் அயல் என்றும் சிறப்பிக்கத்தக்கதாம் எனின், இதுவும் விசாரிக்கத்தக்கதாய், பியத்தியக்ஷ ஆபாசாதி வியதிரிக்தத் தகைமை பிரத்தியக்ஷ ஆபாசாதிகளினின்றும் வைதருமியஞ் சிறிதா? அல்லது சொரூப பேதமா? அல்லது அன்னியோன்னிய அபாவமா? ஆண்டாதியதாகாதாம், அதன் பேதக தருமத்தைப் பேசமுடியாமையின்; இரண்டாவது மியையாதாம், சொரூபமானது பரஸ்பரம் விலகியிருத்தலினுனே இலக்கண உபாயமாகாமையின்; மூன்ருவதும் முரணுநிற்கும், அன்னியோன்னிய அபாவவடிவமாயிராநின்ற வியதிரிக்தத் தன்மைக்குக் காக்ஷிப்போலியாதியின் கண்ணும் இருத்தலினுலே அதன் விலக்கல் அமையாமையின்.

588. அன்னியோன்னிய அபாவத்தின் ஒருமையால் அதிவியாப்தி சங்கையின் பரிகாரம்.

வியதிரிக்தத்தன்மை மாத்திரம் அன்னியோன்னியாபாவ சொரூபம் விசேஷணம் எம்மனோராற் கொடுக்கப்படவில்லை

மற்றோ காக்ஷிப்போலி முதலியவற்றினின்றும் வியதிரிக்தத் தலைகமையாம், காக்ஷிப்போலி முதலியவை தங்களினின்றுமே அயல்களாகாவாம், ஆகலின் யாங்ஙனம் கூறிய வழக்கிற் கவகாசம், உன்னுற்கூற விழைந்த இது அறியப்பெற்றது; இதுவே விசாரிக்கப்பெறுகின்றது, காக்ஷியாபாச முதலியவற்றானே விசேடிதமாய் இவ்வன்னியோன்னிய அபாவம் உன்னுல் உரையாடப்படுகின்றதா? அவற்றுல் உபலக்ஷிதமாய் எதனைக் காக்ஷிப்போலி முதலியவற்றுள் அடைவற்றதென எண்ணுகின்றனை கொல்? ஆண்டாதியதமைவுறுதாம், எதிர்மறைவடிவச் சிறப்போடும் கூடியவின்மை எவ்விடத்தும் படுத்தமுடியாதாம், ஆகலின் அத்தகையதை யறைய அவாவின் சர்வ அவ்யாப்தியாம். இரண்டாவதன்கண்ணோ, காக்ஷியாபாச முதலிய உபலக்கணங்களால் எதுபலக்ஷியம் அன்னியோன்னிய அபாவத்தின் ஒருசொரூபமோ அது காக்ஷிப்போலியாதிகளிலும் பாதித அனுமானங்களிலும் பொதுவாம் என யாங்ஙனம் வழங்கிய தோட வழக்கின்றுதல்.

## 589. மீண்டுஞ் சங்கையய லகற்றல்.

அயலுளதாகுக உண்மைவடிவமான விசேஷணம், எதிர்மறையோ இன்மைக் கிராமலேயாம், அவ்வுணர்விற்குச் சிறப்புளதாக விலக்குமதிகோடன் முரண்படாமையின் சிறப்பாமெனின்? இது இயையாதாம், ஆண்டு அபாவத்தின் சொரூபம் விசிட்டமீண்டு கொண்டாம், அதுவும் விசேடிய மாத்திரசரீரம் ஆதற் றகுதியதன்றும், அங்ஙனமாகவே விசேஷசொரூபமே கூறத்தக்கதாம், வாளா விசேடபத வ்பந்யாசமாம், அதனுபந்யாச மன்றுகவே அன்னியோன்னிய அபாவமுடைமை மாத்திரம் உபந்யாசிக்கப்பட்டதாம், அதுவும், காக்ஷிப்போலியாதி விலக்கப்படுவதையும் நன்குகவர்வதாகும், அதனானே விசேடியமாய அன்னியோன்னிய அபா

வத்தினும் அதிகஞ் சிறிது மொழியத்தக்கதாம், அவ்விசிஷ்டம் உபந்யசிக்கற்பாலதாம், அதுவும் எதிர்மறையதனதாக்கழற்ப்பெறுமாயின் அதனது இன்மையானே அப்போது விசிட்டாபாவம் அடைவுறும்; விசேடியமாத்திரம் இனி தெஞ்சுவதாகும், அதுவுங் கேவலம் மிக்கடைவுறுதலாம், ஆகலின் விசிஷ்டவிவகாரம் நிகழ்விக்கும்போது விசேடியத்திலும் வேறாகச் சிறிது அங்கீகரியாமல் விசிஷ்ட இருப்பு விவகரிக்க முடியாதாம். ஆகவே பிரதியோகி அபாவததின் விசேஷணமாக்த்தகாதாம், உபலக்கணமோவாம், ஆண்டோ அன்றங்தேவங்தேம். அன்னியோன்னிய அபாவம் ஒன்றுவதின்றும் வேற்றெதிர்மறைகள் வாய்ந்த இரண்டபாவங்கள் அவையென்னற்க, அங்ஙனமாயின் பிரதியோகி லக்ஷிதமாய அதன் சொரூபம் வேறேயாமெனச் சித்தாந்த அவிரோதி பொருந்தாதாம், இரண்டோ அன்னியோன்னிய அபாவத்திற்கு ஒருவடிவாகவே பிரதியோகி யேகான்மதத்தன்மைக்கும் பேதவிரோதமேயாம். அதனானே எவ்வுருவத்தானே பிரதியோகித்தன்மையாமோ அவ்வுருவத்தானே பேத அவகாசமின்மையின் பின்னப் பிரதியோகித்தன்மை யாங்ஙனம் அன்னியோன்னிய அபாவத்திற்காம். எவ்வுருவத்தானே தான் பின்னத்தன்மையே அதனால் அன்னியோன்னிய அபாவப்பொருட்டுப் பிரதியோகித்தன்மை வத்துவிற்கின்றும்.

## 590. தருமிப்பிரதியோகிகட்குப் பிரகிருதத்தில் வைலக்ஷண்ய அநிரூபணம்.

அற்றேல், உண்மையாக அவற்றிற் கொருமையின்மையின் யாங்ஙனம் ஒருமையாக இப்பிரதியோகித்தன்மையன்னியோன்னிய அபாவப்பொருட்டுப் பொருட்கட்குப் பொருந்தும். எங்ஙனம் உண்மையாக பூதல சம்சர்க்காபாவ

மிருப்பினும் கட்டத்திற்குப் பூதல்சம்பந்தமாக்ச் சம்சர்க்காபா வப் பொருட்டேர், ஆண்டு எங்ஙனம் அயல்பூதல் சம்பந்தமாகக் காணப்பெற்றதோ அங்ஙனம் ஈண்டும் அவ்வயேயர்ய சப்பிரகார பேதங்கள் அவ்வடிவினவாய்க் காணப்பட்டன, அவ்விரண்டின் து தரிசன அபிப்பிராயம் எம்மனோர்க்கு நிர்வாஹ அர்ஹமாகா தாம்எனச் சாதும்விரித்தது.

## 591. தாதார்த்மியப் பிரதியோகித்தன்மை பேதத்திற்கின்றும் என்னுஞ் சங்கையின் நீக்கம்.

மேலும் கடபடங்கட்குச் சொரூபபேதத்தானுதல் வைதர்மிய பேதத்தானுதல் உபயகோடிசெய்ததாக அன்னியோன்னிய அபாவம் நிரூபிக்கப்படும். ஈண்டோ, காக்ஷிப்போலியாதிகட்குக் காக்ஷிப்போலித்தன்மை முதலியவற்றானே ஒருகோடித்தன்மை யுளதாகுகதான், காக்ஷிப்போலித்தன்மை முதலியவற்றினின்றும் அயல்வகையாக யாதுதான் உணரற்பாற்றே அதற்கு எவ்வுருவத்தானே ஏககோடியாக்கல், ஆண்டுத்தனிவியத்தி பின்னசொரூபத்தால் ஆகாதாம், அவையநந்தமாதலின் மதிபால் வைத்துக்கொள்ளமுடியாமையின், எவ்வுருவஞ்சேர்த்த விசேடியம் பிரத்தியக்ஷ ஆபாசாதி வியதிரிக்தத்தன்மை விசேஷணத்தானே விசேடிக்கத்தக்கதாமோ, அவ்வுருவ விடயமுறும் வகையானே அன்னியோன்னிய அபாவநிரூபணம் என்பதும் பொருந்தாதாம். அச்சொரூபத்திற்குக் காக்ஷிப்போலியாதி இனிதுகவருந்தன்மையானே கோடித்வைதபங்க சம்பாதகத்தன்மையானே அன்னியோன்னியாபாவ நிரூபணவிரோதித்தன்மை யுண்மையின். ஆகையாற் சொரூபபேதம் வைதர்மியப்பேதமேனும் இரண்டுகோடி விவத்தைசெய்வதென வெண்ணுமல் அன்னியோன்னிய அபாவ நிரூபணம் முடியாதெனை நிலைபெறவே, சொரூபபேத பக்கத்திற்கீண்டு தூடிதத்தன்மையுண்மையின்

றுமபேதம் யாதேனும் ஒதத்தக்கதாம்; இஃதியம்பற்கேலா ததாம், ஏதுமாயினுந் தான் அதனைக்கொண்டே யிலக்கண நிலைபெறுத்துகை யுளதாகுக, அன்னியோன்னிய வியதிரிக் தத்தன்மைக்கு யுக்தியால் ஆற்றியதுசாலும். ஆகவே மொழிந்த இந்நியாயங்கொண்டே பிறவிடத்தும் அதிவியாப்தி யுதாகரண அன்னியத்தன்மையானே விலக்குதல் அடிபட்ட இலக்கணவாதிக்குச் சரணமஸ்திரமாகும் அதுநிராகரிக்கத் தக்கதாம். அதனானே, வேறுபடுத்துவது வேறிலாது அதனினயலாந்தன்மையே நிரூபிக்கமுடியாதாம் என்னுங்கருத்தால் அவ்வதனின் அயலாயிருக்குந் தன்மையோடும்எனச் சிறப்பிப்பதாகிய வைசேடிகஹேதுவை, இஃதிவ்வண்ண மிலதாம் எதனால் எதனால் வியபிசாரம் அதனினும் அயலாந் தன்மையோடுகூடிப் பிரமேயத்தன்மையான் என்னுஞ்சற்பிரதிபக்க ஹேதுவின் உபந்யாசத்தான் நகையாடுவர் மிகையாடுவர்.

கவிதார்க்கிக சக்கிரவர்த்தி ஸ்ரீலஸ்ரீ ஹர்ஷாசிரியர் அருளிய கண்டன கண்ட காத்தியத்தில் பிரமாண அதனுபாச கண்டனமெனப் பெயரிய முதற்பரிச்சேதம் முற்றிற்று.



## இரண்டாவது பரிச்சேதம்.



### 1. நிக்கிரகஸ்தானங்களுள் பிரதிஞ்ஞைஹானி கண்டன ஆரம்பம்.

அற்றேல் ஹேதுப்போலிகள் துர்லக்ஷியங்களாகப் போமாயின், பிரதிஞ்ஞைஹானிமுதலிய நிக்கிரகத்தானங்கள் பாதகங்களாகப் பவிக்கலாம் எனின்? ஆகாதங்ஙனம், பிரதிஞ்ஞாஹானி யென்பதானு லென்னே? சுவீகரித்த மொழிந்ததின் பரித்தியாகம் பிரதிஞ்ஞைஹானி என்பது அலக்

கணமாம். அங்ஙனமன்றோ:— விரைவின்மறந்தவழி ஙிக்கி ரஸ்தானத்திலும் செல்கின்றமையின் பரன் றாடிக்குங்கால் எனவுஞ் சிறப்பிக்கவேண்டி யிருத்தலின்.

## 2. சுவீகாரபதார்த்தத்தின் விகற்பிய நீக்கம்.

மேலும். சுவீகிருதமென்பதனானே அபீஷ்டமாத்திரம் அறையப்பெறுகின்றதா? உண்மையானே இஷ்டமா? ஆதிய தேல் யாதாவதொருரூபத்தானே இஷ்டப்பட்டதற்கு வேற்று ருவத்தானே விடுதல் எங்குதானில்லையென அதிவியாப்தி யாம். சுவீகாரபூர்வகம் அசுவீகாரத்தியாகம்ஆம், வேறுரூ பத்தாலன்றும் ஆண்டதன்சுவீகாரம் அதன்பின்றியாகமே யிதற்குண்டாகாதாம்என அதிவியாப்தி யின்றுமெனின்? இன்றும், சுவீகாரத்திற்கும் பரித்தியாக பதார்த்தத்துள் ளடக்கமேல், சுவீகரிக்கப்பட்டதென்பது வீஙும், அதன் றியாகத்தினுமோ முதலாவது இரண்டாவதுகள் ஆகாவாம். உண்மையானே யிஷ்டத்திற்கு வேற்றுருவத்தானேயாண்டு மே அநிஷ்டத்தன்மை சம்பவித்தலின். சையோகாதி அவ் வியாப்பிய விருத்தித்தன்மைவாதி பக்கத்திலோ ஒரே சை யோகத்திற்கே இருப்பு இன்மைகளால் அங்கீகாரஞ் செய் யப்பட்டிருத்தலின். இன்னணமாகவே காலதேசாதி பேதத் தானே சத்துவாசத்துவ வங்கீகாரத்தினும் வழக்குக் காணத் தக்கதாம்.

## 3. தேசகால புருடாதியபேதத்தால் அங்கீகார பரித்தியாகங்களின் ரேடம்.

அதற்கே அக்காலே ஆண்டே அவனானே அவ்வாறே இஷ்டத்வ அநிஷ்டத்வங்கள் இயம்ப இச்சிக்கப்பட்டன வாம் ஈண்டெனின்? இங்ஙனமாயின் காலத்தையங்கீகரித்து அங்கீகரியாதவன் பதிஞ்ஞையானி யாகாமற்போம்; ஆண்டு

அக்கால் எனப்புகன்ற விசேடணுங்கிசத்திற்கு அசம்பவமாத வின். காலங்காலம் அயலேயேனும் தன்னைத்தானேனும் ஏற்றிக்கொள்ளாதாம், காலத்தில் அக்காலென்னும் விசேஷணமிடின் பிறண்டும் வைப்பின் இலக்கணவொருமை யறிவாம். போதின்பொருட்டுத்தான் பதிஞ்ஞை ஹானியின் அதோஷமாயின் அதுபோல் அயலிடத்தும் அதோஷத்தன்மையின் அடைவாம். எக்காலே சுவீகாரம் அக்காலே அசுவீகார அசித்தியினும். அக்காலென அக்கதைக்காலம் அறையுமவாவாம் எனின்? ஆகாதாம், அதுவெனுஞ் சத்தம் ஒருவியத்திபரமாயின் இலக்கணத் தொடர்பின்றும், வாதாதித் தன்மையானே சாமியமாயினே ஒருபோழ்தினுமே அதனினும் விபரீத வேறுவாதம் நடத்தமுடியாமை வழக்காம். இங்ஙனம், அவ்வாறே அதற்கே என்பதாதி பதங்கட்கும் கண்டுகொள்க. அபசித்தாந்தத்தை யகற்றுவதாகிய அறைந்தவென்னும் பதத்திற்கும் விருத்த நியாயத்தான் ஆற்றலற்ற சிறப்பாந் தன்மையாம். இவ்வண்ணம் எல்லா நிக்கிரகஸ்தானங்களிலும் காணத்தக்கதெனச் சுருக்கமாம்.

## 4. பிரதிஞ்ஞாந்தர கண்டனம்.

பிரதிஞ்ஞை யானியாதி யென்னும் ஆதிபதத்தாற்றான் ஏன்னே தொகுக்கப்படும், பிரதிஞ்ஞாந்தராதி யெனின்? ஆகாதாம், பிரதிஞ்ஞாந்தரமே நிரூபிக்க முடியாதாம், அஃதெங்ஙனமெனின்:— தான்மொழிந்து பரன்றாடித்து முன்மொழியாத சிறப்புற்ற துணிபொருட் பாகத்தின் கூற்றுப் பிரதிஞ்ஞாந்தரம் என்பதலக்ஷணமாம். அங்ஙனமன்றே:— யாண்டு வாதியானே முதலிற் சிறப்போடு கூடிய பதிஞ்ஞைப் பாகம் பகரப்பெற்றதோ பரனாலோ சிறப்பற்றதாகக் கூறியமயலாற் றாடிதமாமோ, அதன்பின் வாதி முதலின் மொழிந்த சிறப்புற்றதையே யுபந்யசித்து இங்ஙனம் என்னை வியம்பப்

பட்டது, சிறப்பற்றதோர் அன்றும் ஆகலின் நிரனுயோச்சியானு யோகம் நின்க்காம் எனச் சத்துத்தரமே சாற்றுழி ஆண்டும் சென்றமையின் அதிவியாபகமா மிது.

### 5. அதிவியாப்தி பரிகார சங்கை நீக்கங்கள்.

முன்மொழியாத சிறப்புடைமை ஆண்டிலதாம் அஃதெங்ஙன மதிவியாப்தியாதல் எனின்? ஆகாதாம், முதற் கூற்றின் முன்னின்மையின் முன் னிருப்புண்மையின். விசேடியக்கூற்றும் அக்கால் உளதாவதில்லையெனின்? அத்துணையால் வந்ததென்னே விசேஷண அநுக்தியதிப் பிரசங்கத திற்கு.

### 6. விசேடிய உக்தி சமயத்தில் விசேஷண அநுக்தி வீவிக்ஷை விலக்கம்.

விசேடியம் விளம்பும்போதில் விசேஷணம் விளம்பாமை விளம்பும் வேட்கை யெனின்? ஏலாதாம் ஒருகர்த்தாவாலோதப்பட்ட வாக்கிற்கு ஒரேகாலத் தசம்பவத்தால் யாண்டும் அவ்வா றிருப்பதற்கே யிருப்புண்மையின், விசேடியக் கூற்றின் பிற்காலத்திலெனின்? ஆகாதாம், கருங்குவளை யென்பதாதியில் முன்விழுந்த சிறப்பில் அஃதின்மையின். விசேடியக்கூற்றின் றடையற்ற முற்போதிலெனின்? ஆகாதாம், குவளை கறுப்பு என்பதாதியில் அஃதின்மையின், விசேஷணம் விளம்பத்தக்க போதில் எனின்? இயையாதாம், நானு விசேஷணமுடைய விசேடியத்தில் முறை விருத்தித் தன்மை யுண்மையின் வாக்கை முறையாகக் கூறும்போது எவ்வேக விசேஷணங் கூறுங்காலமோ அது அயல் விசேஷணக் கூற்று கட்கும் தகுதியதாய் ஆகவேயாமென அக்கால் அன்னியங்களாகிய முறையே வருபனவைக்கு இன்மையின் அதுவே யதிவியாப்தியாம்.

## 7. அந்திமகற்ப மகற்றல்.

எல்லா யோக்கியகாலத்தில் எனின்? ஏலாதாம், தூஷண பிற்காலத்திற்கு யோக்கியகாலத் தன்மை யங்கீகரிக்கில் அவ் வியாப்தியாம், தூஷணமுற்காலத்திற்கு அங்ஙனம் அங்கீக ரிக்கினே தூடணத்தின் பின்பவிப்பதாய விசேஷணோக்தி வியக்திக்கு அக்காலின்மையின் முன்போன் றதிவியாப்தி யாம். எல்லா அதன் ஜாதீய விசேஷணக் கூற்றின் இன்மை யியம்ப விச்சித்ததெனின்? பொருந்தாதாம், அபாதப் பிரதி யோகி பூதமாய எல்லா வியக்திகளேயும் தனித்தனியாக எவ் வளகையானும் நம்மனோரால் அளவிடுதற்கு முடியாமையா னே அபாவம் நிரூபிக்க முடியாமையான் இலக்கணத்தின் அஞ்ஞானத்தால் அசித்திவழுக்காதலின். சாமானியப் பிரத் தியாசத்தியால் வியக்திகள் விளங்குகின்றனவென்பது அனு மான அவசரத்தில் அகற்றப்பெற்றது.

## 8. விசேஷணத்தானத்தில் விசிஷ்டக்கூற்று விளம்ப விழைவதன் பங்கம்.

இதனானே, முன்னர் அவிசிஷ்டோக்தத்திற்குளன விசே ஷணம் பெய்யத்தக்கதாம் என்பதும் இகழத்தக்கதாம்; உத்த ரகாலத் துரைக்கும் விசேஷணமுடைய விசேடியத்திற்கு முதலில் அவிசிஷ்டோக்தத் தன்மைச் சம்பவங் காட்டப்பட் டிருத்தலின்.

## 9 பிரதிஞ்ஞாந்தர இலக்கணத்தில் விசேஷண பரம்பரைக்குப் பொருந்தாமை.

மேலும், முதலில் அவிசிஷ்டத்தைப் புகன்று இவ்விசே ஷணம் பின்னால் வைக்கப்படுமாயின் அக்கால் வேறேது நிக்ர குமாம், அவ்வாறாயினும் அஃதின்மையிற்றான் எனக்கும் யாங்ஙனம் பதிஞ்ஞை யயலாதல்? இனிமுதலதேயாய இவ்

விசேஷணங்கொண்டு கூறுதியேலாயினும் அவ்வியாப்தியாம், முதலில் சிறப்புற்றதாகக்கூறிச் சிறப்புவாளாவென்னு மயலான் விரைவின்மறைப்பாற் சிறப்பற்றதாகக்கூறப் பரனாலேயோ தூடிக்கப்பட்டபோது மீண்டும்சிறப்புற்றதாகக் கூறுபவனுக்கு இவ்வண்ணம் பிரதிஞ்ஞாந்தரம் ஆகாதாம்என அவ்யாப்தியாம். சுவ, பர, சாத்திய பூர்வ பதங்களைப் பரித்துணரின் வியக்தியின்கண்ணே வீழ்தலின் அவ்யாப்தியுமாம் பிரகரணதிலப்பியமாக முன்மொழியாத விசேஷணமாகி மயலயலான்றூடிக்க பிரகரண லப்பிய விசேஷணமுடைமையானே அநுவதிக்கப்பட்டவனுக்கும் சத்வாதத்தில் வழக்காம். இயம்பரவிடத்தினும் அப்பிரதிபாதிதம்என இடினும் தோடமாம், அயலான்பால் அறிவுண்டாகாதவழி பிரதிபாதிதத் தன்மை கூடாமையின் என்பதாதி சுயமூகிக்கத்தக்கதாம்.

## 10 பிரதிஞ்ஞாவிரோத கண்டனாரம்பம்.

பிரதிஞ்ஞாந்தராதி என்னும் ஆதிபதத்தால் இஷ்டப்பட்டதுயாதோ, பிரதிஞ்ஞா விரோதாதி எனின்? இயலாதாம், எதனுன்கூறுயவன் ஒருவனையுடைத்தாகிய ஏகவாக்கிய அங்கிசங்கட்குப் பரஸ்பரம் வியாகதம் சாத்யவிபரீத வியாப்தத்வ உற்பாவன அநபேக்ஷ உற்பாவனம் பிரதிஞ்ஞாவிரோதம், அவ்விது அலக்ஷணமாம்; அங்ஙனமன்றே :— ஈண்டுப் பூதலத்திற் குடமில்லை யென்பதாதியின் மாட்டுஞ் சென்றமையின் இது அதிவியாபகமாம். வசனங்கட்கோ வியாகாதம் அன்னியோன்னிய விருத்தார்த்தத்தன்மையாம் அதுவு மீண்டுளதாம், குடமுளதாம்என்னும் அங்கிசத்திற்கு குட

விருப்பை யுணர்த்துந்தன்மையுண்மையின், நகாரத்திற்கோ அதன் நிடேதகத்தன்மை யுண்மையின் என்க.

## 11. வியாகாத விசாரம்.

அற்றேல் அயுக்தமிது அறையலாயது, குடமில்லை என்புழிக் குடமும் விதிக்கப்படுகின்றது குடநிடேதமும் விதிக்கப்படுகின்றது என்பதாகவின்றும், எதனாற்பரஸ்பரம் வியாகாதமாமோ, மற்றேு, குடம் நிடேதிக்கப்படுகின்றது, குட நிடேதமேதான் விதிக்கப்படுகின்றது என்பது துணிபாம், ஆகலின் யாங்ஙனம் வியாகதி கூடுமெனின்? இங்ஙனமியம்பற்க, குடமென்னும் அத்துணை யங்கிசத்திற்குக் குடவிதி போதகத் தன்மைபாம், இல்லை யென்பதற்கும் அதன் நிடேத அர்த்தத் தன்மையாம் என நீரும் உடன்படத்தக்கதே. இங்ஙனம் அங்கீகரியா தொழிதிரேலாயின் அவற்றிற்கு அவிருத்தார்த்தத் தன்மையானே குடமும் அபேக்ஷித நிடேத இருப்பும் பூதலாசிரிதமாம், இரண்டையும் இவ்வாக்கிய மிலக்கு மென்பதாம், எனவாகலின் விதிரூபமே குடமெனவும் அதன்நிடேதமே இன்றெனவும், இவை ஒரு கர்த்தாவா லாக்கப்பட்ட வாக்கியாங்கிசங்க ளாகவில்லையா? பரஸ்பர விரோதார்த்தங்களைக் கூறுவனதா மாகவில்லையா? எதனுலுபமது இல்க்கண மிஃதேகாதோ ஆண்டு பரஸ்பரம் விருத்தத்தன்மை மாத்திரம் பரஸ்பரம் வியாகாதகத்தன்மை யன்றும், மற்றேு, ஏகதேச காலாதிகளில் பரஸ்பர விருத்தார்த்தங்களின் இருப்புண்மையாம். இன்றென்பதால் ஏக தேச காலாதிகளில் வர்த்தமான விதிநிடேதங்கள் போதிக்கப்படாவாம் எனின்? அன்றும், உத்தர முரைக்கப்பட்டிருத்தலின் தேசகாலாதி யந்தர்ப்பாவ மிலதாயின் விரோதமே கூடாமையின்.

### 12. ஓரிடத்தில் விருத்த அஸ்தித்தன்மையின் பிராமாணிகத் தன்மை அப்பிராமாணிகத் தன்மைகளின் ஞேடம்.

மேலும், ஏகதேசாதிகளில் விருத்தாஸ்தித்வம் பிராமாணிகமென வங்கீகரித்தீரேல் ஆயின் உமக்கு விருத்தசப்தமிது அயலேயாம் சாமயிகப் பொருளதேதேனுமாம். அளவையான் அவ்வாருயதைக் கவர்தலினுனே விருத்தத்வ அங்கிகார சாந்தியாதலின். இனிபிராமாணிகமது அங்கிகாரமிலதேலாயின் அப்பிராமாணிகம் பரஸ்பரம் வியாகாதகத்வம் எங்குதானில்லையென அதிவியாப்தியாம்.

### 13. தன்னுல் பிரமாணமாகாதற்குப் பிறிதாற் பிராமாணிகத் தன்மை யாமென்னுஞ் சங்கை பங்கம்.

எங்ஙனம் பரனுல் கூறப்படுகின்றனவோ அருத்தங்கள் அங்ஙனம் பரஸ்பரம், வியாகாதங்கள் ஆம் எனக் கூறுவேம் ஆண்டோ பிரமாணம் பெருகியே நிற்கும் என இனி நினைதியேலாயினும், நில்லாதாம்; எங்ஙனமேனும் ஆண்டுப் பிரமாணப்பெருக்கில் விரோதபாஷா பரிபாஷா மாத்திரத்தன்மையடைவுறுதலின். எங்ஙனம் பரனுற் கூறப்பட்டது பொருளோ அங்ஙனம் பரஸ்பரம் வியாகாதகம் என்பதாகவும் சிலபால் பரஸ்பரம் வியாகாதகப் பொருளை அளவிடாமல் அறைதற் கொண்ணுதாம். அடைவிக்கப் படுகின்றது பரஸ்பரம் வியாகாதம் சாதிக்கப்படுவதின்ரும் எனின்? அன்ரும், எங்கும் அளவிடமுடியாததை அடைவிப்பதின் பொருட்டும் உனக்காற்றலின்மையின். அளவிடாதொழிக, அளவிடாததற்கே அவ்விவகாரமாம் எனின்? ஆகாதாம், யாண்டும் அளவிடப்படாததாய் ஆபாசமாத்திர உபஸ்திதமாயது எங்குதான் நிலைபெறுத்த முடியாது என்பதாகக் கூறிய அதிவியாப்தியே மாறிவரும். அநேக விடங்களில் நியதங்கட்கு ஓரிடத்தில் அடைவித்தல் எனின்? இன்ரும், அடைவிப்பதா மவ்விரண்டின்

ஓரிடத்திற் நிதிநியதத்தன்மை யளவிடப்பட்டவழி பகை யற்றதின், அளவிடப் படாதவழியோ அடைவியாத் தன்மை யின் அடைவுவருதலின்.

## 14. இரண்டின் சம்பாதனச் சங்கை நீக்கம்.

ஏக ஏக வியாப்பியங்களான் தனித்தனி அவ்விரண்டன் சம்பாதனமாம் எனின்? ஆகாதாம், ஏகம் ஏகம் அவ்வியா காதத்தான்; பொருளால் இரண்டும் ஆமெனின், ஆகாதாம் அருத்தாபத்தி யருத்தத்தன்மையானே அவ்வியாகாத மாத லின்; அருத்தத்தான் அடைவித்தல்சாதனமாகாதாம் எனின்? ஆகாதாம், பரஸ்பரம் விரோதித் தன்மையானே தருக்காபா சத்தன்மை யடைவுறுதலின், இஷ்ட சம்பாதனத்தானும், பரஸ்பரம் வியாகாதத்தான் யாங்ஙனம் அங்ஙனம் ஆதல் எனின்? ஆகாதாம், அவ்விருதருமிகத்தன்மை யுண்மையின் வியாகாத அடைவான் தருமியின் கண்ணே பிரமையபே க்ஷையாயவழி யவ்வியாகாத மாதலின்.

## 15. பிரதிபந்தியால் விகற்பித்து விலக்கல்.

என்பன வாதியாய தோடங்கள் பரன்பொருட்டுக் கூறப்படின் உமக்கும் இவையாவும் இனிதியம்ப முடியும் எனின்? இவையாதாம், உமக்கும் பிறவிடத்தில் தோடம் எம்மால் அடைவித்தல் கூடும் எனப்பிரதிபந்தியைக் கவர்பவ வனுக்குப் பரபக்ஷத்தில் தோடசம்பாதன மாத்திரம் விழை வா? அல்லது யாதும்மால் ஆண்டுச் சமாதி சாற்றப்பெறு மோ அது எம்மாலும் என்னுங் கருத்தால் தற் பக்கத்திற் சமாதியா? ஆண்டாதியதாகாதாம், புகல்வதாகாமற் போத லின், பரனியம்பிய தோட முத்தார மாகாமற் போக அத் துணையானே கதையின் அதன் பாதியினேனும் முடிவுபே

றடைதலின் அவற்றிற்கு நிக்கிரக அபரிகார அவதித்தன்மை யாதலின்.

## 16. இரண்டாவது கற்ப நீக்கம்.

இரண்டாவதன் கண்ணே அதையே கூறுவதாகுக எம் மனோர்க் கானி யாதுகொல்! தாங்கண் முதலிற் புகன்ற சமாதி யாண்டு யாதோ பின் னெம்மானும் இயம்பத் தக்க தாம் எனின், ஆகாதாம், எம்மால் அதனபிதானத்திற் கிப் போது பகரப்பெறாப் பான்மை யுண்மையின். எம்மாற் றற் பக்கசாதனமும் உம்மாலோ அதன் றூடணமும் பிரகிருதத் தில் புகலத்தொடங்க வில்லை யல்லவா, மற்றோ, உம்மாலோ தற்பக்கம் நிர்வகிக்கத் தக்கது அதன் றூடணமோ எம்மா லியம்பத்தக்கது எனக் கதை பிரகிருதமாக வன்றோ நிகழ் கின்றது. இத்தகைய கதை விபாகத்தில் எம் பக்கசமாதா னப் பொருட்டு எம்மைப் பரியனு யோகம் புரிவான் தங்கட் கெங்கே யதிகாரம்?

## 17. தோடங்க ளிருந்தபோதிலும் பரிகார மாமென்னுஞ் சங்கை நீக்கம்.

இனி விசேஷமாக அதனை நிர்ணயிப்பதில் யாது பயனு ளது ஆண்டு இத்தகைய வினவில் பரிகாரம் எதனால் உம்மா னும் தற்பக்கத்தில் இஃதங்கீகரிக்கத் தக்கதாம். என்னுங் கருத்துமக்கோ அதுவும் பொருந்தாதாம், எம்பக்கத்திற் சமாதி யுளதேலாயின் அத்துணையானே உம்பக்கத்தினும் அதனால் பவிக்கத்தக்கதாம் என்பதன் கண்ணே ஒரு சிறிதும் அளவையிலதாம். ஒப்பாதலி னிங்ஙனமெனின்? ஆகா தாம், வேற்றுமையை யவசியம் யங்கீகரிக்க வேண்டி யிருத்த லின். அதின் ஒன்றிய சிறந்த வடிவங்கொண்டு எமது தரி சனமாதல் பிரதிதந்திர சித்தாந்தமாதல் ஆண்டுச் சமாதியா

மேல் ஈண்டு உமதுபக்கத்தில் அஃதின்மையின் ஆகாதாம்; அங்ஙனமாகவே, ஒப்புமை மாத்திரத்தால் யாங்ஙனம் சமாதி யிஃதீண்டுமெனத் துணிவான் முடியும். யாதிஃ தாண்டுச் சிறப்பெனின், இன்றும், எம்மாலிப்போது அதன் கூற்றிற்குக் கூறிடாத்தன்மை யுளதெனக் கூறப்பட்டிருத்தலின்.

## 18. சமாதிசாமிய சங்கை நீக்கம்.

வினாச் சமத் தன்மையால் விடைச் சமத் தன்மையா மெனின் ? ஆகாதாம், தூடியத்தொன்றும் விசேட பாவாபாவ விசேடிதத்தன்மை முதலிய வற்றானும் அதன் வேற்றுமை சம்பவித்தலின். சத்விவகாரத்திற்குச் சத்தை யங்கீகரிப்பதில் ஒப்பாகிய வழியிலும் சத்தையின் மாட்டு அதனங்கீகார முற்றபோது எல்லையின்றிச் செல்லலால் அதன் பற்றுக் கேட்டிலோ அதனின்மையான் எங்ஙனமோ, அங்ஙனம் பிறுண்டும் வெகுவாகக் காணப்படுதலின்.

## 19. வேறுவகையானே பிரத்பந்தி கண்டனம்.

மேலும் பரனாலுண்டாக்கப்பட்ட அசித்தியாதிகளைப் பரிகரியாது பிரதிபந்தியால் எழுந்துநிற்பானது கருத்துயாதோ, யாதிதுதோடமதாகப் பரனாலுண்டாக்கப்படுமோ அஃது அதூட்டணமாம் அதூடியத்தினும் செல்லுகின்றமையின் எனவா ? அல்லது, தூஷணமிருந்தபோதினும் கிளப்பலாகாதாம் சமபோகக்ஷேமத்தன்மையுண்மையின். "யாண்டிருவருக்கும்" என்பதாதியாகக்கூறியும்உள்ளார்; எனவா ? ஆதியதாகாதாம், ஈண்ட சித்தியாதியிலக்கணமுளதாமேல் தூஷணத்தைக்கிளப்பில், அக்கால் தோடத்தைப்பரிகரிக்கக் கூடாமையின்; பரிகரித்தபோதினும் அதற்கலக்கணத்தன்மை வழுக்காதலின். இதுதூட்டணமாகுமாயின் யாங்ஙனம் அதூடியத்தன்மையானே வாதியால் அங்கீகரிக்கப்படினும் பிரதி

பந்திஸ் தானத்திற் சென்றதெனின்? இஃததூடண மாகு மேலாயின் யாங்ஙனம் தோட லக்ஷண மடைவுற்றது. என் பதன்மாட்டும் திட்டியை நாட்டுக. நியாமகாபாவ மாகுமே லாயின் இதனது தூடனத்தன்மையிற் சந்தேகம் முடிவுபே றடையுமெனின்? உளதாகுக, தோடத்தன்மைச் சந்தேக முற்றவழியும் தங்களது சாதனத்தின் அசாதகத்தன்மை யுண்மையின் சந்திக்த அசித்தம் போலும். மேலும் எவ் விலக்கண முடையதாக விதற்குத் தோடத்தன்மைச் சந்தேக மாமோ அவ்விலக்கண முடையதாகவே யிது பிறவிடத்தி லும் என ஆண்டும் அசித்தியாதிகட்கு அதூஷணத் தன்மை யேயாம் என்னுமிப் பிரதிபந்தி விடையற்றதாம் பிரதிபந்தி வாதியான் என்க.

## 20. சமானத் தன்மையானே தூஷணமும் உண்டாக்கத் தகாதாம் என்னுஞ் சங்கை நீக்கம்.

இரண்டாவது மாகாதாம், அங்ஙனமன்றே உபயவாதி சம்மத அதூடியத்தன்மைத் தூமானுமானாதிகளைப் பரன் பிரதிபந்தி செய்வனாயின் அப்போது அதன் றரிசனத்தில் அயலிடத்திலெங்கும் இவ்வசித்தியாதிகள் உண்டாக்கலாகா வா‌ம் பரசாதனங்களில் அதற்கே தூமானுமானாதிகளின் பிரதிபந்தியாபயத்தான் எனவிது எம்மாலும் இனிதுகவரப் பெறலாமே அவர்பொருட்டு பிரதிபந்தி ஈண்டும் “ யாண்டிரு வருக்குஞ் சமம் தோஷம்” என்பதாதி படிப்பான் முடியக் கூடியதேயாம்.

## 21. விசிஷ்டத்திற்கே யுற்பாவனஞ் செய்யினும் தோஷமாம்.

இனி எச்சிறப்பைப் பற்றிப் பிரதிபந்தியாமோ அதன் மாத்திரத்திற்கு உற்பாவனஞ் செய்யாதொழிதலாம் சாமானி யத்தானேயோ அன்றும் எனின்? அன்றும், ஆண்டு விசே ஷத்திற் பிரதிபந்தியால் தியானிக்கப்பட்ட துஷ்டத்தன்மை

யிற் சென்றமையின் அஃதிலக்கணமே யாகாதனவாம்; சிறப் பித்து அதன் விசேடத்தியாகந் தன்னிலோ அத்தகைய இலக்கணத்திற்கு அசித்தியேயாம் எனச்சாலும் பிரதிபந்தி யாலாற்றியது. இனி எமது தரிசனமாத்திர அங்கீகார அதாடியத்தன்மை யொருசிறிது பொருள் பிரதிபந்தி செய் வாளுயின் அக்கால் அவனுலிது கூறப்பட்டதாகும் ஈண்டித் தூடணம் கூறுணுததாம் எனக் கூறியவழி இந்த யூகத்தி னுலே உமதிஷ்டபங்கப் பிரசங்க முண்டாதலின் எனச்சங் கிப்பின்? அது முடியாதாம், ஈண்டு இந்தத் தூடணம் இயம் பத்தக்கதாம், இயம்பாதொழியில் இவனுக்கே அநிஷ்ட மாய அயற்றுணிதல் வேட்கையான் சித்திப்பிரசங்கம் வருத லின் எனக் கூறுவதன் அநுகூலத்தினதும் பிரதிபந்தியின் சம்பவமாதலின்.

## 22. பிரதிஞ்ஞா ஹானி யடைவின் நீக்கம்.

அற்றேல் இங்ஙனமேயாகுக அங்ஙனமாயின் கூறிற் கூறுதொழியினும் இருபாலும் பாசமாம் பிரதிபந்தித் தாம்பு தங்கட்கே நீக்கமுடியாததாம்; இங்ஙனமாகாதாம், பரஸ்பரம் விருத்தப் பிரதிபந்தியத் தருக்காபாசத்தன்மை யுண்மை யின், பரஸ்பரம் விருத்தத்தன்மைக்கு தருக்க தூஷணத் தன்மை யுண்மையின், சற்பிரதிபக்க அனுமானம் போலும், இரண்டும் பரஸ்பரம் தடுத்தலானே உபக்ஷீணமாய்ப் போத லின் என்க. நியாய இரண்டாவதத்தியாய முதலாங்கிக சூத்திரத்திலோ "பிரமேயத்தன்மையும் துலாப்பிரமாண்யம் போலும்" என்பதன்கண் வருவிக்கப்பட்ட திருஷ்டாந்த அபாவ இலக்கண தோட வொப்பான் எதிர்த்து நின்ற பூர் வபக்ஷவாதியை நிராகரிக்கும் பொருட்டு ஆசிரியர் "சமான மென அநுத்தரம் அங்கீகாரத்தான் அங்கீகரிக்கப்பட்ட தாண்டு தங்களான் எமது பக்கத்திற் றிருட்டாந்த மில்லை

யென" க்கூறிக்கொண்டு உத்யோதகரர் யாண்டு பயத்திற் கும் என்பதாதி கூறும் பட்டருக்கு எதிர்த்து மற்புரிய வேண்டும்.

## 23. அபசித்தாந்த கண்டன ஆரம்பம்.

அஃதென் பிரதிபந்தியாதி தூடணம் பவிக்கவே யில் லேயோ அற்றே லிங்ஙனம் தங்கட் கபசித்தாந்தமாம் எனின்? ஆகுமாயின் பிரகிருத சம்பத்தமாக அபசித்தாந்தத்தின் இலக்கணம் காட்டல் வேண்டும், வாக்கு மாத்திரத்திலே அபசித்தாந்தம் கூறில் தங்கட்கென்றான் அபசிந்தாந்தம் வர மாட்டாது? சித்தாந்த விபரித அங்கீகாரம் அபசிந்தாந்த மாம், பிரதிபந்தியாதியோ, தங்களால் சித்தாந்தத்தன்மை யானே யங்கீகரித்ததாம், என்னலித்தரிசனம் பற்றிப் பகரத் தக்கது என்த் தங்களால் தரிசனவிசேட மங்கீகரித்தலின், தரிசனத்திற்கோ அவ்வப்பதார்த்த அங்கீகாரவடிவத் தன் மை யுண்மையின், அப்பதார்த்தங்களிலோ பிரதிபந்தி தூட ணதிகள் புகுந்துறுதலின் எனின்? ஆகாதாம், இலக்கணமே ஆண்டு அபசித்தாந்தத்திற்குப் பொருந்தாறுதாம், எமது சித்தாந்தவிபரீத மங்கீகரிக்கும் தங்கட்கு அபசித்தாந்தப் பிர சங்கத்தான்.

## 24. தன்னேன்னும் விசேஷணத்தானே தோடவார்ண சங்கை நீக்கம்.

தன் சித்தாந்தம் அங்ஙனம் அவாவியதாம் எனின்? ஆகாதாம், விசேஷண பூரணமில்லாமல் அதன் லாபமின்மை யின், மாறுயினே யாண்டுமே விசேடணமீயும் பிரயாசம் வாளாபோதலின். இங்ஙனமே யங்கீகரிக்கின் தங்கட்கே அபசித்தாந்தச் செல்கையால் விலக்கப்பாடு வீழ்தலின், உமது சித்தாந்தத்தில் நூற்றுக்கணக்காக ஹேதுவாதிகளில் விசே ஷண உபாதான தரிசனமாதலின்; பரசித்தாந்த அடையண்ட

வியா ஹேதுக்கட்கோ, பிறழ்ச்சிப்படுத்தி யுமது சாஸ்திரத்தில் வெகுவாகத் தூடிக்கப்பட்ட தன்மை யுண்மையின். முதலில் தன் என்னுஞ் சப்தத்தை விசேஷணமாகக் கோடாது தூடண பயத்தானே யிப்போழ்து அஃதை யாற்றினே ஹேது வேறு என்னும் நிக்கிரகஸ்தானம் தங்கட்காம், ஹேது வந்திரமோ பிரதமம் அவிசேடணமாகச் சாதகபாகஞ் சாற்றிப் பின்னர் விசேடண முடைபதன் வசனமாம்.

## 25. அடையாக் காலத்தன்மை நிக்கிரக வடைவாம்.

மேலும் இங்ஙனம் இலக்கணம் இயம்பும் தங்கட்கு அடையாக் காலத்தன்மை அடைவாம், அடையாக்காலம் அவயவ விபரியாசமெனவாம் இலக்கிய மியம்பியன்றே இலக்கணங் கூறல் பொருத்தம், அதற்குந் தங்களால் விபரியாசம் செய்யப்பட்டதாம், இங்ஙனமே யங்கீகரித்தவழி தங்கட்கே யபசித்தாந்த மடைதலின்.

## 26. பிரதமம் சவிசேஷணமாகக் கூறினும் இலக்கணத்திற் றோடமாம்.

யாவன்றான் முதலிலேயே தன்னென்னும் விசேடணம் கொள்கின்றனனோ அவன் பொருட்டு அநுபாத்த விசேஷண பக்கத்திற் பகர்ந்த தோடங் கூறத்தக்கதாம். என்னுடையதே சித்தாந்தமாம் தற்சித்தாந்தமே எனதாம்.

## 27. மீண்டும் இலக்கண நிர்வசனஞ் செய்யினுந் தோடமாம்.

ஈண்டு, வாக்கியத்தில் அங்கீகாரபதக் கேள்வியால் அங்கீகரிப்பவன் லபிக்கின்றான், அவனது எத்தன்னதுளதோ அது தற்சப்தார்த்தமாக எஞ்சாநிற்கும் எனின்? ஆகாதாம், எனக்கு அங்கீகரிப்பவனுந் தன்மை யுண்மையின் என்னுமே சிறிது உடன்படப் படுகின்றதேயன்றே! விபரீத அங்கீகரிப்பவன் அபேக்ஷிக்கப்படுகின்றான் எனின்? அன்றாம்,

விசேடமின்மையின். சித்தாந்த விபரீத அங்கீகாரஞ் செய்பவன் விபரீத அங்கீகாரஞ் செய்பவனுவன் எனின்? ஆகான், ஆயினும் விசேஷமின்மையின், எனக்கும் உனது சித்தாந்த விபரீத அங்கீகரிப்பவனுந் தன்மை யுண்மையின், தற்சித்தாந்த விபரீத அங்கீகாரஞ் செய்பவன் அவ்வாறு அபேக்ஷிக்கப்படுவன் எனின்? கூடாதாம், அத்தியந்தம் அகலறிவாளனு யன்றோ இருக்கின்றாய், யாது தற்பத மங்கீகரிப்பவனுல் சிறப்பிப்பான் முயன்று அங்கீகரிப்பவனையே தற்பத வாயிலாய்ச் சிறப்பித்தனையோ, பரஸ்பர ஆசிரயத்தினின்றும் பயந்திலையோ, தற்பதத்திலும் பொதுவதாக எதிர்த்தெழல் பரன் கூறியது மீண்டும் அந்நிலையாலேயே யுளதாமெனவும் மாறி நினைந்திலை.

## 28. எதுவென்னுஞ் சப்தம் வைத்தலானே அபசித்தாந்த இலக்கண நீக்கம்.

யாவனுக்கு யாது சித்தாந்தமோ அவனு லது விடப்படின் அபசித்தாந்தம் அவனதாமெனின்? இங்ஙனமாகாதாம், எவனது எச்சித்தாந்தம் என்புழிப் புருடவியத்தி விசேட சித்தாந்த வியக்தி விசேட பரமாயின் சிறப்பாக வருதலின் அவ்யாபகத்தன்மை இலக்கண தோடமாம். எவனதென்பதைச் சித்தாந்த சம்பந்தியினதெனப் பொருள்படுத்தின், அவனுலென்பதைச் சித்தாந்த சம்பந்தியினுலெனவும் பொருள்படுத்தின் உனக்கபசித்தாந்த மாதலின். அங்ஙனமன்றோ:— சித்தாந்த சம்பந்தியாய எனது எச்சித்தாந்தமோ அதனது சித்தாந்தர சம்பந்தியாகிய வுன்னுல் தியாகம் உளதேயாம்.

## 29 தியாக்சப்த பலத்தானே அதிவியாப்தி பரிகார சங்கை நீக்கம்.

தியாகமேயவனுக் கின்றும், என்றால் இனிது கவரப் பெற்ற விடயத்தன்மை யுண்மையின் றியாகத்திற் கெனின்? இன்றும், தியாகமென்பது அசுவீகாரமாயின் இனிது கவரப் பெற்ற விடயத்தன்மை நியம மின்றன்றுவாம். இனிச் சுவீகிருதத்தின் அசுவீகாரமாயினோ, என்றாலே சுவீகரிக்கப் பெற்றதற்கு உன்னால் அசுவீகாரம் உளதேயாம் அங்ஙன மெனச் சிறப்பிலதாம். இனி அவனானே சுவீகிருதத்திற்கு அவனானே யசுவீகாரம் எனின் அதுவுமாகாதாம், அவ னெனச் சுவீகரிப்பவனாலெனப் பொருளாயின், எனக்கும் சுவீகரிப்பவன்றந் தன்மை யுண்மையானே என்றால் சுவீகிருத மாய்தற்கு உன்னால் அசுவீகாரமாயவழி உனக்கு அபசித் தாந்த அடைவாம்.

## 30. எகசப்தம் போட்டு இலக்கண சங்கை பங்கம்.

ஒருவனால் ஒன்று சுவீகரித்ததின் அசுவீகாரம் அபசித் தாந்தமாம் எனின்? ஆகாதாம், ஒருவனாலென்பது ஒன்று என்னும் எண்ணிக்கை கூடியவனால் எனவாயின் எனக்கங் ஙனம் எகஎண்ணிக்கையோடு கூடுந்தன்மையோ அங்ஙனம் உனக்கும் ஆமென அதே யபசித்தாந்த அடைவாம். இனி யொருவனாலென்பது அபின்னனால் எனவாயினும் தன்னி னும் அபின்னத்தன்மை உனக்கும் எனக்கும் சமானமாம் அன்னியனினும் அபின்னத்தன்மை எனக்குமில்லை உனக்கு மில்லையாமென் அபசித்தாந்த விடயக்கெடுதலாம். இனி சுவீகரிப்பவனுக்கு அசுவீகரிப்பவனினும் பின்னத்வ மில்லை யாம் ஆயின் அக்கா லிப்பொருளாம் சுவீகரிப்பவனினும் பின்னமற்றவனால் சுவீகரிக்கப்பட்ட ஒன்றனது அசுவீகா

ரம் அபசித்தாந்தமாம், அங்ஙனமாயினோ அதே உனக்கப சித்தாந்தமாம், என்னால் எதனது அங்கீகாரமாமோ, சிறிது சுவீகரிக்குமபின்னனுய நினக்கு அதனது அசுவீகரிப்பவ் ஞந் தன்மை யுண்மையின்.

## 31. வேற்றிலக்கணத்தே கூறியதூடண அதிதேசமாம்.

இதனுனே ஒன்றனை தொருவனுல் சுவீகார அசுவீகாரங் கள் அபசித்தாந்தங்களென்பதும் அகற்றப் பெற்றதாம்; கலந்தநம்மனோருக்கு அபசித்தாந்த அடைவு வருதலின்.

## 32. தோஷபரிகார சங்காநீக்கம்.

இனி, அதைச் சுவீகரித்தவனுக்கே அதையசுவீகரித்த வனது அபின்னத்வமு் எகசப்தத்தானே யபிமதமாமெனின், என்னினும், சுவீகார° விடயாபின்னத்தன்மை அதுவெனுஞ் சத்தத்தானே கூறப்படினோ அசுவீகார விடயத்திற்கு, அக் கால் வேறு சுவீகர்த்தாவின் சுவீகாரவிடயத்திற்குச் சிறிது சுவீகரிக்குமபின்ன வுன்னல் அசுவீகார விடயமாத லமை தலின், சுவீகார கர்த்தாவிடய அபின்னத்வ சுவீகாரத்தால் உனக்கபசித்தாந்த வழக்கு நீக்க முடியாதாதலின் ஒரு சுவீ கர்த்தாவால் வேற்றவனலன்றும் சுவீகாராசுவீகாரங்கள் கூற விழைந்தவைகள் எனின்; அன்றும், ஒரு சுவீகர்த்தாவால் என்னும் இதனையே பகுத்து நோக்கிட மீண்டும் அதையே யிழுத்து வழுத்திய அத்தூடண கணத்தின் விலக்காவடை வால், கனகனுகனத்தான் மழைப்பொழு தெழுவழி மிகவுள தாஞ் சஞ்சல விரைவுறு யாற்றின் வேணி நீர்விவர்த்தத்தால் விரிந்த சுழற்குழுவிற் சுழலாநின்ற திருணகதம்ப விடம்பனை யை யாங்ஙனம் அனுபவியாய் புகலுதிநீ. சுவீகரித்து அசு் வீகாரம் அஃதாமெனின்? அன்றும், க்த்வா விகுதிப்பொருட்

பகுத்துணர்வான் வழங்கிய வாதம் வருதலின் அசுவீகரித்துச் சுவீகரிப்பதிலோ அதனின்மை யடைவாதலின்.

33. அபசித்தாந்தத்தின் தூஷணத்தன்மை யுபந்யாச நீக்கம்.

மேலும், சித்தாந்த நன்கு விட்டவன்பால் எவ்வபசித்தாந்த உற்பாவனம் அஃதென் சுவீகரிக்கப்பட்ட தரிசன அனுமத அபசிந்தாந்த தூஷணத்தன்மை வாதியின்பாலா? அல்லது அத்தகையன் அல்லான் பாலா? ஆதியதேல், பூர்வசித்தாந்தம் போலும் அபசித்தாந்தத்திலும் இதனால் விசேஷமாக எழுமுடியும் ஆண்டென்னே யறையத்தக்கது, ஆண்டறையத்தக்கதே யொருசிறிதுங் காணேம் பூர்வசித்தாந்தத்தியாகத்தினனே அபசித்தாந்தத்தான் நிக்கிருஹீதத்தன்மை யுண்மையின் எனல் பொருந்தாதாம், அபசிந்தாந்த மாயவழி அதன் பரிகாரத்திற்கு அதன் றூஷணத்தன்மை யன்னியதர அசித்திக்கு அதனாலறையப்படுந் தன்மை யுண்மையின். மாறாயினோ தன்கருத்துப்படி அசித்தியை யுண்டாக்கியே கதையைக்கடிந்து வெல்லலாம், பர அசித்திபரிகாரம் அவாவ வேண்டியதில்லை, எனவே அசித்தியில்லாதவழியும் அசித்தியை யுண்டாக்கிப் பரனைத் தோல்விபுரிந்து தடையின்றிக் கிருகங்களைப் பிரதிஷ்டை செய்யலாம்.

34. கூறிய பொருளின் அனுவாதம்.

நிக்கிருகிதமான அதற்கு அயற்பெயர் ஆதரணீயம் அன்மையேயாம் எனின்? ஆகாதாம், அன்னியதர அசித்தியால் நிக்கிருக பரிகாரத்திற்கே அதனால் கூறப்படுந்தன்மை யுண்மையின்; ஆயினும் அநாதரண முற்றவழி அசித்தமற்ற விடத்தில் அசித்தியை யுளதாக்கிப் பரன் பகராநிற்கும் அசித்தி பரிகாரத்தை யநாதரவுசெய்து வெற்றியே கோடலாமெனக் கூறப்பெற்றது. இனி மத்தியஸ்தனை லிஃது ஆராயத்தக்கது,

அசித்தியில்லாத விடத்தில் இவனால் அசித்தி யறையப்பெற்றதா? அநபசித்தாந்தத்திற்றான் அபசித்தாந்தமா? இதனை யாராய்ந்து அவனோனே வெற்றி தோல்விகள் துணியப்பெறுவனவாருக, அதன் பொருட்டே மத்தியஸ்தனை வைத்தலாமென மனநினைதியோ? தகாதாம், அற்றாயின் வாதியாற் சாதன மோதியவழி துஷ்டமிதுவெனக் கூறியே பிரதிவாதியால் நீக்க வேண்டிவரும், மத்தியஸ்தனோ பரமார்த்தமாக துஷ்டத்வம் அதுஷ்டத்வமேனும் அச்சாதனத்திற் காராய்ந்து வெற்றி தோல்விகள் நிச்சயிப்பின்; அவ்விது பெற்று வைத்துவிட்டுப்போன கோகிலதம்பதிகளின் குஞ்சைக்காத்து வளர்த்த மகாயாச வாயச வியசனமொத்த வியசனத்தை ஏழைமத்தியஸ்தனை அவ்வளவு கஷ்டப்பட்டுப் பேராராய்ச்சியி லீடுபட்டும் பெரிதுமடையுமாறு செய்விக்கும்.

## 35. பூர்வ அனுமதியினனே அபசித்தாந்த வுபந்யாசம் என்னுஞ் சங்கை நீக்கம்.

இனி இப்போது ஐயந்தான் படட்டும் அபசித்தாந்தத்தினும் இவன் இத்துணையாலென்னே, பூர்வம் அங்கீகரிக்கப்பட்ட அபசித்தாந்த தூடணத் தன்மையை யுடைய தரிசனத்தை ஆண்டதனாற் சுவீகாரணம் செய்தவனவன், அதனையே கொண்டு அபசித்தாந்தத்தின் உபந்யாசம் பொருத்தமாமெனக் கூறிற்கூடாதாம், இப்போதிய அநுமதியிதற்கு ஆதரிக்கப் படாதாயின் இஃதுண்டாய வழியும் பழைய அனுமதியைப் பற்றியே தான் தூஷணப் பிரவிருத்தியாயின், அக்கால் அபசித்தாந்தத்திற்குந்தா னிடமெங்கே? அதுவோ முன்னரனுமதத்திற்கு இஞ்ஞான்று அநுமதியைக் கொண்டே பிரவிருத்திக்கும் அயலாற்றானே அல்லவாம். ஆகலின் அங்கீகரிக்கப்பட்ட அபசித்தாந்த தூஷணபாவமும் வாதியின்பொருட்டு ஐயப்போது சாதிக்கத்தக்கதாம் அபசித்தாந்

தத்திற்குத் தோடத்தன்மையென இரண்டாவது அநவகாசு மோம், எச்செனக்தாதியரது மதத்திற்றான் அபசித்தாந்தத் தூடணமாகாதோ அவன் பொருட்டவசியம் சாதிக்கத்தக்க தேயாம் இதற்குத் தூடணத்தன்மை

## 36. அங்கீகரியாத அபசித்தாந்த தோடப்பொருட்டு காயாகாத முண்டாக்கலாம் என்னும் வினு விலக்கம்.

யாவன் அபசித்தாந்தத்தில் ஐயத்தை யாற்றுகின்ற னுனே அவன் பொருட்டு வியாகாதமே விளம்பத்தக்கதாம், தரிசன விசேடத்தை யங்கீகரிப்பவனுன் முதலில் அத்தரிசுனத்துட்புகும் பிரதிபந்தி தூஷணத்தன்மை முதலியவை யங்கீகரிக்கப்படுதலின், பின்னர் அவனுக்கே யசுவீகாரம் அவ்விச் சுவீகார அசுவீகாரங்கள். ஒருவனுல் ஒன்றற்கு வியாகதங்களாம் என அறையற்க; இவ்வியாகாதம் அபசித் தாந்த வடிவமேயாமாலாயின் அபசித்தாந்த தூஷணத்தன் மையினும் ஐயுற்றவனுக்கு ஐயத்தை விலக்காமல் விளம்பு வது பொருந்தாதாம். இனியிவ்வியாகாதம் வேறு தூஷண மாக அபசித்தாந்தத்தை யனுபஜீவித்துண்டாவதெனச் சம்ப விக்குமாயின் எல்லாவிடங்களிலும் வரும் அபசித்தாந்த உதா கரணத்தில் இதுவே யுளதாருக அபசித்தாந்தத்தைத் தூஷ ணமென வங்கீகரித்தலால் என்னேபயன்?

## 37. வியாகாதத்தை யுண்டாக்கில் பிரதிஞ்ஞையானியடைவு.

மேலும் இங்ஙனம் அபசித்தாந்தத்தை யுண்டாக்கின் பின்னர் அதனையம் உண்டாகியவழி யபசித்தாந்தத்தை யுபே க்ஷித்து வியாகாதவடிவமான இவ்வேறுதோடத்தைக்கூறின் பிரதிஞ்ஞையானியடைவாதலின், பிரதிஞ்ஞா ஹானி அங்கீ கரித்து மொழிந்ததன்றியாகமாம். இவ்வண்ணம்முதலிற் குறித்து தூஷணங்கூறி அதன் பரிகாரமாக வேறுதூடணம்

நுதலில் இல்லை பிரதிஞ்ஞை யானியெனச் சென்றதன்றோ பிரதிஞ்ஞையானியாதி நிக்கிரகங்களான்.

## 38. பிரதிஞ்ஞையானி யாபத்தியில்லை யென்னுஞ் சங்கைநீக்கம்.

முன்பிரதிஞ்ஞை செய்த தோஷநிர்வாகப்பொருட்டே வேறுநிக்கிரகங்கூறியதாகாத் தோடமில்லையாமெனின்? இல்லையாம், பூர்வநிக்கிரகபரிகாரம் செய்யாமல் அதனானேதோல்வியுற்றிருப்ப நிக்கிரகம் வேறுவிளம்பல்பொருந்தாமையின் என்க. இவ்வச்சத்தால் உன்னால் வியாகாதமே உரையாடத்தக்கதாம் முதலில் அபசித்தாந்த மன்றும் என அறையற்க; அபசித்தாந்த வியர்த்தத்தன்மைப் பிரசங்கத்தான் எல்லா இடங்களினும் அபசித்தாந்த உதாகரணத்தில் வியாகாதங் கூறுதற்கே யங்கீகரிக்கத்தக்கதாந்தன்மை யுண்மையின், என்னாலபசித்தாந்தம் இபற்றப்பெற்றபோது இவன் ஐயுறவுதில்லை யென நிண்ணயம் புரியச்சிறிதும் முடியாதாம்.

## 39. விப்பிரதிபன்னன்பொருட்டு அபசித்தாந்ததூஷணத் தன்மைப்பிரசாதனநீக்கம்.

அற்றேல் உளதாருக இங்ஙனம் விப்பிரதிபன்னனும் பொருட்டு அபசித்தாந்தத்தின் றூடணத்தன்மையினிது சாதிக்கத்தக்கது எனின்? இங்ஙனமியையாதாம், ஏவ்வசுவீகாரதண்ட தூடணத்தான் அதனையங்கீகரித்தனை அதனனங்கீகாரமுஞ்சம்பவித்தலின். "சாஸ்திராசிரயங்கள் வாதங்களாகாவாம், அபசித்தாந்தம் நிக்கிரக அதிகரணமாகாதாம், ஞானஹீனமாய்ச் சமுசாரியாய் ஜன்மமாத்திரமுற்றுக் குணதோடம் பாராததாயதற்குச் சித்தாந்தவிடயக் கவர்ச்சிகளாமிவைகள் எவனால் அந்தோபிரதிபாதிக்கப்பட்டன?" எனச் சௌகதரானும் கூறப்பட்டுளது.

## 40. உதயனமதத்தோடக்கம்.

ஆண்டொருவ னுரைக்கின்றான் :—சாஸ்திரம்பற்றாது கதைதொடங்கல் பொருந்தாதாம், எக்காற்றான் கணபங்கசாதனப் பிரயோக்தாவிளக்கமற்றவனாகிய திரவாதியால் சித்தசாதன முற்பவிக்கச் செய்து நிக்கிரகிக்கப் படுவனேலாயின் அக்கால் என்னேயாற்றலவதோ, பிரதம விப்பிரதிபத்தி விரோதத்தை யுற்பவிக்கச் செய்கவெனின் ? இவ்வண்ணமாயின் விப்பிரதிபத்தி யனுகுண பிரமேய மயன் மாறுமுறையும் உற்பவிக்கவே செய்யலாம், மாறாயினோ ஐயமாறுமுறையும் உபேக்ஷிக்கலாம், அதனதன் அனுகுண மாறுமுறைகட்கு விரோத அடைவின் பொருட்டுச் சிறிது விசேடமென்பதின்றாம்; ஏகபுருடார்த்த அனுகுண அங்க அங்கிபாவமாக விவஸ்தை செய்யப்பட்ட பதார்த்த சமுதாய வியுற்பாதனத்தால் அயற்சாத்திர மென்பதின்றாம்; ஆகலின் கணிகத்தன்மையை யங்கீகரிக்கின் அதனனுகுணமாய அபோகாதி சமஸ்த அங்கீகாரமும், அதனேகபரிகாரமேலோ சமஸ்த அதனனுகுண பரிகாரமும் ஆமெனச் சருவஞ்ஞனயினும் அயல்வகையாக அளவிடுதற்கு ஆற்றலின்றாம். சமஸ்த அதனனுகுண பதார்த்தக்கூட்டம் கதைத்தொடக்கத்தில் தற்சப்தத்தானே கூறத்தக்கதன்றாம்; அக்காலே சாஸ்திர மாற்றும் வழக்காதலினானும், கூட்டம் அபேக்ஷிதமன்மை யனானுமென்க. அதன் மாறுமுறை யுண்டாக்கற்பொருட்டுச் சமஸ்த அதனனுகுணக் கூட்டம் அந்நியோந்நிய சாஸ்திரம் பற்றாமன் முடியாதாம்; அவ்வவ்வனுகுண மாறுமுறையிலாதல் அதன் றொதுமலினாதல் தத்துவவுணர்வு வெற்றிக

ளிலவாம், என அகாமனுலும் அதனதிகாரப் .பிரவிருத்த சாஸ்திரத்தையே ஆசிரயிக்கத் தக்கதாம் எனின்?

## 41. உதயனமத கண்டனத் தொடக்கம்.

அவ்விது அசுந்தரமாம், எதனையங்கீகரியாவிடின் விரோதம் உண்டாக்கலாமென வுரைக்கப்படுமோ அதனனுகுணம் வேறுபிரமேயமென்னே? இரண்டங்கீகரிக்கத் தக்கதாகச் சம்பவிக்கும், ஒன்றோ ஆண்டு எதனை யங்கீகரியாவிடின் கதையே பிரவிருத்திப்பதற்கு முடியாமற்போமோ, எங்ஙனம் பிரமாணுதி சர்வகதைகாரர் சித்தம்; மற்றதோ தெரிசனந் தோறுஞ் சித்தஞ் சிறிது, எங்ஙனம் கணபங்க ஈசுராதி. ஆண்டு முதலிலங்கீகரித்தே கதைப்பிரவிருத்தியெனின் அதனங்கீகாரமாகியவழி பின்னர் அதன் அநங்கீகாரம் அபசித்தாந்தமாம்; அஃதெர்வ்வாதாம், தன்வியாகாதகத் தன்மையானே அதற்குத் தங்களானே ஜாதித்தன்மை யங்கீகாரத்தான்; ஜாதிக்கும் நிரநுயோஜ்யாநு யோகத்தில் நிவேசமாதலின்.

## 42. இரண்டாவது பக்ஷநீக்கம்.

இரண்டாவதும் இயையாதாம், தரிசனபேத நியதமன்றோ கணபங்காதி யாது கதையாரம்பத்தில் அங்கீகரிக்கத்தக்கதாமோ அஃதென்னே அதனங்கீகாரத்தின் பிரகிருத சாத்திய அபோக நல்லுபாயமதாகவா? அல்லது அதன் வியாபகமதாகவா? முதலதாகாதாம், கணபங்க சாதன சமயத்தில் அபோகாதி பரித்தியாகஞ் செய்யும் சௌகதனுக்கு அபசித்தாந்த அபாவ அடைவாதலின், அதனங்கீகாரத்திற்கு அதன் அனுபாயத் தன்மையாதலின்; அன்னியோன்னிய அங்கீகார உபாயத்தன்மையேலோ அன்னியோன்னிய விசாரத்தின் சித்தியேயாகாதாம், விசாரமாங்கால் பிராமாணிகத்

வப் பிரதீதியின்கண்ணே அதனங்கீகாரமாம் அதனங்கீகார முளதாயவழியோ விசாரமாம். அங்கீகரிக்கப்பட்ட வுபா யத்தியாக விடயத்திலேயே இவ்வபசித்தாந்தமாம் பிறவிடத் தின்ஞும் எனின்? இன்றும், யாதுதான் எதனுபாயம் அதனை யங்கீகரித்து விசாரம் பிரவிருத்திப்பிக்க வேண்டும் என்பதாகத்தான் ஙங்ஙனம், அதனது உபாயமதாக அத ஞல் விசாரம் பிரவிருத்திப்பிக்க வேண்டும் என்பதாகவே பொருத்தமாம், அதனங்கீகாரமும் அவ்வளவான் அதனுபா யம் என்பதாக வின்றும், அதற்கும் அதனங்கீகாரத்திற்கும் தனிக்காரணத்தன்மை யங்கீகரிப்பதில் பிரமாணத்தைக் காட் டமுடியாமையின், முடியுமாயினுந் தான் ஆண்டும் தன்னங் கீகாரம் என்னென் றங்கீகரிக்கத்தக்கது வியர்த்தமதாக லின், உபாயத்தன்மையானே பரனுக்கு அவ்வாறு தோற்றல் பொருந்தலின்.

## 43. மீண்டு சங்கை நீக்கம்.

உபேயத்தை யுபாயத்தானே துணிபவனல் உபேயம் ஒப்ப உபாயத்திற்கும் சத்துவம் அங்கீகரிக்கத்தக்கதாம் எனப்பின்னர் அதனை யங்கீகரியாதபோது அபசித்தாந்த வுபந்யாசம் அவகாசமுடையதாம், அசத்திற்கு உபாயத் தன்மை யொவ்வாமையின் எனவுரையாடின்; அங்ஙனமா யின் உபாயத்தன்மையானே உபந்யசித்தலான் அதன் சத் துவ அங்கீகாரம் அதற்கு நேரே கேட்கப்படாவிடினும் அசத்துவமாக அங்கீகாரஞ் செய்துகொள்வதற்கு உபாயத் தன்மை யங்கீகாரம் பொருந்தாமையானே கற்பிக்கத்தக்க தாம், கற்பிக்கப்பட்ட வதனல் கேட்கப்பட்ட அதன்சத்துவ அநங்கீகார விரோதத்தான் அபசித்தாந்தம் அறையத்தக்க தாம். இவ்வண்ணமாகவே சத்துவ அநங்கீகாரத்திலேயே உபாயத்தன்மைப் பொருந்தாமை வழக்காம் தூடணம்

கூறத்தக்கதாம் உபஜீவியத்தன்மை யுண்மையின், அதனுபந்யாசமில்லாமல் கேட்கப்படாத அதனது அங்கீகாரத்தைக் காட்டமுடியாமையின், அதனுபஜீவியாய்ப் பின்னேன்றுவதாய அபசித்தாந்தத்தினுனே செய்தது சாலும்.

### 44. தூஷண அதிதேசம்

இத்னுனே இரண்டாவது மன்றும்? அதன் வியாபகத்வ அங்கீகாரமுந்தான். அதன் சத்தையை யங்கீகரியாதொழியின் சாத்தியத்தின் அபாவ அடைவான் றொடர்ந்தெண்ணத்தக்கதாம், அங்ஙனமாக அதுவே தூஷணமுளதாகுக, அநங்கீகாரமாயவழி அதனுல் அங்கீகாரத்தை யினிது கற்பித்து அதனேடு அநங்கீகார விரோதத்தான் அபசித்தாந்த அவ்வுபந்யாசத்தா லாற்றியது போதும் என்பதாம்; இங்ஙனமே நிக்கிரக மயலதுகண்டனமும் ஊகிக்கத்தக்கதாம்.

கவிதார்க்கிக சக்கிரவர்த்தி ஸ்ரீலஸ்ரீ ஹர்ஷாசிரியர் அருளிய கண்டன கண்ட காத்தியத்தில் நிக்கிரக அநிருக்தியெனப்பெயரிய இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று.



## மூன்றுவது பரிச்சேதம்.



### 1. கிம்சப்தார்த்த விசார ஆரம்பம்.

நல்லது எவற்றைப்பற்றி வெகுவாக வாக்குவிவகாரங்கள் ஆமோ அச்சருவ நாமங்கட்கு அருத்தங்கள் எங்ஙனம் நிகழ்த்தப்படும். அங்ஙனமன்றே, ஈசுவர இருப்பில் என பிரமாணம் எனக்கேட்பவன் எதிர்கூறத்தக்கவனுவன், என்னென்னுஞ் சப்தமிது அபாவங்கூறும் பொருளதா? துஷ்டத்தன்மை தொகுக்கும் பொருளதா? ஐயப்பொருளதா? அறியும் வேட்கை விடயத்தன்மை தரும் பொருளதா?

கொடுத்தல், ஆண்டு முதற்பக்ஷமதேலாயின் அக்கால் ஈசுர இருப்பில் இல்லை யளவையென வியம்பியதாகும், அவ்வா ருகவே, பதிஞ்ஞைமாத்திரத்தால் சாத்தியசித்தி யின்ருமென ஹேதுமுதலியவை இயம்பத்தக்கவாம். அதுவுமுன்னுல் அறையப்பெறவில்லை, ஆகலின் குறைவுறல் தோடமாம். இதனுனே இரண்டாவது மாகாதாம் ஈசுர இருப்பில் குற் சிதம்பிரமாணம் என்பதற்கும் பிரதிஞ்ஞை மாத்திரத்தன்மை யுண்மையின்.

2. இரண்டாவது விகற்பத்தையே வேறுவகையாய் நீக்கல்.

அன்றியும் சாத்திய அசாதகத்தன்மை யாற்ருன் அஃ துன்ருற் குற்சிதப்படுவதா, அயல்வகையாற்ருே? அயல் வகையாலெனின்? சாலுமஃதுள தாக்கலான் சாத்தியசித்திக் குத் தடையின்மையின், முதலாவதன்ரும் பிரமாணமும் சாத்திய அசாதகமும் என வியாகாதமாதலின். இப்பிர மாண சப்தம் கௌணமாம் எனின், அன்ரும், பிரமாணத் தன்மைச் சம்பந்தத்தில் இப்பிரமாண சப்தப் பிரயோகமே லாயின் கௌணத்வ வியாகாதம் முக்கியத்தன்மையான். பிர மாணுபாசமேலாயினே அதை யுண்டாக்கலாற் சாலுங் கொண்டது. ஈசுர இருப்பில் எப்பிரமாணுபாசம் அது குற் சிதம் என்பதன்கண்ணேபரனுக்கும் சம்பிரதிபன்னத்தன்மை யுண்மையின். ஈசுர இருப்பில் எனவும் விசேஷங்கொண் டது வீணேயாம், பிருண்டுளதாம் விடயத்தும் அளவைப் போலி குற்சிதமே சாத்திய அசாதகத்தன்மையான். மூன் ருவதும் முரணுவதாம், அங்ஙனமாயினே விதர்க்கத்திற்குப் பக்ஷம் வேறு அவாவப்படுதலானே பக்ஷாந்தரமும் பகரத் தக்கதாம் ஈசுர விருப்பில் இது பிரமாணமா அல்லது அன் னியமா என அதுவும் உன்ருற் கூறப்படவில்லை அதனுற் குறைவுறல் தோடமாம்.

### 3. கிம் சப்தத்திற்குப் பிரசினர்த்த முடைமை நீக்கம்.

நான்காவதும் நலமலதாம், பிரசின அருத்தம் வாய்ந்த கிம்சப்தத்தான் மற்றேதேனும் பதார்த்தத்தின் அறியும் வேட்கை யுடைமை புலப்படுமேல் அதுவும் ஈண்டுப் பிரமாணப்த சமபடிதத்தாற் பிரமாண விஷயிணியாகப் புலப்படும், எதன் விஷயந்தான் பிரசினமாமோ அதுத்தரவாதியா லறையத்தக்கதாம். அவ்விப்பிரசின்ம் ஈசுரஇருப்பிற் பிரமாண சாமானிய விஷயந்தான் ஆதன் விசேட விஷயந்தான் அபிப்பிராயப்பட்டதா? ஆதியதேல் ஈசுர இருப்பிற் பிரமாண மென்பதாகவே யுத்தரம் அமைவதாம், எதனது விடயமாமோ வினு அது அறையத்தக்கதாம், பிரமாண சாமானிய விடயமாம் பிரசினம் அதுவும் பிரமாண சப்தத்தானே யறையப்படுவதேயாம். இனியிரண்டாவது ஆயினும் ஈசுர இருப்பிற் பிரமாணம் என்பதாகவே உத்தரம் பொருந்துவதாகும் எங்ஙனம் வினு வாக்கியத்திற் பிரமாணசப்தம் விசேடபரமாமோ அங்ஙனம் உத்தர வாக்கியத்தினுமாம்.

### 4. விசேடபரம் பிரசினம் என்னுஞ் சங்கை நீக்கம்

அவ்விசேட மென்னெனின்? என்னற்க, முன்போன்று விடையாதலின். மேலும் இவ்வினுவிற்கும் விசேடவிடயம் என்னென்னுஞ் சப்தத்திற்கு விசேடசப்தத்தாற் சமநிலைக் களப்படுதலின், அங்ஙனமாகவே விசேடமென்பதாகவே யுத்தரமாம். ஆகுக விதுதான் விசேடசப்தத்தான் விசேடமாத்திரம் அபிர்த்தாரித மீண்டுவிளம்பும் வேட்கை யின்றும், மற்றேு, சிறப்பான வியக்தி ஆண்டு விசேடசப்தத்தின் தாற்பரியம், ஆகலின் யாதவ்வசாதாரணமான பிரமாண வியக்தி யென்பது பிரசினப்பொருளாம், ஆண்டோ அத்தகைய பிரமாண வியக்தியின் கூற்று உத்தரமாகப் பொருந்தும் இவ்வகையாய பிரலாபங்கள் கூடாவெனின்? இஃதிங்ஙனமாகா

தாம், ஈண்டும் விசேடமென்பதாகவே விடையாதலின், எங்ஙனம் வினவாக்கியத்திருக்கும் விசேடசப்தத்திற்கு யாவற்றினும் விலகும்வடிவப்பிரமாண வியக்தியின்கண்ணே கருத்தாமோ, அங்ஙனமே விடைவாக்கியத் திருப்பதற்கும் ஆம், இன்னணமாகவே -எவ்விடயத்தின்கண்ணே உன்னுடைய வினவாக்கியத்தின் றாற்பரியம் அதுவே யெங்கட்கு உத்தர வாக்கியத்தால் அறைய்ப்பெற்றதாமெனப் பொருத்தமே புகலப்பட்டது.

## 5. வினவின் வேறுவகையானே அபிப்பிராயம் அகற்றல்.

ஈண்டென்பிரமாணம் எனக்கேட்பவனது அபிப்பிராயமிதுவாம், இப்பொருளின்கண் அநுமானம் பிரமாணமா மற்றென்று என இனி நினைதியேலாயின்?• ஈண்டும் அநுமானம் என்பதாக உத்தரம் எங்கட்காம், அவ்வநுமானம் என்னே யெனின்? இவ்வினவும் அநுமாத்திரவிடயமா? அல்லது அதன்விசேடவிடயமா? எனவிகற்பித்துப் பிரமாண பிரசினத்திற்கேபோலும் உத்தரம் உரைக்கத்தக்கதாம். "வினவுவன் றன்வினவின் விளம்புமெவ் விடயந்தன்னை, நனிவகையெந்தவெந்த நயத்தினின் வில்லோனுனும், பனுமந்த விடய மந்த வகையதாய்ப் பகிராவாக்காற், பினுமந்த நயத்தினேபேசவே செயலாமாங்கே" "வினவிய தெதுதானந்த விடயமே விளம்பல் வேண்டும், இனவகை யியம்ப லானு மிதுபுவித் திடு நிருக்தம், தனவினா விடய வக்தா வாருமுன்றன்னி னுனும், வினவுமிம் மொழியி னுனே வேண்டவும் படட் டீத்த."

### 6. தூஷணாந்தரங் கூறல்.

வினப்பொருளாலும், என்னென்னுஞ் சப்தத்தானே, ஜிஞ்ஞாசை விஷயனை அர்த்தத்திற்குப் புலப்படும், ஜிஞ்ஞாசையும் அறியும் வேட்கையாம், வேட்கையும் அறியாத

தில் அமையாதாம் மிகுவழக்குண்டாதலின், ஆகலின் ஈசுர விடயம் பிரமாணம் அறியும் அவாவினனல் ஆணடு இச்சையின் காரணபூதமாய தன்னுணர்வு சாற்றத்தக்கதாம், அதுண்மையேனும் இன்மையேனுமாம், உண்மையேலாயினே அந்த ஞானத்தினனே தனது விடயம் பிரமாணம் நிலைபடுத்தப் பெறும் விஷயத்திற் பிரமாணப் பிரவிருத்தி யில்லாமல் அதனது உண்மைப் பான்மை யுரைப்பான் முடியாமையின். அந்தப் பிரமாணத்தினனும் தற்கோசர ஈசுரசற்பாவம் நிலைபெறுத்தப்பெறும் என அநாயாசமாகவே சித்தம் நமது ஈசுர சித்திமனோரதம். இனி அயதார்த்தமாயின், ஆண்டு இந்த இன்மை ஞானவிடயத்தில், நம்மனோரான் அயதார்த்தமேயாய ஞானம் உண்டாக்கத்தக்கது என்பதாக கேட்குமுனக்கு வாஞ்சிதமாயினே யாதுகொல்லிது தனததினைப் பொருளில் பரஅபேக்ஷை அயத்ார்த்தஞானஉற்பாதன குசலனுகியநீயே ஆண்டுஒருபொய்யுணர்வை யுண்டாக்கலே போல மற்றொன்றையும் உண்டாக்கிக்கொள்ளலாம். யாமோமீண்டு யதார்த்த ஞானத்தை யுண்டாக்குபவராய் மித்தியாஞானத்தில் எல்லாவாற்றானுமே அபண்டிதர் ஈண்டேன்ஏவப்படுவேம். இனி என்னுடைய அயதார்த்தஞானத்தின் விடயம்யாதோ அது என்து யதார்த்தஞான விடயமதாக வுன்னாற்செய்யப்படல் வேண்டும் என்னினது வாஞ்சிதமாகுமாயின், வியாகாதத்தான் இத்தகைய பொருளில் நினக்குப்பிரவிருத்தியே பொருத்தமுடையதாகாதாம்; சுக்திகை ரஜதத்தன்மையானே எனது யதார்த்தஞான விடயமாகுகவென விதன்பொருட்டு எண்ணியவன்றான் எங்ஙனஞ்செயத்தான் எத்தனம்புரிவான். எவ்வுருவத்தானே அயதார்த்த ஞானவிடயத்தன்மையோ அவ்வுருவத்தானே யதார்த்தஞான விடயத்வமாயின் வியாகாதமாதலின்.

## 7. பரமதத்தில் அயதார்த்தத் தன்மையேனும் தற்சித்தாந்தத்தால் உண்மையுணர் வுண்டாக்கலா மேன்பத னீக்கம்.

இனித்தற்சித்தாந்த அனுசாரமாக வன்று வுண்மை யுர்ணவு ஆண்டுண்டாக்கலாம் ஆகலின் அதன்பொருட்டு நீவி ருவுகின்றதாக எண்ணுதியோ? அஃதேலாதாம், எவ்வீசுரசற் பாவ விஷயம் உன்னால் பிரமாணுபாசம் பிரமாணமதாக மயக் கத்தால் புலப்படுத்தலாமோ அதற்குப் பிரமாணத்தன்மை எம்மனோரான் விரித்துரைக்கற்பாலது என எம்மனோர்க் கித்தகைய் சித்தாந்தமின்றும், மாறாக, ஈசுரசற்பாவ விடயம் எப்பிரமாணம் உன்னால் பிரமாணுபாசத்தன்மையானே மயக் காற்புலப்பாடாமோ அதுபிரமாணிக்கத்தக்கதாம். ஈசுரசற் பாவ விஷயப்பிரமாணத்தின் ஞாபனமாத்திரம் உன்னாற்செய் யப்பெறலாம் எனவபிமதம் வினவும் ஏம்மனோருக்குப் பிர மாணத்தாற்றான் அப்பிரமாணத்தாற்றான் எனவிசேடந்தா னும் அபிமதமின்றும் என்பதாகச் சம்மதிக்கில், கூடாதாம், ஞாபனமாத்திரத்திற்கு அப்பிரமாணஞானம் கொண்டும் பொருந்துகின்றமையின், ஆண்டுச்சுவாதீனத்தில் ஏனிப்பரா பேக்ஷை? என்பதாதியாய்க் கூறப்பட்டதையே தொடர் படுத்துக.

## 8. ஞானத்திற்கு மெய்ம்மை பொய்ம்மைகளின் ஐயமேயா மேன்னுஞ் சங்கை நீக்கம்.

எவ்விவ்வீசுர சற்பாவ விஷயப்பிரமாணப் பிரதீதியெம் மனோர்க் குண்டாயதோ அது பிறழ்ச்சியா? அல்லது உண் மையா? எனவையம்மீண்டு எம்மனோர்க்கு அதனை லேகபக்ஷ நிர்த்தாரணுதீனம் எவ்விதூடணம் நின்னாற் கூறப்பெற் றதோ அஃதவகாசமற்றதாம் என விஃதாகுக வெனின், இஃ தாகாதாம், இவ்வண்ணமே அது பிரதீதியாயவழி யதார்த்

தத்வ அயதார்த்தத்வ சம்சயத்தால் அந்தப்பிரதீதியின் கோசர மெப்பிரமாணமோ அதற்கும் எவ்விடயம் ஈசுரசற் பாவமோர் ஆண்டு யாண்டுமே சமுசயமுடைய நினதுவினை விதுவாம், விப்பிரதி பன்னனதுவென வன்றும், ஆகவே சிஷ்ய பாவத்தை யங்கீகரிப்பாயாக, திருவருள் பெறுவான் எமது திருவடிகளை நெடுநாள் அருச்சித்துத் தொண்டு புரிவாயாக; புரியில் நினது ஐயத்தைக் கெடுப்வேம். விப்பிரதி பன்னரே யாம் ஆகாரிய ஐயம் எமக்காம் எனின்? ஆயின் ஒரு கோடியை நன்கு பற்றியவரேயாம் காரியத்தை யனுசரித்தே சமுசயத்தைப் பற்றியுள்ளேம் எனக்கூறியதாயிற்று; இங் ஙனமாயின் அதேகோடியவதாரணம் உனது யதார்த்தமா அயதார்த்தமா வென்னும் விகற்பத்தில் விளம்பிய ஊகத்தால் தூஷிக்கத்தக்கதாம்.

## 9.- கற்பாந்தரத்திலும் தூணஷ அதிதேசம்.

இதனானே, நிச்சயமின்மையினானே அஃதெம்மனோ ரான் அறியப்பெற்றது என்பதும் நீக்கப்பெற்றது என அறி யப்பாலதாம், வியபிசாரி விஷயமாதல் அவ்யபிசாரி விஷய மாதல் அஃதென் விகற்பங்களான் அதற்கும் விழுங்கப்படுந் தன்மை யுண்மையின் "பரஸ்பரம் பகைபற்றியவழி வேறு வகைத் திதியில்லையாம்" என்னும் நியாயத்தான். இவ்வண் ணம் ஈசுர அபிசந்தியாதியின் மாட்டும், அவ்வத்தானத்தில் நில்வும் சர்வநாமாந்தர கண்டனம் ஈண்டு காணத்தக்கதாம்.

கவிதார்க்கிக சக்கிரவர்த்தி, ஸ்ரீலஸ்ரீ ஹர்ஷாசிரியர் அரு ளிய கண்டனகண்ட காத்தியத்தில் சர்வ நாமார்த்த அநி ருக்தியென்பப் பெயரிய மூன்றாவது பரிச்சேதம் முற்றிற்று.

## நான்காவது பரிச்சேதம்.

### 1. பாவத்வ கண்டன ஆரம்பம்.

அற்றேல் ஆயினும் பாவவடிவமா யிராநின்ற அவ் விசாரிடத்தில் விதரயகமாய சிறிது பிரமாணம் கூறத்தக்கதாம் எனின்? மீண்டு பாவத்வமென்ப தென்னே? விதித்வமெனின்? ஆகாதாம், பரியாயம் வினவாமையின், சொரூப சத்வம், எனின்? அன்றாம், அபாவத்திற்கும் அவ்வாறுண்மையின், சுவந்தோறும் விலகினமையானே தொடர்பின்மையாதல் தொடருவதினானுமென்க. இருக்கின்றதென்னுந் தோற்றவிடயத் தன்மையெனின்? அல்லவாம், அபாவங் கடத்திற் கிருக்கின்ற தென்னும் உணர்வுண்டாகின்றமையானே அபாவத்திற்கும் அவ்வாறுந்தன்மை வழக்காதலின்; இருக்கின்றதில்லை யென்னும் பிரதீதி விடயத்தன்மை யிருந்த போதினும் கடாதிக்ட்கு பாவத்தன்மை நீங்காமையின்.

### 2. அஸ்திசப்தார்த்த விகற்ப நீக்கம்.

இருக்கின்ற தெனத்தான் இருக்கின்றபொருளா சத்தமா கூறும்வேட்கை? ஆதியதன்றாம், அதனைக் கூறமுடியாமையின், சத்தை யதன்பொருள் எனின், அன்றாம், பொதுமை முதலியவற்றிற்கு அஃதில்லாமையின் இன்மையெய்தலின்; சொரூப சத்வமோ நீக்கப்பெற்றதாம், இரண்டாவதும் இயையாதாம், அபாவ மிருக்கின்றது என்றபுலப்படல் புகன்றிருத்தலின், நிகழ்கின்ற தென்பதாதி யாகாரத்தினானே புலப்படுவதற்கு இன்மை வழக்காதலின் அதுவும் இருக்கின்ற தென்பதன் பரியாயமெனின்? அன்றாம், இரண்டன்பொது ஒரு பொருளுரைத்த லில்லாமல் பரியாயத் தன்மை பகர்வான் மூடியாமையின். யாண்டொன்றற்கு

இருக்கின்றதென்னும் பதப்பிரயோகமோ ஆண்டே யபாத்திற்கு நிகழ்கின்றது எனப்பிரயோகத்தான் சாமானியமாக ஆண்டுப் பரியாயத்தன்மை அறிதல் கூடுமெனின்? கூடாதாம், பிரமேய அபிதேயாதி சப்தங்கட்கு அவ்வாறுந் தன்மை யிருந்தபோதினும் அபரியாயத் தன்மை யமைதலின் யாண்டென்பதற்குப் பிரவிருத்தி நிமித்த அர்த்தத்தன்மையேயோ அதன் நிர்வசனப் பிரசங்கம் அவ்வவத்தையதேயாம் அதேபொருள் பாவத்வம் பகர்வதாம் சப்த உல்லேகந் தேடலால் வருவதென்னே.

### 3. பாவத்திற்கு இலக்கணமய லிலதாக்கல்.

அபரப்பிரதிஷேத வடிவுடைமை பாவத்வம் எனின்? அன்றும், விலக்கப்படுவதன் அசம்பவத்தானே பரபதம் வீணாதலின்; பாவ அபாவங்கட்குப் பரஸ்பரப் பிரதிஷேத வடிவமுடைமை யங்கீகாரத்தானும் என்க. ஆயினும் பாவமில்லையாம் என அப்ராவப் பிரதிபத்திபோலும், அபாவம் இல்லையாமெனப் பாவத்தின் பிரதீதி யின்றுமெனின்? இன்றும், அத்துணையானும் இலக்கணம் இயம்ப வியையாமையின், அபரப்பிரதிஷேத வாயிலாகப் பிரதீதியாந் தகைமையே பாவத்வமெனின்? கூடாதாம், விழிமுதலியவற்றானே பாவத்வக் கவர்வின்மை வழக்காதலின்; பிரதீதி யாகுந்தகைமை விழிமுதலிய வற்றானே கவரப்பெறுவ தாகாதாம் அபாவமில்லையாமென்னும் பிரதீதிக்கு நிர்விடயத்தன்மை வழக்காதலினுமென்க இது பாவவிடயமன்றும், நினது பக்ஷத்திற் பரப்பிரதிஷேத வாயிலாய்த் தோற்றப்படுவதாதலின்; அபாவவிஷயமே யென்பதுமாகாதாம் அது நிடேதார்த்தமதாதலின். இவ்வகையாய பிரதீதியே யிலதாம் எனின்? இலதாம், சத்தஞானத்தாற் பிரதீதியின் சம்பவமாதலின், ஆகாங்க்ஷாதிமான்களாய பதங்களாற் சுவர்க்கோறும் சயு

சர்க்க முணர்த்தப்படுதலின், "முற்றினு மில்லாப் பொரு ளினு மொழிதான், அற்றமி லறிவை யாக்கிடு மன்றே."

## 4. பாவத்வ இலக்கணத்திற் பிரத்தியக்ஷப் பிரமிதிவிஷயத்வம் புகுத்தலாதி சங்கை பங்கம்.

பிரத்தியக்ஷப் பிரதீதிக்கு அவ்வாறு விளம்பும் வேட்கை யிருத்தலின் இஃததோஷமாமெனின்? ஆகாதாம், எல்லாப் பாவங்கட்கும் பிரத்தியக்ஷத்தன்மை யங்கீகரியாமையின், அன் ஙசரசகித பக்ஷத்தில் எல்லாம் பிரத்தியக்ஷமெனின்? அன் ரும், அவரால் அவைகட்கு அபரப்பிரதிஷேத வடிவத் தாமேன கவர்வதில் அளவையின்மையின். அவைகட்கு விதி ரூபமாக அவ்வாறே கவர்ச்சியாமெனின்? ஆகாதாம், விதி ரூபத்தன்மைக்குத் துணிவுபேறின்மையின், யாது அபரப் பிரதிஷேத வடிவமதாக சப்தத்தானும் உணர்த்தப்பெறுமோ அது ஆண்டுப் பாவரூபமெனின்? இன்றும், பரபதம் விளா [illegible] போதலின். அதனைத் தியாகம் புரியினும் அசாக்ஷாதித் [illegible] என் தன்மை [illegible] பாகம்போல [illegible] [illegible] எனின்? அன்றும், [illegible] சாக்ஷாத்தன்மை யுண்டாம் எனின்? அன்றும், [illegible] வளையாய விடயத்தானே விசிஷ்டமாய புத்திக்கு விஷய விசேஷணத்தன்மைக் கவர்ச்சியில் சுவாசிரயமும் அங்கிசத்தி லாம், அதனு னுபலக்ஷிதமானதற்கு அவ்வாறுந் தன்மை யேலோ, அபாவவிசிஷ்ட பாவக்கிரக அர்த்த அபாவத்திற்கு அவ்வாறுந்தன்மை யர்தலின், அதனுனே யாது இவ்விதம் அது பாவரூபமெனவும் கூறப்படுவனல் இவ்விதத்தன்மையால் பாவத்வம் அயலாக அறையத்தக்கதாம், அபேதத்தினும் யாதிவ்விதம் அது பாவரூபமென நியமங் கூடாமையின், இதற் குபலக்ஷணத் தன்மையேலோ உபலக்ஷிய அன்னி யத்திற்கு வாச்சியத்தன்மை யுண்மையின், இதற்கே பாவார்த்

தத்தன்மையேலோ அபாவ மில்லையெனக்கொண்டுப் புலப் படும் பாவத்திற்குப் பாவத்வாபாவ வழக்காதலின், பின்ன மும் பாவத்வமாகாதாம் ஆறு பதார்த்தத்தினும் வேறும் வழக்காதலின்,எதுதான் சிறிது பாவத்வமோ அது தன்வடி வத்தில் இருக்கின்றதா? இல்லையா? இருக்கின்றதெனின்? தன்பாலிருப்பது விரோதமாம், இல்லையெனின், தனக்கு அன்னியப்பிரதிஷேத வாயிலாலோ அப்பிரதீயமானம் வந்து அபாவத்தன்மை வழக்காதலின் என்றுணர்க.

## 5. அபாவத்தன்மைக் கண்டன ஆரம்பம்.

அற்றேல் இவ்வண்ணம் ஈசுரரிடத்தில் அவ்வைகாட்டா மையின் அவரபாவமே அடைவுறும் எனின்? அபாவத் தன்மை யென்னறைப்பெறும்? நிஷேத வடிவமுடைமை யெனின்? அது தள்ளுபடும் வடிவமாயினே பாவத்திலு முளதாம், பாவாபாவ மிரண்டுகட்கும் பரஸ்பரம் தள்ளுபடும் வடிவமுண்மை யங்கீகரிக்கப்பட் டிருத்தலின். இனி யபா வத்தன்மையேயாயின், பரியனுயோக மகலாதாம், இதனானே நிஷேதவாயிலாகப் பிரதீயமானத்தன்மை என்பது நீக்கப் பெற்றதாம்.

## 6. மூன்றாவது கற்ப நீக்கம்.

பாவவிரோதித் தன்மையெனின் அன்றும், சர்வபாவ விரோதித்தன்மையா? அதன் விசேஷ விரோதித்தன்மையா? ஆதியதாகாதாம், அசித்தியாதலின், கடாபாவம் பூதலா தியைமூடித் தடாதாம். இரண்டாவது மெங்ஙனும், பாவங் கள் சிலவற்றிற்கும் அவ்வாறுந்தன்மை யுண்மையின். இனிக் கூடியிராமை விரோதம் விவக்ஷிதமாயின் அது பாவங்கட்கு இன்றுமெனின் இன்றும், கோத்தன்மை அசுவத்தன்மை யாதிக்ளில் அதற்கு மிருப்பாதலின்; ஒன்றை விதிக்கின் மற்

சர்க்க முணர்த்தப்படுதலின், "முற்றினு மில்லாப் பொரு ளினு மொழிதான், அற்றமி லறிவை யாக்கிடு மன்றே." 

## 4. பாவத்வ இலக்கணத்திற் பிரத்தியக்ஷப் பிரமிதிவிஷயத்வம் புகுத்தலாதி சங்கை பங்கம்.

பிரத்தியக்ஷப் பிரதீதிக்கு அவ்வாறு விளம்பும் வேட்கை யிருத்தலின் இஃததோஷமாமெனின்? ஆகாதாம், எல்லாப் பாவங்கட்கும் பிரத்தியக்ஷத்தன்மை யங்கீகரியாமையின், ஈசுரசகித பக்ஷத்தில் எல்லாம் பிரத்தியக்ஷமெனின்? அன் றும், அவரால் அவைகட்கு அபரப்பிரதிஷேத வடிவத் தானே கவர்வதில் அளவையின்மையின். அவைகட்கு விதி ரூபமாக அவ்வாறே கவர்ச்சியாமெனின்? ஆகாதாம் விதி ரூபத்தன்மைக்குத் துணிவுபேறின்மையின், யாது அபரப் பிரதிஷேத வடிவமதாக சப்தத்தானும் உணர்த்தப்பெறுமோ அது ஆண்டுப் பாவரூபமெனின்? இன்றும், பரபதம் வாளா போதலின். அதனைத் தியாகம் புரியினும் அசாக்ஷுஷாதித் தன்மை யடைதலின்; நறுநாற்றமுடையது சந்தனம் என் பதாதியிற்போல அன்னியவுபரீத பாகம்போல ஆண்டுச் சாக்ஷுஷத்தன்மை யுண்டாம் எனின்? அன்றும், அவ் வகையாய விடயத்தானே விசிஷ்டமாய புத்திக்கு விஷய விசேஷணத்தன்மைக் கவர்ச்சியில் சுவாசிரயமும் அங்கிசத்தி லாம், அதனுபலக்ஷிதமானதற்கு அவ்வாறுந் தன்மை யேலோ, அபாவவிசிஷ்ட பாவக்கிரக அர்த்த அபாவத்திற்கு அவ்வாறுந்தன்மை யர்தலின், அதனுனே யாது இவ்விதம் அது பாவரூபமெனவும் கூறுபவனால் இவ்விதத்தன்மையால் பாவத்வம் அயலாக அறையத்தக்கதாம், அபேதத்திலும் யாதிவ்விதம் அது பாவரூபமென நியமங் கூடாமையின், இதற் குபலக்ஷணத் தன்மையேலோ உபலக்ஷிய அன்னி யத்திற்கு வாச்சியத்தன்மை யுண்மையின், இதற்கே பாவார்த்

தத்தன்மையேலோ அபாவ மில்லையெனக்கொண்டுப் புலப் படும் ப்ரவத்திற்குப் பாவத்வாபாவ வழக்காதலின், பின்ன மும் பாவத்வமாகாதாம் ஆறு பதார்த்தத்தினும் வேறும் வழக்காதலின், எது தான் சிறிது பாவத்வமோ அது தன்வடி வத்தில் இருக்கின்றதா? இல்லையா? இருக்கின்றதெனின்? தன்பாலிருப்பது விரோதமாம், இல்லையெனின், தனக்கு அன்னியப்பிரதிஷேத வாயிலாலோ அப்பிரதீயமானம் வந்து அபாவத்தன்மை வழக்காதலின் என்றுணர்க.

## 5. அபாவத்தன்மைக் கண்டன ஆரம்பம்.

அற்றேல் இவ்வண்ணம் ஈசுரரிடத்தில் அள்வைகாட்டா மையின் அவரபாவமே அடைவுறும் எனின்? அபாவத் தன்மை யென்னறைப்பெறும்? நிஷேத வடிவமுடைமை யெனின்? அது தீள்ளுபடும் வடிவமாயினே பாவத்திலு முளதாம், பாவாப்ரவ மிரண்டுகட்கும் பரஸ்பரம் தள்ளுபடும் வடிவமுண்மை யங்கீக்ரிக்கப்பட் டிருத்தலின். இனி யபா வத்தன்மையேயாயின், பரிய்னுயோக மகலாதாம், இதனானே நிஷேதவாயிலாகப் பிரதீயமானத்தன்மை என்பது நீக்கப் பெற்றதாம்.

## 6. மூன்றுவது கற்ப நீக்கம்.

பாவவிரோதித் தன்மையெனின் அன்றும், சர்வபாவ விரோதித்தன்மையா? அதன் விசேஷ விரோதித்தன்மையா? ஆதியதாகாதாம், அசித்தியாதலின், கடாபாவம் பூதலா தியைமூடித் தடாதாம். இரண்டாவது மெங்ஙனும், பாவங் கள் சிலவற்றிற்கும் அவ்வாறுந்தன்மை யுண்மையின். இனிக் கூடியிராமை விரோதம் விவக்ஷிதமாயின் அது பாவங்கட்கு இன்றுமெனின் இன்றும், கோத்தன்மை அசுவத்தன்மை யாதிகளில் அதற்கு மிருப்பாதலின்; ஒன்றை விதிக்கின் மற

ளுன்று நிஷேதமாதல் அஃதெனின்? ஆகாதாம், பேதமேற் பாவபேதங்கட்கே வழக்காதலின். ஏகவிதியே யபரநிடே தம் அஃதாமெனின்? ஆகாதாம், நிடேதத்திற்கு அபாவார்த் தத் தன்மையினும் பாவார்த்தத்தன்மையினும் அசித்தியாத லின். நாஸ்தியெனப் பிரதீயமானத்வம் எனின்? அன்றும், கடாபாவம் நாஸ்தியென்க் கடத்திற்கு அவ்வாறு பிரதீய மானத்தன்மை யுண்மையினுனே அபாவத்தன்மை யடை வாதலின்; அஸ்தியென பாவத்வ நிருக்தியின்கண்ணே யாதோதப்பெற்றது. தூடணம் அதனுபத்தி வருதலினு மென்றறிக.

## 7. அபாவத்தின் இலக்கண வயல் நீக்கம்.

பிரதியோக நிரூபண அதீன நிரூபணத்தன்மை யெ னின்? ஆகாதாம், பிரதியோகிக்குப் பாப்பொருளேன் மிகு வழக்காதலின், பகைப்பொருளேலே இதுகூற வியலாமை யின், அசற்பொருளேல் நஞ்ஞர்த்தத்தின் அசித்தியாதலின், சென்றவருமுணர்வு முதலியவற்றில் விஷயாதியால் அதிப் பிரசங்கம் வருதலின்.

## 8. இலக்கணத்தில் வேறு தோஷம் விளம்பற்கு விகற்பம்.

யாத்தான் சிறிது அபாவத்திற்கு இலக்கணம் இயம்பப் பெறுமோ அதுபாவமா? அபாவமா? ஆதல்? ஆதியதாகா தாம், பாவத்திற்கு அபாவத்தைப் பற்றிநிற்றல் கூடாமை யின், விஷயிதருமத்தாற்றுன் எங்ஙனமேனும் அவ்வாறுந் தன்மையேலோ அதுகூறத்தக்கதேயாம். அயலே யது வேயான்றதாமெனின்? அன்றும், அதுவாய்ந்த அபாவத்திற்கு அபாவத்தன்மையேல் ஆன்மாசிரயமாம், பாவத்தன்மை யேலோ வியர்காதமாதலின். இரண்டாவது பிரிந்ததே, அதற்குத்தன்பா னிகழும் பகைப்பற்றலின், நிகழாதேலோ அவ்வியாபகத்தன்மை வழக்காதலின்.

## 9. அபாவத்திற்கு இலக்கணவயற் கண்டனம்.

தள்ளப்படுவதோடு கூடியதாகவே யாதுபுலப்படுமோ அது அபாவமெனின்? அற்றன்றும், தள்ளுதல் சாற்றுதொழிந்தவழி, தள்ளப்படுதல் சாற்றவேலாமையின். விசிஷ்ட (கூடிய) சப்தார்த்தமும் விளக்கி விளம்ப வேண்டியதாகும்; ஆண்டுவிசிஷ்டம், விசேஷண விசேஷ்ய அவற்றின் சம்பந்தங்களினும்வேறு? வேறன்று? ஆதியதாகாதாம் தண்டபுருட சம்பந்தமல்லாமல் அன்னியதண்டி காணப்படாமையின்; தண்டியைக் கொண்டுவாவென விண்டபோழ்து தண்டியல்லாததைக் கொண்டுவரும் வழக்காதலினுமென்க. அதன் சம்பந்தத்தானே யுபலக்ஷிதத் தன்மையான் அவ்வாறுமெனின்? ஆகாதாம், அஃதல்லாததற்கு உபலக்ஷியத் தன்மையேன் மிகுவழக்காதலின், அஃதுடையதற்கும் அன்னியத்தன்மை யுண்மையின், சம்பந்தம் ஹேதுவாம் அதுவும் அதன் அதிகரணத்திலேயே யாமெனின்? அல்லவாம், சம்பந்தத்தினும் அதன் அதிகரணசம்பந்த அன்னியத்வ முடைவாதலின் என்பதிது மார்க்கமன்றும். அதன்சம்பந்தியின்பால் ஆண்டு விவகாரமெனின்? ஆகாதாம், அதற்கும் விசிஷ்டத்தன்மையானே அன்னியத்தன்மை யடைவுற்றவழி விவகார விஷயமுற்ற விசேடத்தை விளம்பவேலாமையின். இங்ஙனம், பரம்பரைக் கற்பனையிலும் அநவஸ்தை மாத்திரமாம், விவகாரியமுற்ற விசேடஞ் சிறிதுமின்றும்.

## 10. விசிஷ்டத்திற்கு விசேஷணாதிகளினும் அன்னியத்தன்மை யென்னும் தார்க்கீகமதநீக்கம்.

இரண்டாவதிலோ தனித்தனி தண்டி விவகாரப் பிரசங்கமாம், விசேடமில்லாமையின், அவைதனித்தனி தண்டிபதார்த்தங்களாகா, மற்றோ, உற்றதெனின், உற்றதென அவையும், மேலகமும் கூறப்படுகின்றதா? அல்லது அவற்றி

னும் அயலேயொன்றா? முதலாவதிற் றனித்தனி அதேவழக்காம் மேலகத்தினும் அதிகமாம். இரண்டாவதிலோ பிரதிவிவகார விரோதத்தாற் முன்னீக்கப்பெற்றதாம். ஒரு ஞானருடமாதல், தடையின்றி நானாஞானருடமாதல் அநேகமும் சம்பந்தமும் விசிஷ்டபதார்த்தமெனின்? ஆகாதாம், கடபடங்களென்னும் உணர்வின்கண்ணே யாருடமான கடபடங்களும் சம்பந்தமும் கடபடரூப விசிஷ்டமாம்; அப்புத்தியின்கண்ணே யாருடமாகக் கடத்வ படத்வ சம்பந்தங்களை யங்கீகரித்தலானே சம்பந்தமும் அப்புத்தியின்மாட் டேறியதாக அங்கீகரிக்க வேண்டியதொருதலையாதலின், மாறாயினை கடத்வவிசிஷ்ட ரூபங்கடமும், படத்வவிசிஷ்ட ரூபம்படமும் ஆண்டெங்ஙன மங்கீகரிப்பது. கடபடங்கள் என்பதும் விசிஷ்டமே யென்னற்க, சுதந்திரமாய் கடபடங்கள் பரஸ்பரம் சேராதனவாய் ஆண்டுவிவகாரத்தான், மீண்டு தண்டிபுருடனைப்போலக் கடிபடம் படிகடம் எனவாதல் ஆண்டு விவகாரமில்லையாம். ஏகஞானதி யாருடத்தகைமையே அவைகட்கு இல்லையென வெண்ணற்க; எதனாற் கடபடங்கள் என அவற்றின் இருமை அத்துவயத்தைக் கவராத விஞ்ஞானத்தா லெங்ஙனம் கவரப்பெறும் எனப் பிரத்தியபிஞ்ஞைப் பிரஸ்தாவத்தி னுரைத்த தோஷங்களை யமைத்துக் கொள்வேமோ: இதனானே தடையிலாத நானாஞானருடத் தன்மையாம் விசிஷ்டத்தையும் நிரவகாசமாம்.

## 11. அதிப்பிரசங்க நிவாரக வேறுலக்ஷணநீக்கம்.

இனி அப்பிரகாசமான அசம்பந்த அநேகம் ஏகபுத்தியாருடம் அங்ஙனமாம், இங்ஙனங் கடபடங்களின்றும்; ஆக

எங்ஙனம் கூறியதோஷ அடைவாதல்எனின்? அன்றும், அப்பிரகாசமான அசம்பந்தம் எவற்றிற்குளன விப்பொருளும் கலப்பற்றதாமெனக் கடத்வ படத்வ வியக்தியாதி வைசிஷ்டியமும் ஆண்டு விசேடமின்மையாற் கெடும்.

12. அதிப்பிரசங்க நிவாரக இலக்ஷணாந்தர நீக்கம்.

இனி, தருமதருமி சம்பந்தங்கள் சுதந்திரங்களே ஏக புத்தி யாரூடங்களாகி யங்ஙனமாம்; கடபடங்கள் தர்மதர்மி ரூபங்கள் அன்றுமென அதிப்பிரசங்கமின்றும் எனின்? இன்றும், தண்டாதி குறைதி சாதாரணமாக ஏகதருமத்வம் வழங்க வேண்டியதாக வருதலின். அதுவும் இட்டப்பட்டதுதான் எனின்? நன்றுயிட்டப்படலாங்காண்! மனனிகர்ப்பக் கலப் பற்ற அதற்கும் அங்கீகரிக்கவேண்டியதாந் தன்மையானே தருமியே யேன் தருமமாகாது? அன்னணம் புலப்பாடின்மை யானே ஆகாதாம்எனின்? ஆகாதாம், நிகழ்த்திய ஏகப்பிர தீதி யாரோகத்திற்கு விசேஷமிலதாகப் புலப்பாடு மங்ஙனம் ஏன் ஆகமாட்டாது? தர்மத்வந் தொடர்பாகவுள்தாக வேண் டாம் அந்தஅந்த ரூபாதிபதார்த்த சொரூபமே அங்ஙனமாம், விசித்திரம்யாதோ அதுவே தருமியோடுஞ் சம்பந்தத்தோடும் சமமாய் ஏகபுத்தியாரூடமாய் விசிஷ்டமாம் அயலன்று மெனின்? அன்றும், அவற்றின் சொரூபங்கட்கு பேதத்தால் நானாபூதங்களாய விசிஷ்டங்களில் தொடர்புற்ற விசிஷ்ட புத்தியாகாதாம். ஆயின் சம்பந்தமும் லோபமுற்றதேயாகி இயற்கையானே ரூபாதிகளே அவ்விதம் கொள்ளலாம் இதுவும்ஏன் ஆகமாட்டாதெனின், அற்றுயின் துச்சமான தருமியையும் ஒழித்துவிடலாம், எங்ஙனஞ் சம்பந்தமில்

லாமலே விசிஷ்டமதியானது ரூபாதிசுபாவ சாமர்த்தியத்தாலேனா சமர்த்திக்கப்பெற்றதோ அங்ஙனமே தருமியில்லாமலும் உளதாகுக தானென ஜைனர்களால் வெற்றிகோடப்பெறும்.

## 13. பிரதீதிபலங்கொண்டு அதிரிக்த தருமிசித்தி நீக்கம்.

ஆருகதானிங்ஙனம், சுக்கிலம் என்பதாக இவ்வளவு மாத்திராதியே பிரதீதியாகுமேல், மற்றோ சுக்கிலஞ் சங்கம் என்பதாதிப் புலப்பாட்டால் ஒருநிலைக்களம்மேவி யொன்றலைத் தோற்றிவைக்கும் தருமியையும் கொணர்ந்து கொடுக்கப்படுமெனின்? கூடாதாம், சங்கத்தன்மைச் சாதியினதல் உபாதியினதல், தடையில்லாத அத்தகையதா யிருப்புற்ற ரூபாதியினதல் சொரூப வைலக்ஷண்யத்தையே தருமிபதத்தில் அபிஷேகிக்கலாம், எதனுல் அதிகரணமில்லாமலும் சாமானாதிகரண்ய விவகாரமாமோ. மேலும், இத்துணைமாத்திரமல்லவாம், புத்தியைக்கொண்டு அதனர்த்தத்துற்ற வைசித்திரிய வயற்கண்டனத்திற் புத்தியே தற்காரண சாமர்த்யத்தால் அவ்வாறுதித்தெழுந்ததாய் அவ்வவ்விவகாரமுண்டாக்குவதென அங்கீகரிக்கலாம், அருத்தவிசனத்தா லாற்றியது சாலும், ஆகலின், "அறியத்தக்கதன் விசித்திரமாதலுமறிவின் குறியெனத் திகழ்சான்றினைக் கொண்டு நேர்குலவும், துறைமதியினைக் கொண்டுமேற் குறைத்திடு மவர்க்குப் பற்றையுஞ் சான்றதே பங்கத்தைத் தந்திடுந்தானே"

## 14. விசிஷ்டநீக்க வேறுயுக்தி.

யாதுதான் கேவலம் ஒருவரால் அபாவத்தின்ஞானத்தில் அம்மாத்திரதீ அபிஷேகிக்கப்படும் அது அவருக்கே தகுமாம். "தூநுததியினை யின்மையின் குலவிடமிடத்தில், தருவதாகவே புரிகுவ ரிச் சகந்தனிலே, தெரிவதாகவே திகழ்ந்

திடுங் திரழ்தரும் பிரபாகரர் கரந்தரும் புத்தரின் பந்துவாய்க் கமழ்வர்" மேலும், ஏகபுத்தியாரூடம் அநேகமும் சம்பந்தமும் விசிஷ்டம்என்னும் பக்ஷத்தில், இவ்விதவடிவ வைலக்ஷண்யத்தைப் பஜிப்பது யாதுதான் விசிஷ்டம்என விளம்பப்பெறுமோ, அதுவும் இவ்விசிஷ்டம் அவிசிஷ்டத்தினும வைலக்ஷண்யத்தால் உணர்த்தப்பெறுவதாய் ஞானத்தையுள்ளடக்கியேயாமென ஆண்டாண்டும் வேறுணர்வு நுழைவிக்கின் அநவஸ்தையாம், சில்பாற் புகுத்தாவிடின் அஃதின்மையின் அவிசிஷ்டத்தன்மை யுளதாயவழி சேடத்திற்கு மூலம்வரை அவிசிஷ்டத்தன்மையி னுடைவாம். அதன்யோக்கியம் அவ்வாறுமெனின்? ஆகாதாம், ஆயின் யோக்யதையும் அதன்விசேஷணம் மணல்போல நன்குபடாததாய் மிகுமடைவே யெனப்புகன்றதே. திரும்பிவரும்.

## 15. விசிஷ்டத்திற்கே வேறுவகையானே விலக்கம்.

இவ்வண்ணமே, ஏகமெனவும், ஞானமெனவும், ஆரூடமெனவுமாதித்துவாரங்ளாற் காணத்தககதாம், அங்ஙனமன்றே "அடைப்படுத்ததற் கடையடுத்ததி லதினும்யலேற், புடையயன் மதிபுகுந்திடுமெனிற் புகும் வரம்பி, றடையதன் மதித்தாரை விசிராந்தியதாமேல், உடைய மூலமுள்ளடையடுத்திலததேயுறுமால்" விசிஷ்ட நிராசத்தானும் சர்வஇலக்கணங்களும் நீக்கப்பட்டனவே யாமென எண்ணத்தக்கதாம். பண்பின்பற்றுக்கோடு பொருளென முதலனபோலும்.

## 16. திரவியலக்ஷண கண்டனாரம்பம்.

இதனுனும் பண்பின்பற்றுக்கோடு பொருளென்பது அசங்கதமாம்; அங்ஙனமன்றே:—யாங்ஙனம் இவ்விலக்கணம் துணிதல்கூடும், சங்கைரூபப் பண்புடைமையானே ரூபாதிகட்கும் தோற்றமுண்மையின். இதுமயலாமெனின்?

முன்முதலியவற்றின்கணனே யாங்ஙனம் மயலிலாமை யென்பது கூறத்தக்கதாம், ஆண்டுப் பாதகமில்லாமையின் எனின்? சமமேயாம், பண்பிற்குப் பண்புடைமையிற் பாதகம் எம்மனோரால் கூறக்கிடந்த தொருதலையே நிர்க்குணங் குணமெனபது சித்தாந்தமாமெனின்? ஆகாதாம், ரூபாதிகட்குப் பண்புமையே துணிதல் முடியாமையின்.

## 17. குணஇலக்கண நீக்கம்.

சாமானியமுடையது குணமென்பதாதி குணலக்ஷணம் பொருந்தலான் அந்நிச்சயமாமெனின்? ஆகாதாம். அகுணமென்க் குணவிலக்கண அங்கிசத்திற்கு அசித்தியாதலின் சங்கையுடைமையானே தோற்றத்திற் கிருப்புண்மையின், மயலாமெனின்? இன்றும், அன்னியோன்னிய ஆசிரயப் பிரசங்கமடைதலின். சங்கையுடைமையானே தோற்றுவதற்கு மயலாயவழி குண இலக்கணசித்தி. அது சித்தியாயவழியோ பாதத்தான் மயற்றன்மைத் தாபனம், வேறு ஹேதுவினானே ரூபாதிகட்குக் குணத்வ சித்தியாகியவழி பாதகசித்தியில்லையாம், திருஷ்டாந்தத்திற்கும் சங்கையுடைமை யுணர்வுண்மையானே அடைவுற்ற பொருட்கோடிப் பிரவேசமாதலால் பண்புமையானே யசித்தியாதலின், சங்கைக்குச் சங்கையுடைமையானே வரம்பின்றியோடல் வழக்காதலின் நிர்ச்சங்கைத்தன்மை விவஸ்திதியாகியவழி திருஷ்டாந்தத்தைகம் சம்பவிக்குமாலெனின்? ஆகாதாம், வேற்றுமையானும் அதற்குச் சம்பவிக்கத்தக்க பொருட்கோடிப் பிரவேசத்தன்மையான். இங்ஙனம் வேற்றுமைக்கும் சங்கையுடைமையானே யாமென்றறிக.

## 18. குணத்திற்கு வேறு இலக்கணநீக்கம்.

ஜாதியிதர ஆசிரய அகர்மரூபம் குணமென்பதும் ஆகாதாம், ஜாதிவியாபகமாதலின். ஜாதிமாத்திர ஆசிரயம்

என்பதேயருத்தமாமெனின்? ஆகாதாம், அபாவ ஆசிரய மாதலினானே அகில அவ்வியாபகமாதலின். ஜாதிமாத்திர பாவ ஆசிரயமெனின்? அன்றாம், உபாதிகட்கும் அதனாசிரி தத்தன்மை யுண்மையின், உபாதிகளின் ஆசிரயம் ரூபாதி யொல்லாதாம், மற்றோ, எங்ஙனமேனும் சம்பந்தி அத்துணை யானே அனுமைமுதலியவற்றின் பிரவிருத்தியெனின் அன் றாம்; உபாதிசம்பந்தப்பொருட்டும் ஆசிரயத்தன்மைக்கு எண் ணத் தக்கதாந்தன்மை யுண்மையின், மாறாயினோ, சிறிதுரூப மீண்டுவிரும்பவில்லையாயின் அக்காற் சாமானிய விசேட அனுமானம் ஆண்டுஆகாதாம். வேற்றிடமுடையவற்றிற்கு அடக்க லடங்கற்றன்மை யங்கீகரியாமையின். ஆகலின், எவ்விதேயிலக்கணம் அஃதாண்டு ஜாதிரூபமன்றாம் அவ்விவ் வுருவம் ரூபாதியின்கண் ணின்றாமாயின் அக்கால்உண்டாம், உளதாமாயின் இலக்ஷம்-என விசித்திரமாகப் பட்டதெனப் பகரின் படவில்லையெனவும் படவில்லையெனப்பகரினோ பட்ட தெனவும் ஆங்கிரீடையை யனுசரித்தன்றோ இருக்கின்றது.

## 19. திரவிய இலக்கணத்தில் வேறு தூஷணம்.

மேலும் குணாசிரயம் என்பதன்கண்ணே ஆசிரயப் பொருள்யாதாம்? சமவாயியெனின்? ஆகாதாம், பண்புமை முதலியவற்றிற்கும் பொருண்மைவழக்காதலின் குணவச் சின்னசமவாயத்திற்குப் பண்புமையிலும் இலைப்பாறுந் தன்மையுண்மையின். குணம்சமவேதம் யாண்டு அது குண சமவாயியெனச் சாற்றும் விழைவெனின்? ஆகாதாம், யாண்டு என்பதாகிய அதிகரணப்பொருள் இன்றும் இயம்ப வேலா மையின் அதனானே, அதனை விவரித்தல் கூடாமையின். நண்டென்னும் உணர் வேதுவாதாரமெனின்? அன்றாம், நண் டுச் சங்கிற்பீதிமையென்னும் உணர்வாற் சங்கிற்குப் பீத குண அதிகரணத்வ வழக்காதலின். இதுமயலாம் உண்மை

யசயவுணர்வோ ஈண்டியம்ப விச்சித்ததாம் எனின்? இவை யாதாம், அதனர்த்த அசத்வநிரூபணமன்றியில் அதனப் பிராமாண்யத்தை யுணர்த்துவான் முடியாமையின். இன்றும் ஈண்டென்னும் உணர்வின்பொருள் தோற்றுவதின்றும், எப் பிரதியோகியுடைய அசத்வம் ஆண்டு நிரூபிக்கப்படுமோ; பீதத்தன்மை பிரதியோகி அதுவும் சிலபாற் சித்தமேயாம் எனின்? அன்றும்; அஃதளவையான் அளக்கப்படுதலானே அசத்துவம் பொருந்தாமையின்; ஆண்டது அளவையான் அளக்கப்படுதல் இல்லையெனின்? அன்றும், ஆண்டென் ஆதாரத்தன்மை நிரூபிக்கமுடியாமையின்.

## 20. திரவியத்தின் வேறிலக்கண தூடணம்.

இதனானே சமவாயிகாரணம் திரவியம் என்பதும் இலக்கணமன்றெனத் தள்ளப்படும். எங்ஙனம் நிர்ணயிக்கமுடியும் இது சமவாயிகாரணமெனத்தான், இஃதன்றெனத் தான், ரூபாதிகளிலும் கடாதிகளிலும் சங்கைச் சமவாயிகாரணத்தன்மை யுக்திசமமாகலின். சங்கையே ரூபாதிகளில் இன்றுமெனின், கடாதிகளில் எங்ஙனமுளதாம், உணர்விற்கு பயத்தலத்தும் ஒப்புமையுண்மையின் எனவுரைத்தனைத் தொடர்ந்து காணலுசிதமாம். திரவியத்தின்கண்ணே சங்கையை சுவீகரித்துக்கொண்டால் அதன்சம்பந்தத்தானே குணத்தின்கண்ணும் அதன்வியவகாரம் நண்ணுறுநிற்கும் என்பது கற்பனை லாகவமாகலின் குணத்திற் சங்கைமுதலன அசுவீகாரமாமெனின்? மாறுகவே யேன் ஆகமாட்டாது, சத்தா சாமானியாதியையும் குணாதியின்கண்ணே யாதின்பொருட்

டுக்கோடல் வேண்டும்பொருள்வாயிலாகவே ஆண்டு விவ கரித்தல் கூடுமாதலின்.

## 21. சாமானிய இலக்கண கண்டன ஆரம்பம்.

அற்றேல் சாமானியப்பொருளேதான்யாதோ? அங் ஙனமன்றே:— தொடர்ந்த வுணர்வின்காரணம் சாமானிய மென்பது இலக்கணமாகாதாம், சாமக்கிரியையால் எல்லாக் காரியமும் உண்டாதலின் அதனுல் அதனேக தேசாந்தரங் களாலும் பிறழ்ச்சியுறுதலின். அசாதாரணவிசேஷணத்தானே அனன்னிய ஜாதீயப்பிரயோஜகத்தன்மையும் அதுவாமெ னின்? ஆகாதாம், தற்சாமக்கிரியையின்கண்ணும் வழுக்கு ஆங்கே நிலைபெறுதலின். பேத வுணர்வாதியின்கண்ணும் பிரயோஜகத்தன்மையானும். இவ்வுணர்ச்சி பிரமாணமுடை மையெனின்? அன்றாம், தற்சாமக்கிரியின்கண்ணும் இதற் குப் பிரமாணத்தன்மையால், இது ஏகப்பிரமாணமுடைமை யெனின்? இயலாதாம், அர்த்தக்கிரியா பேதாதிகட்கும் ஆண்டுப்பிரமாணத்தன்மையுண்மையின். இப்பிரதிபத்திப் பிரமாபகத்தன்மையெனின்? அல்லவாம்; அதன்விசிஷ்டத் திற்கும் அத்தன்மை வழுக்காதலின். அதனவைச்சின்னப் பிரமையங்கிசப்பிரமாபகத்தன்மை யெனின்? அன்றாம், அதன் அசித்தியினனே யசித்தியாதலின். இப்பிரதீதி எஃ தில்லாமற்பொருந்தாதோ அதுசாமானியமெனின்? ஆகா தாம் காரகாந்தரங்கட்கும் அவ்வாறாந் தன்மையுண்மையின்.

## 22. சாமானியத்தின் வேறு இலக்கண தூஷணம்.

தொடர்ந்திருப்பது சாமானியம்என்பதும் அலக்ஷணமாம், இவ்வனுவிருத்தத்தன்மை யென்பதென்னே? அநேக ஆசிரி தத்தன்மையெனின்? ஆகாதாம், அவயவியால் சம்யோகாதி களாலும் வியபிசாரம் வருதலின். நித்தியத்தன்மை யோடு

மெனின்? அன்றும், சமவாயத்தால் வியபிசாரம்வருதலின். இதனுனே, மிகுவிருத்தித்தன்மை யென்பதும் ஆகாதாம். அசம்பந்தத்தன்மை யோடுமெனின்? அன்றும், அணுக்களால் வியபிசாரம் வருதலின். நித்தியத்தன்மையோடுகூடி அநேகசமவேதம் சாமான்யம் எனின்? அன்றும், விகற்பஞ் சகியாமையின். இவ்விலக்கணம் நித்தியமா? அநித்தியமா? ஆகியதாகர்தாம், தன்வடிவில் விருத்திவிரோதம் வருதலின் விசிஷ்டப் பிரவிசிஷ்டமாயினுமே நித்தியத்தன்மைநித்தியமேயாம்.

## 23. இரண்டாவது விகற்பதூஷணம்.

இரண்டாவதுமாகாதாம் சாமான்யத்திற்கும் சமவாயத்திற்கும் நித்தியத்வ அபாவப்பிரசங்கம் வருதலின் ஆன்மத்தன்மை முதலியவற்றே வியக்தியபாவத்தால் வருவதேயான விசிஷ்டாபாவமும் அசம்பவமாதலின், அதற்கும் ஒருக்கால் அசத்வம் அங்கீகாரமிலதாயின் அதன் அநித்யத்தையே கூறமுடியாமையின். அதைக்கவருவதான வுணர்ச்சிக்கும் ஏககாலத்திற்கும் பொய்வாய்க்குமேல் விசேடமின்மையின் சார்வகாலிகத்திற்கு மித்தியாத்வ வழக்கான் எல்லாவாற்றுனும் அதனசத்துவங்கூடலின். ஏகத்திற்குஞ் சத்தியத்வமாயினே விசேஷயின்மையின் சர்வசத்யதையாகியவழி ஒருபோழ்திலுமே அதனசத்வ மின்றுமென்க. ஒருபோழ்தில் அதன்சம்பந்தத்தானே யுபலக்ஷிதத்திற்கு மற்றொருபோழ்திலும் இருப்புண்மையின் அவ்வாறூர்தன்மையெனின்? அற்றன்றும், அத்தகைய வுபலக்ஷிய அசம்பவத்தான் வியக்திகளின் வேற்றுமையான் அநித்யத்வ அநுபபத்தியேயாம்; இதனுனே நித்தியத்தன்மை பிறவிட்டத்தும் உத்தரமளிக்கத்தக்கதாம்.

## 24. விசேஷலக்ஷணகண்டனாரம்பம்.

இவ்விலக்கணத்தானே எவைதாம் விலக்கப்படுகின்றன விசேஷாதிகள் எனின்? விசேஷங்களெனத் தான் யாவை யறையப்படுகின்றன. ஆண்டு நித்தியங்களிலேயே திரவியங் களிலேயே நிகழுகின்றனவே எவை யவை விசேஷங்கள் என் பதி அலக்ஷணமாம். ஆத்மத்தன்மைமுதலியவற்றானே வியபிசாரமெய்தலின், வேறுநித்தியத்தில் இல்லாமையானும், அதுயாண்டும் நித்தியத்தில் நிகழ்தலின்றும் விசேஷங்களோ அங்ஙனமன்றும் நிகழுகின்றனவே யென்னும் நியமத்தால் எனின்? இன்றும், விசேஷந்தோறும் அவ்யாப்தியானே அலக்ஷணத்தன்மை யுண்மையின். எச்சாதிசம்பந்தமானது இங்ஙனம் என்இலக்கணார்த்தமெனின்? ஆகாதாம், ஜாதி யங்கீகரியாமையின், ஜாதிசம்பந்தம் என்பது அபுதமாத லின். உபாதியே அங்ஙனம் அறைய அவாவியது எனின்? ஆகாதாம், இதரத்தைவிலக்குவதாய அதனையறிந்தவழி அது னுபஜீவி யிலக்கணம் இதுவாளாயோம், இதனானே விஜாதீய வியாவிருத்திப் பிரதீதியாதலின், இதரவியாவிருத்தத்தை யறியாத வழியோ இலக்கணத்திற்குத் துணியப்பெறாமை வந்தடைதலின் இதரவியாவிருத்தத் தன்மையானே அச் சாதீயுத்வத்தின் அப்பிரதீதியாதலின்.

## 25. விசேஷலக்ஷணநிராசம்.

ஆருக அதுவேயுபாதி யிலக்கணமெனின்? ஆகாதாம், அஃதறையமுடியாமையின், எதனான் நித்தியதிரவிய வியக்தி களில் விசுவவியா விருத்தவுணர்வு யோகிகட்காமோ அது விசேஷமாம் எனின்? ஆகாதாம், சொரூபதருமவியக்தி பேதங்களிலும் வழக்காதலின்; அன்றியினே காரியதிரவிய குணாதிவியக்திகளில் அதுஅவர்கட்கு எங்ஙனமாம் அவற்றிற் போல வைதார்மியாந்தரம் நித்தியங்களிலும் சம்பவித்தலின்

விசேஷம் போலும் விசேஷ அசம்பவத்தானே இலக்ஷிய அசித்தியென்பதாம்.

### 26. விசேஷத்தின் சர்வஇலக்ஷண சாதாரணதூஷணம்.

மேலும் விசேஷாதிகளினும் விசேஷலக்ஷணாதிக்குப் பேதமுண்மையின் எங்ஙனம் ஆண்டு ஆண்டே அவற்றால் விசேஷாதிவிவகாரம் செய்துகொள்ளலாம் பிறவிடத்தின் றும், சம்பந்தம் நியாயகமெனின், ஆகாதாம், சம்பந்தத்திற் கும் வேறு சம்பந்தத்தான் நியாமகமாயின் வரம்பின்றியோ டல் வருதலின், மாறாயினோ, அநியமமாதலின் அஃதறைய் வொண்ணாமையானும் என்க.

### 27. சம்பந்தகண்டனம்.

அங்ஙனமன்றோ:—சம்பந்தசப்தப்பொருள்யாதுகொல்? சமவாயாதிகள்எனின் ? உண்மையேமற்றோ, எந்நிமித்தத்தா லென்பதே விணவாக்கிய தாற்பரியம்; தன்தன்பொருட்டு விலகிவந்த சம்யோகத்வாதியானா? அல்லது அன்னியத்தானா? ஆதியதேல், தொடர்ந்தவிவகாரம் பொருந்தாமைவழக்காம், இதுபொறிப் பொருட்சம்பந்தத்தாலுளதாய தாதிப்பிரத்தி யக்ஷம் நித்தியப்பிராப்திச் சமவாயமென்பதாதியின்கண்ணே உளதேயாம். இரண்டாவது மிசையாதாம், அவ்வொன்றற் கசம்பவத்தான்.

### 28. நியாமகத்தன்மைக்குச் சம்பந்தத்தன்மைக கண்டனம்.

நியாமகத்தன்மை யஃதாமெனின் ? அன்றாம், சுபாவத் திற்கும் உன்னால் நியாமகத்தன்மை யங்கீகாரத்தான், அவ் வகையாய அதுவும் சம்பந்தமேயெனின் ? அன்றாம், உன் னால் சர்வசுபாவ.நியந்துருத்தன்மை அவசியம் அங்கீகரிக்க வேண்டி யிருத்தலினானே நியாமகநிருக்தி லப்பியசத்துவத் தினும் அதிகாங்கிச அசாமர்த்திய அடைவாதலின். நிய மியமாய தனக்கும் மிகுவழக்கின்மையினானே நியாமகத்தன்

மைவாக்கூகம் கூடாமைமின் மிகுவழக்காந்தன்மை யேலோ அதற்கேநியாமகத்தன்மைமின் மிகுவழக்காங் நியமம் கூடா மைமின் ஆகிநியமஞ் செய்மினே முன் அநியத்தன்மை யெய்தலின் இங்ஙனம் அந்நியத்தானும் சன்னிய நியமத் தாம்; அன்னியமுந்தான் பூர்வங்கடாதி ரூபத்தால் அநி யதமேயாய கடாதி செய்வதாயின் அக்காற் படாதியும் அங்ஙனஞ் செய்யலாமே.

## 29. காரணத்திற்குக் காலயோகப் யோருட்டு நியாமகத் தன்மை யேன்னுஞ் சங்கைநீக்கம்.

கடாதித்தன்மையில் நியந்துருத்தகைமை யன்னியத் திற்கு இலதாம், மற்றே, கடாதிக்குக் காலவிசேஷ யோகமே னின்? ஆகாதாம், இக்கடாதிகாலவிசேஷ யோகிதை நிய தநதை யங்கீகரித்திலதேல் அக்கால் படாதிகால விசேஷ யோகமும் அவ்வாறு செய்யலாம், ஆகலின், "அயலாய வேதுதான் அசற்காலாநியதம், செயலாம் நியதஞ் செறியுமா லெனினே பெயுமது வாமதிப் பிரசக்தத்தகைமையே, அய லாயினே நியந்திருதையாமே".

## 30. கண்டனுந்தரம்.

காரியகாரணங்கட்குக் காலபேதத்தானே நியமிய நியா மகத்வ அங்கீகாரமேல் உத்தரஉத்தரத்தாற் பூர்வபூர்வ நிய மம் எறுகமாட்டாது என்னும் நிண்ணயமின்மைமினடை வாம், "முன்னதாற் பின்னதன் நியமமுளுமேல்; அன்ன தான் முன்னதேயாயிடாததேன்,பன்னஞ்றுதியினொடு பகரந்த மாய்த், துன்னியாற்றினிலின்னறுணிதன்மேவுறு" ஆகாமற் செய்மினே வியாகாதம்வருதலின்; சம்பந்திக்கோ ஆதாரத் தன்மையுண்மைமின், சம்பந்தத்திற்கு ஆதேயத்தன்மையுண் மைமின், அதற்கே அதனுதாரத்தன்மை யமையாமைமின்,

யொன்றுபற்றுதல் சமவாயியெனின்? முயலிற்கோடின்மை, குண்டத்தி லிலந்தைக்கனி என்பதாதி யவ்வியாப்தியாதலின் கௌணமாண்டுபிரயோகமெனின்? அன்றித்துணைமாத்திரம் பிரத்தியக்ஷ்தான் மயக்கமெனவும் மலரத்தக்கதாதல் எஞ்சுகின்றதன்றோ நினக்கு, ஓமென்றுரையாடின், நல்லது மாறுகவேதானேனுகமாட்டாதோ, முயலிற் கோடில்லை என்பதாக விசேஷணபாவ அதிகரணத்வப் பிரதீதிமயக்கமேற் கோட்டிற்கு ஆயின் முயல் அதிகரணமாம்; பாவாபாவங்கள் இரண்டுமொன்று கிடைதப்படின் இரண்டுமொன்று விதானப்படல் முடிவுபெறுமென அங்கீகரித்திருத்தலின் என்க.

## 33. ஆதாரத்தன்மைக்கு இலக்கணாந்தர நீக்கம்.

வீழ்ச்சித்தடையதிகரணமெனின்? அன்றும், அவயவியின் பொருட்டும் குணாதிகளின்பொருட்டும் அஃதின்மையின் தடையற்ற கீழிருப்பெனின் அல்லுவாம், குணாதியபேக்ஷைபாற் குணமுடையதாதிகட்குக் கீழிருக்குந்தன்மையிற் பிரமாணமின்மையின். விசேஷமின்மையினாற்றான் அவயவிகுணாதிகட்கு அவயவஆதாரத்வ வழக்காதலின். மேலேயிருக்கும் சையோகிக்குச் சையோகப்பொருட்டும் அஃதின்மையின் சூத்திரம்பற்றிய திரவியாதிகளில் வெகுவாகப் பிறழ்ச்சியுறுதலின்.

## 34. அதிகரணசப்தத்திற்கு நானார்த்தங்கள் எனினுந்தோட்டம்.

அதிகரணப்பொருள் ஒன்றெனப் பொருந்தாதாமேலாயினே அக்ஷசப்தார்த்தம்போலும் வேறாகவேயிருக்குக வெனின்? ஆசிரயாசித்தியாதிகட்கு வேற்றுமைவழக்காதலின். அதுவும் அங்கீகரிக்கத்தக்கதேயெனின்? முடியாதாம், அசித்தியாதிவகை நன்கெண்ணும் விகாரத்திற்கு அயலா

அபேக்ஷையான் மகத்பரிமாணத் தன்மையோடெனின்? அன்றும், கரதலத்திருக்கும் தூலாசியுர்தியில் அஃதசம்பவமாதலின், ஆண்டு ஆதாரார்த்தம் அன்னியமெனவும் இயம்புவான் இயலாதாமாதலினென்க.

## 36. கீழ்சப்தார்த்த நிரூபிக்கமுடியாமையின் இலக்கண அசித்தி.

கீழ்சப்தார்த்தத்திற்கும் கீர்த்திக்க முடியாமையின் வீழ்ச்சியபிமுகத்திக்கிலிருக்குந் தன்மையெனின்? அன்றும், வீழ்ச்சிப் பொருள் சுமனாதிகமாகக் கீழ்சப்தார்த்தத்தயலாய்க் கூறுவான் முடியாமையின். இதனானே கீழ்சப்தார்த்தத்தின் கூற்றுக் கூடாமை யுணர்ந்து அத்வைதவாதியாகிய குருவாற் சீடன்பொருட்டு அருளிய கண்டனத்தை மிக்க கழறும் ஸ்ரீபகவான் பராசரால் "கீழெனுங் கிளவி கிளத்துவதென்னே, மேலெனுமொலிதான் மிழற்றுவதென்னே" யெனக் கூறப்பட்டுள்து.

## 37. வேறுவகையானே கீழ்சப்தார்த்தங் கூறமுடியாமை.

பிருதிவியை யினிதுநோக்குந் திக்கு கீழ்சப்தார்த்தம் எனின்? ஆகாதாம், மேல்சப்தார்த்தத்திற்கும் பிருதிவியை யினிது நோக்குந் தன்மை சம்பவித்தலின், எதனைக்குறித்துப் பிருதிவியபிமுகம் எத்திக்கோ அதனைக்குறித்து அது கிழாமெனின்? ஆகாதாம், எதனைக்குறித்தென்பதென்னை? எதனை யவதிப்படுத்தி யெனவிளம்பும் விழைவா? அல்லது, எதனது அபிமுக்கிய வியவஸ்திதமெனவா? ஆகியதேல், பிருதிவி மேலிருக்கும் யதார்த்தத்தை யெல்லைப்படுத்தி யாது மேற்றிக்கென வுனால் விவகரிக்கப்படுமோ அதுவும் பிருதிவி யபிமுகமாகும் என்பதாக அதுவுங்கீழாம். இதனானே இரண்டாவது இயையாதே, எத்திக்கிற் கிரியையாற் பிரு

திஸி சமீபமாமோ அத்திக்கு கீழாமெனின்? ஆகாதாம், கூடாதிகளில் இடையிற் சென்று குறுக்கேயாடிக் கொண்டிருக்குமந்தன்றுழில் வீழ்ச்சியாம்; அச்சுதியாக்கிராக்தமேயாயதிரியக்குத்திக்குகீழாம். பிருதிவியையெல்லேப்படுத்தியாதொரு அன்னியபதார்த்தத்தையும் அவதிப் படுத்தியாது இடையென்னும் இடமாக விவகரிக்கப் படுமோ அது பிருதிவியினுமயலாய அதன வதியைக் குறித்துக் கீழாமெனின்? ஆகாதாம் பிருதிவியின்கண்ணே அதன் அவ்விவகாரமடைவாதலின். பிருதிவியையும் வேறுப்தார்த்தத்தையும் அபேக்ஷித்து மத்தியத் தன்மையாகக் கூறவிழைந்ததற்குக் கீழ்சப்தார்த்தத்தைக் காட்டாமல் மொழியமுடியாமையின். கீழ் ஆண்டு பிருதிவியைக் குறித்து மேல் அயலைக் குறித்தோ. இங்ஙனம் இயம்புதியோமத்தியத் அவற்றின் மத்தியமென தன்மை, அன்றாயின், திரியக்கும்வழக்கேறலின். அஃதெங்ஙனம்:— பிருதிவியைக் குறித்துப் பூர்வம் அயலைக்குறித்தோ பச்சிமம் அவற்றிற்கு மத்தியம் அறையப்பெறும், விருத்த திசைகளிலிராநின்றவைகட்கு ஒன்றற்கொன்று குறித்து. விருத்ததிசைச் சங்கரத்தில் மத்திய விவகார வழக்காதலின்.

## 38. அயலாதாரார்த்த மறையமுடியாமை

இனி அயல்யாதேனும் ஆதாரார்த்தம் ஆகுக, தோற்றத் துணிவுறுதலின், தோற்றத்திற்கும் இங்ஙனம், அன்னிய வுபபாதயத்தன்மையுண்மையின், இவ்வாறாகாதாம்; அஃது அநித்தியமாமா? நித்தியமாமா? அஃதில்லாதாகவே ஆதாரத் தோற்றமின்மை வழக்காதலினானும், கோத்தன்மைமுதலிய நித்தியத்தன்மை நியாய வொப்பினும் இதற்கநித்தியத் தன்மை மெய்தின் அவற்றிற்கும் அநித்தியத்தன்மை யடையப்படுதலினானும் ஆதியதாகாதாம். மற்றதுமற்றதாம், அத்

தகையதும் தொடர்வுற்றதா? தொடர்வற்றதா? கடைய தேல் தொடர்ந்த ஆதாரத்தோற்றம் அசம்பவமாம், ஆற்றற் கவர்ச்சி யாகாமையுமாம். முதலதேலோ சாமானியம் பேர் லும் பற்றுக்கோட்டைப் பாருததா? அதைப்பாறுவதா? ஆகியதேல், யாதுதான் அதனதாதாரமாகப் புலப்பட்டதோ அது அதன்தாதேயுமாகர்தாம். இரண்டாவதை யியம்பி னும், நியாமகமில்லாமலே அது தனது பற்றுக்கோட்டைப் பஜிக்குமெனினும் தெஜிக்குமெனினும் அஞ்ஞான்று நியம அடைவின்மையான் எஞ்ஞான்றுமே அதற்குப் பஜனத் தெஜன உசிதவுணர்ச்சி விவகாரவழக்காம்.

## 39. இரண்டாவது கற்பங்கழித்தல்.

இனி அதனது பற்றுக்கோட்டின் பஜனத்தியஜனங் களில் நியாமகம் உளதாம் ஆயின் அஃதறையத்தக்கதாம். அதுவுங் கற்பிக்கப்பெறும், மாறாயின், ஆதாரத்தோற்றம் பொருந்தாதாம் எனின்? பொருந்தாதாம், அதனை யினிது கற்பிக்கில் யாதுதான் பஜனத்தில் நியாமகமாமோ அதுவே யாதார அர்த்தமாயுளதாகுக, ஆகவே முற்பரி கற்பிதத்தா லடைந்ததுமுற்றும்; அங்ஙனமேதானுள்தாகுகவேயெனின்? ஆகாதாம், அதற்கும் தனது பற்றுக்கோட்டைக் கொள்ளத் தள்ள நியாமகம் அவசியங்கூற வேண்டியிருத்தலின் அதற் கும் எனவிங்ஙன் வாளாபோதலாமென அதிகத்தை யினிது கற்பியாதொழியின் நியமம் பொருந்தாதாம், அதிகத்தை யினிதுகற்பிக்கினோ முன்முன்வாளாபோதலாம் வழக்காம் என்பதாகக் குருதாவிசனமன்றோ வுண்டாம். ஒன்றற்கொன் றால் ஒன்றற்கொன்றிற்கு நியாமகத் தன்மையாமெனின்? ஒன்றற்கொன்று பற்றுற்றபொருள்களினும் ஒன்றற்கொன் றிழுப்புண்மைவிவத்தையால் என்னில செய்திநின்றருவே நினக்கு விடை. பொதுமைமுதலன்வும் ஆயினிங்ஙன்

யொருந்தாதனவே யாமெனின் ? உரக்கஉரைத்திடாதே யாவரேனும் கேட்பரேலாமாயின் எமக்குப் பேரனிட்டத்தை விளைவித்து விடுவரன்றோ.

## 40. வேறுகண்டனம்.

மேலும் எவ்வவ்வாதாரத்தன்மையுளதோ அது ஆதாரத்தோடு கூடியதா ? கூடாததா ? ஆதாரத்தோடு கூடாத தேல், சிறப்பின்மையின் யாண்டு தற்சிறப்புறுமுணர்வைப் புரியும் ? முதலதேல் அதனுதாரத்தன்மை யறையத்தக்கதாம், சொரூபமேயதற்கு அத்தகைய்தாம் எதனுனே தானே சத்தைதன்னிடத்திற்சத்தையயலையவாவாமலே சத்தையுணர்வைச் செய்கின்றதோ அங்ஙனம் இதுவும் ஆதாராந்தரத்தை யவாவாமலே ஆதாரவுணர்வை யாற்றுவதாமோ வெனின் ? மயற்றன்மை வழுக்காதலின்னுவ்வாதாம், வென்னித்தன்மை யில்லாமல் அதனுணர்வு எங்ஙனம் மயலாமோ அங்ஙனமேயாம், இப்பொருள் பேதகண்டனப் பிரஸ்தாவத்தில் விளம்பப்படுமெமன வீண்டு பரதியை யடைகின்றேம். ஆதார ஆதேயபாவமில்லாமலே இயற்கையாற்றுமையானே ஆத்மகத்தன்மை யுண்டாம், எங்ஙன் விடயவிடயிபாவத்தானே அருத்தஞானங்கட்காமோ வெனின் ? ஆகாதாம், இயற்கைச் சம்பந்தம் நிராகரிக்கப்பட்டிருத்தலின். விடயவிடயிபாவமென யாதை யிப்போது உதாகரணமாக்கினையோ அதுவுமறைதற்கு முடியாத காரியமேயாகும்.

## 41. விஷயவிஷயிபாவகண்டனம்

அங்ஙனமன்றோ:—யாது மீண்டும் உணர்வுமுதலியவற்றிற்குக் குடமுதலியவற்றோடு விடய விடயிபாவம் ? பிரகாசசத்திற்கு அதனதாரந்தன்மைமாத்திரரூப ஸ்வபாவவிசேஷமாம் எனின் ? ஆகாதாம், இச்சாதிவிஷய அவ்யாப்தியெய

தலின், விஷயிச் சத்திற்குளனின்? ஆகாதாம் அத்தன் மையே நிரூபித்துத் தீரவேண்டியதாக இருத்தலின்.

## 42. ஸ்வபாவசப்தார்த்த கண்டனம்.

மேலும், ஸ்வபாவம் யாதோ அதனை ஸ்வதருமமெனக் கூறவிழைவா? அல்லது ஸ்வாத்மாவெனக் கூறவிழைவா? ஆகியதேல், இதுபொதுவான ஞானத்தன்மையாகியா? அல்லது அவ்வக் கடஞான நியதமாய சிறந்தவொன்றா? முதல்தேல் பொதுவதாதலின் சிறப்பாக அதனதாந்தன்மை மாத்திரரூபத்தன்மை சம்பவியாதாம். இரண்டாவதேலோ விடயந்தோறும் விலகிய ஞானதருமமங்கீகரிக்கின், வசன பங்கிபேதத்தான் சாகார வாதஅங்கீகாரமாம். மேலும், இத்தருமம் அயதுப்பத்தியின் அதீனமன்றும், விடயபூத கடாதியினும் அயலான உபாதித் தோற்றவிழைவின் வழக்காதலின்.

## 43. குடமுதலியவற்றிற்கு ஞான அசாதரணதருமத் தன்மையின் நீக்கம்.

குடமுதலியவையே யங்ஙனமாம் என்றக, அசம்பந்தத்தான்; அங்ஙனமாயினும் அவ்வாறுமேலோ அதிப்பிரசங்கம் வருதலின். ஜாதிரூபமுமாகாதாம், சிலபாற் கடமாத்திர படமாத்திர ஞானத்திருப்பதாக தனிதனிநிலையாய வழிகடபடவிஷய ஏகஞானத்தில் உடனிருந்துநிகழ்வதால் நியாதுமைச் சங்கரப் பிரசங்கம் வருதலின். விடயந்தோறும் ஞானபேத நியமமேல் விசிட்ட வுணர்வு கூடாமையின்; இத்தகையதாய விசித்திர ஜாதியை யங்கீகரிக்கில், தனியுகித விவகாரத்திற்கும் அபாவ வழக்குண்டாதலின்; இனிச் சாதி சங்கரமுமங்கீகரிக்கப்படுவதாயினும் அவ்விசேஷமே

கட்ஞானத்தன்மை முதலியவையாகுகவென விடய அசித்தி யாம்.

## 44. பிரதீதியினுல் ஞானஞேயங்களின் சம்பந்த கற்பனை நீக்கம்.

இனிவிடயத்தினுலும் சம்பந்தவிளக்கத்தால் அதுவும் அங்கீகரிக்கப்படும், அன்றும், அச்சம்பந்தமே ஆராயவேண் டியதாக இருத்தலின். அதுவேதானிது வெனின்? ஆகா தாம், அதனொருமையான் ஞானர்த்த சாதாரண விடயப் புலப்பாடடைதலின். சையோகவுணர்ச்சிபோலும் விடயித் தன்மை ஆண்டு அறுத்தத்திலா விடயத்தன்மை யயலாம் எனின்? அன்றும், அதுவேநான் ஞாதகையாகும் அதுவும் நிராகரிக்கப்படும். இரண்டாவதன்கண்ணே, ஸ்வாத்மா கடபட வியத்திகட்கே போலும் கடபட்ஞான வியத்திகட்கு விலக்கமாமென அவ்வவ்விடயவிடயித்தன்மைவிடயத்தொ டர்ந்தவுணர்வு விவகாரபங்கப் பிரசங்கம்வருதலின்.

## 45. விஷயிதைக்கு ஞானசொரூபத்தன்மையிருப்பினும் விஞ்ஞானவாத அநிராகரணம்.

அன்றியும் அதனதாந்தகைமை ஞானத்தின்ஸ்வபாவம் என்னும் வசனம் விசாரிக்கத்தக்கதாம். அதனதாந்தகை மை = ததீயதா. ஆம் ஆகவே தத்என்பது ஆண்டுவிடய ஆராய்வாம், சம்பந்தித்தகைமை ஊஎன்னும் விகுதியின் பொருளாம், (ஆயனுதிசூத்திரத்தினுலேயே ஊமுதலிய ஐந்து விகுதிகட்கு ஆயன்முதலிய ஐந்து ஆதேசங்கள் ஆகின்றன, அம்முறையில் ஈயவிகுதிக்குச் சம்பந்தப்பொருள்வாய்ந்த ஊவிகுதியின் இடத்தில் வித்தனன்மையின் அதனுதேசம் அதுபோலுமாம் என்னும்நியாயம்பற்றி ஊஎன்னும் விகுதி யின்பொருளாம் என்றனர்) அஃதிது அன்னியோன்னிய விசி

ஷ்டம் உபயம் ஞானத்தின்ஸ்வபாவம் எனவியம்புவனால் விடயம் விஞ்ஞானத்தின் ஸ்வபாவம் எனவியம்பப்பட்டதாகும் எனவிஞ்ஞானவாதி நிராகரணப்பிரகரண வுபசம்ஹரணம் இனிதாற்றினன். சம்பந்தமாத்திரம் ஞானத்தின்ஸ்வபாவம் விடயமோர்வன்றும் என்பதுகருதீதாமெனின்? ஆகாதாம், சிறப்புக்கொள்ளாக்கால் சம்பந்தமாத்திரமாகிய இது எல்லாவற்றிற்குமேயாம். சம்பந்தம் எதனதுமன்றும் சுதந்திரமேயாமென அத்துணையாதாகாதாம் அதனால்; சம்பந்த சொரூபத்தன்மைபாறும் வழக்காதலின். நியதத்தினது மாகாதாம், தாதான்மிய அடைவு கூறப்பட்டிருத்தலின் நியாமகம் பொருந்தாமை யானும்என்க. காரணம் நியாயமதம் என்னின்? அன்றும் அந்நியாமகத்தமே யென்னும். அதன தாந்தகைமை அச்சம்பந்தத்திற்காமெனின்? அதேததீயத் தகைமை ஞானஸ்பாவபூதசம்பந்த ஸ்வரூபத் திட்புகுத்தப் பெற்றதா? அல்லதுவெவரிப்பட்டதர்மாத்ரமா?

### 46. ததீயத்தன்மையின்விடயவிடயிபாவத்தில் உள்ளடங்கல் உள்ளடங்காமை நீக்கம்.

முதலதேலாயினோ, தற்சப்தப்பொருளும் சொரூபத் திட்புகுத்தப்பெற்றதென விடயவுணர்வுகட்கபேதவழக்காம்; இரண்டாவதேலோ, அத்தருமாந்தரத்திற்கு விடயத் தோடபேதமாம், ததீயசப்தார்த்த விசிட்டரூபத்திற்புகுத் தப்பெற்ற தச்சப்தார்த்த விடயவிசேஷணம், அங்கீகரிக்கப் பெற்ற தருமாந்தா இயற்கைவடிவமதாக நின்றுலே இனிது நிகழ்த்தப்பெற்றுண்மையின்.

### 47. அபேதத்திலுந் தோடமாதல்.

உளதாகுக இத்தருமம் விடயபின்னமாகவெனின்? ஆயினும், அங்கீகரிக்கப்பட்ட சுபாவசம்பந்தத்தானே இஃ

நது. யாவன் உபேக்ஷயெனப்பெயரிய விவகாரத்தை யெண்ணுனே அவன் மதத்தில் யாங்ஙனம் உபேக்ஷ யுணர்வை யுபேக்ஷியாமலிருத்தல்கூடும்? ஹானாதி விவகாரஞானங்கட்கேயும் யாங்ஙனம் நிர்விடயத்தன்மை பொருந்தாதுறல்? இனியாண்டுமேஹானாதிவிவகாரஉடன்பிறமேல், அப்போது விவகாரஞானங்கட்கு உபாமமேயிராதாம்.

## 49. பிறவிடத்துத்தூஷண அதிதேசம்.

இதனுனே; எதன் நியதவிவகார அநுகூல சுபாவம் எதன் விஞ்ஞானமாமோ அது அதன் விடயம் அஃதுடைமை விடயித்தன்மையாம் என்பதாக அதன் சம்பந்தத்தன்மை மாது கூறப்பெறுமோ அதுவும் முன்மொழிந்த ஊகத்தைத் தாண்டி விடாதாம்.

## 50. சாலிக நாதராது விடய விலக்கண விலக்கம்.

இனி, எதே பொருள் எவ்வுணர்வில் இலங்குமோ அதே யொருள் அதன்வேத்தியமாம், அது தனித்த தன்றும், என வேத்திய அவேத்திய இலக்கணமாமெனக் கூறின், அதுவும் நலமென வுணர்ந்திலேம், எவ்வுணர்வில் என்பது, உணர்வதி காணமா? அதன்விடயமா? அல்லதுதான் என்சம்பந்தி மாத்திரமா? ஆதியுதன்றும், குடமுதலியவற்றின் அதனதி காணத்தன்மையை யங்கீகரியாமையால் அவ்வியாபனமாத லின்; எங்ஙனமோ அங்ஙனம் நிர்வசனீய ஞானத்தன்மையா லதிவியாப்தி வருதலினானுமென்க. இரண்டாவதோ இது காறும் நிரூபிக்கப் பெறவேயில்லை இனியெங்ஙனம் நிரூபக மாதல்? விபரீதத்தன்மை வந்துவீழ்தலனானும். மூன்று வதோ அதிவியாபகமாம், காரணாதிகட்கும் அதன் சம்பந்தித் தன்மை யுண்மையின்; மேற்றுணர்வால் ஒளிருந்தன்மை யுண்மையின், அதேயுணர்வால் ஒளிருந்தன்மையாமெனின்?

ஆகாதாம், ஒளிருந் தன்மைக்கே நிரூபிக்க வேண்டுந்தன்மை யுண்மையின், அஃதுடைமைக்கு அதன்நிரூப்பியத்தன்மை யுண்மையின். எவ்வுணர்வு ஒளிருங்கால் யாது ஒளிர்வதே யாமோ வெனின்? ஆகாதாம், பிரகாசமானதை நிரூபிக்க வேண்டியதாக இருத்தலின். சாமானியமாக விடயத்தன்மை துணியப்பெற்றவழி விசேடமாக விடயம் விளம்பலாமெனின்? ஆகாதாம், எல்லாவற்றானும் விசேடப்பொருத்த மின்மை வாயிலாய்ச் சாமானியப் பொருத்தமிலதாகவே அதன்விடய ப்பிரமாத்தகைமைக்கும் ஐயுறதலுண்மையின்.

## 51. சௌகதவிடய இலக்கணநீக்கம்.

ஞானாகாரத்தை யருப்பிக்கும் ஆற்றலுற்ற காரணமே விடயமாமெனின்? அன்றும், ஆகாரமே எதனுல் அருப்பிக்க ப்பெற்றதென் இனிது துணிய வலாமையின். ஆகாரமானது அந்த ஞானசொரூபத்தினும் அயலாகவில்லையாம்; அவ் வாறுற்புன்ன காரணங்கள் தனித்தனியே ஆற்றலுடையன இவ்வையாங்ஙனம் அவற்றுட் சிறப்பு நன்குதுணிந்திடுவாய்! சகல சமர்த்தஹேது அனுவிதான மூளதாமாயினும், அவற் றுட் கடத்தின் அனுவிதானம் படமாமென அதுவே அதனு காரசாதகமென அங்கீகரிக்கப் படும் எனின்? படாதாம். சமஸ்த வேறுகாரண அனுவிதானமென்னக் கட அனுவிதா னத்திற்கு ப்பிராமாணிகத்தன்மையொப்பால், படத்தன்மை படத்தன்மையின்மைகளால் ஆகவேண்டியதென்னே! பட அனுவிதானங்கொண்டே விடய விளம்பலே விளைப்பேம் எனின்? முடியாதாம், சர்வஹேது அனுவிதானத்திற்கும் நியாயத்தாற் படத்தன்மையுண்மையின். காணப்பெற்ற அனுவிதானம் எதற்கோவெனின்? அன்றும், விடைமுன் னிறுத்தலின். காணப்பெற்றமையே, விடயதை கூறவொண் ணுமையின் காண்பிப்பான் முடியாததேயாம்.

## 52. சிலவர்தம் விடய இலக்கணநீக்கம்.

ஞானகருமத்தன்மை யென்பதும் நலனன்றாம் ஞானத்தோடு கருமப்பொருட்குச் சம்பந்தத்தைச் சாற்றவேண்டியிருத்தலின், அது கூறமுடியாமையும் ஈசுராபிசந்தியின்கண் ஞாததை வாதத்திற் காணத்தக்கதாம்.

## 53. விடயத்தன்மையின் வேறுஇலக்கணநீக்கம்.

வேறுசம்பந்தமின்றி எதனது விசேஷணம் ஞானம் அதுவிடயமாம், அதனானே வேறுசம்பந்தமின்றி ஞானவிசேடியம் விடயம் விசேடியமும் எவ்விசிஷ்டமெனப்பெயரிய தத்துவாந்தரத்தை எதன்பாலிருக்கும் தருமம் கவராநிற்குமோ இதுவாம். ஈண்டறையப்பெறுகின்றது:—எதன்பாலிருக்குந் தருமம் கவராநிற்கும் என்னும் இத்துணைமாத்திரமே விளம்பும் வேட்கையா? கவராநிற்குமென்பதேயா? ஆகியதேல், தண்டத்திற்கும் விசேடியத்தன்மையின் அடைவாம் அதன்பாலிருக்கும் சத்தவாதி தருமங்களினாலுங் கவர்ச்சிகூடலின். அப்பாமுமல்லவாம், உண்டாமன்றே புகையின் விசேஷணமாக அக்கினிப்பிறழ்வுற்ற விடுபடாமூலகத்தன்மை முதலியவை; அதன்விசிட்டமாகவும் வேறுதத்துவம். விசேடியத்தின் றரும வியபிசாரித்தன்மையைக் கவராதாம்.

## 54. விசேஷணம் விசிட்டத்திற்கேயாம் புகைமாத்திரத்திற்கின்றுமென்னுஞ் சங்கைநீக்கம்.

இனிமேனில்லாது செல்லுதல் விசிட்டத்திற்கு விடுபடாமூலமைத விசேஷணமாம், அத்தகைய வடிவதற்கு வியபிசாரித்தன்மைத் தன்மமெனக் கூறுவதில்லை யெனின்? அவ்வாறாகாதாம், முதல்விசிட்டம் வியபிசாரியா? அல்லவா? முதலதேல் அதுவே தோடமாம்; மற்றதேல், வேறுசிறப்பை

புள்ளடக்குதல் வாராபோம், முதலடையடுத்ததன் கண்
ணேயே அத்தோட அவசரமாம். இனிஎத்தருமவிசிட்டத்
திற்கு அவ்விசேஷணம் அத்தருமம் கவரும் சருவமன்றும்,
வியபிசாரித் தன்மை விசிட்டத்திற்கு அவ்விசேடணங்களின்
றும் எனின்? அன்றும், எத்துமமாத்திரத்திற்கு அது
விசேஷணமாக அதுவியபிசாரியாகாதாளென்? ஆதலினனே
வியபிசாரத்தன்மை விசிட்டமாய வதற்கே அவைவிசேஷ
ணங்களாம், உளதாகுக பிறழ்ச்சியதன் சிறப்பாகக் கேவலம்
ஆனலதுவிசேடிய கோடியிற் புகுத்தப் பெறுவதாகாதாம்
எனின்? ஆகாதாம், இன்றளவும் விசேடியம் அறியப்பெரு
மையின்.

## 55. தோடாந்தர உற்காட்டனம்.

அன்றியும், அதன்துவிசேஷணமென் அதன்சம்பந்தி
மாத்திரமா? விசேஷணமாகச் சம்பந்தியா? ஆதியேல்,
அதிப்பிரசங்கமாம்; இரண்டாவதேலோ, அவ்வாறே, அன்னி
யோன்னியாசிரயாதியாம், மேலும், விசேடியத்தன்மையிலக்
கணயாதொருஅதன்பாலிருக்கும் தருமம் அதனைக்கவருமா?
கவராதா? கவருமெனின் அதிவியாப்தியாம்; கவராதெனின்?
கவரவேகூடுமென்னும் நியமம் அசித்தமாம்.

## 56. முன்மொழிந்த இலக்கணத்தில் அயலதிவியாத்தியறைதல்.

மேலும், என்சமவாயம் ஞானத்திற்கென்புழி என்சம
வாயத்திற்கு ஞானம் அயற்சம்பந்தத்தை யவாவாமலே விசே
ஷண மாகவாம், விடயமோவன்றும். குணகுணியாதி விசே
ஷணவிசேடிய பாவத்தில் அயற்சம்பந்தமின்றியே என்னும்
கூற்றால் விவச்சேத்தியத்தன்மையாது அடையப்பெருத்த
லாயதோ அதுவே இச்சமவாயமென யாங்ஙனம் விவச்

சேத்தியத் தன்மையுணராததோ வெனக்கூறற்க; எதனுவிண்டு அதற்கே விசேஷணவிசேடியத்தன்மை யுண்மையின் அந்தரத்வ அசித்தியாமோ. ஆகலின், சம்பந்தமின்றி ஞானம் விசேஷணம் எதற்கு எனக்கூறப்பெற்றது ஆண்டு ஞானம் சம்பந்தத்தையவாவாது இயற்கையாகவே எங்ஙனம் அருத்தத்தின் சிறப்பாமோ அங்ஙனமே சமவாயத்திற்கு மென்பதாக யாதொரு விசேடத்தையுங் காணேம் என என்சமவாயம் ஞானத்திற்கென்பதன்கண்ணே ஞானவிஷயத்தன்மை சமவாயத்திற்காமென்று நன்கு நவிலப்பெற்றதாம். ஞானுபாவத்திலும் வழங்காதலின்; ஆண்டு அதேசமவாயஞ் சம்பந்தம் என்னற்க; ஈண்டும் விசேஷண விசேடிய பாவத்திற்கே சம்பந்தத்தன்மை யுண்மையின். இதுசம்பந்தியினும் அன்னியமாகாதாம் அத்திகையது வியவச்சேத்தியம் எனின்? அன்றும், சமவாயத்தினுஞ் சமமாதலின். சையோகசமவாயங்கள் விலக்கப்பெறுகின்றனவெனின்? அன்றும், அவ்வாறாயினும் ஞானுபாவத்தில் வழக்காதலின். ஆண்டுஞானம் விசேஷணமன்றும், மற்றே உபலக்கணமாம் எனின்? கூடாதாம், சென்றவருபவைகளில் அவிடயத்தன்மை கூடலின், பாவத்தின்பாற் சிந்திக்கத்தக்கதாம்எனின்? தகாதாம், அபாவத்திற் கவிடயத்தன்மை யடைதலின். ஞானத்தினுமயல் ஞானீயமும் ஆம் எக்காரணைதி ஆண்டும் வழக்காதலின் எனவென்னே வித்தரிப்பதால். ஞானகாரதையிற் கேசசாத்திறகு இன்றும், இல்லையேயசம் ஞானஞேயங்களின் வேற்றுமை, பிரதீதி விரோதத்தான்; பேதமவாவாதவனுலோ அதுநிட்டேதிக்கப் படுவதற்குந்தகாதாம் என்றனர்.

## 67. பேதகண்டன ஆரம்பம்.

ஆயின் இப்பேதமென்பது யாதெனக் கூறவேண்டுமன்றே! அதுகாசொன்ன வடிவமா? அல்லது இதரேதர இன்

டையுமா? அல்லது தானென் வேறுதருமமா? ஆதிய தாகாதாம் இன்னத்தில்இன்னப்பிரமம் பொருந்தாமை வழக்காதலின்; முயலானும் தருமி வடிவமுணரப்பெறுதலின்; மாறுயினே, ஏதனபேதம் அம்மயல் தோற்றுவிக்கும்.

## 58 சோரூப பேதகண்டனம்.

அற்றேல் நிர்ச்சம்பந்தித் தன்மையானே நிலைபெற்றன வாய தருதாரும்முதலியவற்றில் அநேகாதாரம், அதனினும் அயலேயாய அவயவி ஆரோபிக்கப்படும், எவற்றிற்றான் ஆரோபிக்கப் பெறுமோ, அவை அபேதமாகவே புலப்படும், ஆனால், தொடங்கா அவயவிகளாகிய அவற்றில் தொடங்கும அவயவியாகப் பெரிது மயங்குமெனின்? இங்ஙனமியம்பற்க, அவற்றிற்குதாகரணப்படுத்த முடியாமை யுண்மையின். அஃதல்லாதகன்கண் அதுவேயிதுவென (அவனேயிவனென) ப்பிரத்தியபிஞ்ஞைத் தோற்றப்பொருட்கட்குத் திருஷ்டாந் தத் தன்மையானே யிட்டமாதலின். ஆண்டும், தருமாந்தர ஆரோபம் அங்கீகரிக்கின் தாதாத்மிய அபாவத்திற்குச் சம் சர்க்காபாவப்பிரவேசங்கூடலின். இவ்வண்ணமும் இட்டப் படவேண்டியதேதான் எனவும்படாதாம், ஆயினும், சொரூப பேதக் கவர்ச்சியாம்போது ஆண்டபேததருமத்திற்கும் ஆரோ பத்தன்மை முடியாமையின்.

## 59. அன்னியோன்னியபாவ கண்டனம்.

புலப்பாட்டில் அன்னியோன்னிய ஆசிரயவழக்காதலின் இரண்டாவதும் ஆகாதாம். பிரதியோகி ரூபத்தன்மை யானே அப்பிரதீதியாகியவாதி அதிகரணப் பிரதீதியும், அதி கரணசுபாவத் தன்மையானே இனையாதவழி பிரதியோகிஸ் மிருதியும் அதன் கிரகணகாரணமாதலின் இதரேதராசிரயம் யாண்டையாதாமெனின்! என்னற்க, விங்ஙனம், இங்ஙன

மாகுமேலாயின், குடபர்டையன்றென்புழி எங்ஙனந்தான், அவ்வபாவத்தின் பிரதியோகியதாக ஆடை யகற்றப்படுமோ, அங்ஙனமே, கும்பமுமா மென் அதுவும் கும்பவடிவமதாக நிடேதப் படுதலை யடையாநிற்கும்.

## 60. பேதவாதி சங்கை.

உண்மையாக அன்னியோன்னிய அபாவத்திற்குக் கும்பப்பிரதியோகித்தன்மை யிருந்தபோதினும் கும்பத்திற்கு அபடத்தன்மை நிரூபணகாலத்தில் கும்பத்தின் பிரதியோகிதை அவ்ராவப்பெறுவதின்றாம், மற்றோ ஆசிரயத்தன்மையே யாம் எனக்கும்பம் அகற்றப்பெறுதாம். படத்திற்கோ பிரதியோகிதையே அவ்ராவப்பெறும், ஆசிரயதையோ இன்றாம் எனக் கும்பம்போலும் படத்திற்கும் சங்கிரக அடையின்றாம். அன்னியோன்னிய அபாவத்திற்கு இருபிரதியோகிதை யிருந்தபோதினும், அயல்கும்பாசிரயதை அயல் ஆடையாசிரயதை, அயல் கும்பப்பிரதியோகிதை அயல் ஆடைப்பிரதியோகிதை; அதனால் அன்னியாபாவத்தின் இருபிரதியோகித்தன்மையின் பாலும் உபயாசிரயத்தன்மையின்மாட்டும் இரண்டிற்கும் சங்கிரகநிடேத விரோதஅடையின்றாம். பிரதியோகித்தன்மைக்கு அநுயோகிய்ய யநுசரித்துள்ள பேத உபஜீவனமாயினோ அன்னியோன்னிய ஆசிரயமாம், அநுபஜீவனமாயினோ, தன்னினும் பின்னக்கவர்ச்சி மன்னுமென்னற்க; நினைந்ததற்குப் பிரதியோகிதை நிகழ்வதற்கு ஆசிரயதைதயன்வித்துணைமாத்திரமே யியம்பின் தன்னினும் பின்னக்கவர்ச்சி யடைவுறாதலின். இங்ஙனம் அவனேயிவன் என்புழியும்பேதக்கிரகப் பிரசங்கமாமென்னற்க, வாஸ்தவ அதன்சத்வ அசத்வங்களால் விசேடமாதலின்.

## 61. பேத்வாதி மதாபிப்பிராய கண்டனம்.

இவ்வண்ணமியையாதாம், அங்ஙனமன்றேல்:— அதிகரணப்பிரதீதியென் அதிகரணமதாகப்பிரதீதியா, அல்லது வத்து கதியால் அதிகரணத்திற்குச் சொரூபமாகக்கூறும் வேட்கையா? ஆதியதேல் எச்சம்பந்தி பதிகரணமதாகக் கூடாதியின்பிரதீதி, அதன்காரணமாதல்? ஆண்டன்னியோன்னிய அபாவ அதிகரணமதாக அன்றும்; தண்டி புலப்படாத வழி தண்டாதிகரணத் தன்மைக்கேபோலும், அதுதோற்று தொழிய அதன் அதிகரணதையை யறியமுன் முடியாமை யுண்மையின், விசிட்டப் புலப்பட்டால் விசேஷணத்திற் கின்றி யமையாது தோற்றுந்தன்மையுண்மையின், விசிட்டத்திற்கும் விசேஷணம் விரவியமூர்த்தித்தன்மை யுண்மையின், யாதாவ தொன்றன் அதிகரணமதாகத் தோற்றுவதே யதன்காரணம் என்றற்க; யாண்டுப்பின்னத்தில் அபேதமாயலோ ஆண்டுத் தருமியுண்மையாதி யாதாரமதாக வொளிர்ந்தபோதினும் அதன் உற்பத்தி யின்மையின்.

## 62. பிரதியோகி மிருதியாதி சகித அதிகரணப்பிரதீதி பேதக்கிரக வேதுவென்பதன் விலக்கம்.

அம்மாத்திரத்தால் அதன் உற்பத்தியின்றும், மற்றேல் அக்காலின்றும் பிரதியோகிமிருதியோடுற்றதாலாம், அதுவும் அக்காலின்றும் என் அதனுற்பத்தி யின்றுமெனின்? இன்றும், பிரதியோகி மிருதியும், பிரதியோகியதாக மிருதியா? அல்லது வத்துகதி யால் பிரதியோகியின் சொரூபமதாகவாவென் விகர்ப்பியத் தன்மை யுண்மையின் ஆதியதேல் அன்னியோன்னியாபாவப் பிரதியோகியதாகவா? யாதாவதொன்றன் பிரதியோகியதாக வா? அதியதாகாதாம் அன்யோன்யாபாவந் தோன்று தாகவே அதன்பொருத்தமின்மையின் முன்யோன்றே மற்

றதுமாகாதாம் வத்துகதியாற் பின்னமாக அபின்னமென்ன மயல்விடயம்பண்ணப்பட்ட அதற்கு, தன்றேச இதரதேசா தியில் அசத்துவமாகத் தோற்றமுண்டாகியவழி, தன்னின்மைப் பிரதியோகியதாகப் புலப்பாடாகவே அன்யோன்யாபாவப் பிரதீதி கூடாமையின்.

## 63. மிருதித்தலைமைக்குப் பேதப்பிரதீதியின்கட் பிரயோஜகத்தலைமை நீக்கம்.

பிரதியோகி அனுபூதியாம் அதுமிருதியல்லவாமெனின்? அல்லவாம், மிருதித்தன்மைக் கப்பிரயோஜகத்தன்மை யுண்மையின்; அன்றாயினோ, அனுபவிக்கப்பட்டவைகட்கு அன்னியோன்னியாபாவந் தோற்றுவழக்காதலின். சண்டாந்தராளத்தில் இவை அன்னியோன்னிய வடிவங்கள் அன்று என்னும் அனுபவபாதிதமாய மிருதிகற்பனையானே மிருதித்தலைமைக்குப் பிரயோஜகத்தலைமை கற்பிக்கத்தக்கதன்றாம்; மிருதித்தலைமைக்குப் பிரயோஜகத்தலைமை யிருப்பினுந்தான், எவ்விவன் ஆண்டு இல்லனோ அவ்விவன் எனவினைந்த அபாவப் பிரதியோகியுடைமை யிருந்தபோதினும் வத்துகதியால் வேறாகஇருந்தும் அபின்னமாக மயலாற் றோற்றுகின்றதற்கு அன்னியோன்னிய அபாவப்பிரதீதி யுதயமாகாமையின். தோடாபாவமும் ஹேதுவாம், அது மயலுதாகரணத்தில்லையாமெனின்? இல்லையாம், முன்கண்ட கடத்தைமறிப்பவனாய், வத்துகதியாய்ப் பின் வேறுகடத்தையே பார்ப்பவனாய் முன்கண்டதினும் பேதமெனும் அபேதமெனும் பிரித்துணராதவனாய் இருப்பவனுக்குஞ் சம்பவத்தானே ஆண்டு இதரேதராபாவபுத்தி யுண்டாதலின். உணர்தலேகூடுமெனின்? கூடாதாம், பின்னவ்வையயங் காண்டலின். விசேடமதியும் ஆண்டு ஹேதுவாமெனின்? ஆகாதாம், விசேடத்தன்மை

யானது அன்னியோன்னியாபாவ நிருபணமில்லாமல் நிரூபிக்கமுடியாமையின். இதனானே வத்துகதியால் பிரதியோகியின் சொரூபமாக மிருதிச்சகாரியாம் என்னுமிதுவும் நீக்கப்பட்டதாம்; வத்துகதியான் அதிகரணத்தின் சொரூபமாகப் பிரதீதிசககாரியென்பதும் நிரஸ்தமாம். பின்னமாகியும் அபின்னமாகத் தோற்றுகின்ற விருக்ஷாதிகள் அன்னியோன்னிய அபாவமுடையனவாகக் கவரும் வழக்காதலின்.

## 64. மூன்றுவது கற்ப நீக்கம்.

மூன்றுவதுமாகாதாம், அபாவம் நிர்த்தர்மமுடையது என்னும்பக்கத்தில் அதற்கு விசுவ அபின்னத்தன்மை யடைவுற்றவழி விசுவத்திற்கும் அபாவரூபத்தன்மையானே நிர்த்தர்மகத்தன்மை நிலவியவழி தருமலக்ஷண அன்னியோன்னிய அபாவமற்றதற்கு ஏகரூபமுடைமை யடைவுறுதலின்; அபாவத்திற் றருமாபாவமிருத்தலின். சொரூபமே பேதமாமெனின்? எவ்விப்பேதமுள்ளதோ அதன் சொரூபமாகிய அஃதென்னே, எதனினின்றேனும் பேதமா? அல்லது பிரதியோகியற்றதேயா? ஆண்டுப் பிரதியோகியற்றதேயென்பதடாதாம், அளவையின்மையினானே அசத்துவவழக்காதலின். எவ்விப்பேத விவகாரமுள்ளதோ அது எதனுனும் பிரதியோகியற்றதா யுண்டாகவேமாட்டாது நிட்பிரயோகிக நீல விவகாரம்போலும். அப்பேதமும் நிட்பிரதியோகிகமாகப் பொருந்தாதாம், நிட்பிரதியோகிகமாயினுமே இது சப்பிரதியோகிக விவகாரம் செய்யுமெனின், பிரதியோகி நியமமாகாதாம், எனவே தன்னுனும் பேதவிவகாரம் சமைக்கலாம் தன்னுனும் பேதமென்னனம் சம்பவிக்கும் எனின், அஃதென் பின்னத்தினும் பேதமா, இவ்வியாயின்னனம் வரம்பின்றியன்றோ செல்லும்.

## 65. சம்பிரதியோகி சொரூபபேத கண்டனம்.

முதலதுமுரணும், எதனினின்றும் இதுவேறு எனக் கூறத்தக்கதேயன்றே அது ஆண்டெல்லாவற்றினின்றும் எனலியையாதாம், தன்னுருவிற்கும் பேதவழக்காதலின். கடாதியினின்றுமென்பதுங் கதுவாதாம், குடாதியோடுகூட அதற்கு அவதி அவதியுடைமையாது இஃதுளதே அதுவே யாம்பொருட் பிறிதா சொரூபமேயா? ஆதியேல் அதற்கும் பேதாவதித்தன்மையானே ஆண்டுமிங்ஙனந் தொடர்புறத்தில் இதவேவ்யுத்தரமாயின் எல்லையில்லாமற் செல்லலாம்; இனி ஆண்டுச்சொரூபமேயாயின், முதலதற்கு அவ்விதமின்மையில்வெவ்வேறுப்புஎங்ஙியந்தனமென முதலிலேயேசொரூபஞ்சொல்லலாம், அதுவுமாகாதாம்; அங்ஙனமன்றே:—கடாதிகளோடுகூட அவதியவதிமான்பான்மைச் சம்பந்தம் இதன் சொரூபம் பிரதியோகியோடு கூடவாகுமாயின், அபாவ சொரூபமாகிய இதன்சொரூபம் நிஷேத்திய நிஷேதபாவ இலக்கணசம்பந்தமாகாதாம் சொரூபத்திற்கு ஒருமை யுண்மையின்; இச்சம்பந்தங்கட்குப் பின்னத்தன்மை யுண்மையின். எதுதான் பிரதியோகியைப்பற்றிப்பின்னத்தன்மையை யுற்றதோ, அதுதானே அதன் நிடேதத்தன்மையை யுறும் எனச் சம்பவியாதன்றே; அதனினும் வேறுயதனைமக்கு அநிடேத்தியப்பொதுமை யுண்மையின்; நிடேத்திய நிடேத பாவத்திற்கு நியதவத்து வபேக்ஷைத்தன்மை யுண்மையின். இன்னணம் காரியகாரணபாவாதி சுபாவ வேறுசம்பந்தத்தினும் விளம்பத்தக்கதாம், ஊகிக்கத்தக்கதுமாம் மீண்டும் சொரூபபேதத்தில் இத்தோடம்.

## 66. தருமாந்தர பேதகண்டனமியல்.

மேலும் தருமாந்தரம் பேதமெனக் கூறுவானது கருத்தென்னையோ! கடத்தன்மை முதலியனவையே பேதமா?

அல்லது பேதமென்பது அன்னியமேயாய யாதோ ஒருதரு மமாரீ முதலதில், கடத்தன்மை முதலியவற்றிற்கும் சப்பிரதி யோகித்தன்மை வழக்காம், பேதத்திற்குச் சப்பிரதியோகி கத்தன்மையுண்மையின். கடத்தன்மைமுதலியவைகள் அத் தகையனவல்லவாம்; ஆடைமுதலியவற்றை யவாவாமலே புலப்படுதலின்.

## 67. கடத்வாதிகட்குப் படாதிகளையபேக்ஷித்துப் பேதவிவகாரஜனகத்தன்மை வில்க்கம்.

எஞ்ஞான்று படாதியபேக்ஷயாற் புலப்படுகின்ற னவோ அஞ்ஞான்று வேற்றுமைவிவகாரத்தை விளைவிக்கின் றனவெனின்? முடியாதாம், புலப்பாட்டின்கண் ணெதற்குப் படாதியபேக்ஷயென்றியம்பத்தக்கதாம்; கடத்வாதிகட்காரீ அல்லது ஏதாவதொரு தருமத்திற்கா?. ஆதியதேல், படா பேக்ஷயில்லாமற் கடத்தன்மைப்புலப்பாடு பொருந்தா இதனும் வழக்காம் எதில்லாமல் யாதுற்பன்னமாமோ அது அதன்காரணமென்ப தாகாதன்றோ! வன்னியிற்போல அவாங் தர ஜாதிவேற்றுமையிற் காரணபேதத்திற்குப் பயன்படுத்து வான் முடியாமையுண்மையின். சாக்ஷாத்காரித்தன்மை முத லியவற்றோடு பரார்பரபாவங் கூடாமையின். ஜாதிகட்குப் பரார்பரத்தன்மைச் சங்கரதோடம் வாஞ்சிக்கப்பட்டவர்மதத் தினும், ஜாதிம்வேற்றுமையால் அவதிபாவம் அறைந்து வந்தபாவன் எதனோடுசம்பந்தப்படுத்துவன்? கடத்தன்மைக் கவதி பொருந்துவதாந் தன்மையேவோ, அவ்வாறே கேவலம் பிரதீதியுண்டாதலின் அதன்றருமத்திற்கு அவ்வாறுந்தன் மையெனின்? ஆகாதாம், அங்ஙனமுறவே இரண்டாவது இயையாததாம்; அதுவே அபேக்ஷயோடுகூடிய வுணர் வுற்ற வேற்றுமையாம், கடத்தன்மைமுதலியவை யாகாவாம்.

கடத்தன்மைமுதலியவற்றிற்கும் அந்தவேற்றுமையாம் அத்தருமம்உடைமையின்; கடாதிகட்கும் பேதம்வினவியவழி அதனைக்கூறுதலசங்கதமாகும்; எங்ஙனர்தான் பின்னங்களாற்றொடர்ந்த விவகாரமாதல் ஆயினும், அவ்வாறாயினுந்தான் அவற்றானே யதுமுதலிய விவகாரமும் ஆகாதென்னையோ ?

## 68. இரண்டாவது கற்பங்கழித்தல்.

இரண்டாவதுமாகாதாம், அங்கீகரியாமையின்; ஏழு பதார்த்தங்களுக்குள் உள்ளடங்காவழக்காதலின், தன்வடிவத்தில் உளது இலது என்பதனால் பொருந்தாமையிருத்தலினாலும் என்க. இத்தகையனவேயாய உபாதியீனவைசித்திரியங்கட்கும், ஜாதியாற்சரிப்படுத்தில் எல்லாஉடாதியுபதானங்கட்கும் (உபாதிவியாவிருத்த தருமங்கட்கும்) ஜாதியினாலேயே சரிப்படுத்தலிசைமையும்.

## 69. கடத்வாதியே பேதம்என்பதன் வேறுகண்டனம்.

அற்றேல் கடத்தன்மைமுதலனவே வேற்றுமைகள் கடத்வாதியுணர்வு ஒப்பாகஉண்டானபோதினும் பிரதியோகிஞானசககாரிவயத்தால் விசித்திரவிவகாரம் பொருந்துதல் கூடுமெனின்? கூடாதாம், விவகார சத்தியத்தன்மையின் பொருட்டு உண்மையாய்த்தொடர்ந்த சிறப்பிற் கின்றியமையாது அங்கீகரிக்க வேண்டியதாந் தன்மை யிருத்தலின், அவ்வாறேஅறிதல் வேட்கை தொடர்ந்துநிற்றலின். அகந்தபேத பரம்பரையையங்கீகரிக்கினோ, அதனைமுற்றயாக உணர்ந்து கோடிஎன்தோற்றம், முடிவுபேறடையாமையின், அதனை யொரேபோதிலுணர்ந்து கோடினோ முற்றினும் ஒப்புமை யிருத்தலினானே யாதாவதோரயற்பேதத்தை அயலொன்றினதாகக் கவர்ச்சி கூடன் முதலியவற்றா யாண்டும் பிரமாண

மாதல் துணிதலின்மைவழக்காதலின் எல்லாத்தோற்றமிய மத்தை யங்கீகரியாதொழியினே தோற்றுதனிருப்பிலளை வையின்மையின், அறியும்வேட்கை யுளதாகவே அதற் கதற்கும் ஞேயத்தன்மைபொருந்த அப்புத்திகட்குப் பேத புத்தித்தன்மை யுண்மையின் அதனர்த்தங்களில், தொடர்ந் திருக்குந்தகைமைக்குங் கூடாமையிருத்தலின் அவற்றில் ஏக ஜாதியுபாதி யங்கீகரித்தவழி அதன்பேதத்தினும் அதனங்கீ காரமாயின் அன்னியோன்னியாசிரய ஆசிரயிபாவவழக்குண் டாதலின்; இங்ஙனம் சத்தாதிகட்கு அநந்தபாவம் உடன் பட்டவழி கண்டுகொள்க.

## 70. தருமபேதத்தில் அன்னியோன்னியாசிரயங் கூறல்.

மேலும், கடத்வாதிக்குப் பேதத்தன்மையில் அவதி வடிவ படத்வாதி சபேக்ஷஉணர்ச்சி யுண்மை யுளதாயவழி கடத்தன்மைகடுப்பப் படத்தன்மைக்கும் பேதரூபமாக, பேதாவதியுணர்ச்சி சாபேக்ஷத்தன்மை யிருத்தலினனே அவ திக்கும் கடத்வாதிதன்மையானேயுறக் கடத்வாதி பிரதீதிய பேக்ஷையில் அன்னியோன்னியாசியத்வ வழக்கும், கடத் வாதிக்குப் பேதசொரூபத்தன்மையேல் அவதியபேக்ஷ யாம், சொரூபமாத்திரவுணர்விலோ இன்றும், சொரூபமாத் திரத்தானே அவதித்தன்மையாம். ஆகலின் யாங்ஙனமிங் ஙனமியம்பல் ஏலுமெனின்? ஏலாதாம், பேதரூபத்தன்மை அதற்குத்தன்வடிவமே ஆகுமாயின் சொரூபமாத்திர உணர்ச் சியில் அவதியபேக்ஷயின்றுமென்பது விரோதவசனமாம். இனித்தருமாந்தரமெனின், அக்கால் அதுவே பேதமாகுக, அஃதுடைமையானே கடத்வாதிகட்குப் பேதரூபத்தன்மை யென்னும் பிரக்கிரியையைக் கற்பனைசெய்வது சாலும். அதேதருமாந்தரம் பேதமென உளதாகுகவேயெனின்? அடி

யத்தன்மையுண்மையின் கூடாதாம். இனித்தன் சொரூபாதி முன்றிது பேதமெனல் யாங்ஙனம் இனிதுபொருந்தும், ஏகாகாரமாய அதன்விவகாரத்திற்கு நாநிமித்தத்தன்மையேல் கோத்தன்மைமுதலிய தொடர்ந்த ஆகாரத்தோற்றத்திற்கும் ஏகநிமித்வ சித்தியிற் பிரமாணமாதல் யாங்ஙனம் பிறழ்ச்சியெய்தலின்; சாமானியவிசேடங்களினுனே பரசாமானியபுத்திவிவகாரம் பொருந்தியபோது அதன் கற்பனை கூடாமையின்.

## 71. பேதத்தில் வேறுபேதமிருப்பதிலும் இல்லாதிருப்பதிலும் தூஷணம்.

மேலும் பேதத்திற்பேதம் வேறுளதா இலதா? ஆதியதில் அநவஸ்தையாம், இரண்டாவதில், பேதஸர்வமேயாம் தர்மியின் கண்ணே யதன்புகுதல்உண்மையின், பேதசுபாவத்தன்மையின் தன்வடிவிலும் தானே பேதவிவகாரத்தை யிப்பேதம்செய்கிறது, சத்விவகாரத்தைச் சத்தைசெய்வதேபோலும் எனின்? கூடாதாம், தன்னினும் அபின்னம் தன் பேதம்என்பதும், தன் ஐந்தாம்வேற்றுமைச் சத்தத்தானுரையாடப்பெறும் அவதித்தன்மையையுடைய சொரூபம் சுயம்பேதம் அன்னியகருமி சம்பந்தமாகத் தனதுபேதம் சுயம் எனவாயின் அக்கால், இப்பேதத்திற்குத் தன்வடிவப் பிரதியோகியுடைமையானுந் தன்பற்றுக்கோட்டுப் பான்மையானும் அங்கீகாரம்ஆகியவழி தன்னினின்றும் தானேபின்னமென்னவன் அங்கீகரித்தல் வலாது, முரணின்மையின், அங்ஙனம் பிரதீதிவிவகாரமாதல் உண்டாமாயின் இங்ஙனம் அங்கீகரிக்கவுந்தான் பெறுமெனின்? பெறுதாம், சப்த ஆபாசத்தினுலேல அங்ஙனம் பிரதீதியாபாசு சப்தவிவகாரமும் இருக்கின்றதேயாம். சத்தியங்களாகிய பிரதீதிவிவகாரங்கள் அங்கீகார காரணங்களாம், அவைகள் தன்னினின்றுந் தனக்கேயாம்பேத

விடயங்கள் அல்லவாம்எனின் ? அல்லவாம், தன்வடிவம்தன
க்கேஇடமும் எல்லையும் எனவுமாயின் உண்மைத்தோற்ற
மொவ்வாதாம், விகாரமுமாகாதாம், ஆகலின்யாங்ஙனம்
இங்ஙனம் அங்கீகரிக்கின்றனே.

## 72. இரண்டாவது கற்பநிராகரணம்.

ஆற்றேல், யாம்தன்வடிவம் தன்னதிகரணமாதல் தன்
னவதியாதல் அங்கீகரியேயாம், மற்றோ, தருமாந்தரத்தில்
அதன்பிரதியோகிகமேனும் அதனாதாரமேனும் உடன்படு
வோம், யாவைபுத்திவிகாரங்களை யுடையவாமோ அவை
எல்லையின்றிச்செல்லும் அச்சத்தால் தருமாந்தரமில்லாமலே
இயற்கையாகவேவேற்றுமைசெய்யுமெனக்கூறுவேமெனின்?
ஆயின் பிறவிடத்தில் எத்தகையபிரதீதி தருமாந்தரவிடய
மாமோ அத்தகையதே யீண்டு இல்லாமற் றருமாந்தரமுண்
டாமென்பது மயலாம் ; எதனியற்கையின் வலுவானே இத்
தகையதாக அஃதுண்டாமோ அதுதோடமாம், எங்ஙனம்:
சத்தியரஜதத்தில் இரஜதப்பிரதீதி இரஜதத்தன்மையால்
உற்பன்னமாம், பிறவிடத்தில் இரஜதத்தன்மையில்லாமல்
உண்டாமதுமயலாம். எதனது ஆற்றலினாலே அது அத்
தகையதாக உண்டாமோ அதுதோடமெனக்கூறப்படும்.
ஆண்டுஇரஜதத்தன்மை யின்றாம், ஈண்டுத்தருமிரூபமும்
பேதமேயாயிருந்து பற்றுவதாமெனின் ? இங்ஙனமின்மையா
தாம், பின்னப்பிரதீதி விசிஷ்டவிடயபேதம் அதுபற்றுதல்
வடிவ உபயவத்துவிடயம் பிறவிடத்தில் எத்தகைய சத்திய
மாய் ஒத்துக்கொள்ளப்பட்டதோ அதனினும் மாத்திரை
யானுங்குறையா தீண்டுண்டாம்பொருட்கு இரண்டுவிடயம்
நீ அங்கீகரியாதொழியின் அப்போது சக்கிரனும் மயற்றன்
மை மாற்றமுடியாதாம். இனியங்கீகரிப்பாயேல், ஆயின்
அநவத்தையாய்ப்புறும், இனியதனுபயவிடய வியதிரேகத்

தானே அஃதீண்டுண்மை பிறுண்டாயின் இதனினும் அயற்றகைமைவிடயம் பொய்யாம் என்பதாகவிரித்ததுசாலும்.

## 73. உதாரணமோறுக்கல்.

யாதுசத்தைபோலும் எனக்கூறப்பெற்றதோ அது மாலூர்க்கடைவீதியிற் கோலூர்தலுதாரணமோக்கும், எதனானே சத்தையும் இத்துடணைத்தானே எம்மனோரால் கண்டிக்கப்படுமோ.

## 74. உதயனமத அனுவாதம்.

யாதுமீண்டுரையாடப்படும்:-- இப்பேதகண்டனவாதிகளானே என்னே கூறப்பெறுகின்றது? பேதஞானமேயில்லையென்று, இருந்தபோதினும் நித்தியமா, அநித்தியமா? அநித்தியமாயினுந்தான் ஹேதுவற்றதா? ஏதுவுற்றதா? பின்னுந்தான்விடயமற்றதா? விடயமுற்றதாயினுந்தான் பாத்தியமானவிடயமா? அவற்றுண்முதலது மூன்றினும் மூரண்படுதலின் விடையற்றதாம், இரண்டாவது துயிலவத்தைதை யனுசரித்தலானுபேக்ஷிக்கத்தக்கதாம், மூன்றாவதும் மூரண்பாடுடைமையின் ஹேயமாம், நான்காவதோ வேற்றுமைத்தோற்றத்தானே மாற்றத்தக்கதாம், ஐந்தாவது சித்திக்கப்படும், இவற்றுள் யாதாவதுஒன்று விடயமா? அவற்றினும் அயலொன்றா? இரண்டாவதில் இவ்வியதிகரணக் கூடாமைகளினானே அகண்ட பாதசம்பவமாவென்? இங்ஙனமாயினோ சோரசம்பர்க அபராதத்தானே வெளியாயிம்மகாமாண்டவ்ய நிக்கிரகம். இனியாதாவதொன்றெனின் ஆண்டும் தருமாந்தரமேயெனத் தத்துவம்ஆயின், அக்கால் அரவத்தை யச்சத்தால் அதன் அதிகப்பிரவாகத்தை யகற்றுக அதனாதியாக மியாங்கனமாமெனக ; அரவத்தை தோற்றும் பொருளை யகற்றுதாம், மற்றோமணத்தில் மறுமணமாலும்

பிரவாகத்தைப் பரிகரிக்கும்: இனி அன்னியோன்னிய அபாவமே பேதஞானத்தைப்பற்றும், அப்போதும் ஆத்மாசிரயம் யாண்டையது, அதனனேயோ பேதஞானமே பிறங்காமற்போம். உளதேயாமது, அதனுலேதுவயலாசேஷபிக்கலாம், தன்பாற் சுயம் காரணத்தன்மை காணுதவழி தானேநீங்காதாம்.

## 75. வேதாந்திமத விலக்கம்.

அவித்தைவயத்தால்எனின் ? என்னேயதனல், அவித்தையென்பதனனேயே ஆத்மாசிரயநீக்கமாகாதாம், ஆருமாயினுகடாதிகளும் குலாலாதிகளை யவாவாதனவாய்த் தாமேயுண்டாகலாமே. இனியாத்மாசிரயாதி தோஷதிரஸ்காரத்தானே அது அதற்கேகாரணமாகாதாம், ஆகலின் எதனேனும் அதனது பிறப்பாம், அதுவும் நிரூபிக்க முடியாததாம், ஆகலின் அவித்தையெனப்படும், என்பது விசாரப்பொருள் ; ஆயின் விவாதமில்லையாம். அதுவும் நிரூபிக்க முடியாதென்பதாகாதாம், பிரதியோகித்தன்மையானே தோற்றுதவழி அதிகரண சுபாவத்தன்மையானே அதிகரணத்தோற்றமும், அதிகரண சுபாவத்தன்மையானே மரியாதவழி பிரதியோகிமிருதியும் அன்னியோன்னியாபாவக் கிரகணகாரணம் எனநிரூபித்தல் கூடலின்.

## 76. சொரூபத்திற்குப் பேதஞானவிடயத்தன்மை விலக்கம்.

இனி, சொரூபமே வேற்றுமைத்தோற்றத்திற்கு விடயமாம், என்தத்துவம், ஆயினும் கூட்டிப் பிரயோகித்தலேகூடாதாம், வேண்டாம், வேற்றுமையானே விளங்குற்றமென்னே ; அதுவுங்காணப்பெறுகின்றதேயெனின் ? உண்மைமையே, னைமித்திகமோவாம் சொரூபத்தாகாதாம், குடத்தைக்கொணு ஆடையைக்காண் என்பதாதியின்கண் பேதத்

பதமும் மதிமான்கோடல்கிடையாதாம், உஷ்ரயிலோமூடர்த் தெளிவிப்பான் குடங் கும்பம்எனல்போலக் கூட்டிப்பிர யோகிப்பினும் தோடமாகாதாம்.

## 77. பேதசப்தார்த்த நிரூபணம்.

ஆயினும் யாதுபரமார்த்தம்? தக்கவகையாக மூன்றும், கடத்திற்கோ, கடாதிவடிவமாகப் பிரதீதி, அபடாதி வடிவ மாகவும் பிரதீதி, அதனினும்வைசிட்டியப் பிரதீதியும் என் பது அநுபவசித்தமாம்; ஆண்டபாவத்திற்கு முதலதுமாத் திரம், அபாவாந்தர தருமாந்தர மின்மையின்; சாமானிய முதலிய மூன்றிலும் இரண்டாம்தருமாந்தரம் இல்லாமை யின்; பொருண்முதலியவற்றில் மூன்றும் மூன்றும் பொருத் தமாயிருத்தலின். ஆடையிது குடமல்லவாம் நூன்மயமு மாம், எனவும்; கந்தமிது உருவமல்ல மணமுமாம், எனவும்; கதியிது கிளம்புநிலையன்று குறுக்குறலுமாம்; எனவும்; உண்டாகின்றதன்றே. சொரூபபேதத்தினது இலக்கணமோ அதனுருவத்தானே அப்பிரதீதியாகப்பிரதீதி விடயத்தன் மையாம்: இதரேதராபாவத்திற்கோ, யாதிக்கப்படாதத பொருநிலைக்கள்த்ததாய நிடேதத்தோற்றமேயாம்; வைதரு மியத்திற்கோ, விரோதம் அதுவும் ஒருதருமியில் அமைவுறு தாம்என்னும் இது திண்ணமாம்.

## 78. உதயனமதகண்டன ஆரம்பம்.

இதன்கண் ணியம்பப்படுகின்றது: அங்ஙனமன்றே, யாதுமுதலில் வினவப்பெற்றது, இவற்றுள் யாதேனுமொரு வடிவும் இதனதுவிடயமா? அல்லது அதனினும் அயலா? என அதனை நிரூபிக்கும் வாதி நம்பாற்சேரயியாண்; தோற்று நின்ற இப்பேதம் சொரூபாதி பக்கங்களுள் உள்ளடங்கல் உள்ளடங்காமைகளாலாதல், சத்தசத்துக்களாலாதல், யாதா

மொரு அயற்றருமத்தினலாதல் நிரூபிக்கின் உடன்பாட்டா ஞதல் அஃதல்லாமையாஞதல் பாதிக்கப்படும் என அவ் வெல்லாவாற்ருனுமே அநிர்வசனீசமெனப் புகலுவேம். இதுவும் கேவலம் பேதத்திற்குமாத்திரமல்லவாம் மற்றே ஜக்த்திற்கேயாம், இவ்வநிர்வசனீயவாதம் எங்ஙனமோ அங் ஙனம் முன்மொழிந்தாம்.

## 79. வினுவேறு அங்வ்தித் தகற்றல்.

இனி அன்யதமமெனத்தொடங்கிக் கந்தத்திற் கந்தாந் தரம்போலும் எனமுடித்து யாதோதப்பெற்றதோ அதுவும் சாதுவாகாதாம், எவ்வூகத்தானே ஒன்றங்கீகாரமாமோ அத ஞனே பிரவாக அங்கீகாரத்தை விலக்கமுடியாமையின், ஆண்டுப்பிரவாக சுவீகாரத்தில் அதற்கசாதகத்தகைமை யங் கீகரிய்ப்தாயின் ஒன்றனங்கீகாரத்தின் சுண்ணும் ஆம், சிறப் பில்ா விலக்கணத்தன்மைன் யா.இதனுனே புலப்பாடுடைமை யானே ஒன்றனங்கீகாரம் என்பதும் அமையாதாம், ஒன்று புலப்படுவதன் ஊகத்திற்கு எல்லாவற்றிற்கும் பொதுவாந் தன்மை யுண்மையின். காட்சியனுனே யுண்டாகாநின்ற தோற்றம்பிரமாணம் அன்றனுமானுதிகளானே யென்பதன் கண்ணே யூகமேனும் அங்கீகாரமேனுமில்லையாம். வரம்பின் றிச்செல்லலை சம்பாதித்துத்தரும் ஊகம் அனுமானுதி கட்கு அயலென்பதாக இலதாம், தருக்கத்திற்கும் வியாப்தி மூலத்தன்மை சருவமும் அனுமானச்சாயையை யடைவுற் றுத் தூஷணமும் பிரவிருத்திக்கின்றது எனவுன்னுனே வியுற் பாதனஞ் செய்யப்பட்டிருத்தலின் ; ஆதலின் அநவஸ்தை யைச் சம்பாதித்துத்தரும் யூகத்திற்குத் தோஷங்கூறல் வேண்டும் அல்லது தன்பக்கத்தை யேனும் விட்டொழிக்க வேண்டும்.

## 80. பிரவாகத்தைப்போலவும் ஒன்றங்கீகரித்தபோதினுந் தோடமாம்.

பிரவாக சுவீகாரம்போலும் ஒன்றையங்கீகரிக்கின் அநவத்தையின்றாமெனின் ? ஆயின் அநவஸ்தையின்மைவிசிட்டமாய அவ்வூகத்திற்குச் சாதகத்தகைமை யெண்ணுதியோ ? இங்ஙனமாயின், இரண்டாவதுமாத்திர அங்கீகாரத்தில் அநவஸ்தையின்றாமென இரண்டாவதங்கீகாரப் பிரசங்கமாம் ஓமெனின், பாரார்த்தபரியந்தமான பிரவாக சுவீகாரத்தை யாரேதடுத்தார்கொல் ! இத்துணைமாத்திரத்தானே சந்தோஷிக்கமாட்டீர் தாங்கள் பாரார்த்தத்தினும் அதிகம் ஏகாதிகம் ஏன் அங்கீகரிக்கக் கூடாதெனவும் தங்களாற் கூறத்தக்கதேயாகும், அவ்வாறாகவே அதுவே யநவஸ்தையாமெனின் ? உண்மையே அவனுக்குள்ளாகுக அச்சத்தால் எவ்வளவை யங்கீகரிக்கலாமென நிபுணமாக மந்திரிப்பேம். இரண்டு முதலியவை பரித்தியாகிக்கத்தக்கனவாம் எனின் ? ஒன்றன் கண்ணேதானனுக்கிரகம் ஏத்தகையதோ, எதனால் அநவஸ்தைப் பிரவாக நிவேசஞ்சமமாயினும் இரண்டுமுதலியவை உபேக்ஷிக்கப்பெற்றன, ஒன்றே இரக்ஷிக்கப்பெற்றது ; இரண்டாவதுகொண்டு அநவஸ்தையாம் எனின் ? துவிதீயத்தின்கண்ணும் தங்கள் அநுக்கிரகம் உண்டாயின் மூன்றாவதையுடன்பட டனவத்தையாம் எனப்புகன்று அதுவும் இரக்ஷிதமாய், அவ்விவ்விராகத்துவேடங்கள், மோக்ஷத்தின் பொருட்டு முயலும் தங்களது மனதைப்பற்றிப் பிற்போதிற் கலியாணகைவல்லியத்தை யளிக்குமெனக் கருதுகிலேம். கர்தத்தின்கண்ணே கர்தாந்தரத்தை யடைவிக்கும் யுக்தியில்லையாம், அஃதிருந்தபோதினுந் தானெமக்கென்னே யின்னல் அதுவும் எம்மனோரால் கண்டிக்கப்படுதலின்.

## 81. வேறு வினு விலக்கம்.

இனிஇதரஎன்பதாதி நிரூபணத்தான் என்பதந்தம் ஆக யாதுதான் புகலப்பெற்றதோ அதுவும் அமையாதாம். அங்ஙனமன்றோ: அன்னியோன்னிய அபாவஞானம் பேதவிவகாரஹேதுவென யாவனங்கீகரிப்பானே அவனதுபக்கம் பொருத்தமற்றதாம், ஆத்மாசிரயப்பிரசங்கம் கருதலின் என இவ்வண்ணம் கூறுபவனுக்கு ஒருசிறிதும் பாதகத்தைக்கூறக் காணேம், பிரதியோகிரூபத்தன்மையானே என்பதாதியாகச் சமாதானம் தந்ததும் முன்னரே தூஷிக்கப்பட்டிருத்தலின். இனிச் சொரூபமேயென்பதாதியாய் தோடமின்றும் என்பதந்தமாய்க் கூறியதுயாதோ அதுவும் நாம் நவின்றதோஷதூஷணமாம் என உபேக்ஷிக்கப்பட்டது; ஆயினும் யாது என்பதுமுதல் குறுக்கும்என்பதீறுகக் கூறியதுயாதோ அதுவும் படுகுழிப்பட்ட தோன்மாங்கிசம் புசிக்கும் நியாயத்தையொக்கும், கூறியயுக்தியினுனே மறைபட்டமுப்பக்கத்திற்கும் காட்டமுடியாமையுண்மையினுனே அதன் வியாகவிவத்தியின் அவசரம் நீக்கப்படுதலின்.

## 82. பரர்கூறிய இலக்கணகண்டனம்.

அதன் வடிவத்தானே அப்பிரதீதியாகப் பிரதீதியெனச் சொரூபபேதத்திற்கு எவ்விலக்கணம் உரையாடப்பெற்றதோ அதுவுங் குற்றமுற்றதேயாம். எவ்வொரே வஸ்துமயலினுலே பின்னமெனப்பிரதீதியாம், ஆண்டு அவ்வடிவத்தானே ஒன்றற்கு ஒருரூபத்தன்மையானே தோற்றமில்லை, உண்டுமாந்தோற்றம் இன்றுயாம் சொரூபபேதம் என அதிவியாப்தியாம். அவ்வடிவத்தானேயென்பதற்குத் தருமாந்தரரூப பேதக்கலப்பின்மை யுதாகரண அர்த்தத்தன்மையுண்மையின், புலப்பாடு மயலற்றது விளம்பும் வேட்கை

அதனுணர்ச்சியாதோ அதனைவிடயம்பாதோ அது அந்நி
யோந்நியாபாவம் எனவாகாதாம், அதே அந்நியோந்நிய அபாவ
மெனவும் ஆகாதாம், யாண்டுச் சமானாதிகரணநிட்டதப்பிரத்
யயம் ஆண்டியாதுளதோ அது அந்நியோந்நிய அபாவ
மெனவுளதாகுக வென்பதுமேலாதாம் ; அத்தருமியாவற்
றிற்கும் அந்நியோந்நிய அபாவத்தன்மை வருதலின்
சமானாதிகரண வாளசபோகலாதல் வழங்காதலினானும் என்க
இதனுமேன ஒருதாகரணங் கொண்டு இரண்டாவதும் நீக்கப்
பெற்றதா மென்றுணர்க.

## 87. மூன்றாவது விகற்பங்கம்.

மூன்றாவதும் முரண்படும், தாதாத்மிய நல்லுணர்வில்லா
மல் அதன் பிரதியோகியுடைமையின் உணர்ச்சிகூடாமையின்
அதன்நிர்வசனவழக்காதலின், அதுவோ முடியாதகாரியம்,
அங்ஙனமன்றே:—இதனொருமையா? வேற்றுமையின்மை
யா? சொரூபமோ அசம்பாவிதமாம், அதற்குப்பேதத்தன்
மை அங்கீகரிக்கப்படுதலின், அதனைக்கண்டபோதினும்
அதுவா அல்லவா வெனத் தாதாத்மியசமுசய அவகாச
மடைதலின், ஆதியிலும் சங்கைச்சிறப்பா? அயற்றருமமா?

## 88. மூன்றாவது விகற்பத்தின் முதல் இரண்டாவது விகற்பகண்டனம்.

ஆதியாகாதாம், பண்புமுதலியவற்றில் அதன் இன்மை
வழங்காதலின், முதற்கணத்தில் காரியப்பொருள் ஒன்றினுக்
கும் தன்னுதாத்மியமின்றும் வழக்காதலின், வைசேடிகமதத்
தில் வியுத்தான்முனதாக வொருமையிலோ அதன் அபாவ
வழக்காதலின் ; உபாதியின்கண் பற்றுந்தாதாத்மியமாம் யாங்
ஙனம் சொரூபமாத்திரம் பற்றலானே ஒருமைப்படுத்துவான்
முடியும்? விசித்திர விஞ்ஞானமுண்டமையின். இரண்டாவ

தும் இயையாதாம், அதற்குத் தருமாந்தர அவாவானே எல்லையில்லாமற் செல்லலின், அவாவில்வழியோ தன்றுதான் மியமின்றும் வழக்காதலின். இரண்டாவதும் இயைபின்றும், அதுவும் பேதத்தின் அபாவம் ஆகியும் அன்னியோன்னியா பாவத்திற்கேயாம், அன்னியோன்னிய அபாவத்திற்கும் அதன் நிஷேத வடிவதாந்தன்மை யுண்மையின், அதனானும் அன்னியோன்னியாபாவ நிஷேதவடிவமாக ஆகவேண்டிய தாகும், நிஷேத்திய நிஷேதங்கட்குப் பரஸ்பர நிஷேதவடிவத் தன்மையுண்மையின்; அங்ஙனமாகவே அன்னியோன்னிய அபாவப்பிரதீதி யில்லாமல் அதனைநிரூபித்தன் முடியாதாம், நிஷேதபுத்திக்கு நிஷேத்தியப் பிரதீதி சாபேக்ஷத்தன்மை யுண்மையின் என்பதாக அன்னியோன்னிய ஆசிரயமாம்.

### 89. நான்காவதைந்தாவது விகற்பநீக்கம்.

நான்காவதும் நலமில்லதேயாம், குடமில்லது பூதலம் என்பதன்கண்ணும் வழக்காதலின். ஐந்தாவதும் ஸாந்தர வதே, சமானாதிகரணமெனப் பிரதியோகி சமானாதிகரணம் விளம்பவேட்கையாம், அத்தகைய நிஷேதமும் அன்னி யோன்னிய அபாவமாம், அதன் உணர்ச்சியோ அதன் இலக் கணமாம் என்பதும் கூடாததேயாதலின். பாவசமானாதி கரணத்தின் அன்னியோன்னிய அபாவகும்பம் படப் பான்மை யாகாதாம் என்பதாதிக்கு வியாபியாமை வருத லின். அச்சாதியுற்றதில் அவ்வாறுந்தன்மையும், எச்சிறப்பை அன்னியோன்னிய அபாவத்திருப்பதாகக் கொண்டுழுமோ, அதே இலக்கணமாக ஆற்றலுற்றதாம் உபஜீவ்யமாயிருப்ப தாம், இதனையிலக்கணமென உபந்யாசஞ்செய்யலாம்; அது வுஞ் சம்பவியாதாம், அன்னியோன்னியாபாவ சம்சர்க்கா பாவ பேதகண்டனப் பிரஸ்தாவத்தில் நிரஸ்தஞ் செய்திருத் தலின். வேறுவகையாயோ அசம்பவமாதலின்.

## 90. இலக்கணத்தில் அவ்வியாப்தி இயம்பல்.

படப்பான்மையாகாதாம் என்னும் இதே அபாவம், குடம் ஆடைப்பான்மையாகாதாம் எனலொன்றேயாம், இன்னணம் பிரதியோகி ஐக்கியத்தான் என்னல் ஈண்டு அன்னணம் அங்கீகரித்திருத்தலின் எனச் சிலபாற் பிரதியோகி சமானதேசத்தன்மையானும் இலக்கணசித்தியாம் என இயம்பற்க; அன்னணமாயினும், பிரதியோகிஐக்கியத்தான் அதனத்தியந்தாபாவத்தின் ஐக்கிய அடைவுவருதலின், தாதாத்மியம்போலும் சையோகத்திற்கும் இரண்டிலிருத்தல் ஒப்பாதலான் அதிவியாப்தியாதலின், யோதுபேதத்தாமொ முன்னின்மையாதிகட்கும் பிரதியோக சமானாதிகரணத்தன்மை யுண்மையானே அதிவியாப்தி வருதலின், போழ்தின் ஒருமையினானும் சிறப்பறுவதினும் அதனன்னியோன்னிய அபாவ அவ்யாப்தியாதலின் என்க,

## 91. வைதர்மிய பேத இலக்கணகண்டனம்.

தருமாந்தரத்தின் இலக்கணம் இயம்பப்பெற்றது வைதர்மியத்திற்கு விரோதம் அதுவும் ஒருதருமியகடுறாதது என்பாதோ அதுவும் யெருமபன் மனத்தோடு பேசியதாம், அன்னணமன்றோ, பிரமாணப்பிரமேயங்கட்குப் பேதமுளதா? இலதா? இலதெனின் அதன் கூற்றிற்கு பரியாயத்தன்மையின் வழுக்காம், எவ்வளவையது புத்தியென வினவியபோது யுத்திவிடயத்தான் உத்தரவழக்குமாம். முதலதும் முரண்படும், அதுவும் ஆண்டு சொரூப இலக்கணமாகாதாம். ஒன்றற்கும் உபயபாவங்காண்டலின் ; இதனானே அன்னியோன்னிய அபாவமும் ஆகாதாம், தருமாந்தரமோ அவற்றின் பேதம் எஞ்சாநிற்கும், அன்னியாரூபத்தானே அதுபிரமாணம் அன்னியத்தானே அதுவே பிரமேயம் என எதனை

அவாந்தர வியாபாரமெனின்? அன்றும், சகசாரிகட்கும் அவ்வாறுந்தன்மை வழக்காதலின், அதனானுண்டாயது எனின்? அன்றும், ஆயினும் காரணத்தன்மை வியத்தித இவதரியவழி சிறந்தகூற்றிற்கு அதிப்பிரசங்கம் வருதலின், எங்ஙனமேனும் சிறந்தகூற்றுறினும் ககனத்திற்கு மாண்டும் காரியத்தில் ஹேதுத்தன்மை வழக்காதலின்.

## 94. ககனத்திலதிவியாப்தி பரிகார சங்கைநீக்கம்.

வேறோராற்றாற் பெறப்படாது முன்னிருத்தல் என்னின்? ஆகாதாம், கூறத்தக்கதேயாம், ஏதனினின்றும் அயல் வகையின்றி, சித்திதான் என் என்பதும், காரியத்தினின்றும் அன்னியவகையானே பெறுதிருத்தல் எனவாயினோ அப் போகசித்தியாம்; காரியத்தானே காரணத்தின் உற்பாதனம் இன்றும், காரியத்தினின்றும் அன்னியவகையானே உணர்வுறுமையுமில்லையாம். காட்சிமுதலியவற்றினானும் காரணத்தன்மையுணர்வுண்டாதலின், எல்லாக்காரணவுணர்ச்சியுமே காரியக்குறிகொண்டே யுண்டாகின்றதென்பதாக இல்லையல்லவா? காரணத்தன்மையினின்றும் வேறுவிதத்தானே உள்வாதலேனும் உணர்வாதலேனும் இல்லையாதலும் இல்லையாம்; உணர்வின்கண் ஞத்மாசிரயமுண்டாதலின். வ்கையயனுடைமையானும் அதை யங்கீகரித்தலின்.

## 95. அனன்யதாசித்தத்தன்மையின் அர்த்தாந்தர நிராசம்.

அன்யத்தன்மை அகாரணத்தன்மை யிஷ்டமெனின்? ஆகாதாம், தோற்றியதோடந் தொலையாமையின், காரணத்தன்மையான் முன்னும் உதயவுணர்வுகட்கு நிலையுற்றவாதிகளால் அங்கீகரிக்கப்பட்டிருத்தலின், தடையிலாமுன்மையானே ஒருகால் அதுவுங்காரணம் இங்ஙனம் அதன் பூர்வததுமாம். யாதேனும் ஒருவியத்திக்கு இங்ஙனமில்லாமற்

போயினும், அப்போதுமை யுற்றதன்மையானே அவ்வாறுந் தன்மை அறையும்வேட்கை யுண்மையானே வியக்திப் பிறழ்ச்சி அப்பிரயோஜக மாதலின்எனின்? ஆகாதாம், காரியாந்தரத்தினும் ககனுதிகட்கு அவ்வாறுகாத்தகைமை சிறந்து துணிவான் கூடாமையின். காலதேச வியாபகத் தன்மையானே பிறிதொருவகையாற் பெறுந்திதி யதுவாம் எனின்? அன்றும், அங்ஙனமாயின் ஓசைமுதலியவற்றில் விண்முதலியவற்றிற்கு அகாரணத்தன்மை வழக்குண்டாத லின், இதனுனே பிறிதொருவிதத்தாற் பெறப்படாமை யுடன்பாடெதிர்மறை யனுசரித்து நிற்றலுந் தள்ளப்பட்டதாமென்க, ககனுதிக்கு இன்மைஇன்மையின் அகாரணத தன்மை வழக்கும் அதிகமாதலின்.

### 96. காரணத்வ இலக்கணமிரண்டன் நீக்கம்.

வியாபாரமுடைமை காரணத்தன்மை யெனின்? ஆகாதாம், அதுவும் வியாபார சனகத்தன்மையா? ஆகியதாகாதாம் மகமுதலியவற்றிற்கு அகாரணத்தன்மை வழக்காத லின், பின்னதும் பின்னமே அதே நிரூபிக்க வேண்டியதாக விருத்தலின். நித்திய சத்வ அசத்வங்களுள் அயலொன்று ஒன்றுத லகற்றலாதலெனின்? ஆகாதாம், நிவாரகபத அவயவத்தின் உணர்ச்சியின் காரணத்தன்மை நிர்வசனமின்றி நிரூபிக்கமுடியாப் பொருட்டன்மை யுண்மையின், அன்யதா அருத்தத்திற்கும் ஏகத்திற்கும் நிருக்திகூடாமையின்.

### 97. காரணத்தன்மைக்கே இலக்கணம்வேறுநீக்குதல்.

எதனையங்கீகரியாதொழியின் எதற்கு அதன் பூர்வ இருப்புவழக்காமோ அது அதற்குக் காரணம் அதன்பாவமும் காரணத்தன்மையாம்எனின்? ஆகாதாம், பாவத்திற்கு விநாசித்தன்மை அங்கீகரியாதொழியவே அவ்வாறுபிரசங்

கத்தால் அதிவியாபகத்தன்மை யுண்மையின், அதன் முற்றி த்தன்மையானும் விசேஷணமாயவழி சகபாவநியதத்தின் அபாவத்தினும் வழக்காம், அவ்வாறுந்தன்மை யங்கீகரிக்கி ன்றே சாமக்கிரியின் கண்ணும்வழக்காம் அதுதனக்கும் அவ் வாறுந்தன்மையை யங்கீகரிக்கின் காரியத்துவய ஐக்கிய வழக்கும் அசாதாரண்யமுமாம், விசேஷ அபேக்ஷைபாயி ன்றே அதிவியாப்தியாம், அவிசேஷமாய்வழியோ வரும்பூர் வார்த்த விகற்பஅவகாசமும்ஆம்.

## 98. நியதத்தன்மைச் சிறப்பில் விகற்பித்துத் தோடங்கூறல்

நியத முன்னிருத்தற் றன்மையெனின்? அன்றும், அவ சியம் ஆவதற்கு நியமார்த்தத்தன்மையாகக் ககனுதிக்குச் சர்வகாரியஹேதுத்தன்மை வழக்கு அவ்வாறே நிலைநிற்ற லின். அவயவரூபாதிக்கும் அவயவி யதன்ரசாதிகளிற் கார ணத்தன்மை வழக்காதலின், ஔபாதிகத்தன்மையின்மை நியமார்த்தமெனின்? ஆகாதாம், இங்ஙனமாயினே உபாதி சம்பந்தமற்ற முன்னிருத்தல் ஹேதுத்தன்மையெனக் கூறப் பட்டதாயிற்று, அங்ஙனமாகவே, எறும்பு கிளம்புகை முத லியவற்றிற்கு மழைமுதலியவற்றே பபக்குந்தன்மை வழக் காம், உடன்வரும் சாமக்கிரியாற்றுனுமாம், ஆண்டுப் பிராசிப் பூர்வபாவம் நியதமெனவின்றும், மற்றே, விருஷ்டியின்பரம் பாவம்ஆமெனின்? ஆகாதாம் முன்னுருவங்கட்கே நியதத் தன்மை யுண்மையின், அவைகள் காரணமேயெனின் ஃ அன் றும், காரணமுன்னுருவக் கலப்புவழக்காதலின்.

## 99. பூர்வசப்தார்த்தம் நிகழ்த்துவதில் தோடமுரைத்தல்.

பூர்வப்பொருளும் புகலத்தக்கதாம், பூர்வப்போதை யொற்றித்துநிற்றல் பூர்வத்தன்மையாமெனின்? ஆகாதாம்

காலத்திற்கு அகாரணத்தன்மை வழக்காதலின், அதற்கு மென்னே பூர்வத்தன்மையெனப் பகுத்திடவேண்ட. யிருத்த லின். அதீத வுபாதி யவச்சின்னத்தன்மை காலத்திற்குப் பூர் வத்தன்மையெனின்? அற்றன்றும், அதீதமென நிஷ்டைச் சஞ்ஞை விடயத்தவிகுதிக்குப் பூர்வவாசித்தன்மை யுண்மை யின் பகுத்துணரவேண்டிவருதலின் பரத்வ அபரத்வகுணங் கட் கிடையில் யாதுபரத்வம் அதுபூர்வத்வ மெனப்படும் எனின்? படாதார், போதுமுதலிய வற்றிலும் பண்புமுத லியவற்றிலும் அதனை யங்கீகரியாமையின், அவற்றிற் ககார ணத்தன்மை வழக்காதலின்; அதன்கண்ணேயே அஃதின் மையின் சாக்ஷாத்காரி ஞானத்தியின்கண்ணும் அதற்குக்கார ணத்தன்மை வழக்காதலின்.

## 100. காரணத்தன்மைக்கே இலக்கணாந்தர நீக்கம்.

சாமக்கிரி ஏகதேசத்தன்மை காரணத்தன்மை யெனின்? ஆகாதாம், ஏகதேசத்தன்மைக்கு அநிர்வசநீயத்தன்மை யுண் மையின், அவயவத்தன்மை பிரதேசத்தன்மை முதலியவற் றிற்குச் சாமக்கிரியின்மாட்டசம்பவமாதலின்; சகலகாரண கலாபமொன்றல்பட்டு நின்றதற்கேதான்மேலக அருத்தத்தன் மையுண்மையின், அம்மேலாகத்தானே (சேர்க்கையானே) காரணங்கழறவேண்டி யுறுதலின். எதன்பின்னர் காரியம் உண்டாதலேயாமோ அதுசாமக்கிரியாமெனின்? ஆகா தாம், விபாகத்தின்பின்னர் சையோகநாசத்திற் கவசியம் உற் பத்தியாதலின் விபாகத்திற்கும் சாமக்கிரித்தன்மை வழக்காத லின். இங்ஙனம்விளக்குவியாகத்தில் அந்திய தந்துசையோ கத்திற்கு ஆடையில் என்பதாதியாம். காரியாகாரணபாவ மென்னும் சம்பந்தம் யாதேனும்எனின்? அன்றும், அக்காற்

சிறப்பின்மையின் காரியகாரணக் கலப்புவர்துறுதலின். காரியகாரணச் சிறப்புற்றிடுதலின் அவற்றின்பேதம் தனியாக நிரூபிக்கவேண்டியதாம் அடைவாதலின்.

## 101. விலக்ஷண தருமரூப காரணத்தன்மைக் கப்பிராமாணிகத்தன்மையாதல்.

காரணத்தன்மைதன்மம் யாதேனும்எனின் ? உதவாதாம், அதன் இருப்பில் அளவை யறையவேண்டியிருத்தலின், சிலபால்காட்சியது, சிலபால் கண்டுகருதிடல்எனின் ? கதுவாதாம், காட்சிகாரணத்தன்மையை ஈதனைக்குறித்துக் குறியாடும், இன்றுமாண்டு அநிர்ணீதகார்யம் அப்பிரதீதியாதலின் அன்வயவியதிரேகாதி வியஞ்சகத்திற்கும் சிறப்பின் பொருட்டே சம்பவமுண்மையின். பொதுவதாகக் கடாதியின்பொருட்டு மிகைதாம், இங்ஙனம் சிறப்பதாசக் கடாதியநுற்பத்தியடைவாதலின். அத்துணை மாத்திரத்தானே விசேஷ உற்பத்திக்கு விசேடங்களில் பக்கநிறுவும் ஊகம் பற்றாமையின் ; விசேடந்தோறும் உற்பத்தியாதலின் முன்னிக்மூந்தன்மையுண்மையின் சம்பந்தமின்மையின் காட்சிவிடயத்தன்மை கதுவாமையின் ; காரியஇருப்புக்காலமும் சாமக்கிரியின்மையின் அதன் சனனகாலமாகாதாம், அக்கால் அதன் ஜனனவிசிஷ்டதை யாங்ஙனங் காக்ஷிப்படும், முன்னதன் கவர்ச்சியின்மையானே சமஸ்காரத்தோடு கூடியிருத்தலும் சம்பவியாமையின். இங்ஙனம் ஓரிடத்தும் ஹேதுத்தன்மையேல் சாக்ஷத்கார அசம்பவத்தால் எம்மூலவியாத்திக் கவர்ச்சியால் ஆண்டனுமையும் ஆதல். அநிர்வசனவாதியுடன் எதிர்த்துநிற்றலும் இயலாதாம், ஒருகாலிருக்குந்தன்மையின் கூடாமையான் அதனைக்கவரலாம் எனின் ? கூடாதாம், வேற்றுநிலைக்களத்துறைதலின், எங்ஙனமேனும் சமநிலைக்

களங்கிடைக்குமேல் அதன் சம்பாதகத்திற்குச் சம்பாத்தியம் போலப் பொருந்தாமையில் ஒப்பாதலின் இளைப்பாறுதலின் மை அநாதித்தன்மையானேனும் மொழிதன்முடியாதாம், வேற்றுநிலைக்களமுறுவதிலும் சம்பாத்திய அசம்பந்தமேல் அநியமமாம், சம்பந்தமேல் இளைப்பாறுதல் இன்மைஎன்ப தாம். இதனுனே ஆற்றல் காரணத்தன்மை யென்பதும் அகற்றப்பெற்றதாம்.

## 102. காரணத்தன்மைக்குப் பிரத்தியக்ஷத்தன்மையில் வேறுதோடம் விளம்பல்.

அன்றியும், காக்ஷியுணர்வில் சம்பந்த வியாபார முடைய விடயத்திற்கும் காரணத்தன்மையானே தன்விரு த்தி யடைவுவருதலின், மாருயினே, அக்கத்திற்கும் ஆண் டுக்காரணத்தன்மை யாகாதாம் அனுசரிந்தல் ஒப்பாதலின்: விடயச்சிறப்பற்ற அக்கசம்பந்தத்திற்கு அவ்வாறேல் அதி வியாத்திவருதலின். சில்பாலோ காரணத்தன்மை அகார ணத்தன்மை விவாதத்திற்கும் கெடாத்தன்மை வழக்காத லின். ஒருவனல் அது காணப்பெறுகின்றமையானும் மற் ெருருவனுலோ காணப்பெறுமையானும்; அவ்விலக்கணத் திற்கு நியதமாக முன்னிருத்தற்றண்மை முதலவற்றை மொ ழிவதாயின் கழறியகுற்றங் கதுவுதலின். அச்சின்னமிலதாக வே மயல் ஐயங்கள் ஆண்டென்றரிசனத்தாலுச்சேத்தியங் கள், அக்கத்தால் ஹேதுத்தன்மைத் தருமியைக்கண்ட போதினும், அதனைக்காணுமல், எதுகொண்டு அக்ஷசககாரி கூறலாமோ, துணியம்பெற்ற. அப்பொருளானே ஹேது வுணர்ச்சி பயனுடையதாக வுறவே அதனினும் அன்னிய அர்த்தகற்பனை அரிதிற்கோடல் யாங்ஙனம் வலிதிற்றுணியப் பெறல்.

## 103. வியஞ்சகந் தொடர்பின்றேனும் வியங்கிய காரணத்தன்மை தொடர்ந்திடும் என்னுஞ் சங்கை நீக்கம்.

அதன் அன்வயஅநுசரிப்பாதி கருதற்குக் காரணமாங் கால் விண்ணுதியிற் கூடாமையின் அதன் அன்னியத்வ சித்தியாம் எனின்? ஆகாதாம், அன்னியோன்னிய ஆசிரய அடைவாதலின், காட்சிக்கு அன்னிவிடயந் துணியப்பெற லாகப் பிறுண்டு திருஷ்டாந்தத்தானே அதன் அநுமான மாம், அதன் சித்தியுளதாயவழி காட்சிக்கு அன்யவிஷயத் தன்மைச் சித்தியாம்; அதற்கும் வரவிலாத்தன்மையேலா யின் முன்னும் அதனிருப்புண்மையின் உளதாமென்னும் மதிபோலும் செய்வதாமென்னும் பிரமையடைவாம்; வர வாந்தன்மையேலோ அதன் உற்பத்தியின் முன்னர் காரணத் தன்மை எவ்விடத்தும் உண்டாகாதாம், ஆயினும் உண்டா காதிருப்பிற் கடாதியும் ஏன் அங்ஙனம் ஆகாது? விலகிய அவைகளில் தொடர்வுற்றதின்கண்ணேறு எல்லாவற்றின் பொ ருட்டும் எல்லாக்காரணத்தன்மை யெய்தலின். காரிய விய க்தி தோறும் அது தனியெனினோ, ஆகாதாம், பொதுவதாக அதன்பாலிருக்கும் வடிவத்திற்கும், கடாதி காரணவடிவத் தானே தொடர்பாக கடகாரணத்தன்மைக்கும் தந்துகார ணத்தன்மை யடைவாதலின், காரணத்தன்மை மாத்திரத் தானே அதன் றொடர்ந்தவடிவமாம், கடகாரணத்தன்மை முதலியவற்றின் னன்றும்எனின்? அன்றும், கடாதிவிசேட அநுபகிதயாதின்பொருட்டெனக் குறிக்கப்படாத காரணத் தன்மை மாத்திரத்தின் இருப்பில் அளவையின்மையின், அன்றியினோ, சிறிதின்பொருட்டுக் காரணத்தில் பொதுவ தாகக் காரணத்தன்மையென்னுந் தன்மம் ஆகுமேலாயின்,

அப்போது, அவ்வியக்திக்கே சிறிதின்பொருட்டு அகாரணத்தன்மை யுண்மையின் அகாரணத்தன்மையாய ரூபமும் ஆண்டாம் என அவாவாத சிறந்தகாரணத்தன்மை யத்தியாசத்தாற் பேதத்தால் ஒன்றுமாத்திரந்தானுங் கெட்டோடிப் போம்.

## 104. விகற்பத்தாற் காரணத்தின் அநிர்வாச்சியத்தன்மை.

மேலும் காரியவியக்திக்குக் காரணம் உளதா? இலதா? இலதேல் நித்தியசத்துவ அசத்தவங்களுள் இரண்டனுள் ஒன்றுமென்னும் வழுக்காம்; உளதேல், அக்காரணம்யாதோ! வியத்திவிசேடமெனின்? ஆகாதாம், முன்னிருப்பிற்கு நீள் காதனுதி சாதாரணத்தன்மை யுண்மையின் அக்காரிய வியக்தியின் பொருட்டு அதற்கென்னக் காரணத்தன்மை. சொரூபமேயாமெனின்? ஆகாதாம் அதற்கு விலகியிருக்குந் தகைமையின், அதற்கு அதன் காரணவடிவுண்டமையிலோ, அவ்வடிவத்தன்மை யில்லாதவைகட்கு அதன் காரணத்தன்மை மூறுதலின், அதன் காரணத்தன்மைக்கும் சமவாயி அசமவாயி நிமித்தபூத அநேவியக்தி சாதாரணத்தன்மை யுண்மையின். அநேகத்திற்கும் ஏக அநுகத விவகாரபுத்தி காரணத்தன்மையேல், கோத்தன்மை முதலியவற்றின் கெடுதல் வழக்குக் காண்பித்திருத்தலின்.

## 105. இராசபாதி வியாவிருத்த காரணலக்ஷணகண்டனம்.

நியமமாக முன்னிருத்தல் எனின்? ஆகாதாம், வியாப்யருத்தத்தையுடைய ஒருநியமத்திற்கு எல்லா வியக்திகளிடத்தும் அசம்பவமாதலின், பூர்வமாத்திரத்திற்கோ அதிப்பிரசங்கமுண்டாதலின். அச்சாதியுடைய தன்பொருட்டு நியதயாக அச்சாதியுடைமை யெனின்? ஆகாதாம், அதற்கு அச்சாதீய வியக்தியயற் பொதுவதாகலின், நியதமான அச்

சாதீயத்துடன் அதன் முன்மையெனின்? அன்றும், அதன் சமானகால உற்பத்தியையுடைய காரியவியக்தி நூறுண்டாக்கும் வியக்திசத சாதாரணமாதலின். அவ்வாறங்கீகரிக்கின் ஒருசமவாயியாதி நாசமாங்கால் எல்லா வதன்காரிய நாசப் பிரசங்கமாம். அக்கால அச்சாதீய சர்வசாமக்கிரியினாலே சர்வ அக்கால அச்சாதீய உற்பத்தியேல், சாமக்கிரி பேதத்திற்குக் காரியபேத ஹேதுத்தன்மையானே, தனித்தனி சேர்ந்த சாமக்கிரித்தன்மை விகற்பத்தால் காரியவியக்தி அபேத தனித்தனிவியக்தி சொரூபபேதங்கட்கு இரண்டுளொன்றன் வழக்குமாம்.

## 106. சமவாயி காரணத்தன்மை நீக்கம்.

சமவாயித்தன்மையின் பொருட்டும் சாதர்மிய அனுசரிப்புநியமத்தில் அதிவியாப்தியாதலின். விலகுவதாந்தன்மையிலோ நியமமில்லாமையின், நியதமாய அச்சாதீயத்தன்மையுடன் அதன் சமதேசமுடைமை யெனின்? ஆகாதாம், சமவாயிதேச அபேக்ஷையானே காரியகாரணங்கட்குச் சமானதேசமுடைமை நியமம் அங்கீகரியாமையின், சையோகிதேச அபேக்ஷயால் குணதியில் அசம்பவமாதலின் எங்ஙனமேனும் ஒருவாறாக சமதேசமுடைமை மாத்திரத்திற்கோ அதிப்பிரசங்க முண்டாதலின். அதிர்ஷ்டாதி வேறுதேசத்திற்கும் காரணத்தன்மை யுடன்பாடேல் யாவின் பொருட்டும் சர்வகாரிய சாமக்கிரிகட்கும் காரணத்தன்மை வீழ்தலின்; முன்னிருத்தல் நியமாதிக்கு ஒப்பாந்தன்மை யுண்மையின், அநுகதரூபத்திலோ உடன்பாடெதிர்மறைகள் சம்பவித்தலின், வியத்தியிலிருக்கும் சாமான்யங்கட்கே காரியகாரணத்தன்மை யடைவுறுதலின், அதன்கண்ணிருக்கும் சாமானியங்கட்கே அன்வய வியதிரேகாதி நியமமாய்.

வியக்திகட்கோ காரியகாரணத்தன்மை யாமென இலக்கிய இலக்கணபாவ வேற்றுநிலைக்களமுறுதலின். சாமானிய ஆகாரம் புகுத்திய வியக்தியைக்கொண்டு அன்வய வியதிரேகங்கோடில் விசேடத்திற்கு அகாரணத்தன்மையாம், சாமானிய ஆகாரத்தானே முன்னிருத்தற்கே காரியத்தன்மையாம். திரவிய சாமக்கிரியினானும் விருக்ஷசாமக்கிரியினானும் அசோக சாமக்கிரியினானும் தனித்தனிவியக்திஜனன வடைவாதலின், தனித்தே யவற்றிற்குச் சாமக்கிரித்தன்மை யுண்மையின், எல்லாவற்றிற்கும் வியக்தியின்பொருட்டே உண்டாக்குந்தன்மை யுண்மையின், திரவியத்வாதிகட்கு உண்டாகத்தன்மை யுண்மையின். விருக்ஷசாமக்கிரியோடு கூடிய அசோகசாமக்கிரிக்கே சாமக்கிரிபாவத்தான் தனியே அசோகவியக்தி யின்றாமெனின்? இன்றாம், அசோகசாமக்கிரியையைத்தாண்டியும் விருக்ஷசாமக்கிரியைக்குசாலதமாலாதி விருக்ஷங்களையுண்டாக்குந் தன்மையுண்மையின், தனிமையானே விருக்ஷவியக்தி ஜனனஅடைவுவருதலின். அவ்வசோக சாமக்கிரியும் விருக்ஷசாமக்கிரியும் ஒருங்குசேர்ந்து உண்டாக்குவதாகும் என வியக்திவேற்றுமையின்றாம் எனின் ? இன்றாம் ? அசோகப்பொருளயல்விருக்ஷப்பொருளின்மை யடைவாதலின். விருக்ஷசிம்சபாசாமக்கிரிகள் ஒன்றுபட்டனவாய் உண்டாக்குவதி லொப்பாதலின், விருக்ஷசாமக்கிரியும் விருக்ஷ ஜனனத்திலேயே யாங்ஙனம் சிலபால் அசோக சாமக்கிரியையும், சிலபாற்றமால சாமக்கிரியையும் அபேக்ஷிப்பதால் கூடும்? தருவுருவ ஒருகாரியத்திற்குச் சாமக்கிரிபேதமேல் வடிவபேதம் வந்துறுதலின். தொடராததற்கும் தருச் சாமக்கிரித்தன்மையேல் தனித்தரு வியக்திக்கும் தனியசோக வியக்திக்கும் உற்பத்திவந்துறுதலின் என்பதாதி தானே யூகஞ்செய்துகொள்ளலாம்.

## 107. காலகண்டனந்தொடங்கல்.

நியமத்தையும் முற்போதையொட்டி வட்டிக்கின் முற்போதென்பதன் விவச்சேத்நியங்கள் நிகழ்வுஎதிர்வாங்காலங்கள், முற்போதோ விவச்சேதகமாம், எனப் பகுக்கத்தக்கதாம், அவ்விவேசனம் முடியாததாம், நிகழ்வுமுதலிய நிகழ்ச்சிகளே தம்விடய வைசித்திரியங்களில் அளவையாம் எனின்? அன்றும், அங்ஙனமன்றூ: வர்த்தமானதி புத்திக்கே யாதுவிடயம்? காலவிசேடமாமெனின்? ஆகாதாம், காலத்தின்விசேடம் இயற்கையா? செயற்கையா? ஆதிய தாகாதாம், காலத்தைத் தாங்கள் ஒன்றென்று கொண்டிருத்தலின், எக்காலம் நிகழ்வென்பதாக இலங்குமோ அதுவே பூர்வம் பாவியெனவும் பச்சாத் பூதமெனவும் இலங்காதாம். மூவிதஇயற்கையதே யிஃது எனின்? இசையாதாம், வேற்றுமை வழக்கானும் விஷத்தைகூடாமை வழக்கானும். எக்காற்றுன் நிகழ்கின்றது என்னும் உணர்வுண்டாமோ அக்காலே நிகழ்ந்தது நிகழும் என்னும் உணர்ச்சி வழக்காதலின்.

## 108. ஔபாதிகமாய காலத்திருக்கும் சிறப்பின் கண்டனம்.

இரண்டாவதேல், உபாதியை யுரைக்கலாம், சூரியாதி கிரியாசம்பந்தபேதம் அதுவாம் எனின்? ஆகாதாம், சென்றது வருவதற்கும் கிரியாசம்பந்த வுணர்ச்சி அவசியம் அறையவேண்டியிருத்தலின், எத்திவசந்தான் சூர்யகதி விசேஷ அவச்சின்னமாக நிகழுகின்றதெனத் தோற்றுமோ அதுவேதான் அதனவச்சின்னமாக நிகழ்ந்ததென வுணரப்பெறும், நிகழுமெனவும், நிர்விசேடமான காலத்திற்கு அதனதீதத்தன்மையேனும் அநாகதத்தன்மையேனும் புலப்படுவதின்றும். மற்றுறே உபாதிச்சிறப்பினுனை வரைந்துகொண்டதற்கு எதனுனே யிதுபூர்வம் இதுந்தரத்தினின்றும் விலக்கப்

பெற்றதாய் நிகழ்கின்றதெனப் புலப்படாநிற்குமோ அதே உபாதியினுமே, அதனினின்றுமே விலக்கப்பெற்றதாய் நிகழ்ந்தது எனவும் நிகழும் எனவும் ஓரொருகால் உணரப்பெறும். அற்றேல் உண்மையே யிதுஆனல், எக்கால் அவ்வுபாதி சம்பந்தமாகி அதற்குச் சொரூபமாகவே யிருப்புளதாமோ, அக்கால் நிகழ்கால வுணர்வுண்டாம், எக்கால் அதே விநட்டமாமோ, அக்கால் இறந்ததன் உணர்ச்சியாம், எக்கால் வருவதாமோ அக்கால் எதிர்வதன் உணர்ச்சியாம், எனின்? இது பொருந்துறாதாம், ஈண்டு நிகழ்காலங்காட்டும் லட்டிற்கு விளம்பவிழைந்த அருத்தம் ஆமேலாயின் அப்போது அவ்வுணர்விற்கே அவ்வுணர்வுபாயத்தன்மையென ஆன்மாசிரயம் அநவத்தையென்னும் இரண்டனுள் ஒன்றும் வழக்காம். விநஷ்டாதி சப்தங்களோ அதீதாதி பரியாயங்களாம் அவை யாவற்றிற்குமே அருத்தம் நிரூபிக்கவேண்டியவழி அதனிடையில் வீழ்ந்த ஒருசப்தத்தைப் பிரயோகித்து அதனை நிரூபிக்கத்தொடங்கும் நீ சிலாகிக்கத்தக்க மதியுடையவனே மாதாபிதா வுடையவனேயாதி.

## 109. சென்ற வரும் நிகழ்வுகளின் வேற்றிலக்கண விலக்கம்.

தொழிலவச்சின்ன காலம் நிகழ்வாம், அதன் முன்னின்மை யவச்சின்னம் இறவாம், அதன்பின்னின்மை யவச்சின்னம் எதிர்வாம்எனின்? ஆகாதாம், சென்ற வரும் தோற்றப்போதும் தொழிலான் வரைந்துகொண்டதாகவே தோற்றுகின்றதாமென நிகழ்வின் உணர்ச்சி வழக்காங்கே நிலைபெறுதலின், தொழிலான் வரைந்து கொடாததற்கு அதன்முன்னின்மை பின்னின்மை வரைவு கூடாமையின்,

## 110. முன்னின்மை பின்னின்மை யிலக்கண கண்டனம்.

முன்னின்மையும் முற்பொருண் மொழியாதவழி யாங்ஙனம் கவரமுடியாதது ஆகாது? பின்னின்மையும் முன்

னின்மையினும் எங்ஙனஞ் சிறப்பியம்பலாம், இறப்புடை யின்மை முன்னின்மையாம் பிறப்புடைமின்மை பின்னின்மை யாம்என இவற்றிற்குச் சிறப்பாமெனின்? ஆகாதாம், முன் னின்மையின் இன்மையாது கொலாம்! எதனானே இலதென வியம்பலாமோ. பிரதியோகிபூத கடாதியாயின், பின்னின் மைக்கும் முன்னின்மையென்னப் பிரதியோகியாமென்பதாக அதுவும் இன்மையினை யியையுடு உற்பத்தியுடையதாந் துவம்சம் என்பதாக உற்பத்திபதார்த்தம் பருக்கத்தக்க தாம், இது அசத்துக்குச் சத்துவம் அதுவுஞ் சாமானியமா யின், அக்காலின்மையில் அசம்பவமேபாம். இனிச்சொரூப சத்துவமாயின் அக்காற் பிராகபாவத்திலும் பிரசங்கமாம்; அதற்கு மொருக்கா லசத்துவமெய்தலின். முன்னர் அசத் திற்குப் பின்னர் சத்துவம் விளம்பும் வேட்கையெனின்? ஆகாதாம், முன்னிப்போது பின்என்னும் அருத்தமே நிரூ பிக்க முடியாமையின். இதனானே காரணவச்சின்னம் சத்வம் உற்பத்தியென்பதும் நீக்கப்பெற்றதாம். பூர்வாபர நிர்வச னஞ்செய்யாமல் காரணார்த்த நிர்வசனஞ் செய்யக்கூடாமை யின்,

## 111. வர்த்தமானகால இலக்கண கண்டனம்.

சென்ற வருபவற்றிற்கு எங்ஙனமோ வங்ஙனம் உளதா குகதான் உரையாடல், எக்கிரியாவச்சின்னம் எக்காலம் அது அக்கிரியை யபேக்ஷையால் வர்த்தமானமாம் அன்னியஅபே க்ஷையால் அன்றாம்எனின்? அதனபேக்ஷைபால் என்பதன் பொருள்யாதோ? அதன் உபாதானத்தாலா? அதன்வழி யுடைமையாலா? அதனைப் பிரதியோகியா யுடைமையாலா? அதன்வகையாலா? ஆதியதாகாம், அவ்வுபாதி யவச்சின் னத்திற்கே அதீத அநாகத வுணர்ச்சி விடயத்தன்மையும்

ஆமென அநேகமுறை யறைந்து வந்தேமாதலின், இரண்டா வதும் கூடாதாம், இதனினின்றும் இதுநீளம் என்பதே போல இதனினின்றும் இதுநிகழுகின்றதுஎன அவதியபே க்ஷையின்றியே தோற்றுந்தன்மை யுண்மையின் எப்போது மேதான் மூவித அவதியபேக்ஷயானே இருந்தது, இருக் கின்றது, இருக்கும், என்பதாகவாம் உணர்ச்சி விவத்தை யின்மை வழங்காதலின் இதனானே மூன்றாவதும் ஆகாதாம். அதீத அநாகதப் பிரதீதிப்போதில் கிரியாவச்சேத வகையா னே வர்த்தமானப் பிரத்தியய விடயத்தன்மைப் பிரசங்கம் வருதலின் நான்காவதும் நலமற்றதேயாம். இக்கிரியாவச் சேத லக்ஷணப்பிரகாரம் இறவெதிர்வுப்போதில் நிகழ்வதில் லையாமெனின் ? இல்லையாம், நிகழ்ச்சியைப்பற்றி யின்னும் நிரூபிக்காமையின் நிகழ்வதென நிகழ்த்திச் சிறப்பைக்காட்டு வான் முடியாமையின். அக்கிரியாகாலத்தில் அக்கிரியாவச் சின்ன காலம் வர்த்தமானம்எனின் ? ஆகாதாம், காலத்தின் பற்றுக்கோடுடையதாகக் காலத்தை நிரூபித்தல் கதுவாமை யின், அயற்போதை யங்கீகரியாமையின், அப்போதிற்கே அதனாசிரயத்தன்மை யாதலேல் வெட்டவெளியாய் ஆன்மா சிரயத்தன்மை அடைவுறுதலின்,

## 112. காலத்தில் வர்த்தமானத்வாதி பிரயோஜக வுபாதி யயற்கண்டனம்.

ஆருகவிது, கிராகக விஞ்ஞானவிடயமும் கிராகக விஞ் ஞான ஆசிரயமும் ஆகியகாலம் வர்த்தமானமாம், வர்த்தமான உபாதி முன்னின்மை யவச்சின்னமோ பூர்வமாம், அதன் பின்னின்மை யவச்சின்னமோ வருவதாம், பிராகபாவ பிரத் வம்சங்கட்கோ இபற்கையபேதாவேற்றுமைகொண்டு விவத் தையாம், முன்விவத்தையேது அபாவம் பிராகபாவமாம்

எனச் சுபாவபூதமேயாய விசேடத்தினது காரியங்கொண்
டிலக்கணமாம், வருமவிவத்தையேது அபாவமே பிரத்வம்
சமாம் எனவும் பிரத்வம்சத்திற்காமெனின்? இங்ஙனியை
யாதாம், ஞான அஸ்வப்ரகாசத்தன்மைப் பக்கத்தில் தன்னுப
கிதத்தைத்தானே கவர்தல் கூடாமையின் யாங்ஙனம் வர்த்த
மானதைக் கவர்ச்சியாதல்? அயல்உணர்வினானே அவ்வாறு
கவர்ச்சியேல் வர்த்தமானதை யிலக்கவுடன்பாடேல், அக்
கால் இது என்றற் காணப்பட்டதுஎன்னும் உணர்ச்சிக்கு,
அக்காலிது என்றான் நோக்கப்படுகிறது என்னும் ஆகாரதை
யடைவாம், இதனானே, சுவப்பிரகாசபக்ஷத்திலும் தாண்ட
முடியாதாம், எத்துணைப்பொருள் சுவப்பிரகாசத்தில் வர்த்த
மானத்தன்மையதாகக் கூறப்பட்டதோ அத்துணையே பரத்
தாற்று கவரப்படில் பிறழ்ச்சியாதலின் சொப்பிரகாசத்தன்
மைக்கும் ஆதிக்கியமிருந்தபோதினும் விடயத்தில் விசேட
மின்மையின். சொரூபமே விசேடமெனின்? ஆகாதாம்,
அதற்குத்தொடர்பு தொடர்பின்மைகளாற் கூடாமையுண்
மையின், பிராக் பிரத்வம்ச அபாவங்கட்கும் சொரூபமாக
சிறப்பின்றேனும், பூதவிவகாரத்திற்கு உபாதியாது, பவிஷ்
யத் விவகாரத்திற்குபாதியாதுஎன வினவியபோது காரிய
பேதத்தை யுண்டாக்கும் பான்மையானே அக்கூற்றுவிடை
யாக, முன்னர் முரணொமொழிந்த பூர்வாபரதைக் கூற்
றின்றி ஜன்னிய ஜனகத்தன்மை யஞ்ஞானம் என்பதாம்
உபாதிபேதத்தானுங் காலபேத முளதாயவழி, ஒருமையா
னே யங்கீகரிக்கப்பட்ட காலமியாதோ அதுவும், சந்திரசூரி
யக் கிரியாதியெண்ணிக்கையில்லாத உபாதிபேதஞ் சம்பவித்
தலானே நானாவாகும், அவற்றுள் இதுவேயுபாதி இதுவல்ல
வெனவும் துணிந்துகோட லேலாமையின் கணந்தோறு
மியற்கைவேற்றுமைவாதி பக்கத்திலோ பலகணங்களில் வர்த்

தமானத்வாதி விவகாரப்பொருட்டு உபாதியை யனுசரித்தல் அவசியம் ஆதலினானே புகன்ற வுபாதிதோடக் கவனமே வந்துறுதலின்.

## 113. சமுசயகண்டனந் தொடங்கல்.

அற்றேல் அவ்வாறாயினும் ஆண்டு விடயபேதத்தானே அவசியம் ஆகத்தக்கதாம் பிரதீதிபேதத்தை நீக்கமுடியாமையின், ஆகலின் பொதுவாகத் துணிபப்பெற்றுச் சிறப்பாகப் பகுக்கமுடியாமற்போக வேற்றுமையில் ஐபமேயுளதாகுக வெனின்? ஆகாதாம், சமுசயமும் துணிந்து கூறமுடியாமையின். அங்ஙனமன்றே:—சமுசயத்திற்கு நிச்சயத்தினின்றும் உபாதியால் ஆக்கப்பெற்ற விசேடமா? ஜாதியா லாக்கப்பெற்றதா? ஆதிபதில், விடயவிசேட வுபாதியினாலா? காரணவிசேடத்தாலா? அல்லது அபலைபாய யாதேனுமொரு சம்பந்தியாலா? ஆக்கப்பெற்றது அதனைநிர்வசனஞ் செய்யக்கூடாமையின் பிரதமமாகாதாம், உபயகோடி விடயம் சமுசயமெனின்? அன்றாம், இரண்டுகோடி சமுச்சய நிச்சயத்திற்கும் சமுசயத்தன்மை வழங்காதலின். தோற்றமேயாம் இங்ஙனமில்லையாமெனின்? இல்லையாம், பேத அபேதப் பிரதீதிகட்கும், சாப்த சொப்பனாதிப் பிரதீதிகட்கும் அத்தகைமை சம்பவித்தலின். சமுச்சயப்பிரகாசத்தில் கோடிகளின் அவிரோதம் ஒளிர்கின்றது, சமுசயத்திலோ விரோதமெனின்? அன்றாம், மஞ்சட்சங்கு என்பதாதிகளில் மஞ்சட்டன்மை சங்குத்தன்மையாதிக்குப் பின்னாசிரயத்தன்மை நியமவிரோதம் அறிந்தபோதினும் உணர்ச்சியாதலின். ஆயினும் அப்புத்தியின்கண் முரண் டோற்றுவதில்லையெனின்? இல்லையாம், யாங்ஙன மிங்ஙனமென பிரகாசத்திலும் அதன்பிரகாசத்தால்; ஏகாசிரயமான அவைகட்கு விரோதப் பிரதீதி யவசியம் கோடவேண்டலின். மித்தைப்புத்திகள்

அனவயெனின்? அன்றும், சமுசயத்தையும் தாங்கள் அதத்துவபுத்தியதாக அங்கீகரித்தலின், தத்துவ அதத்துவ புத்திகட்கும் அதன்விடயத்தன்மையானே விசேடமின்மையின், மித்தையிரஜத புத்திகள் ரஜதபுத்தியே ஆகாதென்பதாகாதன்றே!

## 114. சமுசயத்தின் வேற்றிலக்கண கண்டனம்.

விவத்திதமாகாத கோடியிரண்டுன் விஷயம் சமசயம் எனின்? யாதுகொல் விவ்விவத்திதமாகாமை? பாக்கிகப்பான்மை யெனின்? ஆகாதாம், பரியாயங் கேட்டிலேம், மற்றே, கோடியிரண்டன் வடிவமேயா? அல்லது கோடியிரண்டன் ஏதாவது தருமமா? ஆதியில் கோடித்துவய நிச்சயத்தோடு சிறப்பின்மை யாங்கே நில்லெபெறும், இரண்டாவதில், இதுவேதாவது அளவையானே அணியப்பெறுவதாயின், கோடித்துவய ஆசிரித அத்தரும விடயவதற்கே ஐயத்தன்மை வழக்கால் அளவைத்தன்மை வியாகாதமாம். இனியொரு பிரமாணத்திற்கும் இதுவிடயமாகதாமெனின்? ஆபின் விடயமாற்றிய விசேடமில்லையாகும்; இதனானே யாதேனும் ஒருவிடயவிசேடம் கட்டையதனபாவ கள்வன் அதனபாவாதிரூபங் கூறப்பெறுமாயின் அதுவும் அகற்றப்பெற்றதாமென அறிபத்தக்கதாம். அத்தியந்தம் அசத்தாகிய அதற்கே புலப்பாடாமாயின் அசத்கியாதி வாதிகளாகிய ஜினர்களால் வெற்றியுறப்பெற்றாய்; இலபாற் சத்தேயாமேலாயினோ ஆண்டேவழக்காம்.

## 115. நிச்சயத்தினுங் காரணவிசேஷமுண்டாக்கிய வைலக்ஷண்ய சமுசயத்தின் கண்டனம்.

இரண்டாவதும் இயையாதாம், காரணவிசேடந்தான் சிறந்து சாமக்கிரியாமா? அதனேகதேசமா? ஆதியுதன்றும்,

காட்சிப்படாமையானே அதனுபகிதத்திற்குக் காட்சியானே உணர்ச்சிகூடாமையின். அதனைக்கருதித் தெரிதலுங் கதுவாதாம், குறிகூடாமையின். காரியச்சிறப்பை குறியாமெனின்? ஆகாதாம், சிந்திக்கத்தக்கதாய காரியத்திருக்குஞ் சிறப்பிற்கே இன்றளவும் அடைவுறுமையின், ஜாதிபேதத்திற்குத் தூஷணபத்தன்மை யுண்மையின். இரண்டாவதுங் கூடாதாம், திருசியமாய் அதன்ஏகதேசமாகிய சாதாரணதரும தரிசனாதிக்கும், விசேஷத்துவய ஸ்மரணாதிக்கும் சாதாரணதரும விசேடத்துவய ஞானக்காட்சியாதியினும் ஹேதுத்தன்மையானே பொதுமையுற்றிடுதலின். அதிருசியமாகிய அதன்கண்ணே குறையிலாமையின், அதனாற் காரியத்தில் விசேடஜாதிகோடல் நீக்கவேண்டலின். அதற்கு அவிடயத்தன்மையானே அநுவிவசாய சாக்ஷிக காரியத்திருக்கும் சிறப்புறலாதற்கு ஆற்றலின்மையின்.

## 116. சம்பந்தியா லாக்கப்பெற்றது நிச்சயத்திலும் விசேடம் சமுசயத்திற்கு என்னும் பக்ஷகண்டனம்.

மூன்றாவதும் முடியாதாம், அதனைக்காண்பித்தற் காகாமையின். இரண்டாவதுமிறும், தருமி சொரூபாதிகட்கும் அதன்விடயமதாகியவழி ஐயப்படலாந்தன்மை வழக்காதலின். இங்ஙனமுமாகாதாம், இதுகட்டையா? கள்வனா? எனஐயமாம்போது இதமைப்பராமிருசியமான ஊர்த்தத் தன்மைவிசிட்ட தருமியின் சொரூபசத்துவத்திலும் சொரூபமேயாகுமோ ஆகாதோவென அதனைக் காண்போனுக்கு அபிமானமாதல் விவகாரமாதல் இல்லையாம். அஃதன்னே! ஆண்டுச் சொரூபசத்வமாத்திர அங்கிசப்பற்றுற்றதாய அந்த ஞானத்திற்கு நிச்சயத்தன்மையேயாம். அதனால் என்னேயெனின்? ஒரேஞானத்திற்கு நிச்சயத்தன்மை சம்சயத்தன்மைச் சாதிசங்கரமாம். அதுபிராமாண்ய அப்பிராமாண்யம்

போலும் ஆதல்கூடும் எனின்? ஆகாதாம் ஒருதனுனே தான வற்றிற்கும் ஜாதித்தன்மை யங்கீகாரமிலதாதல். என்னை கொலோ! அவற்றிற்கு, அவ்வாறும்வடிவ அவ்வாறுகாவடிவ அருத்தத்தன்மை யிலக்கண (அபாத்திய அருத்தத்தன்மை பாத்திய அருத்தத்தன்மை) உபாதியிருபத்தன்மை யங்கீகாரமேயாம். சமுசயத்தன்மை நிச்சயத்தன்மை யிலக்கண ஜாதித்துவயங் கலந்ததாக அந்தவிஞ்ஞானம் அமைவுறப் பெறுமாயின் அக்கால் ஏதேனும் விடயம்குறித்துச் சமுசயத்தன்மை, மற்றேதேனுமபேக்ஷித்து நிச்சயத்தன்மையென ஆபேக்ஷிக ஜாதிவிவத்திதியென அபூர்வமார்க்கமாம். இத் தகையதோர் நெறியை நெறிப்படுத்தியநீ நியாமகம்என்னென அறைதரல் வேண்டும், எதனுல்தருமியின்கண் 'அதற்கு நிச்சயத்தன்மை 'நிலைபெறுத்தலாமோ, விசேடத்துவயத்திலும் சமுசயத்தன்மை விசேடதரிசன அதரிசனங்கள் உளவாயின் எனின்? ஆயின், உண்டாம் தாணுவின் ருணுத்தன்மை புருடனின் புருடத்தன்மை சிறந்து தோன்றுகின்ற திது வென விசேடதரிசனத்தால் ஆண்டும் நிச்சயப் பிரசங்கமாம்.

117. சமுசயத்தின்முன்னர் விசேடதரிசன அசத்துவத்தால் சமுசயத்திலும் பொருந்தாமையாம்.

சமுசயத்தின்முன்னர் விசேடதரிசனம் இல்லையென்ப தாகப் பொருந்தும் ஆண்டுமையம் எனின்? பொருந்தா தாம், ஆயின் எங்ஙனம் தருமிஞானத்தின்முன் அதன்கண் ணிருக்கும் விசேடதரிசனமாதல்? சமுசயகாலத்திலோ உள தாம் விசேடதரிசனமெனப் பின்சமுசயந் தொடராவழக் கும் பொருத்தமேயாம். அதனது விடயவிசேடத்திலும் அயல்விசேடத்தின் றரிசனம் விளம்பும்வேட்கையெனின்? இல்லையாம் ஸ்தாணுவா புருடனுவென்னும் இஃதென்னுமையம் பின்னர், தாருமயமா தசைமயமா அயல்களாய ஸ்தாணுத்வ பொருந்தாறுதாம் அவ்வுபயமயத்வ

புருடத்வ விசேடங்கட்குப் பூர்வஞானத்தானே புலப்பாடு கூடலின். இரண்டிலொரு விசேடதரிசனம் சமுசயத்தைத் தடுப்பதாம் சமுசயத்தானே உபயங்களின் உபதரிசனமாம், ஆகலின் கூறிய குற்றவழக்கின்றுமெனின்? ஆயின் தானு புருடனும் எனஎங்ஙனமேனும் விப்பிரமம் உளதாயவழி தாருமயமா? மாம்சமயமா? என்னும் ஐயத்தடையாகாவாம். முன்ஞானத்தால் விசேடமிரண்டன் உபதரிசனம் உளற்றப் பட்டிருத்தலின். விசேடதரிசனமென்பதூஉம் விசேடநிச்சயமென விளம்பும் வேட்கையாம் விசேடஞானமாத்திரமன்றும், எதனாற் சமுசய உபநீதவிசேடத்தானும் சமுசயத்தடை பொருந்துறலாமோ வெனின்? இங்ஙனமாகாதாம்? சமுசயத்தானே எவ்வுபதரிசிதவிசேடங்களோ ஆண்டுச்சமுசயத்திற்கு நிச்சயத்தன்மையின்றும், எனவிவத்தை துணியப் பெற்றவழி உபதரிசித நியாமக சித்தியானதாம், இந்நியாமகந் துணியப்பெற்றவழியோ, சமுசயத்திற்கு சிறப்பிரண்டன் பொருட்டு நிச்சயத்தன்மை யில்லையாமெனத் துணியப் பெறும், என அன்னியோன்னிய ஆசிரய அடைவாதலின் யார்கொலோ நீக்குவார்.

## 118. ஏகதருமிநிஷ்டத் தன்மையானே முரணங்கீகரியாதவழிதோஷபரம்பரை.

ஆகுக இது, சமுசயஞானத்திற்குத் தருமிவிஷயத்தன்மை யங்கீகரிப்பதாயின் அரைக்குறை யடைவுறும், அதுவும் அதனை யங்கீகரியாமையினானே நீங்குவதாகும், அதனானே, தருமிஞானம் நிச்சயவடிவம், அயலேயாம், குற்றியா மகனோ என்னும் ஐயவுணர்வு அயலேயாமென வங்கீகரிப்பேம் எனின்? அவ்வாறாகாதாம், ஒருதருமிசம்பந்த உபநயன வயலாகக் குற்றிமை மகன்மைகட்கு முரணேயில்லையாமெனக் கட்டையாகள்ளனோ என்னுமிதுவே யுண்டாகாதாம். யாதா

வதனது தானுத்தன்மையானே யாதாவதன்து புருடத்தன்மை முரண்படமாட்டாதாம். ஒருதருமிசம்பந்தத்தை யுள்ளடக்காமல் முரணுகுமாயின் உலகில் அன்னியோன்னியம் கோறல்புரியும் அவற்றிற்கு அசத்துவமே பொருந்தாநிற்கும். அத்தருமிக்குத்தான் புருடத்தன்மைத் துணிவால் எங்ஙனம் ஐயம் அகலுமோ உதயந்தானுகாதோ அங்ஙனம், தனது புருடத்தன்மை நிர்ணயத்தாற் சமுசயம் நீங்கலாம் உதயமாகாமலேனும் ஒங்கலாம். சிறப்பிலாமையின் எங்ஙனமிது திருஷ்டாவின் தன்றேகவிடய வையமாகாதோ, அங்ஙனமே முன்னிருக்கும்விடயமு மிதுவாகாதாம். எங்ஙனந்தான் இதுவெனும் பொருளோடு சாமானுதிகரண்யாபிமானம், எவ்விவ் வூர்த்தத்தன்மைத் தன்மம் அஃதென்றுணுவா அல்லது புருடனு என்பதாம். ஏதனுற்றான், பிரத்தியபிஞ்ஞானுதிகட்கும் ஒருணர் வங்கீகரித்தலாமென விசிட்டவிஞ்ஞான சங்கதை யுச்சின்னம்மாம்; நன்குண்டாகுமன்றே ; மேோ அசுவம் புருடன் என்பதுபோல விசகலித விஞ்ஞானசம்சாரம் என்பதாகச் சாலும் வித்தார அபிநிவேசம்.

## 119. அநுபவவலுவால் விலக்ஷணத்தன்மை நீக்கம்.

அற்றேல், ஆண்டு இதுதானுவா மனுடனுவெனப் பரஸ்பர முரணுற்ற பொருட்கவ ருணர்வுளதாம், அது தனதுவிடயம் அவ்வாறுருவதாய் நிலைபெறுத்திவிடும் எனின் ? வெறுத்தாதாம், பகர்ந்தபாதகங்களால் எல்லாவ் கைக்கண்டனமெய்தியவழி யெஞ்சுதல் எய்தாமையின்.

## 120. விரோதகண்டனந் தோடங்கல்.

யாதுதான் சொரூபங்கொண்டு விருத்தார்த்தத்தன்மை யாதுதான் சொரூபங்கொண்டு விருத்தார்த்தத்தன்மை யாதுதான் கூறமுடியாதாம். அங் விளம்பலாமோ அதுவும் முனிந்து கூறமுடியாதாம். அங் ஙனமன்றே:—பாவம் அதன் அபாவங்கட்கு யாதுசொல்

விரோதம்! கூடஇராமையெனின் ? அன்றும், இடவேற்று மையானே கூடவுமிருத்தலின். தேசஅபேதத்தால் எனின் ? ஏலாதாம், சையோகாதி யவ்வியாபகத்தன்மையை அங்கீ கரித்தியேல், அங்ஙனமாயினும் பொருந்துறு தாம் வகைவேற் றுமையானே அவ்வாறுறுதலை யங்கீகரித்தலின், அவர்பக்கத் தில் ஒருபிரகாரத்தால் ஒன்றன்கண் ணொற்றித்தும் பற்று மை. விரோதமாம் ; சையோகாதி யவ்வியாபகத்வம் அங்கீகரி யாதவர் பக்ஷத்திலும் தேசஅபேதத்தாற் கூடஇராமை அது வாம் எனின் ? ஆகாதாம், அதுவும், அவ்வுபய இருப்பின் கூடியிருத்தல் நிஷேதமேனும் ; அவ்வுபயவிருப்பின் நிஷே தக்கூடியிருத்தலேனும்ஆம். ஆதியதில் வெளிப்படையில் லாப் பிரதியோகித்தன்மையாம், அவ்வுபய அவஸ்தான சாகித்தியத்திற்கு எவ்விடத்திலும் உணரப்பெறுமையுண்மை யின். முயற்கோட்டு நிஷேதாதிக்கும் முயலின் தலைப்பாற் கோட்டுநிஷேதாதி ரூபத்தன்மை யங்கீகாரத்தானே வெளி யான பிரதியோகிகத்தன்மை யங்கீகரித்தலின். சிலர்கூறுவர், வஸ்துவின் பிரதியோகிதை : எத்தகையுருவும் சிலபாற் சிறி துறும் அத்தகையதுவே யகற்றுதலாமேயெனவும் மற்றவர் மலர்வர்.

## 121. சகபதத்திற்கு நிஷேதஅன்வயம்என இரண்டாவது கற்பதூஷணம்.

இரண்டாவதிலோ, அவ்வுபய அவஸ்தான சாகித்திய சுவீகாரமேயாம், அவ்வுபய நிஷேதங்களை அவ்வுபயமதாக வே யங்கீகரித்தலின். ஒன்றற்கொன்று கொன்றுகொள்வதே விரோதம்எனின் ? ஆகாதாம்; அதுவும்; பரஸ்பர பிரதி க்ஷேபத்தின் பொருட்டுக் காரணத்வமாதல் தாதான்மியமாத லாம், பிரதமமன்றும், அளவையின்மையினானே அவ்வித அதன்காரிய வங்கீகாரத்தான், இரண்டாவதுமேலாதாம்,

